# மலிவுச் சட்டை மோகம் என்ற வலையில் விழுந்துவிட்டீர்களா?

அளவெடுத்துத் தைத்துப்
பாருங்களேன். அதற்கென்றே
இருக்கிறது கமலா காட்டன்,
பாலியெஸ்டர்—கலப்பு
நெசவு ஷர்ட்டிங் வகை:
பிளெயின், பிரிண்டெட்-
எல்லாமே பலேஜோர்,
எல்லாமே விலை குறைவு,

**கமலா**
பிளேபாய்

பாலியெஸ்டர்
மற்றும் காட்டன்
ஷர்ட்டிங்குகள்

HALL MARK OF QUALITY

## சொற்பச் செலவிலே சொகுசான உடுப்பு
## கமலா ஜவுளிகள்

C Unit-A 2401-Tam.

# ராஜ பேரிகை

## ௧. அழகும் ஆத்திரமும்

'அகில புவன ஜன்மஸ்தேம பங்காதி லீலே' என்கிற வாக்கியப்படி எல்லா உலகங்களுடைய உற்பத்தி, இருப்பு, மறைவு முதலிய காரியங்களையெல்லாம் எந்தவித சிரம சாத்தியமில்லாமலே விளையாட்டாகச் செய்து முடிக்க வல்லவனும், 'குடதிசை முடியை வைத்து, குணதிசைப் பாதம் நீட்டி, வடதிசை பின்பு காட்டி, தென்திசை இலங்கை நோக்கி' கண் வளர்ந்திருப்பவனும், பெருமதிள் சூழ் ஏழு பிரகாரங்களுக்கு மத்தியிலே உள்ளதும் பொன் வேய்ந்த பராந்தகனாலும் மகிதலங் கொண்ட மாபெரும் வீரன் சுந்தர பாண்டியனாலும் பொன் வேயப்பட்ட பிரணவாகார விமானத்தின் உள்ளே 'உளன் சுடர்மிகு சுருதியுள்' என்றபடி வேதத்தின் உட்பொருளாக இருப்பவனும், தென்னாட்டில் உயர்ந்த கோபுரங்களுள்ள கோவில்கள் ஆயிரமாயிரம் இருப்பினும் அவன் குடிகொண்ட ஒரே காரணத்தினாலேயே பெருங்கோவில் எனத் தனிச் சிறப்புப் பெற்றதுமான அரங்கன் திருக்கோயிலுக்கு வெளி நான்கு கோபுரங்களிலும், அன்றிரவு விளக்குகள் ஜாஜ்வல்லியமாக எரிந்து கொண்டிருந்தன. அரங்கனை விட்டுத் திருவைப் பிரிப்பது சம்பிரதாய விரோதமென்ற காரணத்தினாலேயே ஸ்ரீரங்கம் எனப் பெயர் கொண்ட மாநகரத்தின் கோபுரங்களில் மட்டுமின்றிப் பெரும் மதிள்களின் பலவிடங்களிலும் பெரும் பந்தங்கள் கொளுத்தப்பட்டு ஒளிக்கு



சாண்டில்யன்

அங்கு ஏதும் குறைவு வைக்காவிட்டாலும், பன்னிரண்டு ஆழ்வார்களின் மங்களா சாஸனங்களாகிற தமிழ் மறையால் அழியாமல் பிரகாசம் பெற்றுவிட்ட உள்ளிரும் வேத ஒளிக்கு முன் தாங்கள் ஒளி காட்ட முற்பட்டது எத்தனை கேவலம் என்ற உணர்ச்சியாலோ என்னவோ, கோபுர விளக்குச் சுடர்



களும் மதில் பந்த ஜ்வாலைகளும் இரு காவிரிகளிடமிருந்து எழுந்த காற்றினால் மனித மனத்தின் சலனம்போல அலைந்து கொண்டிருந்தன. அந்தச் சலனம் சரி தானென்பதை ஆமோதிப்பன போல், தென் திருக் காவிரியின் கரையிலிருந்த பெரிய நானாவித மரங்கள் தங்கள் தலைகளை ஆட்டி புஷ்பமிருந்தால் புஷ்பங்களையும் ஏதுமில்லாவிட்டால் பழுத்த இலைகளையும் ஆங்காங்கு உதிர்த்துக் கொண்டிருந்ததாலும், காவிரியின் பெருங்காற்று அவற்றை எதிரேயிருந்த வீதிக்குள் தூக்கி எறிந்து கொண்டிருந்ததாலும், காலை வேளையில் திருமஞ்சனக் குடமேந்திச் செல்லும் அந்தணருக்கும், புரவியில் செல்லும் வீரர்களுக்கும், ஏதோ இலையும் பூவும் இணைந்த பாதையை இயற்கை சிருஷ்டித்துக் கொண்டிருந்தது. அடுத்த காலை நேரத்துக்கு வேண்டிய அந்தப் பாதையை முன்னடியாக விரிப்பானேன் என்று கேட்டுச் சிரிப்பது போல் தென்திருக் காவிரியில் அப்பொழுது பூர்ணமாயில்லாத சிறு நீர்க்கால்கள் சலசலப்புடன் ஓடிக்கொண்டிருந்தன. அந்தச் சலசலப்புக்குச் சுருதி கூட்டுவனபோல் மா, பலா, கொய்யா மரங்களில் பறந்து பறந்து சிறகடித்து இன்பமாகக் கூவிக் கொண்டிருந்தகிளி, மைனா முதலிய பட்சி ஜாலங்கள் தாங்கள் உறங்கும் காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்து, கூண்டுகளுக்குள்ளும் இலைகளின் மறைவுகளுக்குள்ளும் சென்று கொண்டிருந்தன. அந்தப் பட்சி ஜாலங்களுக்கெல்லாம், பிரஜைகளுக்கு வழி காட்டும் அரசனைப்போல், அரைகுறையாகக் கட்டிவிடப்பட்டிருந்த தெற்கு வாசல் கோபுரத்தின் உச்சியில் பெரிய கருடன் ஒன்று தனது சிறகுகளை அடக்கிக் கொண்டு வெள்ளைக் கழுத்துடனும் வளைந்த அலகுடனும் மௌனமாக உட்கார்ந்திருந்தது. அதுதான் மௌனமாக உட்கார்ந்திருந்ததே தவிர, அன்று இரவு முற்றியுங்கூட மக்கள் நடமாட்ட ஒலிகளும் கூச்சல்களும் சிறிதும் குறைந்த பாடில்லை, அந்த மாநகரத்தின் புறவீதிகளிலே.

ஆங்காங்கு மதில்களைச் சுற்றிலும் என்றுமில்லாத திருநாளாய் உலாவிக் கொண்டிருந்த அளவுக்கு மீறிய புரவி வீரர்களின் நடமாட்டம் அந்த மாநகரத்தின் அழகுக்கு அதிக அழகையும் ஒரு கம்பீரத்தையும் அளித்தாலும் அரங்கனுக்கு இத்தனை காவலும் கெடுபிடியும் எதற்கு என்ற வினை வைத் தொடுக்கவே செய்ததானாலும், அவர்கள் எச்சரிக்கைக் கூச்சலும் புரவி



களின் ஜலம்பொலிகளும் காதுக்கு ரம்மி மாகவே இருந்தன. காதுக்கு ரம்யமாக வும் கண்ணுக்கு அச்சத்தைத் தவிர்ப்ப தாகவும் அமைந்திருந்த அந்தப் புரவிப் படையின் சஞ்சாரத்துக்குக் காரணம் என்னவென்பதை அறியாத தென்னுட்டு பாகவதரும் வடநாட்டு கோஸாயிகளும் அந்த நகருக்குள் நுழையு முன்பு பெரும் யோசனையுடனேயே நுழைந்து கொண் டிருந்தார்கள். இரவில்கூட நாலாயி ரத்தை சந்தை சொல்லிக் கொள்ளும் மாணவர்களின் மறையொலிகள் ஓரளவு கேட்டுக் கொண்டிருந்தாலும் மதில் களுக்குள்ளும் இருந்த புரவி வீரர் நட மாட்டத்தின் காரணமாகத் திருவருள் ஓரளவு கிடைத்தால் போதுமென்று 'முன்னடி பின்னடி'களைச் சிறிது அடக் கியே சேமித்துக் கொண்டிருந்தார்கள். பகவான் உறைகிறுன் என்ற காரணத்தி ஞலேயே பயமற்றிருந்த அந்த மாநகர வாசிகள் அன்றிரவு மட்டும் சற்று பயத் துடனேயே இருந்தார்களென்பதை உத் திர, சித்திரை வீதிகளின் அடக்கமான சூழ்நிலையே நிரூபித்துக் கொண்டிருந் தது. அந்தச் சூழ்நிலையின் காரணமாக அந் நகரின் இயற்கையான அழகுகூடச் சிறிது குறைந்திருப்பதாகப் புதிதாக வந்து கொண்டிருந்த யாத்ரிகர்கள் உணர்ந்து கொள்ளும் வண்ணம், அவர் கள் நகருக்குள் புகுந்ததும் புகாதது மாக ஆங்காங்கிருந்த சத்திரங்களுக்குள் அனுப்பப்பட்டார்கள். அந்த எச்சரிக் கையையும் மீறிக் குறுக்கும் நெடுக்கும் விஷயம் புரியாமல் போக முயன்றவர் கள் கத்தி முனைகளில் கோவிலுக்குச் செல்லும் தெற்கு வாசல் பாதையிலி ருந்து வீரர்களால் அகற்றப்பட்டார் கள். ஆனுல் எந்த ராஜா வந்தாலும் தான் அடங்க முடியாதென்பதை நிரூ பிக்கக் கோவிலின் பிரதான வாசலுக்கு முன்பிருந்த தோட்டத்தில் அசைந்து கொண்டிருந்த சிறு யானைக் குட்டி மட் டும் 'ரங்கா' என்று பெருங் கூச்சலை ஒருமுறை கிளப்பியது. அந்தக் குட்டி

---

மேடையில் நடிக்கப்பட்ட 'தனிக் குடித்தனம்' நாடகம் திரைப்படமாக உரு வாகிறது. முதன் முறையாக கே. ஆர். விஜயா இப்படத்தில் மாமி (காமு மாமி) வேடத்தில் நடிக்கிறுர். ஆரம்ப பூஜைக்கான அழைப்பித ழில் 'கே. ஆர். விஜயா முதன் முறையாக முழுநீள மாமி வேடம் ஏற்கிறுர்' எனக் குறிப்பிட்டிருக்கிறுர்கள்!

—ஜீஎஸ்.






TMK

# மணி லெண்டர்

போபால் நகரத்தின் அருகில் உள்ள போடா, காக்னூர் என்ற இரு கிராமங்களில் இரு புதிய கிளைகளை பாங்க் ஒன்று திறக்கவிருக்கிறது. இது பற்றிய விவரங்களை அதன் பிராந்திய மானேஜர் தெரிவித்தார்:

'இந்தக் கிளை ஸ்தாபனங்களின் மானேஜர்கள் வேஷ்டி, ஜிப்பா அணிந்து கொண்டு தரையில் விரிக்கப்பட்ட விரிப்புகள் மீது திண்டுகளில் சாய்ந்த வண்ணம், லேவா தேவிக் கடை (அடகு கடை) போன்று தோற்றமளிப்பார்கள். இது போன்ற பாங்க் அலுவலகம் இந்தியாவில் இங்குதான் முதன் முறையாகத் தொடங்கப்படவிருக்கிறது. இதன் மூலம் அடகுக்காரர்களின் பிடியிலிருந்து கிராம மக்கள் விடுவிக்கப் படுவார்கள் என்று நம்பப்படுகிறது.'

கிராமவாசிகள், பாங்க் மானேஜர் அறையில் நாற்காலிகளின் மீது அமர்ந்து உரையாடக் கூச்சப்படுவதால் இந்த யோசனை அமுலாக்கப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது.

—'ஈயெஸ்கே.'

---

யானையின் துடுக்கை அடக்குவதற்காகவோ என்னவோ பக்கத்தில் நின்ற பெரிய யானை அதன் மத்தகத்தில் தனது துதிக்கையால் ஒருமுறை ஓங்கி அறைந்து விசிறிக் காதுகளைப் பெரியாக ஆட்டியது. ஆனால் குட்டி அதற்கு இடங்கொடுக்காமல் தனது சிறு தந்தங்களைத் தூக்கியும் மத்தகத்தால் குனிந்து தாக்கியும் பெரிய யானையுடன் சண்டைக்குச் சென்று, பாகவதர்களில் பெரியவர் சின்னவர் கிடையாதென்ற வைணவ தத்துவத்தை அறிவுறுத்தியதன்றி, அவர்கள் காரணம் ஏதுமின்றிச் சண்டை போட வேண்டிய அவசியத்தையும் வலியுறுத்தியது. ஆனால் அந்தச் சண்டை அதிக நேரம் நீடிக்கவில்லை. மதில்களுக்கு வெளியே திடீரெனப் பெருங்கூச்சல் கேட்டது. புரவிகள் பல திடீரெனப் பாய்ந்து வந்தன உள் நோக்கி. அவற்றின் மீது வந்த வீரர்கள் வாட்களை உயர்த்தி வீசி மக்களைப் பக்கவாட்டு வீடுகளுக்கும் வீதிகளுக்கும் துரத்தினார்கள்.

சற்று நேரத்திற்கெல்லாம் பெரும் வெள்ளைப் புரவியொன்றில் காவலர் பலர் புடை சூழத் தலை முதல் உடல் முழுதும் மறைய முக்காடிட்ட பெண் உருவமொன்று மிக நிதானமாகவும் மெதுவாகவும் வந்து கொண்டிருந்தது. அவளுக்கு முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் வாட்களையும், வேல்களையும், 'மாட்ச்லாக்' என்ற மெல்லிய துப்பாக்கிகளையும் தாங்கிய பல வீரர்கள் காவல் புரிந்து வந்தார்கள். அவளுக்கு அருகில் மட்டும் பெரும் மகாராஷ்டிர அங்கியணிந்த ஒரு பெரியவர் அவள் புரவியும் தன் புரவியும் உராய வந்து கொண்டிருந்தார். பிரதான வாயிலை அடைந்ததும் அந்தப் பெரியவரும் முக்காடிட்ட பெண்ணும் புரவிகளிலிருந்து இறங்க, அவர்களை வரவேற்க வாயிலில் நின்றிருந்த வீரர்கள் இருவர் புரவிக் கடிவாளங்களைக் கையில் பிடித்துக் கொண்டார்கள். முக்காடிட்ட பெண் சர்வசாதாரணமாகப் புரவியிலிருந்து இறங்கினாள்; பெரியவரும் வயோதிகத்தால் தாம் தளர்ந்துவிடவில்லை என்பதை நிரூபிக்கப் புரவியிலிருந்து வெகு லாகவமாகக் குதித்தார். மற்றவர்களை அங்கேயே இருக்கும்படி சைகையால் உணர்த்திய பெரியவர் தமது இடையிலிருந்த பெரும் கத்தியைச் சற்றுச் சரி செய்து விட்டுக் கொண்டு, "வாருங்கள், போகலாம்!" என்று கூறி, கோவிலுக்குள் நுழைந்தார்.

முக்காடிட்ட பெண் கால் சிலம்புகள் கலீர் கலீரென ஒலிக்க அவரைப் பின் தொடர்ந்தாள். வாயிலி

லிருந்து பத்தடி அவ்விருவரும் சென்றதும் கருட மண்டபத்திலிருந்து அவர்களை நோக்கி விரைந்த இருவர் பெரியவரையும் முக்காடிட்ட பெண்ணையும் நோக்கி முதலில் தலை தாழ்த்தி வணங்கினார்கள். பிறகு மண்டியிட்டு மரியாதையைத் தெரிவித்ததும் பெரியவர்கள் அவர்களை எழுந்திருக்கும்படி உத்தரவிட்டு, "உங்களில் யார் இங்கு நிர்வாகம் செய்பவர்?" என்று வினவினார் அதிகார தோரணையில்.

மண்டியிட்டு எழுந்த இருவரில் பெரும்பட்டாடைக் கச்சமணிந்து இடுப்பில் பழுக்காக்கரை அங்கவஸ்திரத்தைச் சுற்றி நெற்றியில் பட்டையான தென்கலைத் திருநாமத்துடன் காட்சியளித்தவர், "இங்கு நிர்வாகி ஒருவர் தானென்பது அமைச்சருக்குத் தெரியாததல்ல," என்று மிகுந்த பணிவுடன் தெரிவித்தார்.

அமைச்சர் என்றழைக்கப்பட்ட பெரியவரின் கண்களில் சிறிது சினம் துளிர்த்தாலும் அதை அவர் வெளிக்குக் காட்டவில்லை. "அந்த நிர்வாகி ஏன் வரவில்லை, இவர்கள் வருகிறார்களென்பதை அறிந்திருந்தும்?" என்று கேட்க மட்டுமே செய்தார் அதிகார தோரணையில்.

"இந்தக் கோவில் மற்றக் கோவில்களைப் போன்றதல்ல," என்று சுட்டிக் காட்டினார் முதலில் பேசியவர்.

"இது பெரிய கோவிலென்பது எனக்குத் தெரியும், ஆனால்...." என்று அமைச்சர் தமது ஆட்சேபணையைச் சொல்லி முடிக்கு முன்பே முதலில் பேசியவர் சற்று தைரியத்துடனும் திட்டவட்டமாகவும் சொன்னார், "இதன் நிர்வாகம் எம்பெருமானாரால் நிர்ணயிக்கப்பட்டது. அதுவே இன்றும் அவருடைய மடாதிபதிகளால், துறவிகளால் நிறைவேற்றப்பட்டு வருகிறது. இன்றும் அந்த மகானுடைய பீடத்தில் எழுந்தருளியிருக்கும் ஜீயர்தான் இதற்கு நிர்வாகி. துறவிகள் மன்னனைக்கூட வரவேற்பதில்லை. இது சம்பிரதாயம்," என்று.

இதைக் கேட்ட அமைச்சர் சற்றே நிலைகுலைந்தார். ஆனால் அந்தப் பெண் சற்றும் நிதானத்தை இழக்கவில்லை. "அமைச்சரே! யார் நம்மை எதிர் கொண்டால் என்ன? நாம் அனுப்பிய ஓலைப்படி சந்நிதி இருக்கிறதா என்று விசாரியுங்கள்," என்று கூறினாள் தன்னுடன் வந்த பெரியவரை நோக்கி.

பெரியவர் விசாரிக்க உதடுகளைத் திறக்கு முன்பாகப் பட்டாடை கட்டியவரே பதில் சொல்லிவிட்டார், "ஓலையில் கண்டபடி சகல ஏற்பாடுகளும் செய்யப்பட்டு நின்றன," என்று.

அப்படித் தன்னுடைய அனுமதியின்றிப் பட்டாடை கட்டியவர் பேசியதை ரசிக்காத அமைச்சர் "சந்நிதியில்...." என்று துவங்கினார் எச்சரிக்கை ஒலித்த குரலில்.

"யாரும் அனுமதிக்கப்படவில்லை," என்று கூறினார் பட்டாடையார், அளவுக்கு மீறிய பணிவுடன்.

"பட்டர்கள்?" மீண்டும் எழுந்தது கேள்வி அமைச்சரிடமிருந்து.

"வீடுகளுக்கு அனுப்பப்பட்டார்கள்," என்று அறிவித்தார் பட்டாடையார்.

"உள்ளே யாருமில்லை?"

"இல்லை."

"நிச்சயமாகத் தெரியுமா?"

"கோவில் காவலரைக் கொண்டு துருவிப் பார்த்து விட்டோம்," என்ற பட்டாடையார் கண்கள் மட்டுமின்றி அவர் திருமண் காப்பும் தீட்சண்யமாக ஜொலித்தது.

அதற்கு மேல் கேள்வி ஏதும் கேட்காத அமைச்சர் உள்ளே போகலாம் என்பதற்கு அறிகுறியாகத் தமது கையை அசைத்தார். அடுத்த விநாடி அடிமேலடி வைத்துப் பட்டாடையாரும்



"என்னடி, தலையில்?"
"தீபாவளி மலர்."

அவரோடிருந்த மற்றொருவரும் வழி காட்ட, முன்னால் அந்த முக்காடிட்ட பெண்ணும், அவளுக்குப் பின்னால் வாளின் மேல் கையை வைத்த வண்ணம் அமைச்சரும் சென்றார்கள். மிக நிதானமாகவும் அடக்கத்துடனும் சென்ற அந்த நால்வரும் உட்பிரகாரத்துக்குள் நுழைந்து வலம் வந்து அரங்கன் சந்நிதிக்குச் செல்லும் படிகளின் மீது ஏற முற்பட்டதும், முன் சென்றவர்களில் ஒருவரை விளித்த அமைச்சர், வட்டா போலிருந்த தமது மகாராஷ்டிரப் பெரும் தலைப்பாகையைக் கழற்றி அவரிடம் கொடுத்துவிட்டு, பரமபக்தியுடன் படிகளில் ஏறிச் சென்றார். அவருக்கு முன்பாகவே படிகளில் ஏறிவிட்ட அந்த முக்காடிட்ட பாவை படிகளின் உச்சிக்குப் பின் நான்கே அடிகள்தான் முக்காட்டை நீக்கி நெருப்பைக் கக்கிய விழிகளால் சந்நிதியின் பொற் கதவுகளுக்கு எதிரே நோக்கினாள்.

அவள் மனத்திலே கோபத்துடன் அச்சம் கலந்து கொண்டிருக்க வேண்டும். "அமைச்சரே! இது என்ன?" என்று அச்சமும் சினமும் இழைந்த குரலில் வினவினாள் அவள்.

அவள் சுட்டிய இடத்தைக் கண்ட அமைச்சர்கூடச் சினத்தின் சிகரத்தை எட்டினார். பட்டாடையாரும், அமைச்சர் தலைப்பாகையை ஏந்தி நின்ற மற்றொரு கோவில் கைங்கரியக்காரரும் வெலவெலத்துப் போனார்கள். "இது ...இது..." என்று ஏதோ சொல்ல முற்பட்ட பட்டாடையார் மேற்கொண்டு வார்த்தை வராமல் குழறினார். தலைப்பாகையை ஏந்தி நின்றவர் கை நடுங்கி விரல்கள் கஞ்சிரா வாசிக்கத் தொடங்கின.

"உமது நிர்வாக லட்சணம்," என்று சீறிய அமைச்சர், உணர்ச்சி மேலிட்டுப் பேசும் சக்தியை அறவே இழந்தார்.

அவர்கள் அத்தனை பேர் சினத்துக்கும் காரணமான வாலிபன் மட்டும் சிறிதும் அவர்களைத் திரும்பிப் பாராமல் மண்டியிட்டு சந்நிதிக் கதவுகளை நோக்கித் தலை வணங்கிய வண்ணம் தியானத்தில் ஆழ்ந்திருந்தான். வளைந்த பெருவாளொன்று அவனெதிரே தரையில் கிடந்தது. அதன்மீது அவன் வலது கை கெட்டியாகப் பதிந்து கிடந்தது. உதடுகள் சிறிது நேரம் ஏதோ முணுமுணுத்தன.

அடுத்த விநாடி அங்கிருந்த யாவர்க்கும் பேரச்சத்தையும் பிரமிப்பையும் விளைவிக்கக்கூடிய சொற்கள் அந்த வாலிபன் வாயிலிருந்து பெரிதாக எழுந்து அந்த மண்டபத்தின் தூண்களில் தாக்கி பயங்கரமாக எதிரொலி செய்தன. அவன் வாயிலிருந்து உதிர்ந்த சொற்கள் அந்தப் பாவையை மட்டுமின்றி அமைச்சரையும் சிலையாக அடித்தன. பெரிய விபரீதம் உருவாவதை இருவருமே புரிந்து கொண்டார்கள்.

(தொடரும்)



தி.மு.க.விலிருந்து விலக்கப்பட்ட நால்வரில் ஒருவராகிய மதியழகன் இப்போது ஸ்டெர்லிங் சாலையில் ஒரு சிறிய பங்களாவில் வசிக்கிறார்.

முன்னைவிடச் சற்று இளைத்திருக்கிறார். அவருடைய அரசியல் எதிர்காலம் என்ன?

"இன்னமும் எதுவும் முடிவு செய்யவில்லை. சில சமயங்களில் அரசியலில் மௌனமாக இருப்பதே ஒரு பாதுகாப்பாகவும், தவறு செய்யாமல் எச்சரிக்கையாக இருக்கவும் பயன்படும் அல்லவா?"

சர்ச் பார்க்கில் படிக்கும் மகள் மலர் அருகில் அமர்ந்திருந்தாள். மனைவியும் கூடவே இருந்தார். கலகலப்பாகப் பேசினார். "வீட்டு வாடகை 700 ரூபாய். அதிகம்தான். என்ன செய்வது? 'ஒரு மிடில் கிளாஸ்' சூழ்நிலையோடு பழகுகிற வாய்ப்பே இல்லாமல் போய்விட்ட மாதிரி தோன்றுகிறது இந்தப் பகுதியில்," என்று வருத்தப்பட்டுக் கொண்டார்.

—பால்யூ



# சரத்சந்திரரின் காதலி

சரஸ்வதி ராமநாத்

**சரத்சந்திரர் இலக்கியத்தின் உயிர்நாடி பெண் அல்லது பெண்மையைப் பற்றிய அவரது கண்ணோட்டம்தான்.**

**பெண்களின்பால் அவருக்கிருந்த அனுதாப உணர்வு எழுத்தளவில் மட்டுமிருக்கவில்லை. நடைமுறையிலும் இரக்கமும் கனிவும் கொண்ட லட்சியவாதியாக அவர் திகழ்ந்தார். அவரது திருமணமே இதற்கொரு சான்று.**

முதல் மனைவி சாந்தி பிளேக் நோய்க்குப் பலியான பின் சரத்சந்திரர் மீண்டும் திருமணம் செய்து கொள்வதைப் பற்றி யோசிக்கவில்லை. வயதுமாகி விட்டது. துன்பங்கள்—ஆபத்துக்கள் எனும் சக்ரவியூகத்திற்குட்பட்ட யௌவனமும் பெரும்பாலும் தளர்ந்து

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை-

# இன்க்ரிமின்*

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்—இப்பருவத்தில் அவளுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவள் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பாள்—உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து இவற்றோடு உங்கள் மகளின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.




## இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்: 2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
ஸிரப்: 14 வயது வரையில்

**உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்
உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!**

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
Lederle ஸயனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு
*அமெரிககன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

முன் கதை :

காவிரிக்கும் கொள்ளிடத்துக்கு மிடையேயுள்ள ஸ்ரீரங்கத்தில் ஓரிரவு திடீரெனப் பெருங்காவல் ஏற்பட்டு, புரவி வீரர்கள் நடமாட்டம் மிக அதிகமாக இருக்கிறது. இரவு முற்றியதும் கோவிலுக்குச் செல்லும் தென்திசைப் பாதையில் வீரர்கள் கெடுபிடி மிதமிஞ்சி எங்கும் ஓரளவு எச்சரிக்கையும் நிறைந்து கிடக்கிறது. அந்தச் சமயத்தில் காவலர் படை சூழ ஒரு பெரியவரும் முக்காடிட்ட மங்கை யொருத்தியும் தெற்குப் பாதையில் வந்து கோவிலுக்குள் நுழைகிறார்கள். அவர்களைக் கோவிலுக்குள் எதிர்கொண்ட இரண்டு வைணவர்கள் கோவிலில் யாருமில்லை யென்று உறுதி கூறி, பெரியவரையும் முக்காடிட்ட மங்கையையும் அரங்கன் சந்நிதிக்கு அழைத்துச் செல்கின்றனர். அங்கு சந்நிதிக்கு எதிரே ஒரு வாலிபன் மண்டியிட்டு எதிரே வாள் கிடக்கத் தலை வணங்கியிருப்பதைக் கண்டு மங்கையும் பெரியவரும் வெகுண்ட சமயத்தில் அந்த வாலிபன் திடீரெனப் பெருங்கூச்சலிட்டு, பயங்கர வார்த்தைகளை உதிர்க்கிறான். அதைக் கேட்ட பெரியவரான அமைச்சரும் அவருடன் வந்த மங்கையும் அச்சத்திலும் பிரமிப்பிலும் ஆழ்கின்றனர்.

## 2. காணாத கண்

சோழன் கரிகாலன் காலத்திற்கு முன்பாகவே ரோமாபுரி அழகிகளின் மனத்தையும், அம் மாநகரின் பணத்தையும் ஒருமிக்கக் கவர்ந்ததால் உலகெலாம் இணையற்றதெனப் புகழ் பெற்ற தமிழகத்தின் மிக மெல்லிய மஸ்லின் துணியால் முக்காடிட்டிருந்த போதே அதற்குள் பரிமளித்த பாவையின் பால்வதனம், அந்த முக்காடு நீக்கப்பட்டதும், வெண்மேகத்தின் அரைகுறைத் திரையிலிருந்து வெளிவந்த பூர்ண சந்திர பிம்பமெனக் காட்சியளித்ததன்றி, சந்திரனுக்கும் சுடும் சக்தி உண்டென்பதை நிரூபிக்கும் வகையில் கண்கள் கனலைக் கக்கியதால், முகமும் நன்றாகச் சிவந்து சந்திரனும் காலைச் சூரியனாக முடியும் என்பதை எடுத்துக்காட்டவே, அவளுடன் கூட வந்த அமைச்சர் மட்டுமின்றி அரங்கன் சந்நிதி கைங்கரியபரர்கள் இரண்டு பேரும் பெரும் அச்சத்திற்கு இலக்கானார். அந்த இரு கைங்கர்யபரர்களின் கைகள் மட்டும் நடுங்காதிருந்திருந்தால்



அவர்களுக்கும் சந்நிதியின் கதவுகளுக்கு அக்கம்பக்கத்தில் கம்பீரமாக நின்று கொண்டிருந்த இரண்டு துவாரபாலகர் களின் சிலைகளுக்கும் அதிக வித்தியாச மிருந்திருக்காது. அமைச்சரும் சரி அந்த இருவரும் சரி, முக்காட்டை விலக்கிய பாவையின் முக அக்னியை எப்படியா வது அணைக்க வேண்டுமென்று சிரமப் பட்ட சமயத்தில் சந்நிதிக்கெதிரே மண்டியிட்டு வணங்கிய வாலிபன் ஏதோ முணுமுணுக்க ஆரம்பித்ததா லும், அவன் முணுமுணுத்த சொற்கள் அவர்கள் காதிலும் விழுந்ததாலும் அவர்கள் நா அடியோடு கட்டுப்பட்டுக் கிடந்தது.

இத்தனைக்கும் அந்த வாலி பன் ஈனமான குரலில்தான் சொற்களை முதலில் முணுமுணுத்தான். முணு முணுத்த சொற்களும் வேதம் தமிழ் செய்த மாறனின் ஆரம்பப் பாசுரமா யிருந்தும், 'உயர்வற உயர் நலமுடைய வன் எவன் அவன்' என்ற ஆரம்பப் பாசுரத்தின் ஆரம்ப வரியாலேயே, மனுஷ்யானந்தம் பிரும்மானந்தம் என்ற ஆனந்தங்களை அளவெடுத்தும் ஆண்ட வன் சங்கல்பத்தை அறிய முடியாததால் 'யதோவாசோ நிவர்த்தந்தே' என்று வடமொழி வேதங்கள் திரும்பிவிட்ட போதிலும், அவனுடைய குணப்பிரபா வத்தை நிர்ணயித்துவிட்ட தமிழ்மறை யின் முதல் அடியையும் அடுத்த அடி களையும் மெல்ல பயபக்தியுடன் அவன் சொல்லிய போதிலும், அவன் குரல் மிக இனிமையாயிருந்த போதிலும், அவை எதிலும் ஈடுபட மறுத்த அந்தப் பெண் தன் வாலிப வேகத்தாலும், தன் ஆணையையும் மீறி ஒரு வாலிபன் அங்கு வந்து விட்டானென்ற சினத்தாலும்,

இடது காலை லேசாக அசைத்தாள், சந்நிதிக்கெதிரிலிருந்த மண்டபத்தின் தூணை ஒரு கையால் லேசாகத் தொட்ட வண்ணம். வாலிபனின் இருப்பும் தீன சரமுமே அவளுக்கு அத்தனை சினத்தைஉண்டாக்கிய தென்றால், அடுத்து அவன் அந்த மண்டபமே அதிரும் படி கிளப்பிய கூச்சல் அவளைத்திக்பிரமையடையச் செய்ததன் விளைவாக அவள் மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டாள். அந்த வாலிபனின் தீனசுரம் இடியென மாறுமென்பதையோ, அதில் மறையின் ஆரம்பப் பாசுர முடிவில் 'துயரறு சுடரடி' களைத் தொழுது எழவேண்டியவன், எழாமலே மிகப் பயங்கரமான கூச்சலைக் கிளப்புவானென்பதையோ அறியாத அமைச்சரும் கைங்கர்யபரர்களும் கிலியின் உச்சத்தை அடைந்தார்கள்.



''பிரபு! எந்தத் திருவடிகளைத் தொழுதால் இகபர சித்திகள் கிடைக்குமென்று பெரியவர்கள் கூறுகிறார்களோ அந்த உன் திருவடியின் ஆணையாகச் சொல்கிறேன். என் அன்னையைக் கொன்றவனை, அவளைத் தீயிட்டுத் தற்கொலை செய்து கொள்ளத் தூண்டிய அந்த அரக்கனை, நவாபை, அவன் தலையை இதோ கிடக்கும் இந்த வாளால் துண்டித்து உன் சந்நிதிக்கு எடுத்து வருகிறேன். இதோ என் முன் கிடப்பது வாளானால், நான் வீரனானால், இந்த வாளின்மீதும் ஆணை, இந்தச் சபதத்தை நான் நிறைவேற்றுகிறேன். அதை நிறைவேற்ற உன் கருணைக் கண்கள் என்மீது திரும்பட்டும். எல்லா உலகங்களையும் ஆட்டிப் படைக்கும் உன் சக்தியின் ஒரு திவலை இந்த உடலுக்குள் சிறிது காலமாவது இயங்கட்டும். அருள் செய். பக்தனைக் கைவிட்டான் அரங்கன் என்ற அவச்சொல்லுக்கு ஆளாகாதே. அவனைக் கொன்றே தீருவேன் உன் துணையால். இது சத்தியம், இது சத்தியம்'' என்று சொற்களை மிக இரைந்து கூவினான் அந்த வாலிபன். சந்நிதிக்கெதிரேயிருந்த மண்டபத்தின் தூண்களிலும், கண்ணாடியறைக் கதவுகளிலும் மண்டபக் கூரையிலும் அந்தச் சொற்கள் தாக்கியதால் ஒவ்வொன்றும் பயங்கரமாக எதிரொலி செய்தன. 'இது சத்தியம் இது சத்தியம்' என்ற கடைசிச் சொற்கள் உச்சஸ்தாயிக்குப் போய் விடவே துவாரபாலகர்கள்கூட அச்சத்தால் சிறிது அடங்கியதாகத் தோன்றியது அங்கிருந்த மற்றவர்களுக்கு. சந்நிதி வாயிலில் எரிந்து கொண்டிருந்த இரு தீபங்கள் சந்நிதியின் தங்கக் கதவுகளிலும் துவாரபாலகர்களிலும் பிரதிபலித்ததால் ஏற்பட்ட ஒளியில் கூடப் பெரும் சினமும் தீட்சண்யமும் தெரிந்தன.

''என்ன துணிவுடன் அந்த வாலிபன் யாருமறியாமல் கோவிலுக்குள்ளே, அதுவும் மண்டபத்துக்குள்ளே வந்திருக்க வேண்டும்? அமரரும் அரவம் செய்ய அஞ்சும் அரங்கன் சந்நிதிக்கெதிரே கூச்சலிட என்ன துணிவு இருக்க வேண்டும்?'' என்னும் கேள்விகளை உள்ளூரக் கேட்டுக் கைங்கர்யபரர்கள் நடுங்கிக் கொண்டு நின்ற சமயத்தில், முக்காட்டைத் திறந்த முக சந்திரபிம்பம் குங்குமச் சிவப்பாக மாறிய சமயத்தில், அமைச்சரின் கை, வாளுக்குச் சென்ற சந்தர்ப்பத்தில், அந்த வாலிபன் தனது

தீபாவின் முகமோ-கண்ணோ-ஏதோ ஒன்று ரேகாவை ஞாபகப் படுத்துகிறது.

சபதம் முடிந்ததற்கு அறிகுறியாக வாளைக் கச்சையில்கட்டிக்கொண்டு திரும்பிய பிறகுதான் வேறு சிலரும் அந்த மண்டபத்தில் இருப்பது அவனுக்குத் தெரிந்தது. அப்படித் தெரிந்த பின்பும், அமைச்சர் வாளை உருவ முற்பட்டதைக் கண்டும், சிறிதும் அச்சமற்ற அவன் கண்கள் எதிரேயிருந்த நால்வரையும் ஒருமுறை அளவெடுத்துவிட்டு முடிவில் தூணைத் தொட்டு நின்ற மலர்க்கரத்தின்மீதும் அந்த மலர்க்கரத்துக்கு உடையாளின் முகத்தின்மீதும் நிலைத்தன.

தன் பார்வை விழுந்தவுடனே அந்தப் பாவையின் கண்கள் அஞ்சுமென்றோ, நாணத்தால் தரையை நோக்குமென்றோ அந்த வாலிபன் நினைத்திருந்தால் ஏமாந்தே போனான். அவள் கண்கள் அப்பொழுதும் சினத்துடன் அவனை நோக்கின. தூணைத் தொட்ட கையின் காரணமாகவும், மேலேயிருந்த பாரத்தின் காரணமாகவும் துவண்ட இடை வளைந்து கிடந்ததால், அரங்கனுக்கு யாரோ புது மன்னன் ஒருவன் புத்தழகுச் சிற்பமொன்றை அந்த மண்டபத்தில் கொண்டு வந்து வைத்துவிட்டது போலிருந்தது அவள் நின்ற நிலை. அவள் முகத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே அவளுக்கு வயது பதினாறுக்குமேல் இருக்க முடியாதென்பதை அந்த வாலிபன் தீர்மானித்துக் கொண்டான். அவள் நின்ற அதிகார தோரணையிலிருந்தும் எரித்து விடுவது போல் தன்னைப் பார்த்ததிலிருந்தும் அவள் கழுத்தில் தெரிந்த மாணிக்க ஆபரணத்திலிருந்தும், அவள் பக்கத்தில் சற்று எட்ட நின்றவரின் பயபக்தியிலிருந்தும், அவள் அரசகுலத்தவள் என்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொண்ட அந்த வாலிபன் முன்பின் தெரியாத பெண்களை வெறித்துப் பார்ப்பது, அதுவும் சந்நிதிக்கெதிரே அபசாரப்படுவது தகாது என்ற சிந்தனையால் தன் பார்வையை அமைச்சரை நோக்கித் திருப்பினான்.

அமைச்சரின் தீர்க்கமான நாசியிலிருந்தும், அவரை அடுத்த கைங்கர்யபரர் ஒருவர் பிடித்துக் கொண்டிருந்த வட்டத் தலைப்பாகையிலிருந்தும் அவர் நெற்றியில் குறுக்கே தீட்டியிருந்த மூன்று மெல்லிய சிவப்புக்கோடுகளிலிருந்தும், அந்தக் கோடுகளின் முனைகள் இரண்டு கோடுகளால் இணைக்கப்பட்டிருந்ததிலிருந்தும், அவர் ஒரு மகாராஷ்டிரப் பிரபுவென்பதை அறிந்து கொண்ட வாலிபன், அவர் இடையில் வாளிருந்ததைக் கண்டதும், சிறிது குழப்பத்தை அடைந்தான். அந்தக் குழப்பத்தை அவரும் கவனித்திருக்க வேண்டும். ஆகவே "என்ன விழிக்கிறாய்?" என்று வினவினார் கோபத்துடன்.

வாலிபன் இதழ்களில் முதன் முதலாகப் புன்முறுவல் அரும்பியது. "விழிக்கவில்லை. வியப்படைந்தேன்," என்றான், மிக மிருதுவான குரலில்.

வாலிபனை அமைச்சர் உற்று நோக்கினார். அவனுக்கு வயது இருபதுக்கு மேலிருக்காது என்பதைப் புரிந்து கொண்டார் அவர். அவனுடைய உதட்டின் மேலிருந்த அரும்பு மீசையாலும் முகத்தின் இளமையாலும், அவன் அதிக உயரங்கூட இல்லாததாலும் சிறு பையன் என்றுகூடச் சொல்லலாம் என்று தீர்மானித்தார் பெரியவர். ஆனால் அவன் நீண்ட கைகளும், பாதம் வரையில் தொங்கிய வளைந்த வாளும், தீட்சண்யமான கண்களும் அவன் வயதில்தான் குழந்தையே தவிர தீரத்தில் இல்லையென்பதை உணர்ந்து கொண்டார். கொஞ்சம் நஞ்சமிருந்த சந்தேகத்தை அவன் கச்சையின் குறுக்கே செருகியிருந்த நீண்ட கைத்துப்பாக்கி நீக்கிவிட்டது. உறுதியாக நின்ற கால்கள் அவன் சதா போரை எதிர்பார்ப்பவன் என்பதை அறிவுறுத்தின அமைச்சருக்கு.

அவனைப் பார்த்தது அமைச்சர் மட்டுமல்ல. அஞ்சன விழியாளும் பார்த்தாள். சீற்றம் நிரம்பிய விழிகள் அவனைக் கண்டபோதும் அவன் முகவிலாசத்தையும் முகத்தில் அலைந்து விளையாடிய ஓரிரு தலைக்குழல் மயிர்களையும், நுதலில் தெரிந்த அர்த்த சந்திர திலகத்தையும் கவனிக்கத் தவறவில்லை. அவள்



## இந்த வாரத்து அடி!

அ.தி.மு.க.வினர் பச்சை குத்திக் கொள்வதையும், கட்சியின் பெயரை அனைத்திந்திய அ.தி.மு.க என்று மாற்றியதையும் நாங்கள் எதிர்த்தோம். நாங்கள் அ.தி.மு.க.வில்தான் இருக்கிறோம். எம். ஜி. ஆர்.தான் கட்சி மாறிவிட்டார்.

—பெ. சீனிவாசன்

உதடுகளின் உறுதியையும், அவற்றில் சதா விளையாடிய விஷமச் சிரிப்பையும் கூட காணத் தவறவில்லை. அங்கியணிந்திருந்தபோதிலும், மார்பு மிகக் கடினமானதென்பதையும் ஈட்டிகூட அதில் நுழைவது சந்தேகமென்பதையும் எண்ணத் தவறவில்லை அவள் மனம். இந்த வாலிபன் இந்தச் சிறு வயதில் எதற்காக இத்தகைய கொடிய சபதத்தைச் செய்கிறான் என்று தன்னைத்தானே வினவிக்கொண்டாள் அந்தக் காரிகை. அமைச்சர் கேட்ட கேள்விகளுக்கு அவன் கூறிய "விழிக்கவில்லை, வியப்படைந்தேன்" என்ற பதில் அவளுக்குப் பிரமிப்பை அளித்ததென்றால், அடுத்துத் தொடர்ந்த உரையாடல் அந்தப் பிரமிப்பை உச்ச நிலைக்குக் கொண்டு சென்றது.

"வியப்பா அடைவாய்?" என்று சீறினார் அமைச்சர்.

"ஆம்" என்றான் அந்த வாலிபன் மீண்டும் அலட்சியமாக.

"வியப்புக்கு என்ன இருக்கிறது இங்கே?" என்று மறுபடியும் கேட்டார் அவர். இம்முறை அவர் குரலில் சிறிது குழப்பமும் இருந்தது அந்த வாலிபன் போக்கின் காரணமாக.

வாலிபன் ஒரு விநாடி தயங்கினான். பிறகு "வியப்புக்கு...." என்று வார்த்தையை இழுத்தான் மெள்ள.

"சொல், பயப்படாதே" என்றார் பெரியவர்.

"தங்கள் வாளிருக்கிறது."

"அதற்கென்ன?"

"அதை உருவவும் பார்க்கிறீர். பாதி உருவியும் இருக்கிறீர்."

"அதில் வியப்பென்ன?"

"உமக்கும் வாட்போருக்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது."

இந்த வார்த்தைகளை மிகச் சாவதானமாக உதிர்த்தான் வாலிபன். அமைச்சர் அசந்து போனாலும் அதை வெளிக்குக் காட்டாமலே கேட்டார், "அது உனக்கெப்படித் தெரியும்?" என்று.

"உங்கள் புறங்கைகளில் வடு எதுவும் காணோம். ஆகவே வாட்போர் நீங்கள் பழகவில்லை. வாள் உங்களுக்கு அலங்காரந்தான்," என்றான்.

இதைக் கேட்ட அமைச்சர் பிரமித்தார், கைங்கர்யபரர்கள் பயந்தனர், பைங்கிளி மெல்ல நகைத்தாள். அந்த நகைப்பொலி அமைச்சரது சினத்தைக் கிளறிவிட்டிருக்க வேண்டும். "நீ யார்? யார் உத்தரவின்மீது இங்கு வந்தாய்?" என்று வினவினார் தம் அதிகாரத்தைப் பிரயோகிக்க.

வாலிபன் புன்முறுவல் கொண்டான். "நான் யாரென்பதைப் பற்றித் தாங்கள் அறிய வேண்டிய அவசியமில்லை. ஆண்டவன் சந்நிதிக்கு வர





பச்சைத் தண்ணீரில் குளிக்கும் பொழுது உடம்பில் விட்டுக்கொள்ளும் முதல் ஓரிரு குவளைத் தண்ணீர் உடல் நடுக்கத்தை உண்டாக்குகிறது. இதைத் தவிர்க்க, நாம் நன்றாக மூச்சை வெளியே விட்டு உடனே தண்ணீரை மேலே விட்டுக் கொண்டால் உடல் நடுக்கமேயிராது.

—ஈ. எஸ். வெங்கடரமணி

---

யார் அனுமதியும் தேவையில்லை,'' என்று முறுவலின் ஊடே கூறினான்.

அமைச்சர் முகத்தில் வியப்பு விரிந்தது. சிறிது சமாளித்துக் கொண்டு ''என் பெயர் டபீர் பண்டிட்'' என்றார்.

''நல்லது.'' வாலிபன் ஆமோதிக்கும் பாவனையில் பதில் சொன்னான்.

''இவர்கள்....'' என்று பக்கத்திலிருந்த பெண்ணை சுட்டிக் காட்டினார் அமைச்சர்.

''சொல்லுங்கள்.''

''நந்தினி.''

''அழகான பெயர்.''

''இவள் தகப்பனார் ராஜா.''

''அப்படியா?''

''மிக உயர்ந்த ராஜா.''

இதைக் கேட்ட வாலிபன் வாய்விட்டுப் பெரிதாக நகைத்தான். அதற்குப் பதில் டபீர் பண்டிதரிடமிருந்து வரவில்லை. அந்தப் பெண்ணிடமிருந்து வந்தது, ''ஏன் சிரிக்கிறாய்?'' என்ற கேள்வி மூலம்.

''இதோ அந்தக் கதவுகளுக்குள் அரவணைத்துயிலும் ரங்கராஜாவுக்கு மேல் வேறு உயர்ந்த ராஜா இருக்க முடியாது,'' என்ற வாலிபன் மேலும் சொன்னான், ''இங்கு அந்தஸ்துக்கு இடமில்லை. இந்த இடமும் யாருக்கும் சொந்தமல்ல. இங்கு தரப்படும் ஒரே அந்தஸ்து அவனிடம் ஈடுபாடு'' என்று. அத்துடன் நிற்கவில்லை அவன், ''அமைச்சரே! அரசகுமாரியைக் காக்க வைக்கவேண்டாம். சந்நிதிக் கதவு திறக்கட்டும். அரங்கனைக் கண்ணார ஒரு விநாடி வணங்கிச் செல்கிறேன்,'' என்றும் விண்ணப்பித்துக் கொண்டான்.

டபீர் பண்டிதர் ஏதோ சொல்ல முயன்றார். அதற்குள் இளவரசி பேசினாள், ''கதவைத் திறவுங்கள்'' என்று. பட்டாடையார் அந்த இக்கட்டிலிருந்து கிடைத்த சமயத்தை உபயோகப்படுத்திக் கொண்டு ஒரே பாய்ச்சலாகக் கதவை நோக்கிப் பாய்ந்து தமது மடியிலிருந்த பெரும் சாவிக் கொத்தை எடுத்து ஒரு சாவியால் கதவைத் திறந்தார். கதவு திறக்கப்பட்டதும் முதலில் அரசகுமாரியும் அடுத்தபடி டபீர் பண்டிதரும் உள்ளே நுழைந்தார்கள். நுழைந்தவர்கள் அச்சமுற்று நின்றார்கள். அவர்களை நோக்கிய அரங்கனின் இரண்டு கண்களில் ஒன்று மங்கிக்கிடந்தது. இன்னொன்று கோபத்தால் பல வர்ணங்களை வெளியிட்டு ஜொலித்தது. அரசகுமாரியும் அமைச்சரும் அஞ்சி, சிலையென நின்றார்கள். அடுத்த விநாடி அமைச்சரின் குரல் பெரிதாக ஒலித்தது: ''அரங்கனின் ஒரு கண்ணிலிருந்த பெரும் வைரத்தைக் காணோம்.* அழையுங்கள் என் வீரர்களை, சிறை செய்யுங்கள் இந்தத் திருடனை!'' என்று கூவினார் அமைச்சர். வீரர்களை அழைக்க வெளியே ஓடினார் பட்டாடையாருடன் கூட வந்தவர், கையில் வட்டத் தலைப்பாகையைப் பிடித்த வண்ணம். இரண்டு விநாடிகளுக்கெல்லாம் உள்ளே வந்த மகாராஷ்டிர வீரர்கள், அந்த வாலிபனை வளைத்துக் கொண்டார்கள்.

(தொடரும்)

---

*அரங்கனின் கண்ணிலிருந்த ஒரு வைரம் 18'வது நூற்றுண்டில் திருடப்பட்டது. பின்னர் ரஷ்யாவின் ஜார் மன்னரின் மணி மகுடத்தில் பிரதான ரத்தினமாகப் பதிக்கப் பெற்று 'ஆர்லோப் டைமண்ட்' (Orloff Diamond) என்று பிரசித்தியுடன் விளங்கியது. "The Madras Presidency with Mysore, Coorg and other Associated States"—By Edgar Thurston, C. I. E. Peag 273.

"மச்சானைப் பார்த்தீங்களா?" பிரபலமானதிலிருந்து விநியோகஸ்தர்கள் அதே மாதிரி ஒரு கிராமிய ஹிட் பாடல் ஒவ்வொரு படத்திலும் தேவை என்று விரும்புகிறார்கள்.

சமீபத்தில் 'மழை மேகம்' படப்பிடிப்பில் எடுக்கப்பட்ட புது மச்சான் பாடல் இது:

பெண்: "சொக்குப் பொடி போட்டானும் மச்சான் மச்சான்.. அவன் சொன்னதெல்லாம் கேட்கும்படி வைச்சான் வைச்சான்.."

ஆண்: சொக்குப் பொடி போடத்தான் மச்சான் மச்சான்.. அவன் சொன்னபடி கேட்கத்தான் பொண்ணை வைச்சான் வைச்சான்"

சுஜாதாவுடன் சகோதரர் மேனனும் தவறாமல் தினமும் ஸ்டுடியோவுக்கு வருகிறார். கால் ஷீட் விஷயத்தை இருவரும் மற்றவருக்கும் புரியாத மொழியில் பேசித் தீர்மானிக்கிறார்கள்.

அந்த மொழி: சிங்களம். சுஜாதா பிறந்தது சிலோனில்தானே?

பிரகாஷ் ஸ்டுடியோவில் 'அம்ருத வாஹினி' என்ற மலையாள ஷூட்டிங்.

ஊர்வசி சாரதா உற்சாகமாகப் பாடி நடித்துக் கொண்டிருந்தார். அப்போது அவருக்கு ஒரு டிரங்க் கால் வந்தது. விஷயத்தைக் கேட்டதும் முகம் மலர்ந்தது.

அவரும் நாகேஸ்வரராவும் சேர்ந்து நடித்த 'மஹாத்முடு' என்ற தெலுங்குப் படம் டெரிபிள் சக்ஸஸா ஓடுகிறது என்பதுதான் டி.கா. நியூஸ்..

அந்தப் படத்தில் என்ன விசேஷம்?

"நான் பதினைந்து வருடத்துக்கு முன்பு நாகேஸ்வரராவின் தங்கையாக 'இத்ரமித்ரு'னு படத்தில் நடித்தேன். இடையே ஓரிரு படங்களில் சின்னச் சின்ன வேஷம்.

இந்தப் படத்தில்தான் (மஹாத்முடு) நான் ரொம்ப நாளைக்குப் பிறகு காதலியாக கிளாமராக வெரைட்டி செய்திருக்கேன்!" என்றார்.

தெலுங்குப் படங்களில் தான் நடித்ததைப் பற்றிப் பேசும் போது அவர் சொன்ன இன்னொரு செய்தி: "பொதுவா நான் புராணப்படம் பக்கம்

# கூச்சம்



போகமாட்டேன். என். டி. ராமராவ் 'தான வீர சூர கர்ண' என்ற புராணப் படத்துக்காக என்னை பிடிவாதம் செய்து திரௌபதி வேடத்தில் நடிக்க வைத்து விட்டார். முதல் காட்சி திரௌபதி வஸ்திராபரணம்! நான் முதன் முதலில் காமிராவுக்கு முன்னால் நின்ற போது எப்படி சங்கடப்பட்டேனோ அவ்வளவு சங்கோஜம், கூச்சம், பயம் எல்லாம் அந்த புராணப் படத்தில் நடிக்கும்போது இருந்தது" என்றார் இரட்டை ஊர்வசியான சாரதா.

மனேகர் தங்கவேலுவைப் பற்றி இப்படிக் குறிப்பிட்டார்: "காமெடியன்களுக்கு ஸ்பஷ்டமாகப் பேசத் தெரியணும் (Diction). அதனால் தான் தங்கவேலுவுக்கு இன்னும் மார்க்கெட் இருக்கு. வாய்ஸைப் பொறுத்தவரை அவரை மேல்நாட்டு நடிகர் 'டேனி கே'க்கு ஒப்பிடலாம்."

—ராதா

## 3. மறைந்த இருவர்

அரங்கன் சந்நிதிக் கதவைத் திறந்த பட்டாடையார் பயத்தினால் உள்ளேயிருந்த பெருமாள் மீது தமது கண்களை நாட்டாமலே கர்ப்பக்கிரகத்தின் பெரும் வெண்கல நெய் விளக்கின் திரியை வலது கைப் பெருவிரலாலேயே தூண்டிவிட்டாராகையால், திடீரென டபீர் பண்டிதர் இரைந்ததும் அதிகக் கிலிக்கு இலக்காகி இறைவனின் கண்களை நோக்கினார். அவருக்கு நினைவு தெரிந்த நாள் முதல் மூலவரின் இரண்டு கண்களையும் அலங்கரித்திருந்த பெரு வைரங்களிரண்டில் ஒன்று காணவில்லையென்பதை உணர்ந்ததும் கைகால்கள் உதறியதால் நெஞ்சும் திக்கு திக்கென்று அடித்துக்கொள்ளவே மயக்கம் போடும் நிலைக்கு வந்துவிட்டார். அந்த நிலைக்கு இன்னொருவர் வராததற்குக் காரணம் அவர் டபீர் பண்டிதரின் உத்தரவை நிறைவேற்ற வாயிலிலிருந்த மகாராஷ்டிர வீரர்களை அழைத்து வர ஓடிவிட்டதுதான். இத்தனை ஆர்ப்பாட்டத்திலும் இளவரசியும், டபீர் பண்டிதருக்குப் பின்னால் கர்ப்பக்கிரகத்திற்குள் நுழைந்த வாலிபனும் மட்டும், எந்த விதச் சப்தத்தையும் கிளப்பாமலும் நிதானத்தைக் கைவிடாமலும் நின்றார்கள்.

சகல சராசரங்களின் மூலப்பொருளின் அர்ச்சாவதாரமாய் சயனத் திருக்கோலம் கொண்டிருந்த மூல அரங்கனுக்கு அன்று முத்தங்கி சார்த்தியிருந்தபடியால் தலை முதல் கால்வரை மூடிய முத்துக்கோப்புகள் கர்ப்பக்கிரக வெண்கல விளக்கின் ஒளியில் அற்புதமாகப் பிரகாசித்தாலும் திடீரென ஒற்றைக் கண் மட்டும் அவனருளை வீசியதால் ஏற்பட்ட பிரமை மட்டும் அந்த இருவரையும்கூட விடவில்லை. எந்த இரு கண்களைக் கண்டமாத்திரத்தில் 'அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்று அரிஜன குலத்தவரான திருப்பாணாழ்வார் தமது பத்துப் பாட்டில் கடைசி அடியைப் பாடி வேறெதையும் காணாமலே அங்கேயே உயிர்நீத்தாரோ, அப்பேர்ப்பட்ட அழகிய மணவாளனின் அழகுத் திருவிழிகளொன்றின் வைரத்தை யார் திருடியிருக்க முடியும்? எப்படித் திருடியிருக்க முடியும்? என்ற எண்ணங்களே அவ்விருவர் மனத்திலும் எழுந்தபடியால் வேறு விஷயங்களில் அவர்கள் சிந்தனை செல்லாததால், இருவரும் செயலற்றே நின்று கொண்டிருந்தனர். அந்த வைரம் பிரெஞ்சுக்காரனொருவனால் திருடப்பட்டு ரஷ்யாவில் விற்கப்பட்டு ரஷ்ய மன்னர் கிரீடத்தில் இணைந்துவிட்டதாக வரலாறு பின்னால் கூறினாலும் அதைப்பற்றி முன்கூட்டி அறிய வகையில்லாத டபீர் பண்டிதர், தனித்து சந்நிதிக்கெதிரிலிருந்த அந்த வாலிபன்தான் திருடியிருக்க வேண்டுமென்ற ஊகத்தில் கூவி விட்டாரானாலும், அவர் கூவியதைப் பற்றி லட்சியம் செய்யாத வாலிபன் கர்ப்பக்கிரகத்திலிருந்து தப்ப எந்தவித முயற்சியும் எடுக்காமல், 'அரங்கனின் ஒரு கண் காணாமற் போய்விட்டதால் அந்த ஸ்ரீரங்கத்துக்கும் சோழ மண்டலத்துக்கும் ஏதோ பெருத்த விபரீதம் ஏற்படப்போகிறது. இது நிச்சயம்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே சயனங்கொண்ட பெருமாளை மனத்தால் வணங்கினான். முத்தங்கி மூடிய மூலப்பொருளின் ஒரு கண் மட்டும் காணாதது குறையாகத்தெரிந்தும் 'இச்சாமாத்திரத்தினாலேயே சகல உலகுக்கும் மங்களம் விளைவிக்க வல்ல உன் அருள் சுரக்க ஒரு கண் போதாதோ?' என்றும் வினவிக் கொண்டான் அந்த வாலிபன்.

அவன் எண்ணங்கள் இப்படிப் பலவிதமாக ஓடிக் கொண்டிருந்தபடியாலும், வீரர்கள் வருவதற்குள் தப்ப அவனுக்கு நேரம் மிக இருந்தாலும் தப்பச் சிறிதளவும் முயலவில்லை அந்த வாலிபன். ஆனால் வீரர்கள் வந்து அவனைச் சூழ்ந்து கொண்டதும் கணீரென்ற குரலில் அவர்களை நோக்கிக் கூறினான். "கர்ப்பக் கிரகத்தை விட்டு

வெளியே செல்லுங்கள். சண்டைக்கு இடம் சந்நிதானமில்லை,'' என்று. வந்த வீரர்கள் பத்துப் பேர்களிருந்தாலும், அவர்களில் இருவர் தங்கள் கைகளில் 'மாட்ச்லாக்' துப்பாக்கியைத் தூக்கி அவன் மார்பை நோக்கிப் பிடித்திருந்தாலும், கர்ப்பக்கிரகத்தில் இடமின்மை காரணமாக எட்டு வாட்கள் உருவப்பட்டு மற்றவர் வெளியே நின்றிருந்தாலும், அவர்கள் யாரையுமே அந்த வாலிபன் லட்சியம் செய்யவுமில்லை, தன் வாளை உருவவுமில்லை. இடையே செருகியிருந்த கைத்துப்பாக்கியைக்கூட அவன் எடுக்கவில்லை. ஏதோ அடிமைகளுக்கு ஆணையிடும் அரசன் போலவே அவன் பேசினான்.

அவன் பேச்சும் தோரணையும் அரசகுமாரிக்கும், பட்டாடையாருக்கும் வீரர்களுக்கும் வியப்பை அளித்ததென்றால் டபீர் பண்டிதரின் கோபத்தையும் அது அபரிமிதமாகக் கிளறிவிடவே, ''நீ யார் உத்தரவிட?'' என்று சீறிய அவர், ''ஏன் நிற்கிறீர்கள்? பிடியுங்கள் இவனை,'' என்று மீண்டும் உத்தரவைப் பிறப்பித்தார். இன்னும் ஏதோ சொல்ல முயன்றவர் வாயடைத்து நின்றார். அடுத்த வினாடி அந்த வாலிபனின் இடது கரம் இளவரசியின் இடையை இரும்புப்பிடியாக இழுத்துப் பிடித்தது. ''இளவரசி! வாருங்கள் வெளியே. அரங்கன் முத்தங்கி சேவை உங்களுக்கும் கிடைத்தது, உங்களருளால் எனக்கும் கிடைத்தது. ஆனால் இங்கு திருட்டுப் போயிருக்கிறது. இந்த டபீர் பண்டிதனுக்கு மூளையில்லை, திறவாத கர்ப்பக்கிரகக் கதவுகளுக்குள் நான் நுழைய முடியாது என்பதை உணர. அப்படித் திருடியிருந்தால் நீங்கள் வரும்வரை மண்டியிட்டுக் காத்திருக்க நான் முட்டாளல்லவென்பதும் பண்டிதனுக்குப் புரியாவிட்டாலும் உங்களுக்குப் புரியும் என்று நினைக்கிறேன்,'' என்று கூறிக்கொண்டே அந்தப் பெண்ணை இழுத்துக்கொண்டு கர்ப்பக்கிரகத்திலிருந்து அடுத்திருந்த மண்டபத்துக்கு வந்தான். அப்படி வந்தவனைப் பார்த்துத் துப்பாக்கிகளைக் குறிவைத்துக் கொண்டே இரு வீரர்கள் பின் வாங்க வாட்களை உருவியவர்களும் திடீரென அவனைச் சூழ்ந்து கொண்டனர். மண்டபத்துக்கு வந்ததும் வீரர்களால் சூழப்பட்ட நிலையிலும் அவன் சொற்கள் நிதானமாகவும் பயங்கரமாகவும் ஒலித்தன. ''துப்பாக்கிகளையும் வாட்களையும் கீழே எறிந்துவிடுங்கள், இல்லையேல் உங்கள் அரசகுமாரியின் உயிர் சல்லிக் காசு பெறாது,'' என்ற வாலிபனின் சொற்களைக் கேட்ட வீரர்கள் முதலில் அவனுக்கு மூளைக் கோளாறு என்றே நினைத்தார்கள். இரண்டு துப்பாக்கிகளையும் எட்டு வாட்களையும் அலட்சியம் செய்யக்கூடியவன் பைத்தியமாகத்தானிருக்க வேண்டுமென்ற முடிவுக்கு கர்ப்பக்கிரகத்திலிருந்து வெளியே வரமுற்பட்ட டபீர் பண்டிதர்கூட முதலில் நினைக்கவே செய்தார். ஆனால் அவனது வலதுகரத்தில் திடீரென மந்திரத்தால் வெளிக்கிளம்பியதுபோல் இடையிலிருந்து கிளம்பிய கைத்துப்பாக்கி இளவரசியின்



**கணவன்: கழுத்துக்குச் சங்கிலியில்லை, மாத்திக்க சேலையில்லை என்று நாம் ஒரு வசதியுமில்லாம இருக்கிறதைப் பார்த்துப் பக்கத்து வீட்டுக்காரர்களெல்லாம் கேலி பேசுவதாகச் சொன்னாயல்லவா? அதற்கெல்லாம் விடிவு காலம் பிறந்து விட்டது.**



**மனைவி: ஆபீஸில் ஏதாவது போனஸ் கொடுத்தார்களா என்ன?**

கழுத்துக்கு நேரே காட்சியளித்ததும் அவர் சந்தேகமும் பறந்து பயத்துக்கு இடம் கொடுத்தது. ''டேய்! நீ யாரைத் தொட்டுவிட்டாய், யார்மீது கைத்துப் பாக்கியை நீட்டுகிருய் என்பது புரிகிறதா உனக்கு?'' என்று அச்சத்தால் நடுங்கும் சொற்களை உதிர்த்தார்.

வாலிபன் தனது ஈட்டிக் கண்களைப் பண்டிதர்மீதும் நாட்டினன். தன்னிடம் சிக்கியிருந்த பைங்கிளிமீதும் நாட்டினன், எதிரேயிருந்த வீரர்கள் மீதும் நாட்டினன், விநாடி நேரத்தில். அவன் பதிலும் தங்கு தடையின்றி வந்தது. ''நீங்கள் உங்கள் பெயரை டபீர் பண்டிதர் என்று பறைசாற்றிக் கொண்டதுமே தஞ்சை மன்னர் ராஜா பிரதாப் சிங்கின் வருமானத்துறை அமைச்சர் என்பதைப் புரிந்து கொண்டேன். இத்தனை நேரத்தில் உங்களுடன் தனித்து இந்தப் பெண் வர முடியுமானல், அதுவும் உங்களுக்காக யாருக்கும் திறவாத அரங்கன் கர்ப்பக்கிரகம் இந்த நேரத்தில் திறக்க வேண்டுமானல், இவர் தஞ்சை இளவரசியாயிருக்க வேண்டும் என்பதையும் புரிந்து கொண்டேன். இந்த அரசகுமாரியைத் தொட்டதற்கே மரண தண்டனை உண்டு என்பதைக்கூடப் புரிந்து கொண்டேன் பண்டிதரே. ஆனல்....'' என்ற அந்த வாலிப வீரன் அவரை நகைப்புத் ததும்பும் விழிகளால் நோக்கினன் மீண்டும் ஒருமுறை.

'ஆனல்?' என்ற கேள்வி பண்டிதரிடமிருந்து பதற்றத்துடன் வந்தது.



கணவன்: இல்லை. குடியிருக்க வேறு இடத்தில் குடிசை பார்த்துவிட்டேன்!

''நீர் யாரைக் கைது செய்ய முயல்கிறீர் என்பதைப் புரிந்து கொள்ளவில்லை. தவிர, யாருமறியாமல் இங்கு வந்த ஒரே காரணத்தாலேயே என்னைத் திருடனென்றும் தீர்மானித்ததிலிருந்து உமக்கும் அறிவுக்கும் அதிக சம்பந்தமில்லையென்பதும் தெரியவந்தது,'' என்ருன் வாலிபன் சர்வ சாதாரணமாக.

டபீர் பண்டிதரின் சொற்கள் குழப்பத்துடன் மீண்டும் ஒலித்தன. ''யார் நீ?'' என்ற கேள்வியில்.

''அதைத் தஞ்சையில் புரிந்து கொள்வீர்.''

''அங்குதான் நீ செல்கிருயா?''

''ஆம்.''

''அப்படியானல் எங்களுடன் வரலாம்.''

''வந்திருப்பேன்—நீர் மட்டும் என்னைக் கைது செய்ய உத்தரவிட்டிருக்காவிட்டால்.''

இதைக் கேட்ட பண்டிதர் சினத்தின் வசப்பட்டார். ''இப்பொழுது வர மாட்டாயாக்கும்?'' என்றும் கேட்டார் கோபக் குரலில்.

''மாட்டேன்.'' என்ருன் வாலிபன் திட்டமாக.

''ஏன்?'' என்று வினவினர் பண்டிதர்.

''தங்கள் சகவாசம் எனக்குப் பிடிக்கவில்லை,'' என்ற வாலிபன் சிறிது நகைத்தான்.

''ஏன் நகைக்கிருய்?'' என்று சீறினர் பண்டிதர்.

வாலிபன் இதழ்களில் இளமுறுவல் அரும்பியது. ''பண்டிதரே! உமது மனத்தில் நீர் கெட்டிக்காரராக நினைத்துக் கொண்டிருக்கிறீர். இப்படியே பேச்சுக் கொடுத்தால் நான் சற்று அயர்ந்து விடுவேனென்றும் அந்தச் சமயத்தில் உமது வீரர்களைக் கொண்டு பிடித்துவிடலாமென்றும் மனப்பால் குடிக்கிறீர். ஆனல் என்னிடம் அந்தக் கதை பலிக்காது. இது மட்டும் அரங்கன் சந்நிதியாயில்லாதிருந்தால் இந்தக் கைத்துப்பாக்கியால், உம்மையும் இந்த இரண்டு மாட்சிலாக் துப்பாக்கிகளையும் கொன்றிருக்க மாட்டேன், ஆனல் செயலிழக்கச் செய்திருப்பேன். இங்கு அதைச் செய்ய

# உயர்தரமான சுவைக்கும் உண்மையான சிக்கனத்திற்கும்

## ரிக்கரி
### இன்ஸ்டன்ட்




**அரை டீஸ்பூன் அளவே போதும்**

(தேவைக்கேற்ப குறைத்தோ அதிகமாகவோ உபயோகிக்கவும்)




**50 கிராம் சீசாவில் 37 கோப்பைகள்**

மற்றெந்த 50 கிராம் சீசாவை காட்டிலும் 7 கோப்பைகள் அதிகமாக ரிக்கரி அளிக்கிறது. ஏனெனில் ரிக்கரி ஸ்டிராங்கானது. இது சிக்கனத்திற்கு ஒரு சிறந்தவழி.



**அதிக ஸ்டிராங்கானது, அதிக மணமுள்ளதும்கூட.**

ருசியும், மணமும் மிகுந்த ஸ்டிராங்கான தயாரிப்பு. ஆகவே, ஒரு கோப்பை மணமும் ருசியும் மிக்க நல்ல காப்பிக்கு குறைந்த அளவு ரிக்கரியே போதும்.



**இப்போது ரிக்கரியின் விலை கணிசமாகக் குறைவு!**

50 கிராம் சீசாவுக்கு 50 பைசே விலை குறைக்கப்பட்டுள்ளது

## ரிக்கரி
### இன்ஸ்டன்ட்

**வறுத்து அரைத்த காப்பியின் சுவையை ஏறக்குறைய அதே விலையில் உங்களுக்கு அளிக்கிறது**

NRCM-27-75TAM




'எங்கவீட்டுப் பிள்ளை'யின் மலையாள வடிவம் 'அஜயனும் விஜயனும்.'

நடிகர் உம்மருக்கு (நம்பியார் ரோல்) சுகுமாரி ஒத்தடம் கொடுக்கிறார். சுகுமாரியிடம் ஒத்தடம் பெற்றுக்கொள்ள உம்மர் எவ்வளவு உதை வேண்டுமானாலும் வாங்கத் தயார்.

வில்லை. ஏன் தெரியுமா?'' என்று வினவினான் நிதானமாக.

''ஏன்?'' பண்டிதர் குரல் வறண்டு ஒலித்தது.

''சயனத்திலிருக்கும் எம் பெருமானுக்குத் தமிழ்மறை இன்பத்தைத் தவிர வேறு அதிர்ச்சி ஒலிகளைக் கேட்டு வழக்கமில்லை. அறையர்கள் இன்னிசையைத்தான் அவன் செவிகளும் அவனுக்கு மேலிருக்கும் பஞ்சமுக அனந்தனின் கட் செவிகளும் கேட்டிருக்கின்றன. அவனுக்கு வேனிற் காலத்தில் சுகமளிக்க கர்ப்பக்கிரகத்தைச் சுற்றிலும் காவிரியின் குளிர் தேக்கப்படுகிறது. அதற்காக கருங்கல் தேக்கமும் ஓடுகிறது உட்பிரகாரத்திற்குள்ளே. அப்படி சுகப்படும் பரம புருஷன் சந்நிதியில், தாமம் துளவமாயிருக்கும் தாமோதரன் இருப்பிடத்தில் துப்பாக்கி சத்தமோ வாளரவோ கூடாது என்ற ஒரே காரணத்தில்தான் இங்கு சுடவில்லை நான். இப்பொழுது வழிவிடுங்கள்,'' என்ற அந்த வாலிபன் அவன் என்ன செய்ய உத்தேசித்திருக்கிறான் என்பதை அறிய முன்பே திடீரென இளவரசியை இரு கைகளாலும் தூக்கித் தோளின்மேல் போட்டுக் கொண்டு கைத்துப்பாக்கியை அவள் உடலை நோக்கி நீட்டிக் கொண்டே, ''அசைய வேண்டாம். அப்படியே நில்லுங்கள்,'' என்று கூறிக்கொண்டு பின்னுக்கு நகர்ந்து படிகளில் இறங்கினான். அடுத்த விநாடி அவன் வெளிவாசலை நோக்கி வேகமாக ஓடும் சத்தம் கேட்டது.

அரசகுமாரிக்கு ஆபத்துக் கூடாது என்பதால் சிலைகளாகிவிட்ட பண்டிதரும் வீரரும் திடீரென சுறுசுறுப்பைக் காட்டினார்கள். ''பிடியுங்கள் அவனை. விட்டால் உங்கள் தலைகள் தஞ்சை மண்ணில் உருளும்,'' என்றார் அமைச்சர். வீரர்கள் ஓடினார்கள். பண்டிதர் ஓடாமல் பட்டாடையாரைப் பார்த்தார். பட்டாடையார் நடுங்கி, ''எனக்கு எதுவும் தெரியாது. எல்லாம் தங்கள் கட்டளைப்படிதான், ஓலைப்படிதான்....'' என்று குழறினார்.

''சரி சரி! கதவைப் பூட்டும். கோவில் காவலரை அழைத்து சந்நிதியைப் பாதுகாக்க ஏற்பாடு செய்யும்,'' என்று உடல் தள்ளாட, பெருமூச்சு

வாங்க படிகளில் இறங்கி, பக்கத்திலிருந்த இன்னொரு கைங்கர்யபரர் நீட்டிய வட்டாவைக்கூட வாங்கிக் கொள்ளாமல் படிகளில் இறங்கி ஓடினுர்.

அவர் சென்றதும் கைங்கர்யபரர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். இருவரில் வட்டாவைத் தாங்கியவர் கேட்டார், ''இதை என்ன செய்யட்டும்?'' என்று வட்டாவைக் காட்டி.

பட்டாடையார் சினம் மிதமிஞ்சிற்று. ''உன் தலையில் கவிழ்த்துக் கொள்,'' என்று கூவினுர். ''உனக்குத் தெரியவில்லை? சாவி நம்மிடமிருக்கிறது. அரங்கன் கண் வைரம் காணும். நம் இருவர் தலைக்கும் தீம்பு வந்திருக்கிறதடா பீடையே,'' என்று கத்தினர்.

''பீடை போன்ற சொற்களை இங்கு சந்நிதியில் பேசக்கூடாது,'' என்றுர் வட்டாவைத் தாங்கியவர்.

''அட பாகவதப்பிரபூ! போடா! போய் காவலரை அழைத்து வா. நாளைக்கு நாம் இருக்கப்போகும் இடம் இதுவல்ல,'' என்றுர் பட்டாடையார்.

''வேறு எதுவோ?''

''எம்பெருமான் திருவடி.''

அதைவிடப் பெரிய பேறு இல்லையென்று தெரிந்திருந்தும் வட்டாவைத் தாங்கியவர் நடுங்கினுர். அத்தனை சின்ன வயதில் திருவடிகளை அடையும் நிலையை அவர் எய்தவில்லை. ஆகவே ஏதோ முணுமுணுத்துக் கொண்டு ஓடினுர் காவலரை அழைக்க.

இவர்கள் உரையாடல் இப்படியிருக்க, வாலிபனைத் துரத்திச் சென்ற தஞ்சை வீரர்களால் அவனைக் கண்டு பிடிப்பது எளிதாயில்லை. நான்கு பக்கங்களிலும் அவர்கள் தேடியபோது ஒரு புறத்தில் மட்டும் அவன் ஓடிய காலரவம் கேட்டதால் அங்கு அவர்களும் ஓடவே வாலிபன் அவர்கள் வருகையை அறிந்து ஆயிரங்கால் மண்டபத்துக்குள் நுழைந்துவிட்டான். அதற்குள் வீரரும் நுழைந்து துழாவினுலும் இருட்டின் காரணமாக அந்தப் பிரும்மாண்டமான மண்டபத்தில் காலைத் தூக்கி நின்ற புரவிகளைத்தான் அவர்கள் தடவ முடிந்தது. அடுத்த சில விநாடிகளில் வேறு ஒரு பக்கம் காலரவம் கேட்கவே வடக்கு வாசலை நோக்கி ஓடினுர்கள் அந்த வீரர்கள். வடக்கு வாசல் திட்டிக் கதவு திறந்து கிடந்தது. அதை அணுகுமுன்பே ஒரு புரவி காற்றிலும் கடுகப் பறந்ததால் ஏற்பட்ட குளம்பொலிகள் இரவின் நிசப்தத்தைப் பயங்கரமாகக் கிழித்தன. அந்த வாலிபன் புரவியில் இளவரசியைத் தூக்கிச் சென்றுவிட்டான் என்ற உண்மையை அறிந்த அவர்கள் பிராணனே போய் விடும் போலாயிற்று.

அடுத்த ஒரு விநாடிக்குள் ஸ்ரீரங்கத்தின் வீதிகள் அல்லோலகல்லோலப்பட்டன. பண்டிதரின் ஆணையால் நூறு புரவிகள் பறந்தன. வாலிப வீரனின் புரவி சென்ற வடக்கு திக்கை நோக்கி. ஸ்ரீரங்கமும் சல்லடை போட்டுச் சலிக்கப்பட்டது. வாலிபனை எங்கும் காணும். எப்படி எந்தத் திசையில் அவன் சென்றுன்? எப்படி பலமான காவலைக் கடந்தான்? என்பது பெரும் புதிராயிருந்தபடியால் பண்டிதர் பிரமை பிடித்து மயக்கம் போட்டு வடக்கு வீதியிலேயே சாய்ந்துவிட்டார்.

(தொடரும்)

''தியாகராஜ ஸ்வாமிகள் ADMK ராமச்சந்திரனைப் பற்றி எவ்வளவு அழகா கீர்த்தனைகள் பாடியிருக்கார் தெரியுமோ?''

''என்ன! என்ன!''

'A' for அயோத்தி, 'D' for தசரத 'M' for மகாராஜா, 'K' for கௌசல்யா. அதாவது அயோத்தி தசரத மகாராஜாவுக்கும், கௌசல்யாவுக்கும் பிறந்த அந்த ராமச்சந்திரனைச் சொல்றேன்!''

—வாலியின் நாடகத்தில் கேட்டவர்: —ஆர். வெங்கட்ராமன்



ஏ.டி.எம்.கே. ராமசந்திரன் பற்றி தியாகராஜ கீர்த்தனைகள்!

# ஓடோமாஸ் மட்டுமே உங்களுக்குக் கொசுக் கடியிலிருந்து 2-விதங்களில் பாதுகாப்பை அளிக்கிறது.

## நீங்கள் இரவில் நிம்மதியாக உறங்க உதவுகிறது.

இரா கொசு விரட்டியைப் போலல்லாது ஓடோமாஸ் உங்களைப் பாதுகாக்கிறது.



அதன் வாசனை கொசுக்களை விரட்டியடிக்கிறது.



அதன் ஒப்பற்ற கலவைப்பொருள் உங்கள் சருமத்தை இரவு முழுவதும் கொசுக்கடியிலிருந்து கவசம்போல் காக்கிறது.

இன்று இந்தியாவில் அதிகமாக விற்பனையாகும் கொசு விரட்டி ஓடோமாஸ் என்பதில் வியப்பு ஏதுவுமில்லை.

உடனே
**ஓடோமாஸ்**
உபயோகியுங்கள்.

இல்லையேல்
கொசுக்கள் உங்களுக்கு சொல்ல முடியாத தொல்லையைத் தரும்.




பல்சாரா
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA

CHAITRA-BLS-86

# ராஜபேரிகை

## 4. "வாள் மகளே! வா!"

'கங்கையிற் புனிதமாய காவிரி நடுவு பட்டு, பொங்கு நீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கந்தன்னுள்' வீதிகள் அனைத்திலுமே மகாராஷ்டிர வீரர்கள் சல்லடை போட்டுச் சலித்தும் தஞ்சை மன்னன் செல்வியைக் கடத்திச் சென்றுவிட்ட வாலிபன் கிடைக்காதது மற்றவர்களுக்குப் பெருவியப்பை அளித்தும், அவனால் தூக்கிச் செல்லப்பட்ட அரச மகளுக்கு மட்டும் அது எந்தவித வியப்பையும் அளிக்கவில்லை.

அரங்கன் சந்நிதிப் படிகளை விட்டு இறங்கிய மாத்திரத்திலேயே அனாயசமாகத் தன்னைத் தோளின்மீது போட்டுக் கொண்டு வெகுவேகமாக ஓடத் துவங்கிய வாலிபன் ஓடிக் கொண்டே அவள் காதில் மட்டும் கேட்கும் வண்ணம், 'வாயைத் திறவாதே,' என்று கூறிய எச்சரிக்கைச் சொற்களும், பிறகு அவன் பின் தொடர்ந்த காவலருக்குப் பாய்ச்சல் காட்ட ஆயிரக்கால் மண்டபத்தில் பதுங்கிவிட்டதும், அதற்குப் பிறகு வடக்கு வாசல் திட்டிக் கதவுக்காக மெல்ல ஓடி அதன் வெளியே தனித்து நின்ற புரவி மீது தன்னைக் குறுக்கே போட்டு அவனும் தாவி ஏறிக் கடிவாளக் கயிறுகளைத் தொட்டதுமே அந்தப் புரவி காற்றைப் போல் பறந்துவிட்டதும், எல்லாமே பெரும் சொப்பனம் போலிருந்தாலும், அந்தச் சொப்பனம் நடக்கவே செய்ததென்பதை உணர்ந்த அரசுகுமாரி வாயைத் திறவாமலே குதிரை முதுகின் குறுக்கே கிடந்தாள். அப்படிக் கிடந்த நிலையில் அந்தப் புரவியின் முதுகின் கடினம் தன்னைக் கடத்தியவன் தோளுக்கு மிருந்ததை நினைத்து, 'இந்தச் சிறுவயதில் இவனுக்கு எப்படி இத்தனை உடல் உரமும் உள்ள உரமும் வந்தது?' என்று தன்னை வினவிக்கொண்டாள் பலமுறை. வினவிக் கொண்டாளே தவிர விடை காணவில்லை. விடை காணவில்லையே தவிர அதனால் துன்பமோ கோபமோ அவள் இதயத்தைப் பாதிக்கவுமில்லை. அத்தகைய நிலையில், சற்று எட்ட உத்திர, சித்திரை வீதிகளிலும், வடதிருக் காவேரியான கொள்ளிடப் பெரும்பாதையிலும் வீரர்கள் கோஷமும் புரவிக் குளம்பொலிகளும், 'இத்தனை பேரையும் மீறி இந்த வாலிபன் எப்படித் தப்ப முடியும்?' என்ற விசனமும் அவளைக் காரணமில்லாமல் கவர்ந்து கொண்டாலும், வாலிபனது அடுத்த நடவடிக்கைகள் அவளுக்கு அவன் தந்திரத்தின் எல்லையைக் காட்டின.

வடதிருக்காவேரிக்குச்



சென்ற பெரும் பாதையிலிருந்து வாலிபன் தனது புரவியைத் திடீரெனப் பக்கத்து அடர்ந்த தோப்புக்குள் திருப்பி, புரவியிலிருந்து கிழே குதித்து, புரவியின் கடிவாளத்தைப் பிடித்துக்கொண்டு மரங்களின் ஊடே மெல்ல நடந்தான் அரவமேதும் செய்யாமலே. அப்படி அரை நாழிகை பயணம் செய்ததும் கொள்ளிடத்தின் ஓரமாக ஓடிக்கொண்டிருந்த நீரில் குதிரையை இறக்கித் தான் மட்டும் முழங்கால் மட்டுமே ஓடிய நீர்க் காலைக் கடந்தான். அங்கிருந்து கொண்டே மிக நிதானமாகச் சற்று மேற்கே கண்களை ஓட்டியவன் மெல்ல நகைத்தான். அவன் நகைப்புக்குக் காரணத்தை அறிய மெல்லத் தலை தூக்கிய அரசகுமாரி, புரவி வீரர் பலர் கொள்ளிடப் பெரும்பாதையின் முனையிலேயே அலைவதையும், இன்னும் சிலர் புரவிகளை விட்டு இறங்கிப் பந்தங்களுடன் கொள்ளிட நீர்க் காலிலும் அதை அடுத்த மணற் பரப்பிலும் தன்னைத் தேடுவதையும் கண்டாள். அவர்கள் அப்படித் தேடி அலைந்து அலுத்து மீண்



டும் கரையேறிப் பாதையை நோக்கிச் சென்றதும், வாலிபன் மீண்டும் தனது புரவிமீது தாவி ஏறிப் புரவியைத் தட்டி விட்டதையும், அந்தப் புரவியும் அவனது எண்ணப்படி கொள்ளிட மணலில் மிக வேகமாகப் பாய்ந்து சென்றதையும் கவனித்த அரசகுமாரி, அது நல்ல அரபு ஜாதிப் புரவியென்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டாளாதலால் மௌனமே சாதித்தாள். சிறிது நேரத்திற்கெல்லாம் அவள் மௌனத்தை அந்த வாலிபன் கலைத்து, ''அரசகுமாரி, இனி நீங்கள் இறங்கலாம். ஆபத்து கடந்து விட்டது'' என்று கூறியதன்றி அவளை முன்பு தூக்கியதுபோல் மறுபடியும் தூக்கிக் கீழே இறக்கினான்.

அவள் இறங்கிய இடம் கொள்ளிடத்தின் வடக்குக் கரைக்கு அருகிலிருந்த நீர்க் காலை அடுத்திருந்ததைக் கவனித்த அரசகுமாரி தனது கண்களை நாலாபுரத்திலும் அலையவிட்டாள் சில விநாடிகள். பின்புறத்தே பிரும்மாண்டமாக விரிந்து கிடந்த வடதிருக் காவேரியின் வெளேரென்ற மணற் பரப்பு அந்த நல்ல இருட்டிலும் வெண்மை மங்காதிருந்ததையும், எதிரே தெரிந்த கரை மீது வளர்ந்திருந்த நானாவித மரங்கள் கூட மெல்ல மெல்லக் காற்றில் அசைந்து கொண்டிருந்ததையும், பட்சி ஜாலங்களின் அரவம் அடங்கி விட்ட சமயமாதலால் அந்த மரக் கூட்டத்தின் இன்பநிலைகூட அச்சத்தைத் தரக்கூடிய வகையில் அமைந்து கிடந்ததையும் கண்டாள் அந்தக் காரிகை. ஆனால் சில அடிகளே தள்ளி ஓடிக்கொண்டிருந்த நீர்க் கால் மட்டும் சிறிது சலசலப்பைக் காட்டி மரங்கள் அளித்த அச்சத்திற்கு மாற்று செய்திருந்ததால், எந்தப் பயங்கரத்துக்கும் ஒரு மாற்று இருக்கிறதென்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் தஞ்சை அரச மகள். பிறகு வானத்தை நோக்கிய அவள் சப்தரிஷி மண்டலமிருந்த நிலை கண்டு நடுநிசி தாண்டி விட்டதென்பதை உணர்ந்து கொண்டாலும், அந்த நடுநிசிகூட நட்சத்திரக் கூட்டங்களால் உலகத்துக்கு எத்தனை அழகை அளித்திருக்கிறதென்பதை எண்ணிப் பார்த்தாள். பிறகு இரண்டடி நடந்து சென்று நீர்க் காலுக்கருகே மணலில் உட்கார்ந்து காற்சேலையைச் சிறிது மேலெடுத்துக் கால்களை நீரில் அளையவிட்டாள்.



''முற்றிலும் பெண்களே சேர்ந்து ஒரு பாங்க் ஆரம்பிக்கப்

புரவியிலிருந்து இறங்கிய பின்னர் அவள் தன்னைக் கடிந்து கொள்வாளென்றோ, தன்னைப் பார்த்துச் சீறி வசைமொழிகளை வாரி உதிர்ப்பாளென்றோ வாலிபன் எதிர்பார்த்தால் ஏமாந்தே போனான். தான் அவளைத் தூக்கிக் கொணர்ந்ததைப்பற்றி வியப்பையாவது கண்டிப்பாய்க் காட்டுவாளென்று நினைத்திருந்தால் அதிலும் ஏமாற்றத்தையே அடைந்தான். தான் அவளைக் களவாடி வந்ததைப்பற்றி எந்தவிதப் பிரஸ்தாபத்தையும் செய்யாமல் எந்தவிதப் பரபரப்பையும் காட்டாமல், அவள் கொள்ளிட மணலையும், எதிரேயிருந்த சோலையையும், அண்ணாந்து வானத்தையும் பார்த்தது பரம விசித்திரமாயிருந்தது அவனுக்கு. 'இப்படியும் ஒரு பெண் உலகத்தில் உண்டா?' என்று எண்ணி அவன்தான் வியப்படைந்தான். ஆனால் வியப்போ பீட படப்போ பதற்றமோ இன்றி நீர்க் காலில் கால்களை அளைய விட்டுக்கொண்டு அரசகுமாரி அசட்டையுடன் உட்கார்ந்திருந்ததைக் கண்டதும் சிறிது கோப

மும் வரவே, ''அரச குமாரி!'' என்று சற்றே சினம் கலந்த குரலில் அழைத்தான் வாலிபன்.

அரசகுமாரி உட்கார்ந்த நிலையைவிட்டு அசையவுமில்லை, அவனைத் திரும்பிப் பார்க்கவுமில்லை. அவளருகே சென்று நீரைப் பருக முற்பட்ட புரவியின் கழுத்தில் தனது கையைப் போட்டுக் கட்டிக் கொண்டாள். ''என்ன அழகான புரவி!'' என்ற சொற்கள் மட்டும் அவள் வாயிலிருந்து உதிர்ந்தன.

வாலிபன் மெள்ள நிதானத்தைப் பறக்க விடும் நிலைக்கு வந்தான். ஆகவே அவளிருந்த இடத்தை நெருங்கி, ''புரவியை அழகு பார்க்க உங்களை இங்கு அழைத்து வரவில்லை'' என்றான் மெல்ல சினம் ஒலித்த குரலில்.

அவள் அவனைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. புரவியின் முகத்தை இரு கைகளாலும் தூக்கிப் பிடித்துக் கொண்டவண்ணம் கேட்டாள், ''அப்படியானால் என்னை அழகு பார்க்க அழைத்து வந்தீர்களா?'' என்று.

இந்தப் பதிலைச் சற்றும் எதிர்பாராத வாலிபன் திக்பிரமை அடைந்ததால் சினத்தை அகற்றிச் சந்தேகம் விளுக்க, ''அரசகுமாரி! உங்களுக்கு..'' என்று ஏதோ கேட்க முற்பட்டு முடியாமல் சொற்களை மென்று விழுங்கினான்.

''சித்தப் பிரமையில்லை,'' என்ற சொற்களை அலட்சியமாகக் கூறினாள் அவள்.

''அச்சம்?'' வாலிபன் கேள்வியில் குழப்பம் மிக அதிகமாயிருந்தது.

''எதற்கு அச்சப்பட வேண்டும்?''

''தனிமையாக ஒரு ஆடவனிடம்....''

''அதாவது உங்களிடம்?''

''ஆம்.''

''அகப்பட்டுக்கொண்டு விட்டேன்.''

''ஆம், ஆம்.''

''அதற்காகக் கவலைப்பட வேண்டுமென்கிறீர்கள்?'' இந்தக் கேள்வியைக் கேட்டு அவள் மெல்ல நகைத்தாள். அந்த நகைப்பில் அவன் புரவியும் பங்கு கொண்டு பற்களை நன்றாகக் காட்டி வாலிபனை நோக்கிக் கனைத்தது.

அதுவரை நின்ற நிலையிலிருந்த வாலிபன் இருமுறை மணலில் அப்புறமும் இப்புறமும் நடந்துவிட்டு மெள்ள அரசகுமாரியிருந்த இடத்திற்குச் சற்று தள்ளி நீர்க்காலருகே உட்கார்ந்து கொண்டு, ''அரசகுமாரி!'' என்று சற்று உரக்கவே அழைத்தான்.

''என்ன?'' என்று கேட்ட அரசகுமாரி கொள்ளிட நீரை எடுத்து இரு கைகளாலும் சற்று எட்ட இறைத்தாள்.

''உங்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்றான் வாலிபன் தயக்கத்துடன்.

''புரியாததற்கு என்ன இருக்கிறது?'' என்று கேட்டாள் அவள்.

''உங்களைப் பலவந்தமாகத் தூக்கி வந்திருக்கிறேன் அரங்கன் சந்நிதியிலிருந்து....'' என்று துவங்கினான் வாலிபன்.

''ஆம்.''

''வேறு வழியில்லை எனக்கு.''

''ஆம். பெரும் திருட்டுக்



போகிறோம். என்ன பேர் வைக்கலாம்?''

''பாங்கியர் பாங்க்.''

நம் சென்சார் போர்டு, படத்தைப் பார்க்கும்போது அதில் எத்தனை சதுர சென்டிமீட்டர் தோல் வெளியே தெரிகிறது என்றுதான் உன்னிப்பாகப் பார்க்கிறது. மிக ஆபாசமான படங்களுக்கெல்லாம் அவர்கள் சர்ட்டிபிகேட் கொடுத்து விடுவார்கள். ஆபாசமில்லாத ஒரு காட்சியில் நான்கு சென்டி மீட்டர் தோல் அதிகப்படி வெளியே தெரிந்தால் கூட அதை வெட்டி விடுவார்கள்.

(சஞ்சய் காந்தி கூறியது)

'யுவபாரத்'திலிருந்து: நிம்மி.



குற்றம் சாட்டப்பட்டது உங்கள் மேல். அகப்பட்டுக் கொண்டிருந்தால் உங்கள் தலையை நாளைக்கே வெட்டி விடுவார்கள்.''

''அது உங்களுக்குப் புரிகிறதைப்பற்றி எனக்கு மகிழ்ச்சி. இப்படி ஒரு அபலையை நான் தூக்கி வந்தது இதுதான் முதல் தடவை. என் உணர்ச்சிகளை மீறி, அறத்தை மீறி, நான் தெரிந்து செய்த முதல் குற்றம் இதுதான்.'' இதைச் சொன்ன வாலிபன் துன்பப் பெருமூச்சு விட்டான்.

அவன் துன்பத்தைக் கவனித்த அரசகுமாரி சொன்னாள், ''நீங்கள் துன்பப்பட ஏதுமில்லை,'' என்று.

''ஏன்?'' வாலிபன் கேட்டான் வியப்புடன்.

''முதலில் நான் அபலையல்ல. அதாவது பலமில்லாதவளல்ல. இரண்டாவது நான் இஷ்டப்பட்டிருக்காவிட்டால் உங்களால் என்னைக் கொண்டு வந்திருக்க முடியாது,'' என்று திட்டமாகக் கூறிய தஞ்சை அரசகுமாரி வாலிபனைத் திரும்பிப் பார்த்தாள்.

இருட்டு கண்களுக்குப் பழகிவிட்டதால் நட்சத்திர வெளிச்சமே போதுமாயிருந்தது அவ்விருவருக்கும், ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளவும் புரிந்து கொள்ளவும். ஆகவே, வாலிபன் அவள் கண்கள் தன்னை நோக்கி நகைப்பதைக் கண்டான்.

''உங்களிஷ்டமில்லாவிட்டால் உங்களை நான் தூக்கி வந்திருக்க முடியாதா?'' என்று வியப்பு மண்டிய குரலில் வினவினான்.

''முடியாது,'' என்றாள் அவள், அவன் கண்களைத் துணிவுடன் தன் கண்களால் சந்தித்து.

''உங்கள் கழுத்தில் நான் கைத்துப்பாக்கியைப் புதைத்தேனே,'' என்று சுட்டிக் காட்டினான் அவன்.

''ஆம், புதைத்தீர்கள்,'' என்று ஒப்புக்கொண்டாள் அவள் சர்வ சகஜமாக.

''அது......?''

''மற்ற வீரர்களை அச்சுறுத்த.''

''உங்களுக்கு அச்சமில்லை அப்பொழுது?''

''அப்பொழுதுமில்லை, இப்பொழுதுமில்லை.'' இந்தச் சொற்களைச் சந்தேகத்துக்கிடமின்றி மிகத் தெளிவாக உச்சரித்தாள் அரசகுமாரி.

''இப்பொழுது மில்லையா?'' என்று கேட்ட வாலிபன் தனது கச்சையிலிருந்த கைத்துப்பாக்கியில் கையை வைத்தான்.

அடுத்த கணம் அவன் விழிகள் பிரமிப்பின் எல்லையை அடைந்தன. அரசகுமாரியின் கையில் எங்கிருந்தோ ஒரு சின்னஞ்சிறு கைத் துப்பாக்கி மின்னல் வேகத்தில் தோன்றியது. அதன் வாய் வாலிபன் கண்களை நோக்கிக் கொண்டு பயங்கரமாக அசைவற்று நின்றது.

வாலிபனுக்கு அப்பொழுதுதான் மெள்ள மெள்ள உண்மை உதயமாயிற்று. அந்த உண்மையை வெளிப்படையாகச் சொன்னாள் அரசகுமாரி.

மல்லிகை மொட்டுக்களைச் சாயங்காலம் தொடுத்து ஈரத் துணியில் வைப்பதனால் காலை மலரும்போது பழுப்பு நிறமாகிவிடுகிறது. இதைப் போக்க மொட்டுக்களைத் தொடுத்தவுடன் சிறிது நேரம் தண்ணீரில் போடுங்கள். பிறகு தண்ணீரிலிருந்து எடுத்து உதறி ஒரு வாயகன்ற பாத்திரத்தில் போட்டு மூடி வைத்து விடுங்கள். காலையில் மிக வெண்மையாக இருப்பதோடு விரைவில் வாடுவதுமில்லை.

—சம்பூரணம்.



''நீங்கள் தோளில் என்னைத் தூக்கிப் போட்டுக் கொண்டு ஓடியபோது இந்தக் கைத் துப்பாக்கியை மெள்ள எடுத்து உங்களைச் சுட்டிருக்கலாம் மார்பில். அப்பொழுது முடியாவிட்டாலும் வடக்கு வாசலில் என்மீது பிடியைத் தளர்த்திப் புரவிமீது போட முயன்றபோது சுட்டிருக்கலாம். அப்பொழுதும் முடியாவிட்டாலும் கொள்ளிடத்தில் நீங்கள் புரவியிலிருந்து இறங்கியபோது சுட்டிருக்கலாம். ஏன் இப்பொழுதுகூட அந்தப் பணியை முடிக்கலாம்....''

இந்த இடத்தில் பேச்சை நிறுத்திய அரசகுமாரி மீண்டும் தனது இடையில் கைத்துப்பாக்கியைச் செருகி மேலாடையை இழுத்துவிட்டு அதை மறைத்துவிட்டாள். அத்துடன் நிற்கவில்லை அவள். இடது கையை இடையில் செலுத்தி மெல்லிய குறுவாளொன்றையும் எடுத்துக் காட்டி ''இதுவும் அந்தப் பணியைச் சுலபமாக முடித்திருக்கும்,'' என்றும் காட்டி அதையும் மறைத்தாள்.

வாலிபன் திகைத்தான் சில விநாடிகள் பிறகு சொன்னான்: ''அரசகுமாரி! நீங்கள் ஒரு ஆயுதசாலை.''

அரசகுமாரி மெல்ல நகைத்தாள். ''இப்பொழுது நாடு இருக்கும் நிலையில் எல்லாப் பெண்களும் ஆயுதசாலைகளாக இருப்பதே நல்லதல்லவா?'' என்றும் வினவினாள்.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் வாலிபன். அவள் தன்னுடன் இஷ்டத்துடன் வந்திருப்பதை உணர்ந்ததால் நன்றி ததும்பிய கண்களை அவள்மீது நிலைக்கவிட்டான். ''இத்தனை பாதுகாப்பிருக்க என்னுடன் ஏன் வந்தீர்கள்?'' என்றும் வினவினான் ஒரு சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள.

அரசகுமாரி வளைந்த தன் உடலை நன்றாக நிமிர்த்திக் கொண்டு அரசதோரணையில் சொன்னாள்: ''டபீர் பண்டிதர் திடீரென்று நிரபராதியான உங்கள்மீது பெரும் குற்றத்தை அந்தச் சமயத்தில் சுமத்தி விட்டார். அவர் பிடியிலிருந்து அந்தச் சமயத்தில் நீங்கள் தப்பாவிட்டால் பின்னால் உங்களைத் தப்புவிக்க என்னால்கூட முடியாது. ஆகவே உங்கள் செயலுக்கு நான் உடன்பட்டேன். தவிர, முத்தங்கியை இந்த நாட்களில் அரங்கனுக்குச் சார்த்தும் வழக்கமில்லை. தனித்து முத்தங்கி சார்த்திய முகுந்தனைப் பார்க்க எண்ணினேன். அதற்கு அரசாங்க அதிகாரத்தை உபயோகப்படுத்தினேன். வீரர்களை விட்டு பாகவதர்களை விலக்கினேன், பட்டர்களைக்கூட விலக்கினேன். அந்தப் பாவத்தைத் தீர்த்துக் கொள்ள நினைத்தேன். நீங்கள் கூறினீர்களே சந்நிதியில், 'உள்ளிருக்கும் ரங்கராஜாவைவிடப் பெரிய ராஜா யாரும் உலகத்தில் கிடையாது' என்று. அப்பொழுது நினைத்தேன், நான் செய்த தவறு எத்தனை மகத்தானது என்பதை. அதற்கு இதுவும் ஒரு பிராயச்சித்தம்.'' இதைச் சொன்ன அரசகுமாரி கேட்டாள், ''ஆமாம், நீங்கள் யார்? எதற்காக அத்தகைய பயங்கர சபதத்தைச் செய்தீர்கள்?'' என்று.

வாலிபன் சில விநாடிகள் பதில் சொல்லவில்லை. தீர்க்காலோசனையில் சிக்கிக் கிடந்தான். கடைசியாகப் பேச முற்பட்டு, ''என் பெயர் விஜயகுமாரன். சபதத்திற்குக் காரணம் கேட்காதீர்கள். காலம் வரும்போது நீங்களே புரிந்து கொள்வீர்கள். உலகமே புரிந்துகொள்ளும்,'' என்று நிதானமாகச் சொன்ன அந்த வாலிபன் மணலிலிருந்து எழுந்து நின்று கொண்டான். ''வாருங்கள் போகலாம்,'' என்றும் அழைத்தான் தஞ்சை மன்னன் மகளை.

அவளும் எழுந்து நின்று ஆடையைச் சரி செய்து கொண்டு, ''இங்கிருந்து....?'' என்று ஒரு கேள்வியை அரையும் குறையுமாக விட்டாள்.

''அக்கரை சென்று சமயபுரத்தை அடைவோம். உங்களூர் சத்திரமிருக்கிறது,'' என்றான்.

அரசகுமாரி பதிலேதும்

சொல்லாமல் வாலிபன் உதவிக்கு வந்ததைக் கூடக் கவனிக்காமல் புரவிமீது ஏறிக்கொண்டாள். புரவியின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு நீரில் இறங்கிய விஜயகுமாரன் மெள்ள எதிர்க் கரையை அடைந்தான். அங்கிருந்து புரவியை மெள்ளச் செலுத்தச் சொல்லி வெள்ளி முளைக்கும் நேரத்துக்குச் சற்று முன்பாகவே சமயபுரத்தின் சத்திரத்தை அடைந்தான் அரசகுமாரியுடன். புரவியைச் சத்திரத்தின் வாயில் தூணிலேயே கட்டிவிட்டு, சத்திரத்துக் கதவைத் தட்டினான் இருமுறை. சத்திரத்துப் பெரும் தாழ்ப்பாள்கள் சில விநாடிகளுக்குப் பிறகு திறக்கப்பட்டதும் கையில் விளக்குடன் தலையை வெளியே நீட்டிய சத்திரத்துக் காவலன், "இங்கு யாரும் தங்க இடமில்லை," என்று கூறிவிட்டு மீண்டும் கதவைச் சாத்தத் துவங்கினான்.

அந்தச் சமயத்தில் சத்திரக் காவலனை ஒதுக்கித் தள்ளிவிட்டுத் திடீரெனக் கதவைத் திறந்த விஜயகுமாரன், "வாருங்கள் உள்ளே," என்று அரசகுமாரியை அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான்.

நுழைந்த இருவரும் கூடத்தில் விளக்குகள் பல எரிந்து கொண்டிருந்ததைக் கண்டார்கள். குடி மயக்கத்தில் சில வீரர்களிருந்ததையும் பார்த்தார்கள். இதெல்லாம் அந்த இருவரும் எதிர்பாராத காட்சிகளல்ல. ஆனால் முற்றும் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சியும் ஏற்பட்டது. அந்தக் குடிகாரர்களுக்குச் சற்று அப்பாலிருந்த மஞ்சத்திலிருந்து ஆஜானுபாகுவாய் எழுந்த ஒரு மனிதன் அரசகுமாரியை ஒருவிநாடி நோக்கினான், பிறகு நகைத்தான். அத்துடன் நிற்கவில்லை. "வாள் மகளே! வா!" என்று செல்லமாக அழைக்கவும் செய்தான்.

'வாள் மகளா! இவளா அது!' என்று பிரமித்தான் விஜயகுமாரன். புரியாத பல விஷயங்கள் அப்பொழுதுதான் புரியலாயிற்று அவனுக்கு.

(தொடரும்)

# அதிர்ஷ்டம்

சில வாரங்களுக்கு முன்பு 'டைம்' பத்திரிகையின் அட்டையில் இந்தி நடிகை பர்வின் பாபியின் படம் பிரசுரமாகி ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது... அதுபற்றியதொரு சிறு குறிப்பு இது.

நன்றி : சினி பிளிட்ஸ்

எப்போதும் 'டைம்' இதழின் அட்டையில் அமெரிக்க ஜனாதிபதி தேர்தலுக்கு நிற்பவர்கள் அல்லது ஆப்பிரிக்க நாட்டுத் தலைவர்கள் இவர்களின் படங்களையே பிரசுரித்து வந்த அந்த ஆசிரியர் குழு, ஒரு மாறுதலுக்காக ஒரு இந்திய சினிமா நட்சத்திரத்தின் படத்தைப் போட விரும்பியது. இந்தியப் படவுலகம் பற்றியதொரு கட்டுரையையும் பிரசுரிக்க விரும்பினார்கள். இதற்காக 'டைம்' இதழின் ஆசிரியர்கள் ஆறு பேர் பம்பாய்க்கு வந்து சேர்ந்தார்கள்.

அந்த ஆசிரியர் குழுவினர் நடிகர்கள் நடிகைகள், துணை நடிகர்கள் எல்லோரையும் பேட்டி கண்டார்கள்.. நூற்றுக்கணக்கான படங்களைப் பார்த்தார்கள். கடந்த பல வருஷங்களாகப் பிரசுரமான ஏராளமான சினிமா பத்திரிகைகளை வாங்கிக் குவித்தார்கள். பிறகு அவ்வளவு பத்திரிகைகளையும் ஐந்து விசேஷ விமானங்களில் நியூயார்க்குக்கு எடுத்துக் கொண்டு போனார்கள்.

அவர்களுக்கு உதவுவதற்காக இந்தியச் சினிமாக்களைப் பற்றி நன்றாய் அறிந்த பொரோஸ் ரங்கூன்வாலா என்பவரையும் நியூயார்க்குக்கு அழைத்துக் கொண்டு போனார்கள்.

தாங்கள் கஷ்டப்பட்டுச் சேகரித்த விஷயங்களையெல்லாம் ஒரு ராட்சச கம்ப்யூட்டரிடம் கொடுத்தார்கள். அது மிக விரைவில் ஒரு கட்டுரையை 'டைப்' அடித்துக் கொடுத்து விட்டது.

அடுத்து அட்டைப் படப் பிரசினை வந்தது! பல நாட்கள் இதற்கான சர்ச்சை நடந்தது. ஹேமமாலினி, தர்மேந்திரா, தேவ் ஆனந்த், சஞ்சீவ் குமார், திலிப் குமார், ஷர்மிளா தாகூர், மௌசுமி சட்டர்ஜி, கபீர் பேடி எல்லோருடைய பெயரும் அடிபட்டது.



# ராஜ பேரிகை

சாண்டில்யன்

## 5. சத்திரத்துச் சிக்கல்

'மறந்தும் புறந்தொழா மாந்த' ராயிருக்க வேண்டிய மாபெரும் வைணவரும் முடி இறக்கும் மாரியம்மன் இருப்பிடமான சமயபுரத்தின் தஞ்சை மன்னன் சத்திரத்தில், இரவு பெரிதும் முற்றி விட்ட அந்த நேரத்தில், குடிகார வீரர்களுக்குப் பின்னாலிருந்த மஞ்சத்திலிருந்து ஆஜானுபாகுவாய் எழுந்த மனிதன் அரசகுமாரியைப் பார்த்து நகைத்ததால் விஜயகுமாரன் முதலில் சினத்தின் வசப்பட்டாலும், அடுத்த விநாடி அந்த மனிதன் அவளை 'வாள் மகள்' என்று அழைத்ததும் பெரும் பிரமிப்பையே அடைந்தான். அந்தப் பெயர் சோழமண்டலம் முழுதும் பிரசித்தியான பெயர். நந்தினி என்ற உண்மையான பெயரை மறைத்துவிட்ட காரணப் பெயர். தஞ்சை மகாராஷ்டிர மன்னர் பரம்பரையில் வந்த மகாவீரனும், ராஜா துகோஜியின் மகனும், துகோஜியின் வாளுக்கு மாலையிட்ட அன்னபூர்ணபாயின் செல்வனும், தஞ்சையை ஆண்ட மகாராஷ்டிர அரசகுலத்தவரில் இணையற்றவனென்று பிரசித்தி பெற்றவனுமான *ராஜா பிரதாப் சிங் 'வாள் மகன்' என்று அழைக்கப்பட்டது அவன் பிறப்பின் காரணம் மட்டுமல்லவென்பதையும், அவன் வீரத்தையும் குறிக்க ஏற்பட்டதென்பதையும் உணர்ந்திருந்த விஜயகுமாரன், பிரதாப் சிங்கின் பல மனைவியரில் ஒரு மனைவியின் புதல்வி மட்டும் வீரத்தில் அவனுக்குச் சளைத்தவளல்லவென்பதையும், பெரும் துணிவுள்ளவளென்பதையும், ஆகவே அவளையும் மக்கள் 'வாள் மகள்' என்றே அழைத்து வந்தனரென்பதையும் ஏற்கனவே உணர்ந்திருந்தாலும், அவள் தான் இந்த நந்தினி என்பதை உணராத காரணத்தால் பெரும் பிரமிப்பையே அடைந்தான் முதலில். தான் பலவந்தமாகத் தூக்கி வந்தபோதிலும் அதை அவள் சிறிதும் லட்சியம்செய்யாமலிருந்தது, கொள்ளிடத்தில் தன்னைக் கைத்துப்பாக்கியையும் கத்தியையும் காட்டி அச்சுறுத்தியது, முதலிய பல சம்பவங்களுக்கும் அவனுக்கு அப்பொழுதுதான் காரணமும் புரிந்தது. எதற்கும் துணிந்த 'வாள் மகள்' தன்னை அத்தனை தூரம் கொல்லாது வந்தது பெரும் விசித்திரமென்பதை உணர்ந்ததால் விஜயகுமாரன் வியப்பிலும் பிரமிப்பிலும் சிக்கிப் பல விநாடிகள் திரும்பி அரசகுமாரியைப் பார்த்த வண்ணம் சிலையென நின்று விட்டான். அந்தச் சமயத்தில் அந்தப் புது மனிதன் மீண்டும் ஏளனப் பெருநகை ஒன்றை உதிரவிட்டதால், அவனை நோக்கித் தீ விழிகளைத் திருப்பிய விஜயகுமாரன் சடேரெனத் தனது வாளின் உறையின் மீது கை வைத்தான். அந்தக் கையைக் கண்டோ, விஜயகுமாரன் வாளைக் கண்டோ அந்த மனிதன் சிறிதும் அஞ்சியதாகத் தெரியவில்லை. அச்சத்துக்குப் பதில் பரிகாச இளநகையொன்று அவன் இதழ்களில் தவழ்ந்தது. ''வாள் மகள் ஒரு வாள் வீரனையும் அழைத்து வந்திருப்பதாகத் தெரிகிறது,'' என்றான் அந்த மனிதன், ஏளனம் ததும்பிய குரலில் அரசகுமாரியை நோக்கி.

அரசகுமாரி உடனடியாக அந்த மனிதனுக்குப் பதில் சொல்லாவிட்டாலும் விஜயகுமாரனைத் தனது கையின் சைகையால் அடக்கவே செய்தாள். ''வீரரே! வாளை உருவ அவசியமில்லை. மகாராஷ்டிரர்களின் மாபெரும் வீரரைச் சந்தியுங்கள்,'' என்று அறிமுகமும் செய்து வைத்தான்.

விஜயகுமாரனின் விழிகள் அந்த மனிதனை மிக அலட்சியமாக ஏறெடுத்து நோக்கின. ''இவருக்குப்

* Raja Pratap Singh was born to a Sword wife of Tukoji named Annapurna - The Maratha Rajas of Tanjore- by K.R. Subramaniam, Page 42.

பெயர் ஒன்று உண்டு என்று நினைக்கிறேன்,'' என்ற அவன் சொற்களிலும் பழைய பிரமை மறைந்து இகழ்ச்சி ஒலித்தது.

வாலிபன் துணிவைக் கண்ட அந்த மனிதன் விழிகள் ஆச்சரியத்தில் நன்ருக மலர்ந்தன. அவன் எதோ சொல்ல வாயெடுக்கு முன்பு அரசகுமாரியே இடைபுகுந்து, *''இவர் பெயர் முராரி ராவ் கோர்பாதே,'' என்று அறிவித்தாள்.

அந்த அறிவிப்பு விஜயகுமாரனுக்கு அன்றிரவின் இரண்டாவது அதிர்ச்சியை அளித்தது. மகாராஷ்டிர தளபதிகளில் மிகச் சிறந்தவனென்று பெயர் பெற்றவரும், அஞ்சாநெஞ்சம் படைத்தவரும், ஆற்காடு நவாபுகளும் ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் எல்லோரையுமே பெரும் பீதிக்குள்ளாக்கியிருந்தவரும் திருச்சியிலிருந்து சந்தா சாகேபை விரட்டி அதைத் தன்னிஷ்டப்படி ஆட்சி புரிந்தவரும், பிறகு அதையும் விட்டு நீங்கியவரும், நிலையாக எங்கும் நில்லாதவருமான முராரிராவைச் சந்தித்ததையே பாக்கியமாகக் கருதிய விஜயகுமாரன் அவரைக் கூர்ந்தும் நோக்கலானுன்.

மகாராஷ்டிரர்களின் பிரதம தளபதி ரகோஜி பான்ஸ்லேயின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமான முராரி ராவ் சாதாரண மகாராஷ்டிரர்களைப் போல் அல்லாமல், ஆறடிக்கும் அதிக உயரத்தைப் பெற்றிருந்ததையும், அவர் சரீர உயர்வுக்குத் தக்க சதைப்பிடிப்பு உடலில் இல்லையென்றாலும் சரீரம் முழுவதுமே உருவி விடப்பட்ட சாட்டை போல் துடிப்புடனிருந்ததையும், விசாலமான அவர் முகத்தின் இரு பக்கங்களிலும் வெட்டி விடப்பட்டுத் தொங்கிய குழல்களில் ஆங்காங்கு ஓரிரண்டு நரை இருந்தபோதிலும் அவையும் அவர் தலையின் மயிர்களுக்கு அழகையே கொடுத்ததையும், முகத்தின் இரு கருவிழிகளில் சதா துள்ளிக்கொண்டிருந்த ஒரு வீர ஒளி யாரையும் அளந்துவிடும் சக்தியுடன் சீறிக் கொண்டிருந்ததையும், கவனித்தான் விஜயகுமாரன். அது மட்டுமின்றி அந்த மகாராஷ்டிர வீரனின் இடையிலிருந்து தொங்கிய வளைந்த வாள் கச்சையில் இறுகப் பிணைக்கப்படாமல் தொங்கலாடிக் கொண்டிருந்தபடியால், அதை அரை விநாடியில் அவர் உருவி விட முடியுமென்பதையும், கச்சையில் செருகப்பட்டிருந்த பெரும் கைத் துப்பாக்கிகூட அவரது ஒவ்வொரு அசைவிலும்கூட அசைந்ததையும் கண்ட விஜயகுமாரன், ''இவரைக் கண்டு பிரிட்டிஷாரும், பிரஞ்சுக்காரரும்கூடப் பயப்படுவதில் வியப்பில்லை'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். அவனுக்குப் புரியாதது மட்டும் ஒன்றிருந்தது. ஆற்காட்டுக்கு வேறு நவாப் ஏற்பட்டுவிட்டதால் மகாராஷ்டிர தளபதியின் உத்தரவுப்படி திருச்சியைப் பழையபடி நவாபின் பிரதிநிதியிடம் ஒப்படைத்தும், முராரி ராவ் திரும்பத் தமது இருப்பிடமான 'குத்தி நகர்' செல்லாமல் இங்கேயே எதற்காக உலாவ வேண்டும் என்பது புரியவில்லை விஜயகுமாரனுக்கு. ஆனுல் அதைப்பற்றி அவன் ஏதும் கேட்காமல் முராரிராவை மீண்டும் கூர்ந்து நோக்கவே செய்தான்.

விஜயகுமாரன் தன்னை அளவெடுப்பதையும் திடீரென அவன் கண்களில் துளிர்விட்ட சந்தேகத்தையும் முராரிராவ் விநாடி நேரத்தில் கவனித்து விட்டாராதலால் மெல்ல மறுபடியும் நகைத்தார். நகைத்ததோடு நில்லாமல் அரசகுமாரியை நோக்கி, ''மகளே,

---

*Murari Rao Gorepade one of the most famous leaders of the Marathas—"Lord Clive"- by colonel G. B. MALLESON, C. S. I.,—Page 26.

---




"காலையில் என்ன சாப்பிட்டே?" என்று நீங்கள் கேட்டால் 'காப்பி சாப்பிட்டேன்' என்று அந்தப் பொம்மை பதிலளிக்கும். ஆனால் உண்மையில் அந்த மனிதர்தான் பேசுகிறார். தன் குரலை இப்படிப் பொம்மையிடமிருந்து வருகிற மாதிரி செய்யும் கலை 'வென்டரிலாக்கிஸம்.' ('வென்டர்' என்றால் அடிவயிறு. அங்கிருந்து குரலை எழுப்புவதால் வென்ட்ரிலாக்கிஸம் என்று பெயர் வந்தது.)

"ஆறு மாதம் சிரமப்பட்டு இந்தக் கலையைப் பயின்றேன்," என்கிறார் ஏவி. எம். முருகன். சகோதரர் சரவணன் வெளிநாட்டிலிருந்து வாங்கி வந்து தந்த பொம்மையின் பெயர் ஜான்.

—என். பி.

---

இவளை எங்கு பிடித்தாய்?" என்று வினவினார்.

அரசகுமாரியின் இதழ்களில் இளநகை பூத்ததை விஜயகுமாரன் கண்டான். அடுத்தபடி அவள் சொன்ன பதிலிலும் சற்றே இன்பம் கலந்திருந்த தாகத் தோன்றியது விஜயகுமாரனுக்கு. "இவரை நான் பிடிக்கவில்லை. இவர் தான் என்னைப் பிடித்தார்," என்றாள் அரசகுமாரி.

இதைக் கேட்ட முராரிராவ் பெரிதாகச் சத்திரமே அதிரும்படியாக நகைத்தார். "பலே பலே. அப்படியா!" என்றும் கேட்டார் நகைப்பின் ஊடே.

விஜயகுமாரன் பொறுமையை முராரிராவின் நகைப்பு உடைத்துவிட்ட தால் "மகாராஷ்டிர தளபதியின் நகைப்புக்குக் காரணம் தெரியவில்லை எனக்கு," என்று சீற்றம் சற்றே ஏறிவிட்ட குரலில் கேட்டான்.

"ஏன் தெரியவில்லை? நந்தினியை பலவந்தமாகத் தூக்கி வந்திருக்கிறாய்," என்றார் முராரிராவ்.

"ஆம்." விஜயகுமாரன் குரலில் கோபம் குறையவில்லை.

"பெண்களைத் தூக்கிச் செல்வது இந்துக்கள் பழக்கமல்ல," என்று சுட்டிக் காட்டினார் முராரிராவ்.

"அவசியம் புதுப் பழக்கங்களை ஏற்படுத்துகிறது. உதாரணமாக.."

"உதாரணமாக....?"

"நீங்கள் தஞ்சையின் சுற்றுப் புறங்களைச் சூறையாடியிருக்கிறீர்கள். சூறையாடுவதும் இந்துக்கள் பழக்கமல்ல.'

இதைக் கேட்ட முராரி அசந்து நின்றுவிட்டார். பிறகு மெள்ள அரசகுமாரியை நோக்கிச் சொன்னார், "நந்தினி, நல்ல முரடனைத்தான் பிடித்து வந்திருக்கிறாய்," என்று.

"நான் பிடித்து வரவில்லை என்று ஏற்கனவே சொன்னேன்," என்று சுட்டிக் காட்டினுள் நந்தினி.

"ஆம் ஆம். தவறிச் சொல்லி விட்டேன். இந்த முரடனடம் அகப் பட்டுக் கொண்டாய். முராரிராவையே எதிர்த்துப் பேசக் கூடியவன் உண்மை யில் பெரும் மூர்க்கனுயிருக்க வேண் டும்," என்ருர் முராரி ராவ் வியப்பு ஒலித்த குரலில்.

விஜயகுமாரன் இதயத்தில் அதுவரை எழுந்து கொண்டிருந்த கோபம் தணிந்து இகழ்ச்சிக்கு இடங் கொடுத்தது. "தற்பெருமை வீரர் களுக்கு உகந்ததல்ல" என்று கூறினுன் முராரிராவை நோக்கி.

முராரிராவுக்கு விஜயகுமார னின் பேச்சின் அர்த்தம் புரிந்திருந்தும் அவர் சிறிதும் அதைப்பற்றிச் சினம் கொள்ளவில்லை. ஒரு அடி எடுத்து வைத்து விஜயகுமாரனை அணுகி அவன் தோள்மீது தன் வலது கையை வைத்தார். கை மிக மெல்லியதாயிருந் தும் லேசாகவே அது பதிந்துங்கூட ஏதோ வாளொன்று தோளின் குறுக்கே விழுந்த பிரமை ஏற்பட்டது விஜயகுமா ரனுக்கு. அத்துடன் முராரி ராவின் அடுத்த சொற்களும் மிக இன்பமாக அவன் காதில் விழுந்தது. "வீரனே! உன் பெயர் என்ன?" என்று வின வினர் முராரி ராவ் கோர்பாதே.

"விஜயகுமாரன்." வாலி பன் பதிலில் நிதானம் சொட்டியது.

"உன்னைப் போன்ற வீரர் கள் இருந்தும் இந்த நாடு முஸ்லிம்கள் கையில் சிக்கிக் கிடப்பதும், மதுரை நாயக்கர்கள் வம்சம் மங்கிவிட்டதும் பெரும் துர்ப்பாக்கியம். அது கிடக்கட் டும். நீ பிடித்து வந்திருக்கும் நந்தினி எப்பேர்ப்பட்டவள் தெரியுமா?" என்று வினவினர் முராரிராவ்.

"தெரியும்."

"எப்பேர்ப்பட்டவள்?"

"இஷ்டமிருந்தால் என்னைக் கொன்றிருக்கக் கூடியவள். இப்பொழுது உங்களையும் நொடிப்பொழுதில் கொல் லக்கூடியவள்."

"சரி சரி. புரிந்து கொண்டு விட்டாய். புரிந்துமா இவளைத் தூக்கி வந்தாய்?"

"தூக்கி வந்தபோது தெரி யாது."

"தெரியாமல் உடும்பைப் பிடித்துக் கொண்டாய்?"

"ஆம். ஆனல் ஒரு வித்தி யாசமிருக்கிறது."

"என்ன?"

"உடும்பிலிருந்து விடுபட மற்றவர்கள் இஷ்டப்படுவார்கள்"

"நீ இஷ்டப்படவில்லை."

"ஆம்."

"ஏன்?"

"உடும்பு........" மேற் கொண்டு சொல்ல முடியாமல் சொற் களை விழுங்கினன் விஜயகுமாரன்.

ஆனல் வாசகத்தை முடித் தார் முராரி ராவ், "அழகாயிருக்கிறது. அதில் மயங்கிவிட்டாய்," என்று.

அதுவரையிலும் வாளாவி ருந்த 'வாள் மகள்' நந்தினி வாளினும் கூரிய தன் விழிகளை அந்த இருவர் மீதும் மாறி மாறி நாட்டினுள். "நீங்



"புதுமனை புகு விழாவன்று என் மாமியார் மாடிப்படியில் உருண்டு விழுந்து..."

"அடடா! அப்புறம்?"

"புதுசாய்ப் படிக்கட்டு கட்டும் செலவு என் கணவர் தலையில் விழுந்தது."

களிருவரும் பேசுவது வீரர்கள் பேச்சா யில்லை,'' என்ற அவள் பவள உதடுகளி லிருந்து உதிர்ந்த சொற்களில் உஷ்ணம் பலமாக இருந்தது.

அந்தச் சொற்கள் அந்த இருவரையும் அடக்கிவிடவே இருவரும் அவளை நோக்கித் திரும்பினார்கள். அவர்களில் முராரி ராவே பேச்சைத் துவக்கினார். ''நந்தினி! இவனிடம் நீ எந்தக் காரணத்தால் சிக்கிக்கொண்டாய் என்பது எனக்குத் தெரியாது. உன் வரவுக்காக ஸ்ரீரங்கத்தில் செய்யப்பட்ட பெரும் பாதுகாப்பு ஏற்பாடுகளை மீறி, டபீர் பண்டிதரின் எச்சரிக்கையை மீறி, உன்னை இவன் தூக்கி வர முடியுமானால் இவன் அசகாய சூரன் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இவன் செய்ததும் தவறு. சமயத்தில் இவனை நீ தடுக்காமல் இங்கு வந்ததும் தவறு'' என்று கூறினார் எரிச்சலுடன் முராரி ராவ்.

''ஏன்?'' என்று சர்வசாதாரணமாக வினவினாள் நந்தினி.

''சமயபுரத்தில் இப்பொழுது பிரெஞ்சுக்காரர் நடமாட்டம் அதிகமிருக்கிறது. நவாபின் வீரர்களும் தஞ்சை சாலையில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்கள். நீ காவலின்றி தஞ்சைக்குச் செல்ல முடியாது'' என்றார் முராரி ராவ். அத்துடன் குடிமயக்கத்திலிருந்த வீரர்களையும் சுட்டிக்காட்டி, ''இவர்கள் அனைவரும் நவாபின் வீரர்கள். என்னைச் சிறை செய்ய வந்தார்கள். நான் யார் என்பது இவர்களுக்குத் தெரியாது. இவர்களுக்குப் பிரெஞ்சுக்காரர் குடியைக் காட்டி ஏமாற்றினேன். அதில் சிறிது மயக்க மருந்தையும் கலந்து விட்டேன். நாம் இங்கிருந்து தஞ்சை செல்வதானால் உடனடியாகச் செல்லவேண்டும்'' என்று உணர்த்திய மகாராஷ்டிர தளபதி சத்திரக்காரனைக் கூப்பிட்டு, ''நாங்கள் புறப்பட சித்தம் செய்'' என்று உத்தரவும் இட்டு, ''என்னுடன் வாருங்கள்....'' என்று அவ்விருவரையும் அழைத்துக் கொண்டு சத்திரத்தின் இரண்டாவது கட்டுக்குச் சென்றார். அங்கிருந்த உடைகளைக் காட்டி ''நீங்களிருவரும் இந்த அராபிய உடைகளை அணிந்து கொள்ளுங்கள்'' என்றும் உத்தரவிட்டார்.

''தேவையில்லை.'' விஜயகுமாரன் பதில் திட்டமாக வந்தது.

''ஏன்?''

''இறப்பதானாலும் இந்த மதுரை உடையிலேயே இறக்க இஷ்டப்படுகிறேன்.''

முராரி ராவ் இளநகை பூத்தார். ''பயப்படாதே. உன்னிஷ்டம் இன்றிரவே நிறைவேறும். தஞ்சை வழிநெடுக அதற்கு வசதி இருக்கிறது' என்ற முராரி ராவ், பின்புறம் சென்று ஏதோ ஏற்பாடுகளைச் செய்துவிட்டுத் திரும்பினார். ''சத்திரத்துக்காரன் உன் புரவியைப் பின்புறம் கொண்டு வந்துவிட்டான். அரசகுமாரிக்கும் ஒரு புரவியைக் கொணர்ந்திருக்கிறான். வாருங்கள் போவோம்,'' என்று கூறிவிட்டு விடுவிடுவென்று நடந்தார்.

மிகத் துரிதமாகச் செய்யப்பட்ட அந்த ஏற்பாடுகளால் பிரமையடைந்த விஜயகுமாரனும், நந்தினியும் அந்த மாவீரனைப் பின்பற்றினார்கள்,

ஆனால் சத்திரத்துக்குப் பின்னாலிருந்த நிலை அவர்களை அசர வைத்தது. இரண்டு முஸ்லிம் சிப்பாய்களின் பிடியில் சத்திரக்காரன் சிக்கித் தத்தளித்துத் திமிறிக்கொண்டிருந்தான். அவனுக்கு இருபுறத்திலும் சேணமிடப்பட்டிருந்த மூன்று புரவிகளுக்கு முன்னாலும் பத்து முஸ்லீம் வீரர்கள் வாட்களை உருவி நின்று கொண்டிருந்தார்கள். அதில் தலைவனாயிருந்தவன் கூறினான், ''முராரி ராவ்! வாளைக் கழற்றிக் கீழே எறிந்துவிடு. உன் பின்னாலிருப்பவனுக்கும் சொல், பிழைக்கும் வழியை!'' என்று.

அதைக் கேட்ட முராரி ராவ் பதிலேதும் சொல்லாமல் வாளைக் கழற்றலானார் கச்சையிலிருந்து. விஜயகுமாரன் பிரமிப்பு எல்லை மீறியது. ''சே! இவர் வீரம் இவ்வளவுதானா? இவரைப்பற்றிய பிரதாபமெல்லாம்....'' என்று சிந்திக்கத் துவங்கிய விஜயகுமாரன் சிந்தனையை முடிக்க முடியவில்லை. மின்னல் வேகத்தில் அவன் முற்றும் எதிர்பாராத நிகழ்ச்சிகள் ஏற்பட்டன.

(தொடரும்)



தீபாவளியன்று வெளிவந்தது 'சித்ரா பௌர்ணமி.'

அன்றைக்கு அமாவாசை.

—டி. கே. வெங்கடசத்திய நாராயணன்



# கேள்விகள் அரசு பதில்

☐ எஸ். அன்பாழி, ஈரோடு.

அணில் கடித்த பழமும், 'அவள்' கொடுத்த முத்தமும் எச்சிலாகா தாமே, உண்மையா?

எனக்குத் தெரியாது — அணில் கடித்த பழத்தைப்பற்றி.

☐ சிப்பாய் எஸ். எம். சுப்பையா, ராணுவ அஞ்சல்.

தமிழ்நாட்டில் உள்ள குறிப்பிட்ட நூறு கோவில்களில் ரூ. 120 கோடிக்குத் தங்க நகைகள் மட்டும் இருக்கிறதாமே? நல்ல வழியில் உபயோகப்படுத்த ஒரு திட்டம்?

அரசர்களின் பணத்தைக் கொண்டு அனுதைகளை ஆதரிப்பது தான் சோஷலிஸம். ஒழுங்காக விளக்கேற்றக்கூட வக்கில்லாமல் எத்தனை கோவில்கள் நாடெங்கும் இருளடைந்திருக்கின்றன? முதலுதவிக்கு ஏற்பாடு செய்யவேண்டும்..

☐ ஹ⁻.நா. மதுரை.

வாழ்க்கையை ஒதுங்கி நின்றால் ரசிக்கலாம் எனக் கூறுவது, தண்ணீரில் இறங்காமலே நீச்சல் பழகிவிடலாம் என்பதற்கு ஒப்பானதில்லையா?

நீச்சல் பழகிக்கொள்ள வேண்டிய இரண்டு சிறுவர்கள் கரையில் நிற்கிறார்கள். "வாருங்கள்," என்கிறார் ஆசிரியர். ஒருவன் தைரியமாக இறங்குகிறான். தயக்கம் மற்றவனது கால்களைப் பிடித்துப் பின்னுக்கு இழுக்கிறது. ஏன் இந்த வித்தியாசம்? முதலாமவன், வெற்றி தோல்வியைப்பற்றிக் கவலைப் படவில்லை. தோல்வி ஏற்பட்டால் அதையும் ஒரு சுவையான அனுபவமாக ஏற்றுக்கொள்ளும் மனநிலையில் அவன் இருக்கிறான். இரண்டாமவன் நடுங்கக் காரணம், முழுகிப் போய் விடுவோமோ என்ற பயம். வெற்றிக்கான உத்தரவாதம் கிடைத்தாலொழிய அவன் எந்த முயற்சியையும் மேற்கொள்ளத் தயாரில்லை. முதலாமவன், வாழ்க்கையை ஒதுங்கி நின்று ரசிக்கத் தெரிந்தவன். இரண்டாமவன், அது தெரியாதவன். விவேகானந்தர்கள், எடிஸன்கள், தியாகய்யர்கள், கொலம்பஸ்கள் உலக சரித்திரத்தில் இடம் பெற்ற எல்லாரும் முதலாம் ரகமாகத் தான் இருந்திருக்கிறார்கள்.

☐ பி. பி. சுந்தர், சென்னை.

மோகனுடைய தாத்தாவைத் தெரியுமில்லையா, உங்களுக்கு? அவருடைய பேரு...எப்படி இவ்வளவு ஃபேமஸ் ஆச்சு?

எனக்குத் தெரியவில்லையே. அவருடைய பல்லு விழுந்திருச்சே அதனால் இருக்குமோ...என்னமோ?

☐ வசந்தமூர்த்தி, சத்தியமங்கலம்.

சட்டைக்காரி படத்தில் லட்சுமிக்குப் பதிலாக சுஜாதாவும், அன்னக்கிளியில் சுஜாதாவிற்குப் பதிலாக லட்சுமியும் நடித்திருந்தால்?



அன்னக்கிளிக்கு மூக்கு உடைந்திருக்கும். யாரும் சட்டைக்காரியைச் சட்டை செய்திருக்க மாட்டார்கள்.



## 6. சோலையில் விரிந்த காட்சி

க்ஷணம் என்ற சமஸ்கிருத சொல்லைத்தான் கணம் என்று தமிழில் சொல்லுகிறோம். 'உத்பன்ன மாத்ரமேவ நச்யதி' அதாவது ''பிறக்கும்போதே அழிந்துவிடுகிறது'' என்று க்ஷணத்திற்குப் பொருள் கூறப்படுகிறது. ஆகவே கணம் மனிதன் கணக்கால் அளவிட முடியாத ஒரு துரிதத்தைப்பெற்றது என்பது சாஸ்திரம் கண்ட உண்மை. அந்த சாஸ்திரத்தை விஜயகுமாரன் படித்ததில்லைதான். ஆனால் அதன் தத்துவத்தை அனுபவபூர்வமாகக் கண்டான் சமயபுரத்துச் சத்திரத்துப் புழக்கடையில் அன்றிரவு. முஸ்லீம் வீரர்களின் தலைவன் சொற்படி வாளைக் கழற்றத் துவங்கிய மகாராஷ்டிர மாவீரனைப் பற்றித் தப்பபிப்பிராயம் கொண்ட விஜயகுமரன் தனது கருத்து தோன்றி முடிவதற்குள் முராரிராவின் வலது கை வாளை அவிழ்க்க, அதே சமயத்தில் இடது கை கச்சையிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்து எதிரேயிருந்த முஸ்லீம் வீரர் தலைவனைச் சுட்டுவிட்டதன்றி இன்னும் இருவரையும் சாய்த்து விட்டதையும் கண்டான். ஆகவே அவனும் தனது கைத்துப்பாக்கியை எடுத்து மேலும் இருவரை, முந்திச் சென்றுவிட்ட மூவருக்குத் துணை சேர்த்துவிடவே, மீதியிருந்த ஐந்து வீரர்களும் வாட்களுடன் முராரிராவ் மீது பாய்ந்தார்கள். ஆனால் அது எத்தனை பயனற்றது என்பதை விஜயகுமாரன் உடனடியாக உணர்ந்தான். எழுந்த வேகத்தில் கச்சைக்குள் மீண்டும் முராரிராவின் கைத் துப்பாக்கி புகுந்துவிட, வலது கை வாளை உருவிக்கொண்டு எதிரிகளைத் தடுத்தது. விஜயகுமாரனும் பெரிய மனிதர்கள் செய்யும் கொலை வழியைத் தானும் பின்பற்ற வேண்டுமென்ற கடமை உணர்ச்சியில் தன் வாளையும் உருவிக் கொண்டு இரு முஸ்லீம் வீரரைத் தடை செய்தான். ஆனால் சண்டைக்கு நேரம் கிடைக்கவில்லை





# ராஜ பேரிகை

## சாண்டில்யன்

அதிகமாக விஜயகுமாரனுக்கு. முராரி ராவின் வளைந்த வாள் எதிரிகளின் வாள்களின் மீது பயங்கரமாக உராய்ந்து மீண்டும் ஏதோ இந்திரஜாலம் போல் எழுந்து இருவர் கழுத்தை அறுத்து விடவே அலறக்கூடச் சமயமின்றி அந்த இருவரும் மாய்ந்தனர். மற்றவர் ஓடி விட்டனர். தனது வாளால் தடுக்கப் பட்ட இருவரும், மற்ற வீரர்களை ஓட்டப் பந்தயத்தில் வெற்றி கொள்ள விடக்கூடாதென்ற உறுதியால், திரும்பி மற்றவர் ஓடிய பாதையில் பாய்ந்துவிட்டதை விஜயகுமாரன் கண்டு திகைத்து நின்ற சமயத்தில் முராரி ராவ் அவனை நோக்கித் திரும்பிப் புன்னகை செய்து, "விஜயகுமாரா! பிரமிப்புக்கு நேரமில்லை. போன வீரர்கள் இன்னும் அதிக வீரர்களுடன் திரும்புவார்கள். அநேகமாக வருபவர்கள் பிரெஞ்சுக்காரர்களாகவும் இருக்கலாம். ஆகவே கிளம்பு சீக்கிரம்," என்று கூறிவிட்டுச் சத்திரத்துக் காவலனை நோக்கினார். அதுவரை இரும்புப் பிடியாகப் பிடித்திருந்த முஸ்லிம் வீரர்கள் ஓடிவிடவே சற்றுக் கம்பீரமாகவே தனது உடலைச் சரிப்படுத்திக் கொண்டிருந்தான் சத்திரத்துக் காவலன். அவன் உடம்பை நெளித்துக் கொண்டதையும், சற்று உற்சாகத்துடனேயே நிமிர்ந்துகொண்டதையும் கண்ட முராரிராவ் மெல்ல நகைத்து, "ஓடிவிட்டவர்களின் புரவிகளில் ஒன்றை நீயும் எடுத்துக் கொண்டு எங்களுடன் வா," என்று உத்தரவிட்டார்.

சத்திரக்காரன் முகத்தில் திகில் தோன்றியது. "இது ராஜ ஈசத்திரம்...." என்று ஏதோ பேசத் துவங்கினான்.

"ஆம்." முராரிராவ் பதில் சொல்லிக்கொண்டே எட்ட இருந்த தமது புரவியை நோக்கி நடந்தார். புரவியில் ஏறும்படி அரசகுமாரிக்கும் அதே சமயத்தில் வாளால் ஜாடை காட்டவும் செய்தார்.

"தளபதி! நான் சொல்லிக் கொண்டேயிருக்கிறேன், நீங்கள் போய்க் கொண்டே இருக்கிறீர்களே?" என்று கூவினான் சத்திரக்காவலன்.

"இங்கு இன்னும் சற்று நேரம் இரு. கூவ அவசியமிருக்காது," என்று சொல்லிக்கொண்டே புரவிமீது தாவிவிட்ட முராரி ராவ் சத்திரக் காவலனைத் திரும்பிக்கூடப்பார்க்காமல் புரவிகளில் ஏறிக்கொண்ட அரசகுமாரியும் விஜயகுமாரனும் பின்தொடர சத்திரத்துப் பின்புறத்தை அடுத்திருந்த தோப்புக்குள் நுழைந்துவிட்டார்.



சந்திரக் காவலன் அப்புறமும் அரைவிநாடி விழித்துவிட்டுப் பக்கத்திலிருந்த புரவி மீது சற்றுச் சிரமப்பட்டு ஏறி முன்னே சென்றவர்களைப் பின்பற்றிப் புரவியைச் செலுத்தினான். கொள்ளிடக்கரையிலிருந்து அதிக தூரத்திலில்லாத காரணத்தாலும், கொள்ளிடத்தின் ஜீவ ஊற்றுக் கால்கள் அந்தர்வாஹினியாக பூமிக்குள் பாய்ந்து வந்ததாலும் பெரும் செழிப்பைச் சமயபுரத்துத் தோப்பு பெற்றிருந்ததால், மரங்கள் வானளாவி நின்றன. அவற்றுக்கிடையே ஓடிய ஒற்றையடிப்பாதைகள் இரண்டு மூன்று சிறிது விஸ்தாரமாயிருந்தாலும் மரங்களின் அடர்த்தி காரணமாகவும், கிளைகள் சில இடங்களில் மிகத் தாழ்ந்திருந்ததாலும் துரிதமான பயணத்துக்கு மிக இடைஞ்சலாகவே இருந்தன. இருப்பினும் அந்தத் தோப்பின் ஒவ்வொரு நுணுக்கத்தையும் அறிந்திருந்த முராரி ராவ் அநாயாசமாகத் தமது புரவியைச் செலுத்தியதாலும் தாழ்ந்த கிளைகள் வரும்போது அவர் தலையைத் தாழ்த்திக் கொண்டதாலும் ஏதோ ஒரு மாயப் புரவி அந்தத் தோப்பில் ஊடுருவிச் செல்லும் பிரமை ஏற்பட்டது விஜயகுமாரனுக்கு. முன்னே செல்பவரைக் கூர்ந்து கவனித்துக் கொண்டு அவன் புரவியை நடத்தியதாலும், அவர் குனிந்தபோது தானும் குனிந்தும் அவர் நிமிர்ந்தபோது தானும் நிமிர்ந்தும் கிளைகளிலிருந்து தப்பித் தப்பி மீண்டதாலும் பெரும் உற்சாகத்தை அடைந்த விஜயகுமாரன், 'இத்தகைய வீரர்களிருந்தும் மகாராஷ்டிரர்களின் இந்து சாம்ராஜ்யம் ஏன் இத்தனை பலமிழந்து கிடக்கிறது?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்ளவும் செய்தான். அதற்கு விடை அவனைச் சுற்றிக்கிடந்தாலும் மகாராஷ்டிரர்களுக்குள்ளிருந்த பூசல்கள் சரித்திரப் பிரசித்தி பெற்றிருந்தாலும், முராரி ராவின் கம்பீரத் தோற்றமும் வீரமும் அவனுக்கு சரித்திரத்தையும் நினைவூட்டவில்லை, பிளந்துகிடந்த பாரதத்தையும் நினைவூட்டவில்லை. ஏன், இரவின் முன் பகுதியில் அரங்கன் முன்பு இட்ட பயங்கர ஆணையைக்கூட அவன் அந்தச் சில விநாடிகளில் மறந்தான்.

இப்படி யோசனையில் ஆழ்ந்திருந்தது அவன் மட்டுமல்ல. முன்னே சென்று கொண்டிருந்த முராரி ராவும் சிந்தனை வசப்பட்டிருந்தார். 'யார் இந்த விஜயகுமாரன்? அரசகுமாரியை

## நயம்

''உலகத்திலேயே கடிக்காத புலி ஒன்று இருக்கிறது. அது என்ன புலி? அம்புலி!''

நெ. சி. புருஷோத்தமன்



புலால்உணவு விடுதியில் நண்பர் ஒருவருடன் சாப்பிட்டுக்கொண்டு இருந்தேன். விலைப் பட்டியலில் 'வருத்த மீன்' என்று எழுதி இருந்ததைக் கண்டு பிழையைச் சுட்டிக் காட்டினேன். ''அது கரெக்ட் தான் சார். அந்த மீன் சாகும்போது வருத்தப்பட்டிருக்கும். இல்லீங்களா?'' என்றார் முதலாளி.

—எ. எஸ். ராஜா



ஸர்வீஸ் கமிஷன் தேர்வு எழுத வெளியூர் சென்ற நான் இரவில் 'டீ' குடிக்க டீக்கடைக்குச் சென்றேன். ''டீ ஒன்று கொடுங்கள்'' என்று கடைக்காரரைக் கேட்டேன். அதற்கு அவர், ''க்வாலிட்டி வேண்டுமா? அல்லது க்வான்டிடி, வேண்டுமா?'' என்று கேட்டார்.

அளவு சிறிதாயிருந்தாலும் சுவையாய்க் குடிக்கவே விரும்பினேன். 'குவாலிடிடீ' என்றேன். நன்றாகப் போட்டுத் தந்தார்.

—சா. கண்ணன்.





எப்படித் தூக்கி வந்தான்? டபீர் பண்டிதர் அப்படி ஏமாறக்கூடியவரல்லவே'' என்று சிந்தித்தார். எல்லாவற்றுக்கும் விடை தஞ்சையில் கிடைக்கும் என்ற காரணத்தால் தன் மனத்தில் ஏற்பட்டிருந்த நினைப்புகளை நீக்கிக்கொண்டு புரவியைத் திடீரெனப் பக்கத்துப் பாதையொன்றில் திருப்பினர்.

அதைக் கண்ட விஜயகுமாரன், ''தளபதி!'' என்று அவரை அழைத்துக் கொண்டே அவரது புரவியை நெருங்கினன்.

முராரி ராவ் புரவியைச் சட்டென்று நிறுத்தி அவனை நோக்கித் திரும்பி, ''என்ன?'' என்று ஒற்றைச் சொல்லை உதிர்த்தார்.

''இந்தப் பாதை....'' என்று இழுத்தான் விஜயகுமாரன்.

''கொள்ளிடத்துக்குச் செல்கிறது,'' என்றுர் முராரிராவ் சாதாரணமாக.

''அதைத் தாண்டித்தானே நான் வந்தேன்,'' என்றுன் விஜயகுமாரன்.

''திரும்பத் தாண்டக்கூடாதென்று யார் சொன்னது?''

பணம் பத்தும் செய்யும்.

லட்சுமியும் ஸ்ரீகாந்தும்:

படம் : ''சீர் வரிசை''

---

''வந்த இடத்துக்குப் போவதற்காக நான் இங்கு வரவில்லையே?''

''அங்கு யார் போகச் சொன்னது உன்னை?''

''அப்படியானல்....?''

முராரி ராவ் உடனடியாக அவனுக்குப் பதில் சொல்லவில்லை. சற்றுச் சிந்தித்துவிட்டு, ''வீரனே! கொள்ளிடம் ஒரே இடத்தில் ஓடவில்லை. பல இடங்களைத் தொட்டுக்கொண்டு ஓடுகிறது. எந்த இடங்களைத் தொடுகிறதோ அந்த இடத்தை முன்னிட்டு அதன் பெயரும் மாறுகிறது. திருச்சியை அடுத்திருந்தால் திருச்சிக் காவேரி, ஸ்ரீரங்கத்தை அடுத்திருந்தால் ஸ்ரீரங்கத்துக் காவேரி, வடக்கேயும் தெற்கேயும் பிரிந்திருந்தால் அது வடதிருக்காவேரி, தென்திருக்காவேரி, மைசூரிலிருந்தால் மைசூர்.காவேரி தெரிகிறதா?'' என்று கேட்டார்.



கண்ணாடியில் ஒரு விசேஷம். கூலிங் கிளாஸும் இணைந்திருக்கிறது. வேண்டியபோது கீழே இறக்கிக்கொண்டு குளுமையாகப் பார்க்கலாம். வேண்டாதபோது தூக்கி விட்டுக் கொள்ளலாம்.

அமெரிக்காவில் இந்த மாதிரி 'மைகா' கண்ணாடிகள் மலிவாக விற்பனையாகின்றன. அரை டாலர் விலை. படத்தில் அத்தகைய கண்ணாடியை அணிந்திருப்பவர் குமாரி உஷா.

தகவல்: மங்களம் ஆத்ரேயி

வண்ணப்படம்: ஆர். முத்துசாமி.

முராரி ராவின் சொற்களைக் கேட்ட விஜயகுமாரன் அசந்துபோனான். முராரிராவ் பெரும் கொள்ளைக்காரர், தளபதி, மாவீரர் என்றுதான் கேட்டிருந்தான் அவன். முராரிராவுக்கு இலக்கியப் பரிச்சயமும் உண்டு, தத்துவப் பரிச்சயமும் உண்டு என்று அப்பொழுதுதான் தோன்றியது அவனுக்கு. கம்பனைப்பற்றி நினைத்தான் விஜயகுமாரன் அந்தச் சமயத்தில். முராரிராவின் அதே கற்பனை! சரயூ நதியைப்பற்றி கம்பன் சொன்ன இணையிலா உவமை! ''கல்லிடை பிறந்து போந்து' என்று துவங்கி, ''பல்பெரும் சமயம் சொல்லும் பொருளும்போல் பரந்ததன்றே,' என்று முடியும் தீஞ்சுவைத் தமிழ்க் கவிதையை, கம்பராமாயணச் செய்யுளை, நினைத்தான் விஜயகுமாரன். 'எங்கோ மலைக் கல்லில் சுனையாக உற்பத்தியாகி, பெருகி, பல இடங்களைத் தாக்கி, அந்தந்த இடங்களில் இடத்துக்குத் தக்க பெயரைத் தாங்கினாலும், அந்தப் பல பெயர்களும் ஒரே நதியைக் குறிப்பது போல், பல நாடுகளில் பரந்துகிடக்கும் மதங்கள் ஆங்காங்கு ஆண்டவனுக்குப் பல பெயர்களைச் சூட்டினாலும் அத்தனை பெயர்களும் சொல்லும் பரம்பொருள் ஒன்றுதானே!' என்ற கம்பன் உவமையை நினைத்து மெய்மறந்தான். 'ஆனால் இந்த மகாராஷ்டிரருக்குக் கம்பனைப் பற்றி என்ன தெரியப்போகிறது?' என்றும் எண்ணினான்.

அந்தச் சமயத்தில் முராரி ராவ் நகைத்து, ''என்ன, ஆற்றுப் படலத்துக்குப் போய்விட்டாயா?'' என்று கேட்டு விஜயகுமாரன் பிரமிப்பை ஆயிர மடங்கு அதிகப்படுத்திவிட்டு, புரவியைச் சற்று வேகமாகவே கொள்ளிடப் பாதையில் திருப்பினார். மீண்டும் வளைந்து ஏதோ வழியில் துரிதமாகச் சென்றார். அடுத்து அடுத்து வந்த சோலைகளின் நெருக்கத்தாலும் பாதைகளின் குறுகலாலும் திசை தெரியாது தவித்த விஜயகுமாரனுக்குச் சுரணையை வரவழைக்க சத்திரத்துக் காவலன் தனது புரவியை அவர்கள் புரவிகளுக்குச் சமானமாகக் கொண்டு வந்து, ''தென்கிழக்குப் பாதையில் போகிறீர்களே?'' என்று வினவினான் முராரி ராவை நோக்கி.

''ஆம்,'' என்று கூறித் தலையசைத்தார் முராரி ராவ்.

''இந்த வழி....''

''கோவிலடிக்குச் செல்கிறது. அதுவும் கொள்ளிடத்தைத் தாண்டிய பின்.''

''அங்கு பிரெஞ்சுக்காரர்களும் முஸ்லீம்களும் இணைந்த படை இருக்கிறது.''

''இருக்கட்டுமே.''

இதைக் கேட்ட சத்திரக் காவலன் எரிச்சல் அதிகமாகியது. ''அதிர்ஷ்டம் எப்பொழுதும் நமக்குக் கைகொடுக்காது,'' என்றான் எரிச்சல் குரலிலும் ஒலிக்க.

''இப்பொழுதும் அதிர்ஷ்டம் கைகொடுக்கவில்லை,'' என்றார் முராரி ராவ்.

''வேறு எது கை கொடுத்ததோ?'' என்று கேட்டான் சத்திரக்காரன்.

''எவை என்று கேள்.''

''சரி எவை?''

''கைத்துப்பாக்கி, வாள்!'' என்று கூறிய முராரி ராவ், தமது புரவியை வேகமாகத் தூண்டினார். மற்றவர்களும் புரவிகளைத் தூண்டவே

அடுத்த ஒன்றரை நாழிகையில் கொள்ளிடத்தையும் தாண்டிவிடவே, சற்றுத் தென்மேற்கில் காவிரியின் வடக்குக் கரையில் கோவிலடியின் மதிள்கள் மெள்ளத் தெரியலாயின. ஆனால் முராரி ராவ் கோவிலடியை நோக்கிச் செல்லாமல் அதைச் சுற்றிச் சென்ற பாதையில் சென்று மீண்டும் ஒரு தோப்பில் நுழைந்தார். திரும்பி விஜயகுமாரனை மட்டும் நோக்கிச் சொன்னார், ''விஜயகுமாரா! நாம் கோவிலடிக்குச் சற்று அப்பால், அதாவது சிறிது கிழக்கில் காவிரியைக் கடக்கிறோம். கடந்தவுடன் திருச்சியிலிருந்து தஞ்சை செல்லும் அரசாங்கப் பெருஞ்சாலையை அடைகிறோம். அங்கிருந்து நீ அதிக எச்சரிக்கையுடன் அரசகுமாரியை அழைத்துச் செல். இப்பொழுது நாடு இருக்கும் நிலையில் எதிரே வரும் வீரர் கூட்டம் எது, யாரைச் சேர்ந்தது, என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. அவ்வப்பொழுது பக்கத்து சோலைகளில் மறைந்தும் மீண்டும், மிக ஜாக்கிரதையாகச் செல். புரிகிறதா?'' என்று வினவினார்.

''புரிகிறது. ஆனால் தாங்கள்?''

''நான் உங்களுடன் வருவது உங்களுக்குப் பாதுகாப்பை அளிக்காது,'' என்று கூறினார் முராரி ராவ். அதற்கு மேல் ஏதும் பேசாமல் புரவியைப் பறக்கவிட்டு, காவிரிக் கரைக்கு வந்து நதிக்குள் வெகு வேகமாக இறங்கினார்.

விஜயகுமாரனுக்கு ஏதும் புரியவில்லை. திரும்பித் தனது பக்கத்தில் வந்துகொண்டிருந்த அரசகுமாரியை நோக்கினான். அரசகுமாரியின் முகம் நட்சத்திர வெளிச்சத்தில் சரியாகத் தெரியவில்லை. அவள் முகத்தை மூடியிருந்த மஸ்லின் மிக மெல்லியதாகையால் முகத்தைக் காட்டினாலும் முழுதும் சரியாகக் காட்டவில்லை. ஆனால் அவள் புரவியில் உட்கார்ந்திருந்த தோரணை, சத்திரத்துப் புழக்கடையிலிருந்து ஒரு வார்த்தைகூடப் பேசாமல் புரவியை நடத்தியது, எல்லாவற்றிலுமே ஒரு கடுமை இருந்ததை அவன் கவனித்தான். தங்கள் விவகாரங்களிலிருந்தும், விவாதங்களிலிருந்தும் அரசகுமாரி அடியோடு விலகி நிற்கிறாளென்பதை அவள் போக்கிலிருந்து விஜயகுமாரன் கவனித்தானானாலும் அவள் மௌனத்தை உடைக்க எண்ணினான்.

''முராரி ராவ் உடன் வருவது நமக்குப் பாதுகாப்பை அளிக்காதாமே?''

அப்பொழுது புரவிகள் நான்கும் காவிரித் தாயின் நீர்க் கால்களைத் தாண்டி மணலில் நடந்து கொண்டிருந்தன. அப்பொழுதும் காவிரியின் காட்சி ரம்மியமாயிருந்தும், அதன் வானக் கூரையிலிருந்த நட்சத்திரங்கள் கண் சிமிட்டியும், எதையும் கவனிக்கவில்லை அரசகுமாரி. அவன் கேள்விக்குப் பதில் சொல்லவுமில்லை.

ஆனால் காவிரியின் தென் கரையைத்தாண்டி மீண்டும் ஒரு அடர்ந்த தோப்புக்கு வந்ததும் அரசகுமாரி புரவியைச் சற்று நிறுத்தினாள். முராரி ராவின் புரவியும் சட்டென்று நின்றது. முராரி ராவை நோக்கிக் கேட்டாள் அரசகுமாரி, ''எடுக்கட்டுமா?'' என்று.

''எடு. நான் சற்று அப்புறம் மறைவாக இருக்கிறேன்,'' என்றார் முராரி ராவ்.

அதன் பிறகு விஜயகுமாரனை நோக்கிச் சொன்னாள் ''நீங்களும் சத்திரக்காவலனும்கூடச் சிறிது மறைவிலிருங்கள்,'' என்று.

''எதற்கு?'' என்று சீறினான் விஜயகுமாரன்.

அரசகுமாரியின் அடுத்த சொற்கள் சீற்றத்துடன் வெளி வந்தன. ''உம் சீக்கிரம்,'' என்று.

விஜயகுமாரனுக்கு ஏதும் புரியாவிட்டாலும் ஒன்றுமட்டும் புரிந்தது. முராரி ராவுக்கும் அரசகுமாரிக்கும் பேச்சுக்கு அவசியமில்லாமலே ஏதோ ஒரு சம்பாஷணை இருக்கிறது என்று. ஆனால் அதைப்பற்றி அவன் வாதிக்க இஷ்டப்படாமல் ஒரு மரத்தின் மறைவுக்குச் சென்றான். சத்திரக் காவலன் முராரியைத் தொடர்ந்து அவர் சென்ற திக்கில் சென்றுவிட்டதால் அரசகுமாரியின் செய்கையை விஜயகுமாரன் மரத்தின் மறைவிலிருந்து நன்றாகக் கவனிக்க முடிந்தது. அவன் கண்கள் முன்பாக, தோப்பின் சிறுவெளிச்சத்தில்கூட விரிந்த அந்த நிகழ்ச்சி, மயக்கத்தையும் சினத்தையும் ஒருங்கே ஊட்டக்கூடிய அரசகுமாரியின் விபரீத செய்கை, அவனை அப்படியே கலக்கிவிட்டது.

(தொடரும்)

# முத்து ராமன் கேட்கிறார்



6. அநேகமாக எல்லாத் தமிழ் கதாநாயகிகளும் என்னுடன் நடித்திருக்கிறார்கள். ஸெண்டிமென்டல், கிளாமர் டைப். இதில் யாருடன் நடிப்பதை நீங்கள் அதிகம் விரும்புகிறீர்கள்? எதனால்?

சுஜாதாவுடன். அவர் தோற்றமும், அழகும் உங்களுக்குப் பொருத்தம் என்பதோடு, ஒருவருக்கொருவர் போட்டி போட்டு நடிப்பதால் இருவருமே மின்னுகிறீர்கள்.

—தர்மா நெல்லைநாயகம், நாகர்கோயில்

எல்லாக் கதாநாயகிகளுடன் நீங்கள் நடித்தாலும் ஒரு சிலருக்குத்தான் இளமையும், இனிமையும் வழங்கும் தன்மை இருக்கும். உதாரணமாக சுஜாதாவுடன் நடிப்பதில் ஒருவித சோகத்தை மட்டுமே ரசிகர்கள் பெற முடியும். என்னைப் பொறுத்த வரையில் லட்சுமியும் நீங்களும் சேர்ந்து நடிப்பதே ஓர் இனிய ஜோடியின் (Sweet couple) நினைவைக் கொண்டு வர உதவுகிறது.

—பி. வி. ஜகன்மோகன், பொன்னேரி

7. ஜனாதிபதி அவார்டு வாங்க வேண்டும் என்ற நோக்குடன் யாராவது தயாரிப்பாளர் முன்வந்தால் அந்தப் படத்திற்குப் பணம் ஏதும் பெறாமல், இனாமாக நடித்துக் கொடுக்க நான் தயாராக இருக்கிறேன். எந்த டைரக்டர், எந்தக் கதாநாயகியுடன் நடித்தால் பரிசு கிடைக்கும் என்று நீங்கள் கருதுகிறீர்கள்? எதனால்?

ஜனாதிபதி அவார்டு வாங்கத் தகுதியுள்ள படத்தில் இனாமாக நடிக்கிறேன் என்பது உங்கள் பெருந்தன்மையைத்தான் காட்டுகிறது. உங்கள் உழைப்பை ஏன் இப்படி மலிவாக்குகிறீர்கள்? இந்த நோக்குடன் யார் இயக்கினாலும் எந்தக் கதாநாயகி நடித்தாலும் அவார்டு கிட்டாது என்பது என் யூகம். கிடைப்பதாக இருந்தால் கதாநாயகியே இல்லாத 'உண்மையே உன் விலை என்ன?' விற்குக் கிடைத்திருக்க வேண்டும்.

—ஜி. முத்துராமன், திருவனந்தபுரம்

ஜனாதிபதி விருது பெறுவது எளிதான காரியமே. நல்ல கதையும், 'எல்லா Combination'ம் இருந்தால் சக்ஸஸ்தான். டைரக்ட் செய்யத் தமிழில் யாரும் கிடையாது. கே. பாலசந்தரால் முடியும். எனினும், அவரால் Commercial idea இல்லாமல் முழுக்க முழுக்க எடுக்க இயலாது. ஆங்கில நாவல் பாதிப்பும் 'ஒரு குண்டு மணி எடை' அவரிடம் இருக்கிறது. எம். டி. வாசுதேவன் நாயர் (நிர்மால்யம்); கார்டுனிஸ்ட் அரவிந்தன் (உத்தராயணம்); புட்டண்ணா (நாகர ஹாவு) இம் மூவரில் தமிழ் நன்கு தெரிந்தவர் ஒருவருமில்லை. அப்படியே டைரக்ட் செய்தாலும் கேரள பாதிப்பும், கன்னட பாதிப்பும் இல்லாமற் போகாது. முழுக்க முழுக்கத் தமிழ்மண்ணின் வாசனையோடு கூடிய நாவல் படமாகி வெற்றி பெற்றால்தான் முழு வெற்றியாகும். அந்த அளவில் பி. வி. கரந்த் (சோமன துடி) அவர்கள் நன்கு தமிழ் பேச, படிக்க, உரையாடத் தெரிந்தவர். எனவே, அவர் டைரக்ஷனில் நீங்கள் நடிக்கலாம். கதாநாயகியாக ஸ்ரீவித்யா அல்லது சாரதா இருவரில் ஒருவர் உடன் நடிக்கலாம். நாவல்: தி. ஜானகிராமன், இந்திரா பார்த்தசாரதி, ஜெயகாந்தன் எவரேனும் ஒருவரது படைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு மூன்றே மாதங்களில் Out door location லேயே படத்தை வெற்றிகரமாகக் கொண்டுவரலாம். இசைக்கு எம். பி. சீனிவாஸன் இருக்கவே இருக்கிறார். உங்கள் வெற்றிக்கு என் மனப்பூர்வமான வாழ்த்துக்கள்.

—'சகுந்தலா அமலன்', பாண்டிச்சேரி-3

(முத்துராமன் பேட்டி: எஸ். ரஜத்)

## நீங்கள் பதில் சொல்கிறீர்கள்!




## 7. சரித்திர புருஷன்

காவேர மன்னன் மகளாகப் பிறந்ததால் காவேரியென்றும், அவள் 'செல்லுமிடங்களிலெல்லாம் 'கா'வெனச் சோலைகள் விரிந்ததால் காவிரியென்றும் திருநாமங்களைத் தாங்கி, தான் ஊர்ந்த மண்ணில் தோன்றிய கோடானுகோடி மக்களுக்கெல்லாம் உணவு தோன்றப் பயிர்களுக்கு உரமூட்டியதால் காவிரித் தாயாக விளங்கிய அந்தத் தென்கரைத் தோப்பு மற்றத் தோப்புகளைவிட அதிக அடர்த்தியாக இருந்தபோதிலும், இரவு மிக ஓடி கிருஷ்ண பட்சத்துச் சந்திரன் எழுந்துவிட்டதால் சிறிது இருள் கிழிந்த நிலையிலேயே காட்சியளித்தது. அந்த நிலவின் ஒரு கிரணம் அரசகுமாரி புரவியை நிறுத்தியிருந்த இடத்தில் சற்று அதிகமாகவே மரக் கிளைகளையும் இலைகளையும் ஊடுருவிவிட்டதால், அவள் தலைக்கு நேராக இறங்கி அவள் மஸ்லின் முக்காட்டின் வெண்மையைப் பல மடங்கு அதிகமாகக் காட்டியதால், ஏதோ வெண்ணிறத் தேவதையொன்று ஆகாயத்திலிருந்து இறங்கிவிட்டதைப் போன்ற பிரமையை அளித்தது, சற்று எட்ட மரத்தின் மறைவிலிருந்த விஜய குமாரனுக்கு. தவிர, அந்த வாள் மகள், மற்றவர் அப்புறம் போய்விட்டார்களென்ற நினைப்பில் தனது முக்காட்டை இடது கையால் அநாயாசமாக எடுத்து மடியில் கிடத்திக் கொண்டதும், மாராஷ்டிரர்களின் வாள் போல் வளைந்து கிடந்த அவள் நுதலும், சற்றுக் கீழேயிருந்த புருவங்களை அடுத்துக் கரிய இமைகளுக்குள்ளேயிருந்த வாள் விழிகளும், அந்த ஒற்றைக் கிரணத்தால் தழுவப்பட்டதன் விளைவாக மிதமிஞ்சிய மயக்கத்தையும் அச்சத்தையும் ஒருங்கே அளித்தன அந்த வாலிபனுக்கு. அதுவரை அவளை நன்றாகக் காணவோ, கண்டால் அழகை அலசவோ அதிக வாய்ப்பில்லாத அந்த வீரனுக்கு அந்தத் தோப்பும், மதியின் கிரணமும் சிறிது வாய்ப்பை அளிக்கவே அவளது தெய்வீக அழகைப் பருகிய அவன் மெய்மறந்து நின்றான் மரத்தின் மறைவிலே.

அவள் அதிக உயரமோ பருமனோ இல்லையென்பதையும், புரவி

**சாண்டில்யன்**



யில் உட்கார்ந்திருந்த தோரணையில் கூட ஒரு புஷ்பக் கொடி மரக்கிளையிலிருந்து திடீரெனப் புரவியின் மீது இறங்கிவிட்டது போன்ற பிரமையை ஏற்படுத்தியதையும், வெண்மதிக் கிரணம் அவள் கரிய கூந்தலை அதிகக் கருமையாக அடித்ததன்றி அவள் தலையை அலங்கரித்த வைரச் சரத்தை ஆயிரம் மடங்கு அதிகமாக மின்ன வைத்து விட்டதால், வானத்தில் வரிசையாகத் தோன்றிவிட்ட நட்சத்திரங்கள் போல் அவள் தலையாபரணக் கற்கள் பளிச்சிட்டதையும், ஆனால் அவள் கண்களின் ஒளிக்கு முன்னால் அந்த வைரக் கற்களின் ஒளி அர்த்தமற்றுப் போனதையும் கண்ட விஜயகுமாரன், நந்தினியின் அழகைப்பற்றியும் வீரத்தைப்பற்றியும் ஏற்பட்டுள்ள பிரசித்தியில் தவறேதுமில்லை என்ற முடிவுக்கு வந்தான். புரவியில் உட்கார்ந்த வண்ணம், அவள் முக்காட்டைக் கழற்றிய பின்பு நன்றாகத் தெரிந்த அவள் சரீர வாகு அவனை



ஏதோ தேவலோகத்துக்குக் கொண்டு போய்க் கொண்டிருந்தது. நீண்ட அவள் மெல்லிய கைகள் முக்காட்டைப் பற்றி மடியில் கிடத்தியதும் அவள் அணிந்திருந்த காச்மீர வெண்பட்டுச் சேலையின் மேல்பகுதியில் தெரிந்த வெளுத்த கழுத்தும், இடையைச் சுற்றியிருந்த இடத்தில் சிறிதும் தளராத கட்டு இருந்ததால் அதற்குமேலே லேசாகத் தெரிந்த அழகிய வழவழத்த மேனியும், மேலே ஆடை ஓடிய இடத்தில் ஆடையை முட்டி வெளிவர முயற்சித்துக்கொண்டிருந்த இரட்டை முரட்டு மொட்டுக்களும், வெளியே புலப்பட்ட அழகுகளைவிட, புலப்படாத அழகுகளின் சிறப்புக்கு ஏதேதோ ஊகங்களை ஏற்படுத்திக் கொடுக்கவே பெருமூச்செறிந்தான் அந்த வாலிப வீரன். ஆனால் புலப்பட்ட அழகுகளுக்குத்தான் என்ன குறை என்று அவன் தனக்குத் தானே வினவிக்கொள்ளவும் செய்தான். புரவியின் வயிற்றை அணைத்து நின்ற கால்களில் ஒன்று அவன் கண்களுக்கு நன்றாகத் தெரிந்ததால், அந்தப் பூங்கொடியிலும் திண்மையான பகுதியும் சாட்டை போன்ற பகுதியும் இன்ப ஜாலங்களை அள்ளித்தெளிக்கும் இணைப்புப்பகுதிகளும் உண்டென்பதை உணர்ந்த அவன், ஓவியத்திலும் அவளைத் திறம்படத் தீட்டுவது முடியாதென்ற முடிவுக்கு வந்தான். மேலும் அவன் கற்பனைகளை ஓட்டியிருப்பான் அவள் மட்டும் திடீரெனத் தனது சேலையின் மேற்பகுதியை நீக்கியிருக்காவிட்டால்.

என்ன காரணத்தாலோ நந்தினி தனது மார்பை மறைத்து ஓடிய சேலைப் பகுதியைத் திடீரென நீக்கி ஒரு கையை உள்ளே விட்டு இரண்டு ஆபரணங்களைச் சேலைமீது கிடத்தினாள். அவள் சேலைமீது கையை வைத்தவுடனேயே அதற்குமேல் தனது பார்வையை ஓட விடுவது அதர்மமென்ற நினைப்பால் சட்டென்று கண்களை மூடிக்கொண்ட அந்த வாலிபனை நோக்கி நகைப்பன போல் காவிரித் தென்றலில் அவன் பதுங்கியிருந்த மரத்தின் இலைகள் சலசலவென சப்தித்தன. அது மரமல்லி மரமாதலால் அதன் நீண்ட வெண்மை மலர்களில் சில அவன் தலைமீது விழுந்தன. ஆசைக்கும் வேட்கைக்கும் அளவு கிடையாத காரணத்தாலும் மனிதனின் சபலத்தாலும் அறத்தின் நினைப்பு இதயத்தில் அறுக்கப்பட்டு விடவே அவன் கண்கள் திறந்தன அடுத்த

ரஜனி: நேற்று நீ என்ன சினிமா பார்த்தே?



விநாடி. ஆனால் தமிழகத்தின் பெண்மை எத்தனை பண்பாடு உடையது என்று அவன் புரிந்து கொண்டான் அந்தச் சில விநாடிகளில். நந்தினி தனது சேலையை மார்புக்கு மேலேயே தனது முகவாய்க்கட்டையால் அழுத்தி நிறுத்தியிருந்தாள். அவள் கைகள் மட்டும் கழுத்துக்குப் பின்புறம் ஓடி அங்கிருந்த சிறு பட்டுக் கயிறுகளை அவிழ்த்து மார்பைத் தொட்டுக்கொண்டிருந்த பெரிய மகர ஆபரணத்தை வெளியே இழுத்தன. பிறகு முன்புறம் வந்து அந்த ஆபரணத்தை மடியில் வைத்துக் கொண்டன. இப்படியே அவள் தனது தலையாபரணத்தையும் கற்களுடனிருந்த கடகங்களையும் உடலிலிருந்து அகற்றி மடிக்குள்ளிருந்த மகராபரணத்துடன் சேர்த்தாள். கடைசியில் காலிலிருந்த இரு சிலம்புகளையும் நீக்கினாள். இப்படி அவள் ஆபரணங்களையெல்லாம் கழற்றி மடியில் ஒன்று சேர்ப்பதைக் கண்ட விஜயகுமாரன் அதற்குக் காரணம் புரியாமல் திணறினான். அந்தத் திணறலை அவள் அழைப்பு ஓய வைத்தது.

ஆபரணங்களை எடுத்த பின்பு சேலையைச் சரிப்படுத்திக்கொண்டு, "இனி நீங்கள் வரலாம்," என்று அவள் குரல் கொடுத்ததும் விஜயகுமாரன் அவளை நோக்கித் தனது புரவியைக் கணநேரத்தில் செலுத்திவிட்டாலும், அதற்கு முன்பே எங்கிருந்தோ முராரி ராவ் திடீரென முளைத்து விட்டதையும், அவன் புரவி அவள் புரவியை அணுகியதும் அரசகுமாரி தனது மடியிலிருந்த நகைகளைத் தனது முக்காட்டின் ஒரு பகுதியைக் கிழித்து அதில் சுற்றிக் கட்டி அவரிடம் ஆபரண முடிப்பைக்

கொடுத்துவிட்டதையும் கண்டதும் பெரும் சினத்துக்குள்ளானான். அவள் நகைகளை நீக்கத் துவங்கு முன்பு அவள் அழகில் மயங்கியும், அவள் ஆபரணங் களை நீக்க முற்பட்டவுடன் அதன் காரணத்தை ஊகித்துச் சிறிது சினத் தின் வசமும் பட்டிருந்த விஜயகுமாரன் மனம், ஆபரண முடிப்பை முராரி ராவிடம் அவள் கொடுத்ததும் சினத்தின் உச்சியை அடைந்துவிட்டதால், ''இதற் கென்ன அர்த்தம்?'' என்று சீறினான் முராரி ராவை நோக்கி.

அரசகுமாரியின் அழகிய வதனத்தில் சிரிப்பின் சாயை லேசாக விரிந்தது. அவள் கண்களும் அந்த வாலிபனை நோக்கி மெள்ளச் சிரித்தன. பவள உதடுகள் மெல்ல விரிந்து, ''மகா ராஷ்டிர தளபதி கொள்ளைக்கார



சொல்ல மாட்டேன் கண்ணு!

ரென்று பெயர் வாங்கியிருப்பதை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா?'' என்ற சொற்களை மிக மதுரமாக உதிர்த்தன.

அவள் தன்னைப் பார்த்து நகைக்கிறாளென்பதை அறிந்த விஜய குமாரன் சற்றே தனது சினத்தை உதறி, ''கேள்விப்பட்டிருக்கிறேன். அதற் கென்ன இப்பொழுது?'' என்று வினவினான்.

அவள் கண்கள் முராரி ராவையும் நோக்கி அந்த வாலிபனை யும் நோக்கின. கடைசியில் வாலிபனிடம் சொன்னாள் அரசகுமாரி, ''அதை நிரு பிக்கிறார் இப்பொழுது,'' என்று.

''எப்படி?'' விஜயகுமாரன் கேள்வி குழப்பத்துடன் வெளி வந்தது.

''இந்த நகைகளைக் கொள்ளை யடிப்பதன் மூலம்,'' என்று அரசகுமாரி முராரி ராவின் கையிலிருந்த ஆபரண முடிச்சைச் சுட்டிக் காட்டினாள்.

விஜயகுமாரன் சிறிது நிதா னித்தான். தனது கூரிய விழிகளை அந்த இருவர் மீதும், அவர்களுக்குச் சற்று எட்ட வந்து புரவியில் அமர்ந் திருந்த சத்திரத்துக் காவலன்மீதும் உலாவ விட்டான் ஒரு விநாடி. கடைசி யாக அரசகுமாரி மீது அவன் விழிகள் நிலைத்தன கோபத்துடன். ''அவர் கேட்கவில்லை இந்த ஆபரணங்களை,'' என்று கூறவும் செய்தான் கோபம் குரலிலும் ஒலிக்க.

''கேட்டார்,'' என்றாள் அரசகுமாரி.

''எப்பொழுது?''

''நம்மை விடுவிக்க ஏற்பாடு செய்தபோதே.''

''விடுவித்ததற்கு இது கூலியா?'' இந்தக் கேள்வியை மிகுந்த உஷ்ணத்துடன் கேட்டான் விஜய குமாரன்.

அரசகுமாரி ஏதும் பதில் சொல்லாவிட்டாலும் முராரி ராவ் மெல்ல நகைத்து, ''சே சே, கூலியா! என்ன அர்த்தமற்ற பேச்சு!'' என்று கூறினார்.

''வேறென்ன?'' என்று அவரைத் திரும்பி நோக்கினான் விஜய குமாரன்.

''கொள்ளைக்குக் கூலியென்று பொருள் கிடையாதே,'' என்று சுட்டிக் காட்டிய முராரி ராவ் மெல்ல நகைத் தார். அரசகுமாரியும் நகைத்தாள்.

புரிகிறது!





நுரையோ அபரிமிதம்
நறுமணமோ மிகநேர்த்தி
விலைமட்டுமே சிக்கனம்

மட்டுமே
ரூ.1.00
(வரிகள்
தனி)




டர்கிஷ் பாத்

விலையோ வெகு குறைவு...
நாள்பட்ட உழைப்போ மிகஅதிகம்!

ஒரு
கோத்ரெஜ்
தயாரிப்பு

Interpub/GST/3/76 Tam

அவர்களிருவரும் சேர்ந்து தன்னை ஏளனம் செய்கிறார்களென்பதைப் புரிந்து கொண்ட விஜயகுமாரன் கை அவனது வாளை நோக்கிச் சென்றது. அதைக் கண்ட முராரி ராவ் இன்னும் பலமாக நகைத்தார். அந்த நகைப்பு விஜயகுமாரன் நிதானத்தை அறவே வெட்டி விட்டதால் அவன் வெளிப்படையாகவே சீறினான், "தளபதி! உமது நகைப்புக்குக் காரணம் எனக்குப் புரியவில்லை," என்று.

"எனக்குப் புரிகிறது."

"என்ன புரிகிறது?" என்று கேட்டான் விஜயகுமாரன் சீற்றம் மீண்டும் உதயமான குரலில்.

"உன் ஆசை."

"என் ஆசையா?"

"ஆம். சத்திரத்தில் நீ கூறவில்லை, இறப்பதானால் இந்த உடையிலேயே இறக்கப் போவதாக?"

"ஆம், சொன்னேன்."

"நான் என்ன பதில் சொன்னேன்?"

"தஞ்சை வழியில் அதற்கு நிரம்ப வசதி இருப்பதாகச் சொன்னீர்கள்."

"அது தவறு."

"ஏன்?"

"இந்தத் தோப்பிலேயே அந்த வசதி கிடைக்கும் வழியை நாடுகிறாய்." இதைச் சொன்ன முராரிராவ் பலமாக நகைத்தார். அந்த விநாடியில் அவர் நகைப்பு திடீரென நின்றது. விஜயகுமாரன் வாளின் நுனி அவர் கழுத்தைத் தடவிக்கொண்டு நின்றது.

முராரி ராவ் அதைக் கண்டு நகைப்பை நிறுத்தினாரே தவிர, இதழ்களில் தவழ்ந்து கொண்டிருந்த புன்முறுவலை அகற்றவில்லை. "இது எதற்கு?" என்று மெல்ல வினவவும் செய்தார்.

"நீங்கள் குறிப்பிட்ட வசதியை விஜயகுமாரனுக்குச் சுலபமாக அளிக்க முடியாது என்பதை உணர்த்துவதற்கு," என்று பதில் கூறினான் விஜயகுமாரன்.

வாளின் நுனி கழுத்தில் கீறுமோ என்ற பயம் சிறிதுமில்லாமல் ஆம் என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார் முராரி ராவ். வாளின் நுனி கழுத்தைத் தடவி நின்ற சமயத்திலும் அவர் காட்டிய அசட்டையைக் கண்ட விஜயகுமாரன் முராரி ராவின் நெஞ்சுரத்தைப் பெரிதும் பாராட்டினான் மனத்துள்.

சற்றுப் பொறுத்து முராரி ராவ் தனது கழுத்தைத் தடவி நின்ற அவனது வாளைச் சாதாரணக் குச்சியை அகற்றுவதுபோல் கையால் அகற்றிவிட்டு, "விஜயகுமாரா! வாளை உறையில் போடு. நான் சொல்வதை நன்றாகக் கவனி," என்று சொன்னார். "இங்கிருந்து தெற்கில் தோப்புக்குள்ளேயே பயணம் செய்தால் அரை நாழிகைக் கெல்லாம் தஞ்சைப் பெருஞ்சாலையை அடையலாம். அந்தச் சாலையில் கால் காதம் சென்றதும் பக்கச் சோலை யொன்று பிரும்மாண்டமாகத் தெரியும். அந்தச் சோலையின் நடுவில் பெரும் சத்திரம் ஒன்று இருக்கிறது. அங்கு சென்றதும் இதைச் சத்திரக்காவலனிடம் காட்டு," என்று கூறி இடையிலிருந்த குறுவாளை எடுத்து விஜய குமாரனை நோக்கி விட்டெறிந்தார்.



விருலிமலை முருகன் கோவிலில், அர்ச்சனைக்கான பழத்தட்டைக் கடைக்காரர்கள் கொடுக்கும்போது கூடவே ஒரு நீண்ட குச்சியையும் கொடுக்கிறார்கள். படிகள் நெடுகக் குரங்குகள் அலைந்து கொண்டிருப்பதால் குச்சியால் தட்டிக்கொண்டே போகத்தான். தட்டைத் திருப்பிக் கொடுக்கும்போது ஞாபகமாகக் குச்சியையும் வாங்கிக்கொள்கிறார்கள்.

—சரசுவதி பஞ்சு



குழந்தைக்காகத் தரையில் விரிக்கும் ஜமக்காளம் போன்ற வைக்கு, தலைப்பக்கம் வலது புறத்தில் அடையாளம் செய்து வைத்தால், (முடிச்சு போன்றவை), கீழ்ப் பக்கம் கீழேயே இருக்கும். குழந்தை படுக்கும் மேல் பக்கம் சுத்தமாகவே (தரை அழுக்குப் படாமலேயே) இருக்கும்.

—ஜெயலட்சுமி

திடீரெனச் சம்பாஷணையோடு சம்பாஷணையாக எதிர்பாராமல் எறியப்பட்ட அந்தக் குறுவாளை இடது கையில் மிக லாகவமாகப் பிடித்துக் கொண்ட விஜயகுமாரன் அதைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் கச்சையின் ஒருபுறத்தில் சிறிது செருகிக்கொள்ளவும் செய்தான். அந்தச் சமயத்தில் மீண்டும் சொன்னார் முராரி ராவ்: "இதைக் கண்டால் உங்களுக்குத் தேவையான சகல வசதிகளையும் சத்திரக் காவலன் அளிப்பான். அரசகுமாரி அங்கு இந்த உடையை நீக்கிப் பணிப் பெண் உடையை அணியட்டும். அங்கிருந்து நீங்கள் உடனடியாகப் புறப்பட்டால் பொழுது புலருவதற்கு முன்பாகத் தஞ்சை எல்லையை அடையலாம். பிறகு அரசகுமாரிக்கு ஆபத்து ஏதுமில்லை. புரிகிறதா?"

இத்துடன் பேச்சை நிறுத்திய முராரி ராவ், தமது புரவியைச் சரேலெனத் திருப்பிக்கொண்டு அந்தச் சோலையின் மற்றொரு பகுதியில் மறைந்து விட்டார். அவரது செய்கைகளாலும் பேச்சினாலும் பிரமித்திருந்த விஜயகுமாரன் தனது வாளை உறையில் போட்டுக்கொண்டு தஞ்சைச் சாலையை நோக்கித் தனது புரவியைத் திருப்பினான். இளவரசியும் சமயபுரச் சத்திரக் காவலனும் பின்தொடர முராரிராவ் சொன்னபடி பயணம் செய்து அவர் குறிப்பிட்ட சத்திரத்தையும் அடைந்தான். இரவு மூன்றும் ஜாமத்தின் பாதியைத் தாண்டி விட்டதால் சத்திரத்தில் வாயில் விளக்கு ஒன்றுதான் எரிந்து கொண்டிருந்தது. மற்றப்படி எங்கும் நிசப்தம் பரிபூரணமாக நிலவிக் கிடந்தது. அந்த நிசப்தத்தை அதிகமாகக் கலைக்காமல் மெள்ளப் புரவியைச் செலுத்திய விஜயகுமாரன் சத்திரத்தை அணுகியதும் புரவியிலிருந்து இறங்கி அதன்மீதே சேணத்தை விட்டெறிந்து விட்டுச் சத்திரத்தின் படிகளில் ஏறி, கதவை முராரி ராவின் குறுவாளைக் கொண்டே மெள்ளத் தட்டினான் இரண்டு மூன்று முறை. சிறிது நேரத்திற்குப் பின் கதவின் தாழ்கள் மெதுவாகத் திறக்கப்பட்டன. நடுத்தர வயதுள்ள ஒரு மனிதன் வெளியே வந்து, "யார் நீ?" என்று விசாரித்தான் விஜயகுமாரனை நோக்கி.

"சத்திரக் காவலன் எங்கே?" என்று வினவினான் விஜயகுமாரன்.

"நான்தான் சத்திரக் காவலன்," என்று அவன் கூறியதும் குறுவாளை அவனிடம் விஜயகுமாரன் கொடுக்கவே, அதை வாங்கி இருமுறை திருப்பிப் பார்த்த காவலன், "சரி, இப்படி வாருங்கள்," என்று கதவை முன்புறம் சாத்திக்கொண்டு வந்து சத்திரத்தைச் சுற்றிப் பின்புறம் சென்றான். விஜயகுமாரன் அவனைத் தொடர விஜயகுமாரனை அவன் புரவியும் தொடர்ந்தது. அரசகுமாரியின் புரவியும் சமயபுரத்தின் புரவியும் முன் சென்றவர்களைத் தொடர்ந்தன.

சத்திரத்தின் பின்புறத்திலிருந்த ஒரு மரத்தடிக்கு வந்ததும் சத்திரத்துக் காவலன் சட்டென்று நின்று, "நீங்கள் இதோ இந்தப் பக்கத்துத் தோப்பு வழியாகச் சென்று விடுங்கள்," என்று கூறினான். அவன் சொற்களில் சிறிது நடுக்கம் தெரிந்ததை விஜயகுமாரன் கவனித்தான்.

'ஏன்?' என்று ஏதோ கேட்க முற்பட்ட விஜயகுமாரன் சரேலென்று சொற்களை அடக்கிக் கொண்டான். அவர்கள் வந்த அதே பாதையில் மெல்லிய சரீரத்தையுடைய மற்றொரு மனிதனும் வந்து கொண்டிருந்தான். அவனைக் கண்ட விஜயகுமாரன் கண்கள் கேள்வி கேட்பன போல் சற்றே உயர்ந்தன சத்திரக் காவலனை நோக்கி. சத்திரக்காவலன் முகத்திலும் குழப்பம் மிகுதியாகத் தெரிந்தது. "இவன் யாரோ புதிதாயிருக்கிறது," என்றான் சத்திரக் காவலன். பாரதத்தின் சரித்திரத்தைப் புதிதாக எழுத வந்தவன் அந்த இளைஞன் என்பதை அன்று யாரும் உணர்ந்து கொள்ள வில்லை.

(தொடரும்)

ராஜ

சாண்டில்யன் • 8 • எமனையும் சுருகவென்

இரவின் நான்காம் ஜாமம் நடக்கத் தொடங்கிவிட்டதல் விளைவாகக் கிருஷ்ணபட்சத்துச் சந்திரன் தனது கிரணங்களை மிக வெண்மையாக்கி எங்கும் நிலவவிட்டதால், சத்திரத்துப் பாதையில் வந்து கொண்டிருந்த அந்த இளைஞனை மரத்தடி வீசியிருந்த இருளில் மறைந்து நின்ற நால்வரும் நன்றாகவே பார்க்க முடிந்தது. அதே மரத்தை நோக்கி வந்து கொண்டிருந்த வாலிபனுக்கு வயது இருபத்து நான்குக்கு மேல் இருக்க முடியாதென்பதை அவன் முகத்தில் விழுந்த சந்திர வெளிச்சம் நிருபித்ததென்றால், நல்ல விசால்மாகவும் ஆனால் சற்றே எழுந்து முன்புறம் வந்துவிட்ட அவன் நுதல் அவனுக்கு அதிகமாக அழகு எதையும் அளிக்கவில்லையென்பதையும் தெளிவாகக் காட்டவே செய்தது. அந்த நுதலின் காரணமாக அவன் முகம் அதிக அழகைப் பெறவிட்டாலும் கண்களில் தெரிந்த ஒரு கம்பீர ஒளியும், நடையில் இருந்த அரச தோரணையும், மிக அலட்சியமாக அசைந்து வந்த வலது கையும், அவன் ஏதோ பாரை ஆளவந்த மாவீரன் என்ற நினைப்பையே அறிவுறுத்தியது. சந்திர வெளிச்சத்தில் அவன் முகமிருந்த வெளுப்பும் சட்டையால் மறைக்கப்படாத புறங்கைகளின் தோற்றமும், அவன் அணிந்திருந்த உடையும் அவன் பாரத நாட்டைச் சேர்ந்தவனல்லவென்பதையும், வெள்ளையனென்பதையும் சந்தேகமற எடுத்துக்காட்டின. அவன் தலையில் குறுக்காக வைக்கப்பட்டுப் பக்கவாட்டில் அகன்றிருந்த 'ஹாட்' என்ற தலை அணியும், கீழே முக்கால்வாசிப் பித்தான்களைப் போடாததால் உள்ளே யிருந்து எட்டிப் பார்த்த ஷர்ட்டும், காலை மூடியிருந்த நிஜாரின்மேல் பாதத்தில் அவன் இடையைச் சுற்றிக் கிடந்த தோல்பெல்ட்டும், அவனை ஏதோ வெள்ளைக்கார வியாபாரி போல் தோற்றுவித்தாலும், அந்த பெல்டில் செருகப்பட்டிருந்த நீண்ட கைத்துப்பாக்கி அவன் வியாபாரம் வர்த்தகப் பொருள்களைப்பற்றியதாக மட்டும் இருக்க முடியாதென்ற நினைவைச் சந்தேகமற ஊட்டவே செய்தது. அவன் கண்களில் புலியைப் போன்ற தீட்சண்யம் இருந்தாலும் பாதங்களிலிருந்த பூட்ஸ் இரண்டும் சத்திரத்துப் பாதையில் சிறிதளவும் சத்தம் போடாமல் பூனைபோல் வந்ததால், அந்த வாலிபன் பூனையா, புலியா என்பதை நிர்ணயிக்க முடியாதிருந்தது. இத்தனைக்கும் அவன் பொதுத் தோற்றத்தில் எந்த விதத் திருட்டுத்தனமோ, அச்சமோ இல்லாததையும் அவன் ஒரே நிர்ணயமாக அக்கம்பக்கம் பார்க்காமல் நேராக மரத்தடியையே நோக்கி வந்ததையும் கவனித்த விஜயகுமாரன் சத்திரத்துக் காவலனை நோக்கி, "அவன் நம்மை நோக்கித்தான் வருவதாகத் தோன்றுகிறது." என்று கூறினான்.

"ஆம், ஆம். அப்படித்தான்



தோன்றுகிறது,'' என்று ஒத்துப் பாடிய சத்திரத்துக் காவலன் சில விநாடிகள் யோசித்துவிட்டு, ''சரி சரி, உங்களுக்கென்ன இவனைப்பற்றி? நீங்கள் பக்கத்துத் தோப்பு வழியாகத் தப்பித்துச் சென்றுவிடுங்கள்,'' என்று கூறியதன்றி ''உம். இதோ இருக்கிறது வழி,'' என்று சற்று எட்ட இருந்த ஓர் ஒற்றையடிப் பாதையையும் சுட்டிக் காட்டினான்.

சத்திரத்து வாயிலின்மீது விட்டெறிந்த கடிவாளங்களைக் கூடக் கையில் எடுக்கவில்லை விஜயகுமாரன். அரசகுமாரியையோ சமயபுரத்துச் சத்திரக் காவலனையோ செல்லுமாறும் பணிக்கவில்லை. ''ஆம்! எங்களை எதற்காகத் திருட்டுத்தனமாக இங்கு அழைத்து வந்தாய்? இங்கிருந்து எதற்காக ஓடச் சொல்லுகிறாய்? இந்த இடத்தில் தங்கி இதோ இருக்கும் பெண்ணுக்கு வேறு ஆடை தந்து அழைத்துச் செல்லத்தானே குறுவாளுக்குடையவர் உத்தரவிட்டார்?'' என்று சம்பாஷணையில் இறங்கினான்.

''உங்களிடம் குறுவாளைக் கொடுத்தபோது மகாராஷ்டிர தளபதிக்கு இங்குள்ள நிலைமை தெரியக் காரணமில்லை,'' என்றான் சத்திரத்துக் காவலன்.

''அப்படியானால் குறுவாள் யாருடையதென்று புரிந்து கொண்டுவிட்டது உனக்கு?''

''எனக்கென்ன, இந்த ராஜ்யத்தில் யாரிடம் இதைக் காட்டினாலும் புரிந்துகொள்வார்கள்.''

''புரிந்து கொண்டால்?''

''உங்களை யாரும் அணுக வும் அஞ்சுவார்கள் முராரிராவ் கோர் பாதேயின் பெயர் அல்ப சொல்பமான தல்ல.''

விஜயகுமாரன் வியப்பின் வசப்பட்டான். 'முராரி ராவின் குறு வாளுக்கே அத்தனை சக்தியென்றால் அவர் சக்தி எத்தனை இருக்க வேண் டும்?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டான் மேலும் ஏதோ அவன் கேட்க முயன்றதும் சத்திரத்துக் காவ லன் தடுத்து, ''இப்படியே பேசிக் கொண்டிருந்தால் நீங்கள் தஞ்சை போய்ச்சேர முடியாது,'' என்று கவலை யைக் காட்டினான்.

விஜயகுமாரன் வியப்பு மேலும் அதிகப்பட்டது. ''நாங்கள் தஞ்சைதான் போகப் போகிறோம் என் பது உனக்கெப்படித் தெரியும்?'' என்று வினவினான்.

''மேல்புறம் போனால் திருச் சிக்குப் போகலாம். அங்கிருக்கிற நிலைமை பயங்கரம். கோட்டை மிகப் பலமாகப் பாதுகாக்கப் பட்டிருக்கிறது. உள்ளே செல்லும் ஒவ்வொருவரும் சோதிக்கப்படு கிறார்கள். சிறிது சந்தேகமிருந்தாலும் சிறையில் தள்ளி வருகிறார்கள். உங் களைப் பார்த்தால் சிறையை விரும்பு பவர்களாகத் தெரியவில்லை, ஆகையால் கிழக்கே தஞ்சைக்குத்தான் போவீர் கள் என்று நினைத்தேன். அதுதவிர...'' என்ற சத்திரத்துக் காவலன் வாச கத்தை முடிக்காமல் விட்டான்.

''அது தவிர?'' விஜயகுமா ரன் கேள்வி சுரீலென எழுந்தது வாலிப வேகத்தால்.

''இப்படியே பேசிக் கொண் ருந்தால் நீங்கள் தஞ்சைக்கும் போக மாட்டீர்கள், திருச்சிக்கும் போக மாட்டீ கள்,'' என்றான் காவலன்.

''வேறெங்கு போவோம்?'' என்று வினவினான் விஜயகுமாரன்.

''எமலோகம்'' என்று தங்கு தடையின்றி வந்தது காவலன் பதில். அவன் குரலில் விஜயகுமாரனை ரசிக் காத தொனியும், மிதமிஞ்சிய எரிச்ச லும் தெளிவாகத் தெரிந்தன.

சத்திரத்தைச் சுற்றியிருந்த விசாலமான பாதையில் ஒரே சீராகக் கால்கள் பாவ அரவமேதும் செய்யாமல் நடந்து வந்த அந்த வெள்ளைக்கார வாலிபன் அவர்களிருந்த மரத்துக்கு வந்து அது அளித்திருந்த நிழலுக்குச் சற்று வெளியிலேயே நின்றிருந்தான். சத்திரத்துக் காவலன் சொன்ன கடைசி

முத்துராமன் ஸ்ரீப்ரியாவைப் பார்க்கும் பார்வையிலேயே படத்தின் பெயரும் இருக்கிறது: 'சபலம்.' ஸ்ரீப்ரியாவின் பார்வை? —'ஜீயெஸ்.'



வார்த்தைகள் அவன் காதில் விழுந்திருக்கவேண்டும். ஆகவே உறுதியான ஆனால் மிக மிருதுவான குரலில் வினவினன் "அது எங்கே?" என்று. அவன் தமிழ் உச்சரிப்பு சரியாயில்லை. அது மிகவும் இலக்கணமாகவும் இருந்ததால் அவன் என்ன காரணத்தாலோ தமிழைச் சிரமப்பட்டுப் பயின்று வருகிறன் என்பது மட்டும் தெரிந்தது மரத்தடியில் இருந்தவர்களுக்கு. ஆனால் அவன் தங்கள் உரையாடலில் குறுக்கிட வேண்டிய அவசியமென்னவென்பது புரியாததால் சிறிது நேரம் மௌனம் சாதித்தனர் நால்வரும்.

அந்த வாலிபன் இரண்டாம் முறை கேள்வியைத் திருப்பினன். "அது எங்கே?" இம்முறை அவன் கேள்வியில் உஷ்ணம் லேசாக உதயமாகியிருந்தது. அதில் அதிகார தோரணையும் இருந்தது.

அதை விஜயகுமாரன் கவனிக்கவே செய்தான். ஆகையால் வெள்ளைக்காரனுக்குப் பதில் சொல்லத் துவங்கிய சத்திரத்துக் காவலனைக் கையின் சைகையால் அடக்கிவிட்டு "எது?" என்று தானே வினவினன் தனது குரலிலும் சிறிது உஷ்ணத்தைக் காட்டி.

வெள்ளைக்கார வாலிபன் விஜயகுமாரன்மீது கண்களை ஒரு வினடி ஓடவிட்டான். பிறகு முக்காடிட்டிருந்த அரசகுமாரியையும் அவளுக்குப் பின்னலிருந்த சமயபுரத்துச் சத்திரக்காரனையும் கூர்ந்து நோக்கினன். அவன் பார்வை மரத்தின் நிழல் தந்த சிறு இருளையும் கிழித்துக் கொண்டு வந்தது. அரசகுமாரிக்குப் புலனாகவே அவள் மிகுந்த தர்மசங்கடத்துடன் அசைந்தாள் தனது புரவியில் சமயபுரத்தானைக் கிலி பிடித்துக்கொண்டிருந்ததால் அவன் கைகளில் புரவியின் சேணம் ஆடிக்கொண்டிருந்தது. இவை எதையும் கவனிக்கத் தவறாத வெள்ளையன் சொன்னான், "பயம் வேண்டாம். இவன் சொன்ன இடத்தைச் சொன்னல் போதும்," என்று கூறி அதற்குமேல் தமிழ் ஓடாததால் "லெட் ஹிம் ஸ்பீக்," என்று உத்தரவிட்டான்.

இதற்குள் தைரியத்தை வரவழைத்துக் கொண்ட சத்திரத்துக் காவலன், "அட சனியனே! எதைக் கேட்கிருய்?" என்று எரிந்து விழுந்தான்.

"நீ ஒரு இடம் சொன்னய்."

"எந்த இடம்?"



"துக்கம்வியே! என்னடா உனக்கு துக்கம்?"

"தினமும் ராத்திரி ஒவ்வொரு குழந்தையாகத் தூங்கப் பண்ணிட்டு என் மனைவியை எழுப்புவதற்குள் எனக்குத் தூக்கம் வந்து விடுகிறதுடா! அது தான் துக்கம்."

"எமலோகம்."

"அது எதற்கு?"

"இந்த நைட் தங்க வேண்டும்."

"தங்கி?"

"காலையில் போவேன்."

"முடியாது."

"ஏன்?"

"அங்கு போனல் திரும்பி வர முடியாது?"

"என்னல் முடியும்."

"எப்படி?"

பதிலுக்கு அந்த வாலிபன் இடையிலிருந்த கைத்துப்பாக்கியைத் தட்டிக் காட்டினன். உண்மையில் அவன் தட்டிக்காட்டிய தோரணையில் ஒரு அபாரத் துணிவும் அசட்டையும் இருந்ததைக் கவனித்த விஜயகுமாரன், 'இவன் எமனையும் சுட்டுவிடுவான் போல்தானிருக்கிறது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். அவனுக்குத் தமிழ் புரியாததால் எமலோகம் ஏதோ அக்கம் பக்கத்தில் தங்கக் கூடிய இடமென்று கேட்கிறன் என்பதையும் புரிந்து கொண்டு, "எமலோகம் மேலேயிருக்கிறது." என்று கூறிக் கையை உயர்த்தி ஆகாயத்தைக் காட்டினன்.

''யூ மீன் ஹெவன்?'' என்று வினவினான் வெள்ளைக்கார வாலிபன்.

''இல்லை. அதற்கு நேர் விரோதம்.''

''ஹெல்....?''

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் விஜயகுமாரன். இதைக் கேட்ட அந்த வாலிபன் வாய்விட்டுப் பெரிதாக நகைத்தான். ''தமிழ் இன்னும் சரியாகப் புரியவில்லை'' என்றும் கூறிவிட்டு ''எமலோகம், எமலோகம். ஹெல் ஹெல்'' என்று இருமுறை சொல்லிக் கொண்டான்.

அவன் நகைத்ததைக் கண்ட சத்திரத்துக் காவலனுக்கு உதைப்பெடுக்கவே, ''உஷ்! உஷ்! சிரிக்காதே!'' என்று எச்சரித்தான்.

''ஏன்?'' என்று கேட்டான் வெள்ளைக்கார வாலிபன். அத்துடன் ஏதோ சந்தேகம் கொண்டு ''இங்கே ஏன் நிற்கிறீர்கள்?'' என்றும் வினவினான்.

''உள்ளே எமனிருக்கிறான்,'' என்றான் சத்திரக்காரன் மீண்டும்.

''அப்படியானால் இதுதான் எமலோகமா?'' என்று கேட்ட வெள்ளைக்கார வாலிபன் சத்திரத்தைக் கையால் சுட்டிக் காட்டி மீண்டும் நகைத்தான். அத்துடன், ''எனக்குப் புரிகிறது,'' என்றும் கூறினான் நகைப்பின் ஊடே.

''என்ன புரிகிறது?'' என்று கேட்டான் விஜயகுமாரன்.

''உங்கள் மனத்தில் பயம் இருக்கிறது,'' என்றான் அந்த வெள்ளைக்கார வாலிபன்.

விஜயகுமாரன் நிதானத்தைச் சிறிது இழந்தான். ''எனக்கா! பயமா!'' என்று சீறினான்.

''ஆம். முதலில் நீ கதவைத் தட்டினாய்,...'' என்றான் வெள்ளைக்கார வாலிபன்.

''தட்டினேன்,'' என்றான் விஜயகுமாரன்.

''இவன் திறந்தான்,'' என்று சத்திரத்துக்காரனைச் சுட்டிக் காட்டினான் வெள்ளைக்கார வாலிபன்.

''ஆம், திறந்தான் மெள்ள.''

''அப்புறம் நீங்கள் எல்லோரும் திருட்டுத்தனமாக இங்கு வந்தீர்கள்.''

''அதனால்?''

''உள்ளே யாரையோ கண்டு பயம் உங்களுக்கு, அவன்தான் எமன்.''

---

# “பத்திரத்துக்கு ஒரு பெங்களூர்”

பெங்களூர் டெக்கான் ஹெரால்ட் தினசரியில் ஷபி பருக் என்பவர் எழுதியுள்ள கடிதம் இது:

''அக்டோபர் மாதம் 28'ம் தேதி முதல் நவம்பர் மூன்றும் தேதி வரை நான் வெளியூர் போவதாகவும் அச்சமயத்தில் பூட்டிக் கிடக்கும் எனது வீட்டைப் பாதுகாக்க வேண்டுமென்றும் ஜெயநகர் காவல் நிலையத்தின் சப்-இன்ஸ்பெக்டருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தேன்.

நவம்பர் மூன்றும் தேதி வீடு திரும்பிய நான் எனது வீட்டு ஜன்னலில் ஒரு நோட்டுப் புத்தகம் தொங்கிக் கொண்டிருந்ததைக் கண்டேன். அதில் தினந்தோறும் கண்காணித்துச் சென்ற கான்ஸ்டபிளின் கையொப்பம் இருந்தது.''

—'இறையடியான்.'

"எமன் இல்லை. எமனைவிடக் கொடியவன்," என்று விளக்கினான் சத்திரக்காரன். "அவன் கையில் நீங்கள் சிக்கினால் சித்திரவதை நிச்சயம்," என்று பதில் கூறிய சத்திரக்காரன் சித்திர வதை எப்படியிருக்கும் என்பதைக் குறிப்பிட, கழுத்துக் கால் கைகளை வெட்டுவதுபோல் சைகை காட்டினான்.

வெள்ளைக்கார வாலிபன் சிறிது யோசித்தான். பிறகு கேட்டான், "உள்ளே எத்தனை பேர் இருக்கிறார்கள்?" என்று.

"ஆறு பேர்."

"எல்லோரும் சிப்பாய்களா?"

"ஆம்."

"ஆல் ரைட்; வாருங்கள்."

விஜயகுமாரன் சத்திரக்காரனை நோக்கினான். சத்திரக்காரன், "இவன் ஏதோ பைத்தியம் போலிருக்கிறது. இவனை நம்பி உள்ளே போகாதீர்கள்," என்று கெஞ்சினான்.

வெள்ளைக்கார வாலிபன் சட்டென்று திரும்பி சத்திரக்காரனை நெருப்புப் பொறி பறக்கும் கண்களால் நோக்கினான். "பைத்தியமென்று யாரைச் சொல்கிறாய்?" என்று சுத்தமான தமிழில் கேட்டான்.

"உள்ளேயிருப்பது யாரென்று தெரிந்தால் அங்கே போக முயல மாட்டீர்கள்."

"இருப்பது ஆறுபேர். உன்னைச் சேர்த்து நாம் ஐந்து பேர். ஐந்து பேர் ஆறுபேர்களைச் சுட முடியாதா?" என்று வினவினான் அவன்.

"அவர்கள் தலைவன்...."

"எமனாயிருந்தாலும் சுட்டு விடுகிறேன்," என்றான் அந்த வாலிபன்.

"நம்மில் ஒருவர் பெண்," என்றான் சத்திரக்காரன்.

வெள்ளைக்கார வாலிபன் அருகில் வரும்படி அரசகுமாரிக்குச் சைகை காட்டினான். அவளும் புரவியை நகர்த்தி அவனுக்கு எதிரில் வந்து மிக அசட்டையுடன் நோக்கினாள் அவனை. அவனும் அவளை நோக்கினான் கூர்ந்து. மஸ்லின் துணிக்குள்ளிருந்த கண்களால் அவள் அந்த வாலிபனை உக்கிரத்துடன் பார்த்ததால், வெண்மதியின் நிலவு மஸ்லினை ஊடுருவியதால் அவள் கண்கள் கோபத்திலும் அழகாகத் தெரிந்தன.

"உனக்கு இவர்களைவிடத் துணிவு இருக்கிறது. வா என்னுடன்," என்று கூறி நடக்க முற்பட்டான்.

"இரு இரு. பொறு," என்று உதறலுடன் கூறினான் சத்திரக்காரன்.

ஓர் அடி எடுத்து வைத்த வாலிபன் சற்று நின்று திரும்பினான். "என்ன?" என்று எரிச்சலுடன் கேட்கவும் செய்தான்.

"உள்ளே இருப்பவன் இப்ரஹிம்," என்று அறிவித்தான் சத்திரக்காரன்.

"யாரவன்?"

"சந்தா சாகேப்பின் வலது கை."

"அப்படியானால் அவனை முதலில் சுட்டு விடுகிறேன்," என்று கூறி அந்த வாலிபன் மீண்டும் நடக்க ஆரம்பித்தான்.

அந்தச் சமயத்தில் அரசகுமாரி தனது புரவியைச் செலுத்தி அவனை வழி மறித்தாள். "யார் நீ?" என்று வினவினாள்.

சிறிது அவன் சிந்தித்தான். பிறகு அவளை ஏறிட்டு நோக்கிவிட்டுச் சொன்னான், "நான் பிரிட்டிஷ் சோல்ஜர்," என்று.

"பெயர்?" என்று மீண்டும் வினவினாள் தஞ்சை அரசகுமாரி.

"ஏன் கேட்கிறாய்?"

"கேட்க வேண்டும் போலிருக்கிறது."

"ஏன்?"

"உன் துணிவு அதிகமாயிருக்கிறது."

"துணிவில்லாதவன் இந்த நாடு இருக்கும் நிலையில் உயிரோடு இருக்க முடியாது."

"உண்மை."

"அதுவும் எங்கோ இருந்து வந்திருக்கிறேன். தவிர என் உயிரும் லேசில் போகாது."

"அப்படியானால் உன் பெயரை அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும்."

"ராபர்ட் கிளைவ்," என்று சொற்கள் மிக நிதானமாக, அலட்சியமாக, ஆனால் மிகத் தெளிவாக உதிர்ந்தன அவன் வாயிலிருந்து.

(தொடரும்)

இந்த இருட்டு வெறுமே அப்பிவைத்த இருட்டாக இல்லே. ஆடுகின்ற இருட்டாக இருக்கிறது. ஏதோ அசைவுகளைக் கண்கள் பார்ப்பதுபோலத் தோற்றம். கன்னத்துக்குப் பக்கத்திலே ஏதோ மூச்சுப் படுகிறமாதிரி இருக்கிறது. ஏதோ நாக்கு உராய்வதுபோல நாய் அல்லது ஓநாய்....

ஃபூல் டீ நான். ஓநாயைப் பத்தி ஏன் நெனேக்கறேன், சனியன்..

லல்லுவுக்கு ஓநாயைக் கண்டாலே ஆகாது. மிருகங்களில் அவளுக்குப் பிடிக்காத அயிட்டம் ரெண்டு. ஒன்று ஓநாய். ரெண்டாவது குள்ளநரி.

லல்லுவுக்குத் திடீரென்று இருட்டிலே இரண்டு கண்கள் பளபளப்பதுபோல இருக்கிறது. மிருதுவாக, ஈரப்பசையோடே ஆனால் உஷ்ணமாக அவள்மேல் ஏதோ படுகிறதுபோலத் தோன்றுகிறது. லல்லூ....என்னடீது? உன் எனிமி....வுல்ஃப்?

ப்ளீஸ் வுல்ஃப். நான் ஒன்னே ஒண்ணுமே திட்டலேயே வையல்லியே. எனக்கு உன்னேயும் பிடிக்கிறது. (லல்லூ . யு ஆர் எ லேயர்) நாக்கை நீட்டித் தடவாதேயேன். பல்லேப் பதிக்காதேயேன். நான் லல்லு.. ரெட்ரைடிங் ஹுட் இல்லே..இல்லே.. இல்லே....இல்லே..இல்லே..

* * *

மம்மி, டாடி, ஏன் இப்பிடி முழிச்சு முழிச்சுப் பாக்கிறீங்க? தெரியலேயா? லல்லுக்குட்டிதாம்மா.

அட! நம்ம வீட்டு மாடியிலே ஏது இவ்வளவு பெரிய்ய ஹால்? ஆமா, இதெல்லாம் என்ன? தரையிலே துக்கிணி துக்கிணியா ஏதோ நிறையத் தகடுகள் மாதிரி சுத்திட்டிருக்கு? இரு இரு.... ஏதோ ஒவ்வொண்ணிலிருந்தும் பூ மாதிரி பொறப்படுது. 'கோன்'ஸ் வேஃபர் கோன் தான். அடேடே.... மஞ்சள், பச்சை, ரோஸ்கலர், பால்வெள்ளே..தினுசுதினுசான கலரிலே ஸாஃப்டி....ஆறு ஆறு.... இப்பிடிப் பெரிசாயிட்டே போனு எப்படிக் கையிலே எடுக்கறது? எப்பிடிச் சாப்பிடறது? இதோ என் உசரம் வந்துதிட்டுதே! அட, இதோ அப்பா உசரம் வரை வேஃபர் கோன்லே ஸாஃப்டி!

டாடி என்னவோ சொல்றூர். "வாட் ஃப்ளேவர் டு யூ வாண்ட்? வெனில்லா? பிஸ்தா? மாங்கோ? பைன் ஆப்பிள்?"

என்ன இது? அப்பாவும் அம்மாவுமாக திடீரென்று என்னே உயரமாகத் தூக்குகிறுர்கள். ஒரு கோனின் விளிம்புக்கு மேல் எம்பி என்னே தொப்பென்று அதற்குள்ளே போட்டுவிடுகிறுர்கள். வெள்ளை வெளேரென்று கிரீமுக்குள் போய் விழுகிறேன். பஞ்சுமாதிரி, அம்மா மடி மாதிரி, ஃபோம் குஷன் மாதிரி மிருதுவாக இருக்கிறது. என்ன அருமையான வாசனே? அப்பா பூஜை ரூமிலே மணக்கிற வாசனே. தோட்டத்துப் பூ வாசனே. நானே பூவிலிருந்து இதழ் இதழாப் பிரிஞ்சு கரையற மாதிரி இருக்கு. சந்தோஷமா இருக்கு. பயமே இல்லே. துளிகூட இல்லே. ஓ காட்.. முருகா..குருவாயூரப்பா, நான் இப்படியே.... சுத்தி.. சுத்தி.. சுத்தி..




மறுநாள்.. 'சௌகந்திகா நர்சரி பள்ளி'யின் இரண்டாவது வகுப்பு 'பி' பிரிவின் அறைக்கதவுகள் திறந்தபோது மூலேயில் மலர்க்குப்பலாகக் கிடந்த ஒரு சின்ன உருவத்தின் உடம்பு அது அனுபவித்த வேதனேயின் சின்னத்தை முழுமையாகத் தாங்கியிருக்கிறது. வெறும் தண்ணீரைக் குடித்துக் குடித்து ஊதியிருந்த வயிறும், கைகால்களிலும் இருந்த ரத்தக் கசிவான காயங்களும் அந்தக் கதையைச் சொல்ல ஒருவாறு முயலுகின்றன. ஆனால் உதடுகளில் பூத்திருக்கின்ற அந்தக் கனவு மலரான சிரிப்பு? நிச்சயமாக மரண பயத்தின் நிழல்கூட அதில் இல்லே. இனிப்பான ஸாஃப்ட் ஸ்மைல்...... இல்லே, ஸாஃப்டி ஸ்மைல் அது.



## 9. பின்னால் வந்த எதிரி

வெள்ளைக்கார வாலிபன் சர்வசாதாரணமாகவும் சர்வ அலட்சியத்துடனும் தனது பெயர் ராபர்ட் கிளைவ் என்பதை அறிவித்தபோதிலும், அவன் அதை உச்சரித்த தோரணை, அவன் ஏதோ பெரிய அரசன் பெயரை உச்சரிப்பதைப் போலிருந்தபடியாலும், அதில் ஒரு கம்பீரமும் பெருமையுங்கூட ஊடுருவி நின்றபடியாலும் பிரிட்டிஷ் படையில் அவன் பெரும் பதவி வகிப்பவனாயிருக்க வேண்டுமென்று நினைத்த தஞ்சை மன்னன் மகள், அத்தகைய பெயர் எதையும் அதுவரை கேட்டிராத காரணத்தால் சிறிது மலைக்கவே செய்தாள். அந்த மலைப்பினால் இரண்டு விநாடிகள் ஏதும் பேசாமல் புரவிமீதே அமர்ந்துவிட்ட அவள் தனது மலைப்பை உதறிக்கொண்டு, "பிரிட்டிஷ் படையில் நீ யார்? காப்டன், மேஜர் என்று

ஏதோ சொல்கிறீர்களே, அது மாதிரி ஏதாவது பதவி வகிக்கிறாயா?'' என்று வினவினாள்.

இதைக் கேட்ட அந்த வாலிபன் புன்முறுவல் கொண்டான். ''இல்லை. இப்பொழுது அந்த மாதிரி எதுவும் இல்லை. சீக்கிரம் வரும்,'' என்று திட்டமாகக் கூறினான் புன்முறுவலின் ஊடே.

பெண்களுக்கு இயற்கையாக உள்ள குணத்தினால் பேச்சை அத்துடன் முடிவு கட்டாமல் மேலும் தொடர்ந்த அரசகுமாரி, ''அப்படியானால் இப்பொழுது நீ யார்?'' என்று வினவினாள்.

''வியாபாரி. ஃபோர்ட் ஸெய்ன்ட் டேவிட்டுக்கு உணவுப் பொருள் வாங்கத் திருச்சி வந்தேன்,'' என்று தனது பதவியை மட்டுமின்றி, பணியையும் விளக்கினான் அந்த வாலிபன்.

''சோல்ஜர் என்று சொன்னாயே?'' என்று கேட்டாள் அரசகுமாரி.

''ஆம்.''

''சோல்ஜர் என்றால் படை வீரனாயிற்றே?''

''ஆம்.''

''இப்பொழுது வியாபாரி என்கிறாயே?''

''இங்குள்ள பிரிட்டிஷ்காரர்கள் எல்லோரும் அப்படித்தான். வியாபாரிகள் எல்லோரும் சோல்ஜர்கள், சோல்ஜர்கள் எல்லோரும் வியாபாரிகள். இரண்டிற்கும் வித்தியாசம் கிடையாது.'' இதைச் சொன்ன அந்த வாலிபன் நகைத்தான் மெல்ல.

அவன் சொன்னதன் பொருளைப் புரிந்து கொண்டதால் நந்தினியும் நகைத்தாள். வியாபாரிகளாக இந்த நாடு வந்த பிரிட்டிஷ்காரர்கள் தற்காப்புக்காகப் படை வீரர்களாக மாறி கோட்டைகளையும் மெள்ள மெள்ள சுவீகாரம் செய்து கொண்ட செய்திகளைத் தனது தந்தையிடமிருந்து அவள் கேட்டிருந்ததாலும், அதே விஷயத்தை நகைச்சுவையுடன் வாலிபன் சுட்டிக் காட்டியதாலும் சத்திரத்துக்குள்ளிருந்த ஆபத்தையும் மறந்து அவள் சற்று வாய்விட்டே நகைத்துவிட்டாள்.

அந்த இருவர் பேச்சையும் நகைப்பையும் ரசிக்காத விஜயகுமாரன் மரத்து நிழலிலிருந்து தனது புரவியை இழுத்துக்கொண்டு நிலவுப்பாதைக்கு வந்து, ''சிரிப்பதற்கு இப்பொழுது சமயமில்லை,'' என்று சுட்டிக் காட்டினான் அரசகுமாரிக்கு, லேசாக உஷ்ணம் தொனித்த குரலில்.

நந்தினி அதற்குப் பதில் சொல்லத் துவங்கு முன்பாக வெள்ளைக்கார வாலிபனே பேசத் துவங்கி, ''வேறெதற்கு சமயம்? பதுங்குவதற்கா? ஓடுவதற்கா?'' என்று வினவினான் இகழ்ச்சி நிரம்பிய குரலில்.

விஜயகுமாரன் விழிகள் நெருப்பைக் கக்கின. ''பேச்சு பலமாயிருக்கிறது உனக்கு. நீ என்ன ஆற்காட்டு நவாபென்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா?'' என்று வினவினான் சினம் தலைக்கேற.

இதைக் கேட்ட அந்த வாலிபன் இரைந்தே நகைத்தான். ''ஆற்காடு நவாப். மைகாட்! போயும் போயும் அது ஒரு பதவியா?'' என்றும் கூறினான் நகைப்பின் ஊடே.

''அந்தப் பதவி கர்னாடக சாம்ராஜ்யத்தில் உயர்ந்த பதவி. நவாப் நினைத்தால் எதையும் செய்யலாம்,'' என்றான் விஜயகுமாரன்.

# ராஜபேரிகை

சாண்டில்யன்

''இருந்தால்தான் செய்யலாம்.''

''என்ன சொல்கிறாய்?''

''இன்றைக்கு இருக்கிற நவாப் நாளைக்குக் கிடையாது. நவாபாகவும் கிடையாது, நபராகவும் கிடை

யாது. ஒரு நவாப் க்ளோஸ் ஆகிறார். யார் சொன்னாலும் அந்தப் பதவியை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன்,'' என்று கூறிய ராபர்ட் கிளைவ், ''இங்கு இப்படியே நாம் நின்று பேசிக்கொண்டிருந்தால் நாமும் நவாபாகிவிடுவோம். அதாவது ஒன்று கைதாவோம் அல்லது கொல்லப்படுவோம்,'' என்றும் தெரிவித்தான்.

அந்த வாலிபன் கூறிய சொற்களில் உண்மை இருந்ததாலும், இயற்கையாகவே ஓட இஷ்டப்படாத வீரம் உடையவனுதலாலும், அவனை நெருங்கினான் விஜயகுமாரன். அதே சமயத்தில் அரசகுமாரியும் புரவியிலிருந்து இறங்க முயற்சிக்கவே வேண்டாம் என்று அவளை நோக்கிக் கையால் சைகை செய்த கிளைவ், ''நீங்கள் எங்களுக்குப் பின்னால் மெள்ளப் புரவியில் வாருங்கள்,'' என்று கூறிவிட்டு சத்திரத்துக் காவலனை நோக்கிக் கேட்டான், ''உள்ளேயிருப்பவர் தூங்கிக் கொண்டிருக் கிறார்களா, விழித்துக் கொண்டிருக் கிறார்களா?'' என்று.

''நான் வரும்போது தூங்கிக் கொண்டுதான் இருந்தார்கள்,'' என்றான் சத்திரத்துக் காவலன்.

''சரி. உன் கையிலிருக்கும் சிறுவாளை என்னிடம் கொடு,'' என்று கையை நீட்டினான் கிளைவ்.

''அது முராரிராவுடையது,'' என்றான் சத்திரத்துக்காவலன்.

''அதனாலென்ன?''

''அதை அவரிடம்தான் கொடுக்க வேண்டும்.''

''நீ உயிருடன் இருந்தால் தானே கொடுக்கலாம். திருப்பி எடுத்துக் கொள்ளலாம். இப்படிக் கொடு. உம்,'' என்று கிளைவின் பேச்சு உத்தரவு போலிருந்ததால் மறுபேச்சின்றி அதைக் கொடுத்தான் காவலன்.

அடுத்தபடி என்ன செய்ய வேண்டுமென்பதை விவரித்தான் கிளைவ். ''சத்திரக்காரன் முதலில் சென்று கதவைத் திறந்துவிட்டு பக்கவாட்டில் சென்று விடட்டும். நானும் நீங்களும் அதோ உங்களுக்குப் பின் நிற்கிறானே அவனும் உள்ளே நுழைவோம். உள்ளே, யிருப்பவர்களை அவன் எழுப்பியதும் நம்மிருவர் கைத் துப்பாக்கிகளும் அவர்கள் கண்கள் முன்பு தெரியும். ஆயுதங்களைத் தொட அவர்களுக்கு அவகாசம்



ராஜலட்சுமி பார்த்தசாரதி

## ஜெர்ரி லூயி செய்த கலாட்டா

ராஜலட்சுமி பார்த்தசாரதி சில மாதங்களுக்கு முன்பு அமெரிக்கா சென்று வந்த சில அனுபவங்களை சுவாரசியமாகக் கூறினார். அவற்றில் ஒன்று.

மிகவும் புகழ்வாய்ந்த சினிமா நட்சத்திரங்கள் அவ்வப்போது மேடைகளில் வெகு சாதாரணமாகத் தோன்றி கலை நிகழ்ச்சிகள் நடத்திக் காட்டுகிறார்கள். நியூயார்க் அருகில் உள்ள ஒரு சிற்றூரில் வெஸ்ட் பெரி மியூசிகல் கலை நிகழ்ச்சியில் நகைச் சுவை நடிகர் ஜெர்ரி லூயி தோன்றுகிறார் என்று அறிந்து அதைப் பார்க்கச் சென்றேன். சர்க்கஸ் அரங்கம் போன்று நடுவில் நாடகமேடை, சுற்றிலும் ரசிகர்கள். ''ஜப்பானிய சங்கீதம் பாடிக் காட்டுகிறேன்,'' என்று ஆரம்பித்து டேப் இசைக்குத் தகுந்த மாதிரி அபிநயம் பிடித்தார்.

அந்தச் சமயம் பார்த்து ஒரு பெண்மணி கூட்டத்திலிருந்து எழுந்து போகத் துவங்கினார். நம் ஊராக இருந்தால் யார் வந்தாலும், யார் எழுந்து போனாலும் கவலையில்லாமல் நாடகம் நடத்திக் கொண்டிருப்பார்கள். அந்தப் பெண்மணிக்கு 35 வயது இருக்கும்.

ஜெர்ரி லூயி நடிப்பதை நிறுத்திவிட்டு அந்த அம்மாளைப் பின்பற்றி ஓடினார்.

''என்னுடைய காட்சியும், நடிப்பும் அவ்வளவு மோசமாகவா இருக்கிறது? போர் அடிக்கிறது என்று ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் வேறு மாதிரி செய்து காண்பிப்பேனே? போகாதீங்க அம்மா, போகாதீங்க, ப்ளீஸ்...'' என்று நையாண்டி செய்தார்.

அந்தப் பெண்மணிக்கு வெட்கமாகப் போய்விட்டது. பழையபடியே 'ஸீட்'டில் திரும்ப அமர்ந்து காட்சிகளை ரசிக்க ஆரம்பித்தார்.

—ம.

இருக்காது. எவனாவது ஆயுதத்தைப் பக்கத்தில் வைத்திருந்து கையால் எடுத்தால் உடனே சுட்டுவிடுங்கள்,'' என்று உத்தரவிட்ட கிளைவ், அரச குமாரியை நோக்கி, ''நீங்கள் உள்ளே வர வேண்டாம்,'' என்றும் கூறிவிட்டு சத்திரத்து வாசலை நோக்கி நடந்தான்.

அவன் தங்கள் ஆமோதிப்புக்கோ பதிலுக்கோ காத்திராமல் நடந்து விட்டதைக் கண்ட விஜயகுமாரன் ஒரு கணம் கோபத்தின் வசப்பட்டாலும், அடுத்த வினாடி ஏதோ காந்தத்தால் இழுக்கப்பட்டவன்போல் வலதுகையில் வாளை உருவிக்கொண்டும் இடது கையில் கைத்துப்பாக்கியை ஏந்திக்கொண்டும் அந்த வெள்ளைக்கார வாலிபனைப் பின் தொடர்ந்தான். சமயபுரத்துச் சத்திரக்காவலனும் அவர்களிருவரையும் தனது இடையிலிருந்த குறுவாளை எடுத்துக்கொண்டுபின்தொடரவே அரசகுமாரி அவர்கள் போவதைச் சிறிது நேரம் புரவியில் உட்கார்ந்த வண்ணமே கவனித்தாள். ஏதோ படையைப் போருக்கு அழைத்துச் செல்பவன்போல் கம்பீர நடைபோட்டுக் கொண்டு முன்னால் சென்ற வெள்ளைக்கார வாலிபனையும் கண்ட நந்தினியின் உள்ளத்தில் விவரிக்க இயலாத வியப்பு விரிந்துகிடந்தது.

அந்த வாலிபன் தங்களைத் தொடர்ந்து வந்ததையும் தோப்பு வழியாக ஓட வேண்டிய தங்களைத் திருப்பிச் சத்திரத்துக்குள் சண்டைக்கு இழுத்துச் செல்ல ஏற்பாடு செய்துவிட்டதையும், எத்தனையோ கட்டுக்காவல்களைக் கடந்து அரங்கன் கோயிலுக்குள் நுழைந்த நெஞ்சுத் துணிவுள்ள விஜயகுமாரன்கூட அந்த வெள்ளைக்கார வாலிபன் சொல்லுக்கு உட்பட்டு அவனைப் பின் தொடர்ந்து விட்டதையும் நினைக்க அரசகுமாரிக்கு வியப்பு மனத்தின் எல்லையையும் கடந்து வதனத்திலும் விகசித்ததால், கிருஷ்ணபட்சத்துச் சந்திர ஒளி அவள் முகப் பொலிவை எத்தனையோ மடங்கு அதிகப்படுத்தியது. தஞ்சை அமைச்சர் டபீர் பண்டிதனின் கண்ணிலும் தனது வீரர்கள் கண்களிலும் மண்ணைத்தூவித் தன்னைத் தூக்கி வந்த விஜயகுமாரனையே இவ்வப்படி இயக்கவல்ல அந்த வாலிபனிடம் ஏதோ ஒரு அபாரமான கவர்ச்சியும் சக்தியும் இருக்கிறதென்ற முடிவுக்கே அவள் வந்தாள். அப்போப்பட்டவன் என்னதான் செய்யப்போகிறான்



'கங்கிராஜு-லேஷன்ஸ்! உங்க வீட்டு வாசலில் தெரு விளக்கு நடவேண்டும் என்று போராடி வெற்றியும் பெற்றுவிட்டீர்களே!....''

''நாசமாய்ப்போச்சு! எவனோ நேற்றிரவு அந்த லைட் போஸ்ட்டில் ஏறி என் வீட்டுமாடியில் குதிச்சு ஆயிரம்ரூபாய் சாமானை அபேஸ் பண்ணிட்டான்!''



என்பதைக் கவனிக்கத் தனது புரவியையும் மெள்ள மெள்ள முன்சென்றவர்களைத் தொடரவிட்டாள்.

புரவி ராஜநடை நடந்தது. முன்னே சென்றவர்களுக்கெல்லாம் முன்பாக எப்படியும் எதிரிகளைத் தானே முதலில் சந்தித்துவிட வேண்டும் என்ற ஆசையுடன் செல்பவன்போல் திடமாகவும், அவசரப்பட வேண்டாமென்று பின்புறம் வந்தவர்களுக்குக் கையால் சைகை காட்டிக் கொண்டும், ராஜநடை நடந்த ராபர்ட் கிளைவ் பாதையின் முடிவுக்கு வந்து சத்திரக் கட்டிடத்துக்குத் திரும்பும் வழியில் சற்று நின்று சத்திரக் காவலனை நோக்கி, ''இனி நீ மெதுவாகச் சென்று கதவைத் திறந்துவிடு'' என்று உத்தரவிட்டான். சத்திரத்துக் குக் காவலனும் பூனைபோல் பதுங்கிப் பதுங்கி நடந்து சத்திரத்துப் படிகளை அடைந்து ஏறித் தாழ்வரையின் மங்கலான விளக்கு வெளிச்சத்தில் ஒரு வினாடி நின்றான். பிறகு மெள்ள கதவைத் திறந்தான். திறந்ததும் பக்கவாட்டில் நடந்து தாழ்வரையின் வடக்குக்கோடிக்குச் சென்றான்.

அவன் கதவைத் திறந்த பின்பும் சத்திரத்துக்குள் நிசப்தமே நிலவி நின்றதால் வெள்ளைக்கார வாலிபன் மெள்ளப் படிகளில் ஏறிச்சென்று

வாயிற்கதவை ஒரு பக்கமாக அணுகி உள்ளே மெல்ல எட்டிப்பார்த்தான். உள்ளே எந்த அரவமும் இல்லாதிருக்கவே மற்ற இருவரையும் வரும்படி அழைத்து முதலில் அவனே உள்ளே புகுந்துவிட்டான். விஜயகுமாரன் சிறிதும் தாமதிக்காமல் சமயபுரத்தானையும் அழைத்துக்கொண்டு உள்ளே நுழைந்து கையில் இருந்த துப்பாக்கியின் குதிரையை இழுத்துக் கொண்டு எந்த நிலைமையையும் சமாளிக்கத் தயாரானான். ஆனால் அங்கு சமாளிக்கக்கூடிய நிலை ஏதுமில்லாதிருந்ததாகத் தோன்றியது அவனுக்கு. அதே தான் தோன்றியிருக்க வேண்டும் ராபர்ட் கிளேவுக்கும். அவன் நின்ற இடத்தில் சில விநாடிகள் எச்சரிக்கையுடன் நின்றான். பிறகு எதையோ கண்டுவிட்டவன் போல் கூடத்து இருட்டில் வெகுவேகமாக ஓடி எதிரே இருந்த ஒரு அறைக்கதவைக் காலால் வெகு வேகமாக உதைத்தான். அறையிலிருந்த ஒரு பெருவிளக்கின் வெளிச்சம் கூடத்தில் விழுந்தவுடன் சரேலென்று பின்புறம் திரும்பிக் கூடத்தின் எதிர்ப்புறத்தை நோக்கி அதாவது விஜயகுமாரன் நின்றிருந்த திசையில் இருமுறை பட்பட்டென்று வெகு துரிதமாகச் சுட்டான். அத்துடன் உள்ளே பாய்ந்து அறையின் விளக்கையும் ஊதிவிட்டான். அடுத்த விநாடி அந்தக்கூடம் கன இருளில் அமளிதுமளிப்பட்டது.

தன்னை நோக்கிக் கிளைவ் துப்பாக்கியைத் திருப்பியதும் ஒரு விநாடி திக்பிரமையடைந்த விஜயகுமாரன், கிளைவின் துப்பாக்கிப் பிரயோகத்தின் விளைவு தன்னைப் பாதிக்காததையும், தனது தலைக்குமேல் சென்றுவிட்டதையும் கண்டதும் சட்டென்று தானும் திரும்பி கிளைவ் குறி வைத்த இடத்தில் இருமுறை சுட்டான். பிறகு வலது கையிலிருந்த வாளையும் பாய்ச்சி இழுத்தான். கிளைவின் கைத்துப்பாக்கியும் விஜயகுமாரன் கைத்துப்பாக்கியும் ஒன்றையொன்று அடுத்தடுத்து சப்தித்ததால் தனக்குப் பின்னால் யாரோ இருவர் அலறியதைக் கேட்ட சமயபுரத்தான் தான் செய்யக்கூடிய ஒரே ஒரு புத்திசாலித்தனமான பணியைச் செய்தான். அதாவது தரையில் நெடுஞ்சாண் கட்டையாக விழுந்தான். அப்படி விழுந்த தன் மீது யாரோ ஒருவன் கால் வைத்து ஓடியது புரிந்தது அவனுக்கு. இருப்பினும் அந்தச் சமயத்தில், கூடத்தின் இருட்டில், குறுக்கும் நெடுக்கும் கைத்துப்பாக்கிகளின் சுடுவெளிச்சம் மட்டும் தெரிந்து கொண்டிருந்த பயங்கர நிலையில், பூமிப் பிராட்டியைத் தவிர தஞ்சம் ஏதுமில்லை என்பதை அவன் நன்றாகப் புரிந்து கொண்டதால் கையைக் காலை அசைக்காமல் கீழே கிடந்தான். அடுத்த விநாடியில் திடீரென கூடத்தின் எதிர்க்கோடியிலிருந்து இன்னொரு அறையிலிருந்து ஒரு தீபம் கொளுத்தப்பட்டுக் கூடத்துக்கு வந்தது. அப்பொழுது எழுந்தது கிளைவின் குரல், "வாட்களைக் கீழே போடுங்கள். துப்பாக்கிகளைத் தொட வேண்டாம். அசையும் எவனும் பிணமாகிவிடுவீர்கள்," என்று.

புதிதாகக் கொண்டு வரப்பட்ட விளக்கின் வெளிச்சத்தில் எதிரே மூவர் இறந்து கிடப்பதை விஜயகுமாரன் கண்டான். தன் கத்தியிலிருந்த ரத்தத்திலிருந்து தான் வாளைப் பாய்ச்சி இழுத்தபோது அதிலும் ஒருவன் மாண்டிருக்கிறான் என்பது புலனாயிற்று அவனுக்கு. அவனுக்கு நேர் எதிரில் உருவிய வாளுடன் நின்று கொண்டிருந்தான் ஆஜானுபாகுவான ஒரு முகம்மதிய வீரன். அவன் நின்ற தோரணையிலிருந்து அவன்தான் இப்ரஹீமாயிருக்க வேண்டுமென்று தீர்மானித்தான் விஜயகுமாரன். அவன் தீர்மானத்தை உறுதி செய்யும் முறையில் எழுந்தது கிளைவின்

## மைக்ரோ வேவ்

கெட்டியாக இருந்த ஒரு சாக்கலெட் பார், இளகிக் கூழ்போல் ஆகிவிட்டது. அதனின்று ஓர் அதிசய அடுப்புப் பிறந்தது.

1945'ம் ஆண்டு. பெர்ஸி ஸ்பென்ஸர் என்ற அமெரிக்க விஞ்ஞானி, ராடார் கருவியிலிருந்த வால்வுகளைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார். சில விநாடிகள் கழித்துப் பார்த்தபோது, பக்கத்தில் அவர் வைத்திருந்த சாக்கலேட் அப்படியே கூழாகிவிட்டது தெரிந்தது.

ஸ்பென்ஸர் ஒரு பிரமிக்கத்தக்க கண்டுபிடிப்புக்கு வழிவகுத்துவிட்டார். மைக்ரோ வேவ் என்ற நுண் அலைகளால் சமையல் செய்ய முடியும் என்பதே அது.

உலகெங்கும் இன்று பலர் நுண் அலை அடுப்புக்களை உபயோ

ல், "நீதான் இப்ரஹீம் என்று னக்கிறேன்," என்று மிகக் கம்பீர மாக.

இப்ரஹீமின் முகத்திலும் அவனிடமிருந்த மற்ற இருவர் முகத்தி லும் ஆச்சரியம் படர்ந்தது. வெள்ளைக் காரன் தமிழ் பேசுவதைக்கண்டு. ஆனல் அந்த வியப்பைக் கணநேரத்தில் மறைத் துக்கொண்ட இப்ரஹீம், "நீ கம்பெ னிக்காரன்தானே?" என்று வினவினன்.

"ஆம்," என்றுன் கிளைவ்.

"இந்தச் சண்டை இந்தியர் களுடையது. நீ எதற்காகத் தலையிடு கிறுய் இதில்?" என்று வினவினன் இப்ர ஹீம்.

"இந்தியர் சண்டையில் வெள்ளைக்காரர் தலையிடுவது இப்பொ ழுது சகஜமாகிவிட்டது," என்று சுட் டிக் காட்டினன் கிளைவ்.

"என்னுடைய வீரரில் மூவர் மாண்டுவிட்டார்கள்," என்றுன் இப்ர ஹீம்.

"ஐ ஆம் ஸாரி," என்றுன் கிளைவ் சிறிது தமிழை மறந்து.

"என்ன?"

"வருந்துகிறேன்."

"எதற்கு வருந்துகிறுய்?"

"உங்கள் அனைவரையும் கொல்லாததற்கு."

"அந்தக் குறை இருக்கிறதா உனக்கு?"

"ஆம். ஆனல் இப்பொழுது கூடத் தீர்த்துக்கொள்ள முடியும்."

இதைக் கேட்டதும் இப்ர ஹீம் சிறிது முகம் சிணுங்கினன். "உனக்குப் பைத்தியம் ஏதாவது உண்டா?" என்று கேட்டான் உஷ்ண மாக.

கிளைவ் சிறிது யோசித்தான். பிறகு சொன்னன், "உண்டு. அது வரும்போது யாரையாவது சுட்டுவிடு கிறேன்," என்று கூறிவிட்டுக் கையிலி ருந்த சிறு துப்பாக்கியைச் சிறிது உயர்த் தினன்.

இப்ரஹீம் அதைக் கண்டு சிறி தும் அஞ்சவில்லை. "நீ கொஞ்சங்கூட மூளை இல்லாதவன். என்னை இப்பொ ழுது சுடு. அடுத்த விநாடி உயிருடன் இருக்கமாட்டாய்," என்று கூறினன் சுடுசொல்லால்.

"ஏன்?"

"திரும்பிப்பார்."

"ஆல் ரைட்" என்று கூறிய கிளைவ் விஜயகுமாரனை நோக்கி, "அவன் மீது ஒரு கண்ணை வைத்துக்கொள்," என்று எச்சரித்துவிட்டுத் திரும்பினன். அவனுக்குப்பின்னல் ஒருவன் நின்றிருந் தான் கையில் துப்பாக்கியுடன். அவ னைப் பார்த்த கிளைவின் கண்கள் பெரும் பிரமிப்பை அடைந்தன. "யூ!" என்ற சொல் மிக வியப்புடனும் வெளிவந்தது.

அப்படி நின்றிருந்தவன் ஒரு வெள்ளைக்காரப் பாதிரி. அவன் முகத்தில் இறுமாப்பும் விரோதமும் மிதமிஞ்சிக் கிடந்தது. "ஆம். நான்தான்," என் றுன் அவன்.

கிளைவ் சிறிதும் அச்சமின்றி கூறினன் அவனைப் பார்த்து, "போர் டைஸ்! கீழே போடு துப்பாக்கியை!" என்று.

"இல்லை. உன்னை ஒழிக்கப் போகிறேன்," என்றுன் போர்டைஸ். அவன் கண்களில் வெறி தெரிந்தது மித மிஞ்சி. அவன் கையிலிருந்த துப்பாக்கி யின் குதிரையும் இழுபட்டது கிளிக் என்ற ஒலியுடன்; ஒரே விநாடி! கிளை வின் உயிர் ஆகாயத்தில் பறக்க இருந் தது.

(தொடரும்

## அடுப்பு !



கித்து வருகிறுர்கள். கியாஸ் அடுப்பில் செல வழியும் நேரத்தில் நான்கில் ஒரு பங்கு தான் மைக்ரோ அலை அடுப்புக்குத் தேவைப்படும்.

டெலிவிஷன் ஸெட் போல் காட்சியளிக்கும் மைக்ரோவேவ் அடுப் பால் சமையலறையில் வெப்பம் பர வாது. உலோகத்தாலான பாத்திரங் கள் தேவையில்லை. காகிதத் தட்டு, கண்ணாடி பாத்திரம், பிளாஸ்டிக் ஏனம், இவற்றில் சமையல் செய்யலாம்.

கியாஸும் மின்சாரமும் வந் ததற்குப் பிறகு அடுப்புக்கு என்ன நிலை ஏற்பட்டதோ, அந்த நிலைக்குக் கியாஸ் அல்லது மின்சார அடுப்பை நுண் அலை அடுப்புக் கொண்டுவரப் போகிறது என்று சிலர் பேசிக்கொள்கிறுர்கள்.

ஆதாரம்: ரீடர்ஸ் டைஜெஸ்ட்.

ராக: என்னம்மா மைதிலி! சௌக்யமா? எனக்கு ரொம்பப் பிடிச்சிட்டது....

உப்பிலி: நல்ல பிடி சார். உங்களுக்குன்னு இல்லே, எல்லாருக்குமே பிடிக்கும்.

ராக: அசத்து. நான் உஷாவைச், சொன்னேண்டா. என்ன சுதர்சனம், பதினெண்ணுந் தேதி நிச்சயதார்த்தம் வச்சுடலாம் இல்ல....

சுதர்: உங்க வீட்டுக்கு வந்து சொல்லணும்னு நெனச்சேன். வர முடியல....

ராக: நானே கேக்கணும்னு இருந்தேன். நீங்க ஏன் எங்க வீட்டுப் பக்கமே வரதில்லே? வாசல்லேயே பஸ் ஸ்டாண்ட். இருவதாம் நம்பர் பஸ் பிடிச்சா எங்கவீட்டு வாசல்லே வந்து இறக்கருன்.

சுதர்: அதற்கு இந்த வீட்டு வாசலேத் தாண்டியாகணுமே. அம்புறம் வரதட்சணே விஷயம் பேசலே..

ராக (டேபிளிலிருந்து துப்பாக்கியை இயல்பாக எடுத்துத் தூக்கிப் போட்டுப் பிடித்துக்கொண்டு): கைல ரெண்டாயிரம் ரூபா கொடுங்கோ. வெறும் கழுத்தோட அனுப்பாம நாலு பவுன் செயின் போடுங்கோ. கைல.. இது தவிர....பாத்ரம்....பண்டம் (துப்பாக்கியைச் சுதர்சனத்துக்கு நேரே திருப்பி) அது போதும்....

[சுதர்சனம் கையைத் தூக்கிக்கொண்டு நடுங்க]

ராக: பயந்துட்டீங்களா? சுட மாட்டேன். என்ன சம்பந்தி, வீட்டிலே துப்பாக்கில்லாம் வச்சிருக்கீங்க?

சுதர்: ஒண்ணுமில்ல— சும்மாதான். எங்க ஜவுளிக் கடை முதலாளி பஞ்சாபகேசன் இருக்காரே, ரொம்பப் பணக்காரர். அடிக்கடி தேக்கடில வேட்டையாடப் போவார். அப்ப நானும் கூடப்போவேன். அதுக்காக அவர் எனக்கு ஒரு துப்பாக்கி கொடுத்தார். அதான் இது.

ராக: சரி....நிச்சயதார்த்தம் பதினெண்ணும் தேதிதானே?

சுதர்: அதுலதான் ஒரு மாத்தம். இருவதாந்தேதி வச்சுக்கலாமே?

(தொடரும்)

நண்பன் ஒருவனுடன் அவர்கள் கிராமத்திற்குச் சென்றிருந்தேன். அன்று மாலை நண்பனின் பாட்டியிடம், 'பாட்டி, ஏதாவது ஒரு நல்ல கதை சொல்லுங்கள் பாட்டி,'' என்றேன்.

''உங்களுக்குச் சொல்ற மாதிரி எனக்கு என்ன தெரியும் தம்பி?'' என்று அடக்கமாகச் சொல்லிவிட்டு, ''தம்பி. நான் ஒன்று சொல்றேன். அது என்னன்னு சொல்லு பார்க்கலாம்,'' என்றவர், ''ஒரு பொண்ணு சமைஞ்சா அஞ்சுநா, கலியாணம் முடிஞ்சா பத்துநா, குழந்தை பெத்தா ஆறுநா. அது என்ன தம்பி?'' என்று போட்டார். ஒரு புதிர்.

நானும் யோசித்து யோசித்துக் கணக்குப் போட்டேன். அதென்ன ஐந்து நாள், பத்து நாள், ஆறு நாள்? எனக்குப்புரியவில்லே. ''நீங்களே சொல்லுங்கள் பாட்டி,'' என்று கேட்டுக் கொண்டேன்.

மூதாட்டி விளக்கினர் 'தம்பி. ஒரு பொண்ணு சமைஞ்சிட்டா அவ எல்லோருக்கும் பயப்படரு. அதுதான் அஞ்சுறு (அஞ்சினள்). கலியாணம் முடிஞ்சா பத்துறு. ஒரு புருசனைப் பத்திக்கிட்டாள் (பற்றிக் கொண்டாள்). பிள்ளே பெத்தா ஆறுறு—கொழந்தெ பொறந்தப்பறம் தான் அவ மனசு ஆறுது (ஆறுதல் அடையுது). சரிதானே?''

—டி. என். லிங்கப்பா.




—ஒரு புதிர்

சாண்டில்யன்

# ராஜ பேரிகை



## 10. விடுதலையும் விளைவும்

இளேவின் உயிர் மட்டும் அந்தச் சத்திரத்தில் போயிருந்தால் இந்த நாட்டின் சரித்திரம் எந்தத் திசையில் திரும்பியிருக்கும் என்பதைத் திட்டமாகச் சரித்திர ஆசிரியர்களால்கூடச் சொல்ல முடியாது. அப்படி சரித்திர ஆசிரியர்களுக்கு எந்தவிதச் சிரமத்தையும் அளிக்க இஷ்டப்படாத காரணத்தாலோ, அல்லது பெரும் சாம்ராஜ்யத்தை நிறுவுவதற்கு அவன் தலேயில் விதி எழுதிவிட்ட எழுத்தினுலோ, அல்லது எனது உயிர் அத்தனே லேசில் போகாது என்று சற்று முன்பு அவன் கூறிய சொல்லேக் காப்பாற்றுவதற்காகவோ, காரணம் எதுவாயிருந்தாலும், அந்த நெருக்கடியான நிலேயிலும் கிளேவ் தனது நிதானத்தையும் துரிதத்தையும் இணேத்தே காட்டினுன். இரண்டும் இணேயாத நிலேகள் என்றுலும் அவன் சம்பந்தப்பட்ட வரையில் அவை இணேந்தே நின்றன. ஒரு விநாடி அவனது கூரிய விழிகள் அந்த வெறி பிடித்த பாதிரியை நிதானத்துடன் நோக்கின, அடுத்த விநாடி அவனது இடது கையிலிருந்த முராரி ராவின் குறுவாள் சரேலென்று பாதிரியின் கையை நோக்கிப் பறந்துவிட்டது. இம்மியும் குறி தவறுமல் எறியப்பட்ட அந்தக் குறுவாள் பாதிரியின் கையில் பாய்வதற்கும், பாதிரி கைத்துப்பாக்கியின் குதிரையை விட்டுச் சுடுவதற்கும், கிளேவ் அந்தத் துப்பாக்கியின் பாதையிலிருந்து ஓர் அடி இடப்பக்கம் பாய்வதற்கும், நேரம் கனகச்சிதமாகச் சேர்ந்து கொண்டதால், பாதிரியின் அலறலும் துப்பாக்கியின் வெடிச்சத்தமும் ஒன்றுகச் சேர்ந்து அந்தக் கூடத்தில் பயங்கரமான ஒலிகளேக் கிளப்பின. இந்தச் சம்பவத்தை அடுத்துப் பாதிரியை நோக்கிப் பாய்ந்த ராபர்ட் கிளேவ் அவரைக் கையைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளிவிட்டுத் தனது இடுப்பு பெல்ட்டின் இன்னெரு



புறத்தில் செருகப்பட்டிருந்த சிறு பிரம்பைக் கையில் எடுத்துக் கொண்டு ''போர்டைஸ்!*முன்பு போர்ட்ஸெய்ன்ட் டேவிட் சாலையில் கொடுத்தேனே நினைப்பிருக்கிறதா? அதை மீண்டும் வாங்கிக் கொநள்,'' என்று கூறிப் பாதிரிமீது பட்பட்டென்று பிரம்பைப் பலமுறை பாய்ச்சினான்.

மின்னல் வேகத்தில் தொடர்ந்த அந்தப் பிரம்படிகளிலிருந்து தப்ப போர்டைஸ் வெகுவேகமாக நிலத்தில் புரண்டு ஏற்கனவே தரையில் சரணாகதி செய்து கொண்டிருந்த சமயபுரத்தானுடன் மோதிக் கொள்ளவே, ''யாரடா நீ?'' என்று சமயபுரத்தான் கிலியால் கூவினான்.

சமயபுரத்தானின் கிலி நிறைந்த கூச்சலால் தனது சினத்தை அடக்கிக் கொண்ட கிளைவ் மறுபடியும் பிரம்பை பெல்ட்டில் செருகிக் கொண்டு இடது கையிலிருந்த துப்பாக்கியுடன் கூடத்து ரண ளத்தை ஒருமுறை நோக்கினான். பிறகு விஜயகுமாரனையும் இப்ராஹிமை

---

* ஸெய்ன்ட் டேவிட் கோட்டையிலிருந்து கடலூர் செல்லும் பாதையில் போர்டைஸ் (FORDYCE) என்ற பாதிரியைக் கிளைவ் பிரம்பு கொண்டு அடிக்க, அதை காப்டன் லூகாஸ் சிரமப்பட்டுத் தடுத்தான்—Clive–Proconsul of India –by James P. Lawford- P.75. Latest book on Clive (Pub. 1976)



தடுப்புச் சுவர் மெலியதாக உள்ளதா? அடுத்த அறையில் என்ன பேசுகிறார்கள் என்று ஒட்டுக் கேட்க ஆசையாயிருக்கிறதா? ஒரு கண்ணாடி டம்ளரில் முக்கால் பங்கு தண்ணீர் நிரப்பி சுவர் ஓரம் வைத்து அதில் காதை வைத்துக் கேளுங்கள். தூக்கி வாரிப் போடும்— நம்மைப்பற்றி அவர்கள் செய்யும் விமர்சனத்தை கேட்டால்!

—அமுதகிருபா

யும் மாறி மாறிப் பார்த்தான். விஜயகுமாரன் அத்தனை நிகழ்ச்சியிலும் கூச்சவிலும் தன்பக்கம் சிறிதும் திரும்பாததையும், தனது உத்தரவுப்படி முஸ்லீம் வீரர்களை நோக்கிக் கைத்துப்பாக்கியையும், ரத்தம் தோய்ந்த வாளையும் நீட்டிக்கொண்டு நிற்பதையும் கண்டதும் திருப்தியுடன் தலையை அசைத்துவிட்டு, ''சிப்பாய்! உன்னைப்போன்ற வீரர்கள் போருக்கே பெருமை அளிப்பார்கள்! இத்தனை சத்தத்திலும் சண்டையிலும் தலையை நீ திருப்பக்கூட இல்லையே!'' என்று சிலாகித்தான்.

விஜயகுமாரன் அப்பொழுதும் கிளைவ் பக்கம் திரும்பாமலே கூறினான் ''காரணம் சுயநலம், வீரமல்ல,'' என்று.

''சுயநலமா! தட் ஈஸ்?'' என்று வினவினான் கிளைவ்.

''ஸெல்ப் இன்டரஸ்ட்,'' என்று தனக்கும் ஆங்கிலம் சிறிது வருமென்பதை விஜயகுமாரன் காட்டினான்.

''சுயநலம்! ஸெல்ப் இன்டரஸ்ட்,'' என்று இருமுறை அந்த வார்த்தையை மனப்பாடம் செய்து கொண்ட கிளைவ், ''என்ன சுயநலம்?'' என்று வினவினான்.

''நான் தலையைத் திருப்பினால் என் தலை போயிருக்கும்,'' என்ற விஜயகுமாரன் ரத்தம் தோய்ந்த தனது வாளால் இப்ராஹீமின் இடையில் காட்சியளித்த குறுவாளைச் சுட்டிக் காட்டினான்.

இதைக் கேட்ட கிளைவ் எதிரே காலடியில் கிடந்த பாதிரியையும் மறந்து பெரிதாக நகைத்து, ''எந்த அபாயத்திலும் உன் ஸென்ஸ் அஃப் ஹ்யூமர்— அதுதான் நகைச்சுவை—போகவில்லை. சிறந்த வீரனுக்கு அதுதான் அழகு. இறக்கும்போதும் சிரித்துக் கொண்டே இறக்க வேண்டும்,'' என்று கூறினான்.

விஜயகுமாரன் இதற்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லை. இரண்டடியில் இப்ராஹீமை அணுகி அவன் இடையிலிருந்த குறுவாளைக் கையில் எடுத்துக் கொண்டு கிளைவைத் திரும்பி நோக்கிச் சொன்னான், ''சிரிப்பு எனக்கு இப்பொழுது அவசியமில்லை'' என்று.

''ஏன்?'' கிளைவ் புன்சிரிப்புடன் கேட்டான்.

''இன்னும் கொஞ்ச காலத்துக்கு நான் இறக்கப் போவதில்லை.''

''எப்படித் திட்டமாகச் சொல்கிறாய்?''

''இறப்பதற்கு முன்பு ஒரு முக்கிய வேலை இருக்கிறது.''

''அதனால்?''

''இறக்க மாட்டேன்.''

''அது உன் இஷ்டமா?''

இதைக் கேட்ட விஜயகுமாரன் புன்முறுவல் கொண்டு வினவினான், ''உனக்கொரு சட்டம், எனக்கொரு சட்டமா?'' என்று.

''அதாவது?''

''ரூல்!''

''ஐ ஸீ! நான் என்ன சட்டம் சொன்னேன்?'' என்று கிளைவ் வினவினான் வியப்புடன்.

''சற்று முன்பு சொல்லவில்லை நீ—உன் உயிர் லேசில் போகாது என்று?''

''ஆம். உன்னுடன் வந்தாளே அந்தப் பெண்ணிடம் சொன்னேன்,'' என்றான் கிளைவ்.

''உன் உயிருக்கு இருக்கும் சட்டம் என் உயிருக்கு ஏன் இருக்கக் கூடாது?''

''இவரைப் போல அழகும் புத்திசாலித்தனமும் சேர்ந்த ஒரு முகத்தை நீங்க பார்த்ததுண்டா?'' என்கிறார் மனோரமா. சோவுடன்—ரோஜாவின் ராஜா படத்தில்.

இதைக் கேட்ட கிளைவ் அந்தக் கூடத்தில் யாரும் இல்லாதது போலவும், ஏதும் நடக்காதது போலவும் தீவிர சிந்தனையில் இறங்கி, கையிலிருந்த துப்பாக்கியையும் இருமுறை ஆட்டிக்கொண்டான் சிந்தனையின் விளைவாக. பிறகு நிதானத்துடன் சொன்னான், ''விஜயகுமாரா! என் உயிரை ஆண்டவன் என்ன காரணத்துக்காகவோ விட்டு வைத்திருக்கிறான். நான் 1744'ல் அதாவது எனது இருபதாவது வயதில் கையில் பணமின்றி உடைகிழிந்து, ஒரு வருஷம் வின்செஸ்டர் என்ற கப்பலில் பயணம் செய்து இல்லாத கஷ்டமெல்லாம் பட்டு சென்னப் பட்டணம் வந்தேன். இந்த ஊர் பிடிக்காமல், வேலை பிடிக்காமல், மனநோய்ப் பட்டு ஸெய்ண்ட் ஜார்ஜ் கோட்டையில் இருமுறை என் பொறியில் ரிவால்வரை வைத்துச் சுட்டுக்கொண்டேன். ரிவால்வர் சுடவில்லை அப்பொழுது உள்ளேநுழைந்த எனது நண்பன் [1] எட்மண்டை கைத்துப்பாக்கியைப் பரிசோதிக்கச் சொன்னேன். அவன் வெளியே சுட்டான். கைத்துப்பாக்கி பெரிதாக வெடித்தது. அடுத்து பிரெஞ்சு கடற்படைத் தலைவனான [2] லா பூர்துவானே மதுராஸைக் கைப்பற்றியதும் தப்பி போர்ட் ஸெய்ண்ட் டேவிட், அதுதான் ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்கு வந்தேன். அங்கு ஒரு பிரிட்டிஷ் அதிகாரி என்னைச் சீட்டாட்டத்தில் ஏமாற்றப் பார்த்தான். அவனை ஸ்கோல்ட் செய்தேன். அவன் என்னைச் சண்டைக்கு இழுத்தான். [3] என் பொறியில் துப்பாக்கியை வைத்தான். நான் அசையாமல் நின்றேன். அவன் சுடாமல் திடீரெனப் போய்விட்டான். ப்ரண்ட்! யூ ஸீ, எனது உயிர் எந்த நெருக்கடியிலும் போகவில்லை. ஏதோ பெரிய காரியத்திற்காக ஆண்டவன் என்னை உயிருடன் வைத்திருக்கிறார். எனது வாழ்வுக்கு ஏதோ பர்ப்பஸ், ஏதாவது ஒரு காரணம், இருக்கிறது....''

தனது சரித்திரத்தை இப்ப

---

1. Edmund Maskeline- Friend of Clive- Lawfords Clive–P.57
2. La Bourdonnais captured Madras-sept 20, 1746-,'Notes on INDIAN History -by Carl Marx–P.61
3. LAWFORD'S – 'CLIVE'–P.58



டிச் சுருக்கமாகவும், உணர்ச்சியைச் காட்டாமலும் ஆனல் உறுதியாகவும் தமிழைக் கற்றவனுனாலும் முழுதாகப் பேச முடியாததால் ஆங்காங்கு ஆங்கிலச் சொற்களைக் கலந்தும் பேசிய கிளைவ் கனவுலகத்தில் சஞ்சரித்தான். அவன் பார்வை ஏதோ பிற்காலத்தை எட்டிப் பார்ப்பது போலிருந்தது. அவன் பேச்சின் தொனி எதிரேயிருந்த இப்ரஹீமையும் கீழே கிடந்த பாதிரியையும்கூட ஏதோ காந்த சக்திக்குள் அடக்கியிருந்ததால் அவர்களும் மெய்மறந்து நின்றனர். அந்த வெள்ளைக்கார வாலிபன் சரித்திரத்தைக் காதில் வாங்கிய விஜயகுமாரனும் அந்தக் காந்த சக்திக்கு உட்பட்டானுனாலும், அவன் கண்களிலும் ஒரு புத்தொளியும் ஒரு கனவும் பிறந்தது. அவனும் பேசினன் திடமான குரலில். "கிளைவ்! உன் உயிரைப் போலத்தான் என் உயிரும். லேசில் போகாது. எனக்கும் ஒரு பர்ப்பஸ், அதுதான் லட்சியம், வாழ்க்கையில் இருக்கிறது. அதை நிறைவேற்றத்தான் நான் வாழ்கிறேன். அதற்காக என்னுடன் வந்துள்ள அரசகுமாரி அழைத்து வந்த காவலரை மீறினேன். அவளையும் பலவந்தமாகத் தூக்கிவந்தேன். அவளைக் காக்க அரங்கன் சந்நிதியில் நின்ற எந்த வீரனும் என்னைக் கொன்றிருக்கலாம். அல்லது சமயபுரத்தில் முராரி ராவும் கொன்றிருக்கலாம். ஆனல் நானும் சாகவில்லை. சாவைத் தேடுகிறவன் சாவதில்லை. அதற்கு அஞ்சுகிறவன்தான் சாகிறன். வாழ்க்கையில் குறிக்கோள். அதாவது பர்ப்பஸ் உள்ளவன் உயிர் நீண்டநாள் உடலில் இருக்கிறது. இதுதான் உண்மை. இது உனக்கும் சரி, எனக்கும் சரி," என்று சொற்களை உதிர்த்தான்.

விஜயகுமாரனை மகிழ்ச்சியும் கௌரவமும் தாண்டவமாடிய விழிகளால் பார்த்தான் கிளைவ். அவன் கூறியதெல்லாம் உண்மை என்பதற்கு அறிகுறியாகத் தலையையும் அசைத்தான் ஒருமுறை. பிறகு பாதிரியை எழுந்திருக்கச் சொல்லிக் கையைக் காட்டி அவர் உள்ளங்கையில் பாய்ந்திருந்த முராரி ராவின் குறுவாளைப் பிடுங்கி, "டேய்! யாரங்கே?" என்று குரல் கொடுத்தான். அதைக் கேட்டதும் அதுவரை வெளியே பதுங்கியிருந்த சத்திரக் காவல்காரன் உள்ளே வந்தான். "இந்தா குறுவாள்," என்று அவனிடம் குறுவாளைக் கொடுத்துவிட்ட ராபர்ட் கிளைவ், "போர்டைஸ்! வெளியே நிற்










38

ரெகார்ட் நோட் புத்தகத்தில் படம் வரையும்பொழுது படம் வரையும் தாளின் அடியில் ஒரு பழைய எக்ஸ்-ரே படத்தை வைத்து வரைந்தால் வரைந்த படத்தின் பதிவு மறு தாளில் படியாது.வரைந்த தாளிலும் மேடு பள்ளம் விழாது. —ஸ்ரீவத்ஸா

கும் நமது வண்டிக்குப் போய் உட்கார். நான் வருகிறேன். சீக்கிரம்,'' என்று கட்டளையிடும் தோரணையில் பேசினான்.

படுத்த நிலைவிட்டு எழுந்து நின்று கொண்ட போர்டைஸ் கிளைவை ஒருமுறை முறைத்துவிட்டு, விஜயகுமாரனைப் பார்த்துக் கேட்டார், ''நான் யார் தெரியுமா?'' என்று.

''தெரியாது,'' அலட்சியத்துடனும், வெறுப்புடனும் வெளிப்பட்டது விஜயகுமாரன் பதில்.

''சார்ல்ஸ் ப்ளாயர் * தெரியுமா?''

''ஸெய்ண்ட் டேவிட் கோட்டையின் கவர்னர்.''

''கவர்னர் கவுன்சிலில் நான் மெம்பர்.''

''அதற்கென்ன இப்பொழுது?''

''இந்தக் கிளைவ் மீது ஏற்கனவே புகார் செய்திருக்கிறேன்.''

''மீண்டும் செய்யப்போகிறாய்?''

''ஆம், ஆனால் நீயும் தப்ப முடியாது.''

''ஏன்?''

''என்னை மரியாதை இல்லாமல் பேசுகிறாய். என்னை ரெவரெண்ட் என்று அழைக்க வேண்டும்.''

''இல்லாவிட்டால்?''

''உன் மீதும் புகார் செய்வேன்.''

இந்தச் சமயத்தில் கதவுக்கருகிலிருந்து வந்த சிரிப்பொலி அனைவரையும் அந்தத் திக்கில் திரும்ப வைத்தது. வாசல் தாழ்வரை விளக்கை ஒரு கையிலும் கைத்துப்பாக்கியை இன்னொரு கையிலும் ஏந்தி நின்றிருந்தாள் அரசகுமாரி நந்தினி. கூடத்திலிருந்த மூன்று பிணங்களும், அவற்றிலிருந்து தரையில் பிரவாகித்த ரத்தமும், அந்தச் சமயத்திலும் போர்டைஸின் கையிலிருந்து சொட்டிக்கொண்டிருந்த ரத்தத் துளிகளும்கூட அவளைச் சிறிதும் பாதித்ததாகத் தெரியவில்லை. அவள் தன் அழகிய விழிகளை கிளைவ்மீது நாட்டிவிட்டுக் கேட்டாள், ''இவர் பைத்தியமில்லையே?'' என்று.

''நிச்சயமாகச் சொல்ல முடியாது,'' என்றான் கிளைவ்.

இதைக் கேட்ட போர்டைஸ் வெகுண்டு, ''நீங்கள் எல்லோரும் என்னைத் தூற்றுகிறீர்கள். உங்கள் அனைவரையும் கவர்னர் கோர்ட்டுக்கு இழுக்கிறேன்,'' என்று சீறினார்.

அதைச் சிறிதும் லட்சியம் செய்யாத அரசமகள் நந்தினி அறைக்குள் வந்து பாதிரியின் கையைப் பரிசோதித்தாள். பிறகு கீழே கிடந்த சமயபுரத்தானை எழுந்திருக்கச் சொல்லி, தனது முக்காட்டுத் துணியிலிருந்து இன்னொரு பகுதியைக் கிழித்து, ''இதை வைத்து இவர் கையைக் கட்டிவிடு,'' என்று உத்தரவிட்டாள்.

போர்டைஸ் அவளை வியப்புடன் பார்த்தார். ஆனால் அதைக் கவனிக்காத நந்தினி விஜயகுமாரனைப் பார்த்துக் கேட்டாள், ''பொழுது விடிய அதிக நேரமில்லை. நாம் போகப்போகிறோமா இல்லையா?'' என்று.

விஜயகுமாரன் கிளைவை நோக்கினான். கிளைவ் அரசகுமாரியை நோக்கினான். ''நீங்கள் தஞ்சைதானே போக வேண்டும்?'' என்றும் வினவினான்.

''ஆம்,'' என்றாள் அவள்.

''அந்த வழிதான் நானும் போகிறேன். உணவுப் பொருள்களை நேற்றே வாங்கிவிட்டேன். வாசலில்

---

Charles Floyer-Governor of Fort St. David till 1750-Dupleix and Clive-By H.H.Dodwel

என் *செய்ஸ் இருக்கிறது. அதில் வர லாம்,'' என்ருன் கிளைவ்

''இந்தப் பாதிரி?'' என்று வினவினுள் நந்தினி.

''இவரும் நானும் அதில் தான் வந்தோம். அதில்தான் போகி ருேம்,'' என்ருன் கிளைவ்.

''அப்படியானுல்....?''

''நான்கு பேருக்கு இடமிருக் கிறது.''

அரசகுமாரி சிறிது யோசித் தாள். ''இல்லை. நானும் இவரும் சமய புரத்தானும் எங்கள் புரவிகளிலேயே வருகிருேம்,'' என்று கூறிவிட்டு, ''இவர் களை என்ன செய்யப்போகிறீர்கள்?'' என்று இப்ரஹீமையும் மற்ற இருவரை யும் சுட்டிக் கேட்டாள்.

''ஆயுதங்களைப் பிடுங்கிக் கொண்டு இவர்களை நம்முடன் பாதி வழி அழைத்துச் செல்லுவோம்,'' என் ருன் கிளைவ்.

''பிறகு?''

''விட்டுவிடுவோம்.''

இங்கு இடைமறித்து ஆட் சேபித்தான் விஜயகுமாரன். ''சந்தா சாகேபின் படைத் தலைவனை விடுதலை செய்வதற்கில்லை,'' என்று.

''ஏன்?'' கிளைவின் குரலில் வியப்பு ஒலித்தது.

''சந்தா சாகேபின் படைத் தலைவன் ஒவ்வொருவனும் இந்த நாட் டின் விரோதி. அவர்களை விடுதலை செய்வதற்கில்லை,'' என்று திட்டமாகக் கூறிய விஜயகுமாரன், இப்ரஹீமையும் மற்ற இருவரையும் வெளியே செல்லச் சைகைக் காட்டினுன் தனது வாளால்.

இப்ரஹீம் பெரிதாக நகைத் தான் விஜயகுமாரன் சொல்லைக் கேட்டு. ''சந்தா சாகேபையோ அவர்கள் ஆட் களையோ எங்கும் சிறை வைக்க முடி யாது,'' என்றும் கூறினுன் நகைப்பின் ஊடே. அத்துடன் உக்ரத்துடன் மேலும் சீறினுன் சொற்றொடர் கொண்டு. ''நீங் கள் நினைப்பதுபோல் சந்தாசாகேப் இப் பொழுது ஸதாராவில் மகாராஷ்டிரர் சிறையில் இல்லை. ஆற்காட்டை நோக்கி வந்து கொண்டிருக்கிருர் பெரும் படை



படம்:
ஆர். முத்துசாமி
படத்தில் ராஜ்ஸ்ரீ

யுடன். வெகு சீக்கிரம் இந்தக் கர்னுடக பூமி போரின் உக்கிரத்தால் நடுங்கப் போகிறது. தமிழர்கள் தலைகளை, ஏன், பிரிட்டிஷார் தலைகளைக்கூட, நாங் கள் வெகு சீக்கிரம் பந்தாடப் போகி ருேம்,'' என்று இரைந்து லவலேசமும் அச்சமின்றிப் பேசினுன்.

கிளைவ் முகத்தில் இருந்த புன்முறுவல் மறைந்தது. ''யார் விடு வித்தது சந்தா சாகேபை? யார் பணம் கொடுத்தது மகாராஷ்டிரர்களுக்கு?'' என்று வினவினுன் இப்ரஹீமை நோக்கி.

இப்ரஹீமின் பருத்த உதடு களில் பயங்கரப் புன்முறுவல் உதய மாயிற்று. ''யாரென்று நினைக்கிருய்?'' என்று கேட்டான் கிளைவை நோக்கி.

''ஒரு மகாவீரன், ராஜதந் திரி, ஆனுல் நாடாசை பிடித்தவன். அவனுயிருக்கலாம்,'' என்ருன் கிளைவ்.

''அவன்தான்,'' என்ருன் இப்ரஹீம்.

''பெயரைச் சொன்னுல் வாய் வெந்துவிடுமா?'' என்று வினவினுள் அரசகுமாரி கிளைவை நோக்கி.

''வாய் வேகாது அரச குமாரி. ஆனுல் இந்த நாடு வெந்து போகும். மக்கள் நாசம் ஏற்படும்,'' என்ருன் கிளைவ்.

''இந்த நாட்டையே கலக்க வல்லவன் இருக்கிருனு வெளிநாட்டு வியாபாரிகளில்?''

''இருக்கிருர்.'' மரியாதை ஒலித்தது கிளைவின் குரலில்.

''அவன்?''

''லாண்டிரஸிஸ் என்ற இடத் திலிருந்து வந்தவர். * ஜோஸப் ப்ராங் காய் டுப்ளே.'' கிளைவின் குரல் மரியா தையுடனும் கவலையுடனும் உதிர்ந்தது.

(தொடரும்)

---

* இரண்டு குதிரைகளால் இழுக் கப்பட்ட உல்லாச வண்டி. 18'வது நூற்ருண் டில் வெள்ளைக்காரர்களால் உபயோகிக்கப் பட்டது.

Joseph Francois Dupleix–History of India–By R. Sathianatha Iyer–P.85

# சுந்நலயம்

நடனக் குழுவுடன் 25 நாட்களாக நாங்கள் அனைத்திந்திய சுற்றுப் பிரயாணம் ஒன்று ஏற்பாடு செய்து, 13 நாட்டியக் கச்சேரிகள் முடித்துவிட்டு 24'ம் தேதி புதன்கிழமையன்று வால்டேரிலிருந்து சென்னைக்குத் திரும்ப ஹௌரா எக்ஸ்பிரஸில் ஏறினோம். எனது நடனக் கச்சேரிகளுக்குப் பதம் பாடும் எனது மன்னி சியாமளா பாலகிருஷ்ணன், டாகுமென்டரி திரைப் படத் தயாரிப்பாளரும், டைரக்டருமான எனது மூத்த சகோதரர் பாலகிருஷ்ணன், அவர்களது மகன் கண்ணன் (12 வயது, உதவியாளர்கள், ஆர்கெஸ்ட்ரா மொத்தம் 14 பேர்கள்.

ரயிலில் மாலைப் பொழுது நன்றாகப் போயிற்று. இரவு எட்டு மணிக்கு விஜயவாடா ஸ்டேஷனில் யூஷுவல் டிரெய்ன் டின்னர். சென்னையில் அன்று பலத்த மழை என்று யாரோ சிலர் பேசிக் கொண்டிருந்தார்கள். நத்திங் ஸ்பெஷல்.

நல்ல தூக்கம். காலை 4–30 மணிக்கு லேசாக விழிப்பு வந்தது. வெளியில் இருட்டு. நல்ல மழை பெய்து கொண்டிருந்தது. பேசின் பிரிட்ஜ் வந்துவிட்டது என்று அண்ணா எழுந்து பல் தேய்த்து முகம் அலம்பிக் கொண்டார். ஏதோ கொஞ்ச நேரமாகவே ட்ரெயின் இங்கே நிற்கிறது போலிருக்கிறதே என்று மறுத்தாள் மன்னி. அரைத் தூக்கம் எனக்கு. காபியின் மேல் உள்ள மோகத்தில், பலத்த மழையிலும் தலையில் டவலை முண்டாசு போல கட்டிக் கொண்டு அண்ணா கீழே இறங்கினார்.

பத்மா சுப்பிரமணியம்

சென்னைக்கு 140 கிலோ மீட்டர் தூரத்தில் கூடூரில் வண்டி நிற்பது அப்போதுதான் தெரிந்தது. வழியில் ஏதோ உடைப்பு ஏற்பட்டிருப்பதால் ட்ரெயினை ரேணிகுண்டா வழியாக டைவர்ட் செய்யப் போகிறார்கள் என்று அண்ணா சொன்னார்.

தொடர்ந்து நல்ல மழை. 6–30 மணி அளவில் ட்ரெயின் கூடூரிலிருந்து ரேணிகுண்டாவிற்குக் கிளம்பியது. ட்ரெயினிலிருந்த பலருக்கும் வண்டி டைவர்ஷன் ஆகிப் போவது தெரிந்துவிட்டது.

"ரேணிகுண்டா ராமச்சந்திரன் நமக்காகச் சுடச்சுட இட்லி வடை, சாம்பார், சட்னி, மிளகாய்ப் பொடி வைத்துக்கொண்டு காத்திருக்கிறான்" என்றார் அண்ணா. யாரோ அண்ணாவுக்குத் தெரிந்தவர் அங்கு இருக்கிறார் என்று நினைத்தேன். 'ரேணிகுண்டா ராமச்சந்திரன்' கற்பனைப் பாத்திரம் என்று பிறகுதான் புரிந்தது.

ட்ரெயின் ரொம்ப எச்சரிக்கையாக மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. இரண்டு பக்கமும் தண்ணீர் தேங்கியிருந்தது தெரிந்தது. வழியில் ஓர் ஏரி நிரம்பி, வழிந்த தண்ணீர் நீர் வீழ்ச்சிபோல் விழுந்துகொண்டிருந்தது. கண்ணன்தான் முதலில் எங்களுக்குக் காண்பித்தார். கிரேட் ஸைட்! மழை நன்றாகவே பெய்திருக்கிறது.

காலை எட்டு மணிக்கு வெங்கடகிரி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தது வண்டி.

வெங்கடகிரியை அடுத்து எல்லிக்காடு என்ற சிறிய ஸ்டேஷனை வந்து அடைந்தபோது மழை கொஞ்சம் குறைந்தும், சூரிய வெளிச்சமும் இருந்தது. காளஹஸ்தி அருகே இருக்கும் ஓவர் பிரிட்ஜில் தண்ணீர் இருப்பதாகவும் அங்கிருந்து ஒரு லைட் இன்ஜின் (ரயில்வே பாஷையில் லைட் இன்ஜின் என்றால் வெறும் இன்ஜின் மட்டும் என்று அர்த்தம்) வந்தால்தான் தொடர்ந்து

ராமபத்ரன், முத்து, மருது இவர்களைத் தவிர]

ராம: பாஸ்.. பாஸ்...யார் யார் வந்திருக்கு?

முத்து: இரேண்டா.. படிக்கிறேன்! பஞ்சாபகேசன், சாதா சில்க் எம்போரியம், மாம்பலம்...

ராம: அட உப்பிலி: நம்ம ஆளு.

## காட்சி - 6

[குப்புசாமி அய்யங்கார் விஷ்ணு சகஸ்ரநாமம் சொல்லிக் கொண்டு வருகிறார்]

குப்பு: என்ன ராமபத்ரா..

ராம: சார், நீங்க ...... காலேல விஷ்ணுசகஸ்ரநாமம் சொல்லுவிங்களா!

குப்பு: அட! கண்டு புடிச்சிட்டயே! உனக்கெப்படிடா தெரியும்—நான் இப்ப சொன்னது விஷ்ணு சகஸ்ர நாமம்னு....

ராம: என்னங்க அப்படிக் கேட்டுட்டீங்க. வேதம் உபநிஷத் எல்லாம்கூடக் கொஞ்சம் படிச்சிருக்கேங்க!

குப்பு: பரவாயில்லையே .. வைதிகமான திருடனா இருக்கியே. மூதேவி—உப்பிலி, நீயும் இருக்கியே!

ராம: ம்ச்....என்னங்க பண்றது. எப்படில்லாமோ இருக்கணும்னு நெனச்சேன் ....—கடைசில இப்படித் திருடனா ஆயிட்டேன்.

குப்பு: அதனால என்னப்பா—கிருஷ்ணன்கூடத்தான் வெண்ணெயத் திருடினான்.

உப்பிலி: கிருஷ்ணன் வெண்ணையை திருடினரா! ஏம்பா, அவர் அப்ப டென்னிஸ் விளையாடறதை விட்டுட்டாரா!

குப்பு: மூதேவி! நான் டென்னிஸ் கிருஷ்ணனைச் சொல்லலே.. கோகுல கிருஷ்ணனை சொன்னேன். ராமபத்ரா! திருமங்கை ஆழ்வார் தெரியுமா? அவர்கூட பூர்வீகத்தில திருடனாகத்தான் இருந்தாராம்.

உப்பிலி: அந்தக் காலத்திலேயே இப்படியெல்லாம் உண்டுன்னு சொல்லு. சரி, சரி நான் வரேன். எனக்குத் தலைக்கு மேலே வேலையிருக்கு.

குப்பு: உப்பிலி! அதென்னடா, கைல மாவிலை தோரணம்?

உப்பு: உனக்குத் தெரியாதா. இன்னிக்கு நம்மாத்துக்கு ஒரு பணக்காரனோட பையன் வரான். ராமபத்ரா! யார்பா அந்தப் பணக்காரன், சொல்லேன்.

ராம: நீங்களே வந்ததுக்கப்புறம் பார்த்துக் கொள்ளுங்களேன்.

(தொடரும்)

---

...சய்து கொண்டிருந்தார். சிஷ்யன் காத்திருந்தான். பூஜை முடிந்ததும் ஒரு இலையில் நய்வழியும் பொங்கலை எடுத்துவந்து சிஷ்யனுக்குக் கொடுத்துச் சாப்பிடச் சொன்னார். சுத்தமான நெய்யைத் தாராளமாகச் சேர்த்த பொங்கல். சீடன் சந்தோஷமாகக் கையினால் அள்ளி அள்ளிச் சாப்பிட்டு முடித்தான்.

கை முழுதும் நெய். கை கழுவுவதற்குச் சீயக்காய் பொடி தந்தார் குரு. சிஷ்யன் கையை நன்றாகக் கழுவிக்கொண்டு வந்து சேர்ந்தான்.

குருநாதர் மறுபடி சீயக்காய் பொடியை எடுத்து சீடனிடம் கொடுத்தார். ''எதற்கு சுவாமி?'' என்றான்.

''உன் நாவையும் வாயையும் இதைப்போட்டுக் கழுவிவிட்டுவா'' என்றார்.

''இல்லை சுவாமி! என் கையில் தான் நெய் பிசுக்கு ஒட்டியதே தவிர வாயில் ஒட்டவில்லை,'' என்றான் சீடன்.

''ஏனப்பா! ஆச்சர்யமாயிருக்கிறதே! கையினால் அவ்வளவு பொங்கலையும் எடுத்து வாயினால் சாப்பிட்டாயே அவ்வளவு நெய்யும் ஒட்டாமலா இருக்கும்!''

''இல்லை சுவாமி! துளிக்கூட வாயில் ஒட்டவில்லை!''

'ஏனப்பா! வாய் வழி உண்ட நெய் வாயில் ஒட்டவில்லை என்கிறாய். கேவலம் மனிதசரீரத்துக்கே இப்படி என்றால், பகவானை பரமாத்மா இதயத்தில் இருந்துகொண்டு பாவ புண்ணியங்கள் ஒட்டாமல் இருக்க முடியாதா அப்பனே!''



சீடன் புரிந்து கொண்டு குருநாதரின் காலில் விழுந்தான்.

[கூறியவர்: முக்கூர் நரசிம்மாச் சாரியார். கேட்டவர்: ஆர். ராதா.]

ராஜ பேரிகை



சாண்டில்யன்

# 11. கண்ணும் காணோம், பெண்ணும் காணோம்

நஞ்சைப் பயிர்களைக் கொள்ளை கொள்ளையாக அளித்ததால் தமிழகத்தின் நெற்களஞ்சியம் எனப் பெயர் பெற்றதும், விஜயாலய சோழன் காலத்தில் தலைதூக்கி ராஜராஜன் காலத்தில் மாபெரும் சோழ சாம்ராஜ்யமாக விரிந்து அதன் தலைநகராகப் பெரும் சிறப்படைந்ததும், கோட்டைக்குள் கோட்டையாக இருபெரும் மதில்களையுடையதாய், இரண்டாவது கோட்டைக்குள் நிழலே வெளியில் விழாத கலைவெள்ளம் கொண்ட பிரகதீசுவரர் கோவிலை மையத் தலமாகப் பெற்றதாய், சோழ சாம்ராஜ்யம் மறைந்தாலும் இந்து சாம்ராஜ்யம் தெற்கே மறையவில்லையென்பதற்கு அத்தாட்சியாய் சத்ரபதி சிவாஜியின் மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தின் தென்திசைத் தீபமாய், சிவாஜியின் சகோதரரான வியங்காஜியெனும் ஏகோஜியின் ராஜ்யத்தின் தலைநகராய், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர், ஆற்காட்டு நவாபுகள் அனைவர் கண்களுக்கும் எரிச்சலை விளைவிக்கும் சுதந்திர நகராய் எத்தனையோ இன்னல்களுக்கிடையே திணறிக்கொண்டிருந்த தஞ்சை மாநகரின் அரண்மனையில் ஆஸ்தான அறையில் தஞ்சை மண்டல மன்னனும், துகோஜியின் வாளுக்கு மாலையிட்ட அன்னபூர்ணாபாயின் மகனாதலால் வாள்மகன் என்று பிரசித்தி பெற்றவனும், மகாவீரனுமான பிரதாப் சிங் மகாராஜா தீர்க்காலோசனையுடன் அப்புறமும் இப்புறமும் உலாவிக் கொண்டும், எதிரே நின்ற மூன்று மனிதர்களைக் கவனிக்காமலும், சற்று நேரத்திற்கொரு முறை சாளரத்தருகே சென்று வெளியே தலைநீட்டிப் பார்த்தும், பிறகு மீண்டு அறையின் நடுப் பகுதிக்கு வந்தும், உள்ளத்தே ஓடிய பல உணர்ச்சிகளால் சங்கடப்பட்டுக்கொண்டிருந்தான். எப்பேர்ப்பட்ட சமயத்திலும் எவ்வித உணர்ச்சியையும் காட்டாதவனும் * மகாதந்திரசாலியென அக்காலத்திய பிரிட்டிஷ் சரித்திர ஆசிரியர்களாலேயே சிலாகிக்கப்பட்டவனுமான மகாராஜா பிரதாப் சிங் அன்று அப்படி சலனத்தைக் காட்டிவிட்டதற்குக் காரணம் இருந்ததென்பதை எதிரே நின்ற மூவரும் புரிந்து கொண்டிருந்ததால் மன்னனே பேசட்டுமென்று வாளாவிருந்து விட்டாலும், அவர்கள் உள்ளங்கள் மட்டும் வாளாவிருக்காமல் தங்கள் நிலையைப் பற்றிய பற்பல கேள்விகளைக் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தன.

அந்த விபரீத மௌன நிலையை வெட்டவோ என்னவோ பிரதாப்சிங் கடைசியாக உலாவுவதை நிறுத்திச் சட்டென்று திரும்பி எதிரே நின்ற மூவரையும் சில விநாடிகள் நோக்கினான். பிறகு ஒற்றைச் சொல்லை வீசினான் அந்த அறையில் மிக மெதுவாக ஆனால் மிகக் கடுமையாக, " டபீர்!" என்று.

அந்தச் சமயத்தை டபீர் பண்டிதரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்ததால் "மகாராஜா!" என்று கூறித் தலைவணங்கினார், நன்றாகக் குனிந்து, தலையிலிருந்த மகாராஷ்டிர வட்டத் தலைப்பாகை தரையைத் தொட்டுவிடும் பாவனையில்.

பிரதாப்சிங்கின் தந்திர விழிகள் டபீர் பண்டிதரின் அளவுக்கு மீறிய தலைவணக்கத்தையும் கவனிக்கத் தவறவில்லை. தமது வருமான வரி அமைச்சரிடமிருந்து விலகி, சற்று எட்ட நின்ற பட்டாடையாரையும் மற்றொரு கைங்கர்யபரரையும் பார்க்கத் தவறவில்லை. அப்படி ஒரு முறை மூவரையும் பார்த்துவிட்டு மீண்டும் டபீர் பண்டித

* "The Wily Tanjoriane" History of the Military Transactions of the British Nation in Indostan- By Robert Orme; Book II- P. 138.



ரின்மீது நிலைத்த மகாராஜாவின் கண்கள் சற்று நிதானத்துடன் வெறுப்பையும் காட்டின. இதழ்களும் வெறுப்புடனும் கோபத்துடனும் அசைந்தன. ''தஞ்சை மாநகரத்தின் பரம்பரை ராஜ பேரிகை முழங்கவில்லை'' என்ற சொற்களும் மன்னன் இதழ்களிலிருந்து உதிர்ந்து வெறுப்பையும் கோபத்தையும் சற்று அதிகமாகக் காட்டவே செய்தன.

''ஆம்'' என்று மிகுந்த பணிவு நிரம்பிய குரலில் ஒப்புக் கொண்டார் டபீர் பண்டிதர்.

''ஏன் முழங்கவில்லை?'' மகாராஜாவின் கேள்வி முழங்கிற்று பேரிகையைப்போல்.

''அரசகுலத்தார் உள்ளே நுழைந்தால்தான் ராஜபேரிகை சாதாரண காலத்தில் முழங்கும்,'' என்றார் டபீர்.

''அப்படி யாரும் வரவில்லை உம்முடன்?''

''இல்லை.''

''என் பெண் வரவில்லை?''

''இல்லை.''

''ஆனால் வெறுங்கையுடன் நீர் வரவில்லை.''

''மகாராஜா?''

''இதோ இந்த இரண்டு நாமதாரிகளையும் கொண்டு வந்திருக்

கிறீர் என் மகளுக்குப் பதில்'' என்று கூறிய மகாராஜா பட்டாடையாரையும் இன்னொரு கைங்கர்யபரரையும் சுட்டிக் காட்டினார்.

டபீர் பண்டிதர் ஏதோ சொல்ல வாயெடுத்தார். ஆனால் அவரை முந்திக்கொண்டார் பட்டாடையார். டபீர் பண்டிதர் என்ன பயமுறுத்தியும் துரிதப்படுத்தியும் கேளாது அன்று காலையில் மீண்டும் நீராடி, தமது பட்டுக்கரை வேஷ்டியையும் உத்தரீயத்தையும் அணிந்து பன்னிரண்டு திருநாமங்களையும் பரக்கப் பளபளக்கச் சாத்திக்கொண்டு வந்திருந்த பட்டாடையார் மகாராஜாவின் சொல்லைக் கேட்டதும் சிறிது சினத்தை முகத்தில் காட்டினார். ''மகாராஜா! தாங்கள் பேசுவது ஒரு மன்னர் பேசக்கூடிய பேச்சாக இல்லை'' என்று லேசான சினம் கலந்த குரலில் கூறவும் செய்தார் தஞ்சை மன்னனை நோக்கி.

அமைச்சரான டபீர் பண்டிதரே தம்மைக் கண்டு அஞ்சி நிற்க, பட்டுக் கரை ஆடையுடுத்த அந்த பிராம்மணன் சீறுவதைக் கண்டதால் எத்தனையோ விசாரத்திலும் சிறிது வியப்பையும் முகத்தில் காட்டிய பிரதாப் சிங், ''என்ன சொல்கிறீர்?'' என்று வினவினார்.

''அரங்கன் சந்நிதியில் நாங்கள் சேவை செய்கிறோம். பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கிறோம்,'' என்று பக்கத்திலிருந்த இன்னொரு கைங்கரியபரரையும் சேர்த்துக்கொண்டு கூறினார் பட்டாடையார்.

''அதனால்?''

''எங்களை அவமதிப்பதால் அரங்கனை அவமதிக்கிறீர். அரங்கனை அவமதிப்பதால் அவன் அடியார்களை அவமதிக்கிறீர்கள். அரங்கன் கோவில் நிர்வாகத்திற்கு 'கோயிலொழுகு'த் திட்டமிட்ட உடையவர் ஸ்ரீரங்க நாராயண ஜீயரை அவமதிக்கிறீர்.''

''அப்படி என்ன அவமதித்து விட்டேன்?''

''எங்களை நாமதாரிகள் என்று அலட்சியமாக அழைத்தீர்.''

பிரதாப் சிங்கின் வியப்பு அதிகமாயிற்று. எதிரே நின்ற வைணவப் பிராமணனின் துணிவு மகாராஜாவின் சிந்தனையைப் பெரிதும் கிளறிற்று. ஆகவே டபீர் பண்டிதரை அறவே புறக்கணித்து, பட்டாடையாரை ஏற இறங்க நோக்கினார். பிறகு கேட்டார் ''உமது பெயர் என்ன?'' என்று.

''ரங்கதாஸன்,'' என்றார் பட்டாடையார்.

''தாஸன் என்ற பெயர் பணிவைக் குறிக்க வேண்டும்,'' என்று சுட்டிக் காட்டினார் மகாராஜா.

---

## மிடைங்கும் கண்ணாடி

பின்னணிப் பாடகி எஸ். ஜானகி வீட்டில் ஜன்னல் கம்பிகளுக்கிடையே உடைந்த பாட்டில்களையும் காலியான பாட்டில்களையும் நிறையச் செருகி வைத்திருக்கிறார்கள்.

''யாராவது லேசாக ஜன்னலைத் திறந்தால்கூடப் போதும். சட்டென்று பாட்டில்கள் கீழே விழுந்து படீரென சத்தத்துடன் உடைந்துவிடும். எவ்வளவுதான் அயர்ந்து தூங்கினாலும் விழித்துக் கொள்ளலாம் அல்லவா?'' என்கிறார் எஸ். ஜானகி. அவருடைய கணவர் ராமபிரசாத்தின் ஐடியாவாம் இது.

—பாரிவள்ளல்



இளம் பெண். இல்லாவிட்டால், "கூந்தல் நிறம் கறுப்புத்தானு? அல்லது 'டை போட்டிருக்கிருனா?" என்று அவர் யோசிப்பதாக வைத்துக் கொள்ளலாம்.



'ஆலிங்கனம்' படத்தில் வின்ஸெண்ட்—விதுபாலா.

"அரங்கன் அடியார்களின் திருவடிகளுக்கு நான் தாஸன், அரசர்களுக்கல்ல. அதுவும் வைணவத்தை அவமதிப்பவர்களுக்கல்ல," என்ருர் பட்டாடையார் திட்டவட்டமாக.

இந்தச் சமயத்தில் கூட வந்த கைங்கர்யபரர் உடல் வெடவெடுத்துக் கொண்டிருந்தது. "ஸ்வாமி! இது மகாராஜாவின் சந்நிதானம்" என்று சொற்கள் குழறப் பட்டாடையாரை அடக்கப் பார்த்தார்.

ஆனுல் பட்டாடையார் அதற்கெல்லாம் மசிகிற பேர்வழியாகத் தெரியவில்லை. "மகாராஜா! தாங்கள் க்ஷத்திரியர் அல்லவா?" என்று வினவினுர் ஒருகையால் சகோதர கைங்கர்யபரரைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு.

"ஆம்" என்ருர் மகாராஜா.

"சக்ரபதியைக் கீழ்க்குலத்தவர் என்று சொல்பவர்களும் உண்டு. சூர்யவம்சத்தில் வந்த க்ஷத்திரியர் என்று சொல்பவர்களும் உண்டு."

"உண்டு."

"ஆனுல் நீங்கள் க்ஷத்திரியர்கள்தான். உங்களுக்கு முப்புரி நூலுண்டு. முக்கால கடன்களும் உண்டு."

"ஆம்."

"ஆசமனம் உண்டு."

"உண்டு."

"அதில் கேசவாய நமஹ தொடங்கிப் பன்னிரண்டு பகவத் நாமங்கள் இருக்கின்றன."

"ஆம்."

"அந்தப் பன்னிரண்டு திருநாமங்களை வைணவர்கள் நெற்றி தொடங்கி, பன்னிரண்டு இடங்களில் ஸ்தாபிக்கிருர்கள். அதனுல்தான் அவற்றுக்கு நாமம் என்று பெயர். அதை அவமதிப்பவர்கள், கேலியாகப் பேசுகிறவர்கள், சர்வலோக ரட்சகனை நாராயணனை அவமதிக்கிருர்கள். இதனுல் பெரும் பாவம் சம்பவிக்கிறது," என்ற பட்டாடையார் அந்த விவரணத்துடன் நிற்காமல் மேலும் சொன்னுர் "மகாராஜா! இந்த ராஜ்யத்தின்மீது மட்டுமல்ல இந்த நாட்டின்மீதும் பலபேர் கண் வைத்திருக்கிருர்கள். சனுதனமான ஹிந்து மதமும் ஹிந்து ராஜ்யங்களும் அழியக்கூடிய பயங்கர நிலை ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சமயத்தில் பொறுத்துக் கேளுங்கள். ஏதோ விபரீ

தம் இந்த நாட்டைச் சூழ்ந்து கொள்ள இருக்கிறது,'' என்றும் விவரித்தார்.

பிரதாப் சிங் மகாராஜா அது உண்மை என்பதைக் குறிக்கத் தலையை ஆட்டிவிட்டுக் கேட்டார் ''அது உமக்கெப்படித் தெரியும்?'' என்று.

''சகுனம் அப்படியிருக்கிறது மகாராஜா.''

''என்ன சகுனம்?''

இதற்குப் பட்டாடையார் பதில் சொல்லவில்லை. டபீர் பண்டிதரை நோக்கித் திரும்பி ''அமைச்சரவர்களே, சொல்லுங்கள். உங்கள் வாயால் வரட்டும்,'' என்று கூறினார்.

டபீர் பண்டிதர் ஒருமுறை பட்டாடையாரை எரித்து விடுவது போல் பார்த்தார். பிறகு உதடுகள் துடிக்க ''அரங்கன் கண்களில்....'' என்று துவங்கி மென்று விழுங்கினார்.

''சொல்லும்.''

''ஒன்றைக் காணோம்''

பிரதாப்சிங் சிலையென நின்று விட்டார் பல விநாடிகள். ''என்ன, கண்ணைக் காணோமா?'' என்ற அவர் கேள்வியில் அதிர்ச்சி ஒலித்தது.

''ஆம். அதிலிருந்த பெரிய வைரக்கல்,'' என்றார் பண்டிதர்.

மகாராஜா ஸ்தம்பித்து நின்றார். 'அரங்கன் கண்ணைக் காணோம். கண்ணிலிருந்த வைரம் காணோம்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டார். சில விநாடி மௌனத்துக்குப் பிறகு கேட்டார், ''எனது பெண்?'' என்று.

''காணவில்லை'' என்று பண்டிதர் சுருக்கமாக உளறினார்.

''கண் காணவில்லை, என் பெண் காணவில்லை. இரண்டையும் ஒரே சமயத்தில் எப்படித் தொலைக்க முடிந்தது உம்மால்?'' என்று விசாரித்தார் மகாராஜா அமைதியுடன்.

அது எரிமலையின் அமைதியென்பதைப் புரிந்து கொண்ட டபீர் பண்டிதர் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு நடந்ததைக் கூறினார்.

மகாராஜா அறை நடுவிலிருந்த மஞ்சத்தில் உட்கார்ந்து கொண்டார். ''விசாரணைக்கு எந்த ஏற்பாடும் செய்யவில்லை நீர்?'' என்று வினவினார்.

''அரங்கன் சந்நிதி சாவி இவர்களிடமிருப்பதால் வைரத்தின் விஷயமாக விசாரிக்க இவர்களை அழைத்து வந்தேன்,'' என்ற டபீர் பண்டிதர்மீது வெறுப்புத் ததும்பிய பார்வையை வீசிய பிரதாப் சிங் மகாராஜா ''பெண்ணைக் கொண்டு போனவனைப்பற்றி விசாரிக்க யாரையும் அழைத்து வரவில்லையா?'' என்று வினவினார்.

''இல்லை.''

''ஏன்? அதற்கும் சம்பந்தப்படாத இருவரைப் பிடித்துக் கொண்டு வந்திருக்கலாமே?''

மகாராஜா தன்னைப் பார்த்து நகைக்கிறார் என்பதைப் புரிந்து கொண்ட டபீர் பண்டிதரும் சிறிது எதிர்ப்பைக் காட்டி, ''மகாராஜா! நான் வருமானத்துறை அமைச்சன், போர் வீரனல்ல,'' என்று விளக்கம் கூறினார்.

பண்டிதர் கச்சையில் தொங்கிய வாளை மகாராஜா அர்த்தபுஷ்டியுடன் பார்த்தார். ''தெரிகிறது தெரிகிறது'' என்று கூறிய பிரதாப் சிங் சிறிது சிந்தித்துவிட்டு டபீர் பண்டிதரை நோக்கி ''சரி, இவர்கள் திரும்பி ஸ்ரீரங்கம் செல்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடும். அரண்மனை வண்டி எது இருந்தாலும் அனுப்பும்,'' என்று உத்தரவிட்டார்.

''இளவரசி....''

''அதைப்பற்றிக் கவனிப்போம்.''

''எப்பொழுது?''

''இனிமேல் எப்பொழுது கவனித்தால் என்ன?''

''மகாராஜா! இளவரசியாருக்கு ஆபத்து ஏதாவது நேர்ந்தால்?''

''அவளுக்குத் தற்காப்பு செய்து கொள்ளத் தெரியும்'' என்று கூறிய பிரதாப்சிங் ''இப்பொழுது என் பெண்ணைவிட முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயங்கள் இருக்கின்றன. நீர் போய் மானாஜியை அனுப்பும்,'' என்று உத்தரவிட்டார். அவர் குரலில் கவலை பாய்ந்து நின்றது. அந்தக் கவலையைக் கலைக்கவோ குலைக்கவோ தெரியாது, திடீரென ராஜபேரிகை திமுதிமுவென சப்தித்தது வெளியே கோட்டையின் வடக்கு திசையில். அதே சமயத்தில் உள்ளே சாளரத்தின் மூலம் மன்னனை நோக்கி ஒரு பேரம்பும் பாய்ந்து வந்தது. (தொடரும்)

(6·1·77) 4.5

# ராஜபேரிகை

## 12. காரணங்கள் மூன்று

அரசகுலத்தார் வரவையோ அல்லது எதிரிகள் வரவையோ மட்டும் குறிப்பதற்காக ஒலிக்கும் அரண்மனைக் கோட்டை வாசல் ராஜபேரிகை திடீரென திமுதிமுவென சப்தித்ததே அரசன் ஆஸ்தான அறையிலிருந்த டபீர் பண்டிதருக்கும் மற்றொரு கைங்கர்யபரருக்கும் திகிலை விளைவித்ததென்றால், அதைத் தொடர்ந்து பேரம்பு ஒன்றும் சாளரத்தின் மூலமாக அரசனை நோக்கிப் பாய்ந்து வந்தது, பயமென்பதை அறியாத பட்டாடையாருக்குக்கூட ஓரளவு பயத்தை விளைவிக்கவே செய்தது. ஆனால் இவை அனைத்தும் பிரதாப ஸிம்ஹன் என்று மகராஷ்டிரக் கவிஞர்களாலும் பிரதாப்சிங் என்று வெளிநாட்டு வெள்ளைக்காரர்களாலும் உள்நாட்டு முகம்மதியர்களாலும் அழைக்கப்பட்ட தஞ்சை மன்னருக்கு மட்டும் எந்தவித அச்சத்தையோ அதிர்ச்சியையோ விளைவிக்காததால் அவர் இருந்த இடத்தை விட்டு நகராமலே உள்ளே பறந்து வந்த பேரம்பை மட்டும் கவனித்தார்.

வந்த அம்பும் அவர்மீது விழாமல் எட்ட இருந்த மஞ்சத்தின் மீதே விழுந்ததால் அதை எடுக்க மட்டும் மகாராஜா நாலடி நடந்து மஞ்சத்திலிருந்த அந்தப் பெரிய அம்பைக் கையிலெடுத்துத் தூக்கினார். அம்பின் நுனி நன்றாகச் சிறுசிலையால் சுற்றப்பட்டிருந்தது மட்டுமல்லாமல், அதன் இரும்பு முகப்புக்கு அடுத்தபடி இருந்த மரப்பகுதியில் ஒருசிறு முடிப்புத் தொங்கியதையும் கண்ட பட்டாடையார்கூட தமது முகத்திலிருந்த சினத்தை நீக்கிக் கொண்டு வியப்புடன் நோக்கினார் மன்னர் கையிலிருந்த வாளியை. பிரதாப்சிங் மகாராஜாவின் கண்கள் ஒரு விநாடி அந்த வாளியையும் அதன் கழுத்திலிருந்த சிறு முடிப்பையும் கூர்ந்து நோக்கின. அம்பின் முகப்பில் கெட்டியான சீலைத்துணியொன்று சுற்றப்பட்டிருந்ததைக்கூடப் பார்த்தார் மகாராஜா. பிறகு மெல்ல முடிப்பை அவிழ்த்து அதற்குள்ளிருந்தவற்றை நோக்கிவிட்டு அவற்றில் இரண்டொன்றைக் கையால் தடவியும் பரிசோதித்துவிட்டு முடிப்பை டபீர் பண்டிதரிடம் நீட்டினார்.

முடிப்பிலிருந்தவற்றை டபீர் பண்டிதர் பார்த்ததும் அவர் முகத்தில் கிலேசம் மிதமிஞ்சிப் பரவவே, ''அரசகுமாரியின் நகைகள்!'' என்று குரல் நடுநடுங்கச் சொற்களை உதிர்த்தார்.

முடிப்பிலிருந்த நகைகளைப் பட்டாடையார் பார்த்ததும், அரங்கன் கோயிலில் நடந்த தடபுடலில் அரசகுமாரியின் நகைகளை அவர் சரியாகப் பார்க்காததால், ''இவையா! அரசகுமாரியின் நகைகளா!'' என்று வினவினார் வியப்புடனும் திகிலுடனும்.

இதற்கு அமைச்சர் பதிலேதும் கூறவில்லை, பதில் கூறத் திராணி இல்லாததால், நா எழாததால்.

பிரதாப ஸிம்ஹ மகாராஜாவே கூறினார் மிகுந்த நிதானத்துடன், ''ஆம்,'' என்று.

''மகாராஜா! அப்படியானால் இந்த அம்பு....'' என்று பட்டாடையார் சிறிது கலக்கத்துடன் வினவினார் மன்னரை நோக்கி.

''மகாராஷ்டிரர்கள் அம்பு.'' மகாராஜாவின் குரலில் லேசாகச் சீற்றமிருந்தது.

''மகாராஷ்டிரர்கள் வாள் வீரர்களே தவிர வில் வீரர்கள் என்று கேள்விப்பட்டதில்லையே,'' என்றார் ரங்கதாஸரான பட்டாடையார்.




"தஞ்சை மண்டலத்துக்கு வந்துள்ள மகாராஷ்டிரர்கள் சிலர் தமிழ்நாட்டு வில் வீரர்களிடமிருந்து வில் வித்தையும் பழகியிருக்கிருர்கள். அவர்களில் ஒருவர் அதில் கைதேர்ந்தவர்," என்ருர் மகாராஜா.

அதுவரை திகில் பிடித்து நின்ற டபீர் பண்டிதர், "என்ன சொல்கிறீர்கள் மகாராஜா?" என்று வினவிஞர்.

"எனது பெண் க்ஷேமமாயிருக்கிருள்," என்று அறிவித்த மகாராஜாவின் குரலில் சிறிது சாந்தியும் ஒலித்தது.

டபீர் பண்டிதரும் மற்ற இருவரும் ஏதுமறியாமல் திணறிஞலும் மகாராஜா மட்டும் அம்பை மீண்டுமொருமுறை பரிசோதித்துவிட்டு டபீர் பண்டிதரை நோக்கி, "முராரி ராவின் பாதுகாப்பு நந்தினிக்கு இருக்கிறது. ஆகையால் கவலை வேண்டாம். இந்த அம்பைப் பத்திரமாய் வைத்திருங்கள்," என்று கூறி அம்பையும் பண்டிதரின் கைகளில் திணித்தார்.

பண்டிதர் பிரமிப்பும் பல மடங்கு உயர்ந்ததால், "என்ன! இது முராரி ராவின் அம்பா!" என்று குரலிலும் பிரமிப்புத் துலங்க விசாரித்தார்.

"அதன் இறகுகளுக்குக் கீழே இருக்கும் குறியைப் பாரும். இந்தக் குறி முராரி ராவின் குறுவாள்களிலும், வாள்களிலும் இருக்கும்," என்று மகாராஜா சுட்டிக் காட்டிஞர்.

அம்பைக் கூர்ந்து நோக்கிய பண்டிதர் தமது பெரிய வட்டாத் தலைப்பாகையுடன் தலையைச் சற்று அளவுக்கு அதிகமாகவே அசைத்து அரசர் சொன்னதை ஆமோதித்தார். இருப்பினும், "முராரி ராவ் எப்படி எங்கு அரசகுமாரியைச் சந்தித்தார்? இந்த அரண்மனைக்குள் நாம் அறியாமல் எப்படி நுழைந்தார்? நுழைந்தவர் இந்த அம்பை எதற்காகச் சாளரத்தின் மூலம் எய்தார்?" என்று கேள்விகளைச் சரமாரியாகத் தொடுத்தார்.

மகாராஜாவின் இதழ்களில் இகழ்ச்சி கலந்த புன்சிரிப்பு ஒன்று உதயமாயிற்று. வருமானத்துறை மந்திரி அத்



''வரும் வழியில் காலில் கண்ணாடி குத்தி..''

''அந்த நொண்டிச் சமாதானம் தேவை இல்லே. ஏன் லேட்? எழுதித் தா.''

தத் துறையின் விவகாரங்களில் இணையற்ற அறிவு படைத்தவரானாலும் மற்ற விவகாரங்களில் அதிகப் பரிச்சயமில்லாதவர் என்ற பொருள் மகாராஜாவின் புன்சிரிப்பில் தெளிவாகப் பளிச்சிட்டது. ஆனால் அதை வெளிக்குக் காட்டாத மகாராஜா கூறினர். ''முராரி ராவுக்கும் நமக்கும் அதிக நட்பில்லை என்பது உலகறிந்த விஷயம். ஆகவே அவர் என்னை நேரில் சந்திக்க இஷ்டப்படவில்லை,'' என்று.

''அதனால்?'' டபீர் பண்டிதரின் கேள்வி சுரணையின்றி வந்தது அவர் உதடுகளிலிருந்து.

''அரண்மனைக்குள் வந்து புரவியில் அமர்ந்தபடியே இந்தச் சாளரத்துக்குள் இந்த அம்பை எய்துவிட்டுப் போயிருக்கிறார்,'' என்று விளக்கினர் மகாராஜா.

''அவர் உள்ளே வந்ததால்,'' பண்டிதர் பேச்சை முடிக்கவில்லை.

''அவர் அரசகுலத்தின் தூர உறவினராதலால் ராஜபேரிகை சப்தித்தது.''

''அப்படியா!''

''ஆம். தம்மை அறிவித்துக் கோட்டைக்குள் நுழைந்தார். அவரது வாயு வேகப் புரவியில் வந்து அம்பெய்தார், போய்விட்டார்.''

''இந்த அம்பு தவறி மன்னர்மீது விழுந்திருந்தால்?''

''எதுவும் ஆகாது. முனை கட்டப்பட்டிருக்கிறது. முடிச்சு அதன் வேகத்தைத் தளர்த்தியிருக்கிறது. இந்த முடிச்சுப் பளுவுடன் அம்பெய்யக்கூடிய மகாராஷ்டிரர் இருவர்தான் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் முராரி ராவ்''

இதைக் கேட்டதும் அந்த அறையில் மௌனம் நிலவியது சில விநாடிகள். அதைப் பட்டாடையார் கலைத்து, ''மகாராஜா! அரசகுமாரியின் நகைகள் எப்படி முராரி ராவின் கைகளில் கிடைத்தன?'' என்று வினவினர்.

''அரச குமாரியே கொடுத்திருக்கிறாள். வழியில் ஆற்காட்டுப் படைகள் நடமாடுவதாலும், அவர்கள் யாரையும் கொள்ளையிடுவதாலும் அவர்களிடமிருந்து பாதுகாக்க இந்த நகைகளை முராரி ராவ் வாங்கிக்கொண்டிருக்கிறார்,'' என்று விளக்கினர் பிரதாப ஸிம்ஹ மகாராஜா.

ஏதோ அத்தனையையும் நேரில் பார்த்ததுபோல் மகாராஜா சொன்னது பண்டிதருக்கும் மற்றவர்களுக்கும் அதிக நம்பிக்கையை அளிக்காவிட்டாலும் மேற்கொண்டு மகாராஜாவைக் கேள்விகள் கேட்பது உசிதமில்லையென்ற காரணத்தால் மற்றவர்கள் வாளாவிருந்த சமயத்தில் ஆஸ்தான அறைக் கதவின் மூலம் உள்ளே நுழைந்த காவலன் ஒருவன் தலை தரையில் தொடும்படி மன்னரை வணங்கிவிட்டு, ''ஸதாரா தளபதி இதைத் தங்களிடம் கொடுக்க உத்தரவிட்டார்,'' என்று கூறி ஒரு கடிதத்தை நீட்டினன்.

மகாராஜா அதைப் பிரித்துப் படித்ததும் அவர் முகத்தில் சிறிது குழப்பமும் துளிர்த்தது. ''இது சற்று விசித்திரமாகத்தானிருக்கிறது. ஆனால்

அக்கறையாய் மனைவி தலைக்கு
வார்க்கும்
பாக்கியம் இந்தக் காலத்தில்
எத்தனை கணவன்மார்களுக்குக்
கிடைக்கிறது?

படம்: மோகமும் முக்தியும்
நடிப்பு: ஷீலா. நஸீர்

தவறில்லை," என்று இரைந்தே சொற்களை உதிர்த்தார்.

"என்ன மகாராஜா?" பண்டிதர் குரலில் கவலை தெரிந்தது.

"இதில் கண்டிருப்பது." என்று கூறிப் பண்டிதரிடம் ஓலையைக் கொடுத்தார் மகாராஜா. அத்துடன், "இரைந்தே படிக்கலாம்," என்றும் கூறினார்.

ஓலையிலிருந்த விஷயத்தைக் கண்டதும் பண்டிதர் முகத்தில் சீற்றம் தெரிந்தது. "அயோக்கியன்! அயோக்கியன்!" என்று இருமுறை உணர்ச்சி மீறிக் கூவியும் விட்டார் டபீர்.

"படியும்." மகாராஜாவின் கட்டளை திட்டமான குரலில் ஒலித்தது.

மெள்ள மெள்ளப் படித்தார் ஓலையைப் பண்டிதர். "பிரதாப ஸிம்ஹருக்கு முராரி ராவ் எழுதிக் கொண்டது. நந்தினியை நல்ல தளபதி காவலில் அனுப்பாது கத்தியை உருவக் கூடத் தெரியாத டபீரின் துணையுடன் அனுப்பியது சரியல்ல. அதுவும் நாடு இன்றிருக்கும் நிலையில் உங்கள் எல்லையை விட்டு ஆற்காடு ஆதிக்கத்திலிருக்கும் ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பியது மிக மிகத் தவறு. ஆனால் அரச குமாரியைத் தமிழகத்தின் சிறந்த வீரன் ஒருவனிடம் ஒப்படைத்திருக்கிறேன். ஆகவே கவலை வேண்டாம். நந்தினியின் நகைகளை நான் எடுத்துக்கொண்ட காரணம் மற்றவர்களுக்குப் புரியாவிட்டாலும், உங்களுக்குப் புரியும் என்று நினைக்கிறேன்—முராரிராவ்," என்ற வரிகளை எரிச்சலுடன் படித்தார் பண்டிதர்.



இதைக் கேட்ட பட்டாடையார் உள்ளத்தில் அரச குமாரி தப்பியதால் ஏற்பட்ட சாந்தியின் விளைவாக அவரிடமிருந்து பெருமூச்சொன்று வெளிவந்தது. "நல்லவேளை," என்று அந்தப் பெருமூச்சைத் தொடர்ந்து ஒரு சொல்லையும் உதிர்த்தார் பட்டாடையார்.

"எது நல்லது?" என்று சீறிய டபீர் பண்டிதர், பட்டாடையாரை நோக்கித் தமது தீ விழிகளைத் திருப்பினார்.

"அரசகுமாரிமீது அரங்கன் கருணைக் கண் விழுந்தது," என்று பதில் சொன்ன பட்டாடையார், அரங்கன் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீரங்கத்தின் திசையில் கண்களைத் திருப்பி, கைகளையும் கூப்பினார்.

கோபத்தின் காரணமாக நிதானத்தைத் தப்ப விட்டிருந்த டபீர் பண்டிதர், "அரங்கன் கண்தான் போய் விட்டதே!" என்றார்.

"ஒரு கண், அதுவும் நாம் புதைத்த ஒரு கல், அதுதான் போயிற்று. அகண்டமான அவன் அருட் பார்வை எங்கும் எப்பொழுதும் போகாது. அது விழுபவர்கள்மீது விழும். அரச

குமாரியின் மீது விழுந்திருக்கிறது,'' என்று உறுதியுடன் கூறினர் பட்டாடையார்.

''அரசகுமாரியின்மீது என்ன அத்தனை பரிவு ஸ்ரீரங்கநாதனுக்கு?'' என்று கேட்டார் பண்டிதர்.

''அரசகுமாரிக்கு அவனிடமுள்ள பக்தி காரணம். பத்துடை அடியவர்க்கு எளியனை பகவான் அடியார்களை எப்பொழுதும் காத்து நிற்கிருன். ஆனல் பிறர்களுக்கு....'' என்ற பட்டாடையார் அத்துடன் நிறுத்திக் கொண்டார்.

''பிறர்களுக்கு?'' பண்டிதரின் கேள்வி சிறிது சினத்துடன் ஒலித்தது.

''பிறர்களுக்கு அரிய வித்தகன்,'' என்ற பட்டாடையார், ''பக்தியில்லாதவர்கள் அவன் சங்கல்பத்தைப் புரிந்துகொள்ள முடியாது,'' என்றும் திட்டமாகக் கூறினர்.

அவர்கள் சண்டையை அத்துடன் நிறுத்தத் தீர்மானித்த மகாராஜா ''அமைச்சரே! இவர்களைத் தகுந்த மரியாதைகளுடன் ஊருக்கு அனுப்பி வையுங்கள். தலை போகும் காரியங்கள் நம்மை எதிர்நோக்கியிருக்கின்றன,'' என்று உத்தரவிட்டார்.

பண்டிதர் வாயைப் பிளந்தார். ''தகுந்த..மரியாதைகளுடனு!'' என்றும் கேட்டார் ஆச்சரியத்துடன்.

''ஆம். கோவிலில் தொண்டு புரிபவர்களுக்கு நாம் என்ன மரியாதை செய்கிறோம்?'' என்ற மகாராஜாவின் கேள்வி மேலும் திகைக்க வைத்தது பண்டிதரை. ''பெருமாள் கண் வைரம் காணுததற்கு இவர்களை விசாரிக்க வேண்டாமா?'' என்று கேட்டார்.

''இவர்கள் நமது ராஜ்யத்தைச் சேர்ந்தவர்களல்ல. ஸ்ரீரங்கம் தஞ்சை அரசைச் சேர்ந்ததல்ல. ஆகவே விசாரிக்க வேண்டியது நாமல்ல. தவிர, இவர்கள் அரங்கன் சந்நிதிக் கதவைத் திறந்தபோதே பெருமாளின் கண் வைரம் காணவில்லை. தவிர, நீர் கூறியபடி நீங்கள் அங்கு போகுமுன்பு உங்களை அறியாமலே இன்னெரு வீரன் அங்கிருந்திருக்கிருன். அவன்கூட அதைத் திருடியிருக்க முடியாது. ஏனென்ருல் திருட வந்தவனுயிருந்தால் உங்கள் வருகைக்காக அவன் காத்திருக்க மாட்டான்,'' என்று விளக்கிய மன்னவர், தமது பெருந்தன்மையை மேலும் காட்




மராட்டிய மாவீரன் சத்ரபதி சிவாஜியின் மூத்த மகன் சாம்பாஜி. சிவாஜியின் ஏழு மனைவிகளுள் முதல் மனைவியான சாய்பாய்க்குப் பிறந்த சாம்பாஜி, சிறு வயதிலேயே அவரது வாரிசாக நியமிக்கப்பட்டான். சாம்பாஜி சிறந்த போர் வீரன்; ஆனல் யாராலும் திருத்தமுடியாத குடிகாரனுக, பெண் பித்தனுக இருந்தான்.

இருபது வயதான சாம்பாஜியை ஒருமுறை ஒழுக்கக் கேட்டிற்காகப் பன்ஹாலாக் கோட்டையில் சிறை வைத்தார் சிவாஜி. அங்கிருந்து தப்பிச் சென்று பின்னர் திரும்பி வந்த சாம்பாஜியைச் சிவாஜி மன்னித்து மீண்டும் பன்ஹாலாவிலேயே கடுமையான கண்காணிப்பின் கீழ் வைத்தார்.

அப்போது ரைகட்டில் தந்தை மரணப் படுக்கையில் கிடப்பதை அறிந்த சாம்பாஜி அவரைக் காண ஓர் ஒட்டகத்தின் மீதேறி இரவு பகலென்று பாராது விரைந்தான். ஆனல் அவன் ரைகட் போய்ச் சேர்வதற்குள் சிவாஜி இறந்துவிட்டார்.

ஏமாற்றத்தால் கடுங்கோபமுற்ற சாம்பாஜி தனது கால தாமதத்திற்கு காரணம் தன்னை ஏற்றிவந்த ஒட்டகம்தான் எனக் கருதித் தன் வாளால் ஒரே வீச்சில் அதன் தலையைத் துண்டித்தான்!

அதுமட்டுமல்ல. தலையில்லாத ஒட்டகத்தின் சிலையொன்றை ரைகட் கோட்டை நுழைவாயிலில் வைத்தான். எதற்காக? பொதுவாக, பிற ஒட்டகங்களுக்கெல்லாம் அது ஓர் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்பதற்காக அப்படிச் செய்ததாகக் கூறினுனும் சாம்பாஜி.

தலை இல்லாத அச்சிலையை இன்றும் அக்கோட்டையின் வெளிப்புற வாயிலில் காணலாம்.

—க. வெங்கடேசன்

டத் தொடங்கி "சந்நிதிப் பெரியோர்களே! உங்களை இங்கு அழைத்து வந்த அபசாரத்திற்கு அமைச்சரையும் என்னையும் மன்னித்துவிடுங்கள்," என்றும் கூறிவிட்டு "சரி, டபீர்! இவர்களை அனுப்பிவிட்டு வாரும்," என்று கூறி, பேட்டி முடிந்துவிட்டது என்பதற்கு அறிகுறியாகக் கையை அசைத்தார்.

ஆனால் பேட்டி அவ்வளவு சுலபத்தில் முடிவதாயில்லை. மீண்டும் ஒரு காவலன் உள்ளே நுழைந்து தலை வணங்கினான். மகாராஜாவின் விழிகள் அவனை நோக்கிக் கேள்வி கேட்கும் பாவனையில் திரும்பியது. காவலன் கூறினான், "தங்கள் பேட்டிக்கு இருவர் காத்திருக்கிறார்கள்," என்று.

"யாரது?" என்ற தஞ்சை மன்னர், "யாராயிருந்தாலும் கோட்டைக் காவலரைப் பார்க்கச் சொல்," என்று உத்தரவிட்டார்.

மன்னர் உத்தரவுக்கு மசியவில்லை காவலன். "தங்களைத்தான் பார்க்க வேண்டுமாம்," என்று பணிவுடன் தெரிவித்தான்.

"முடியாதென்று சொல்லிவிடு." மகாராஜாவின் குரல் கடுமையுடன் ஒலித்தது.

"சிபாரிசுடன் வந்திருக்கிறார்கள்." காவலன் மீண்டும் கூறினான் வலியுறுத்தி.

"யார் சிபாரிசு?"

"அரசகுமாரியின் சிபாரிசு."

"என்ன!"

"ஆம். அரச குமாரிதான்."

"எங்கிருக்கிறாள் அவள்?"

"அந்த இருவருடன் வெளியில் காத்திருக்கிறார்கள்."

"என் மகளா!"

"ஆம்."

"எப்பொழுது வந்தாள்?"

"இப்பொழுதுதான்."

"ராஜபேரிகை ஏன் சப்திக்கவில்லை?"

"அரசகுமாரியை அடையாளம் புரியவில்லை."

பிரதாப் ஸிம்ஹர் காவலனை வியப்புடன் நோக்கினார். அவரைவிட வியப்புடன் பட்டாடையாரும் நோக்கினார். பண்டிதர் மட்டும் கோபத்துடன், "அரசகுமாரியையே உங்களுக்கு அடையாளம் புரியவில்லையா?" என்று கேட்டார்.

"இல்லை."

"காரணம்?"

காரணம் அவன் விவரிக்கத் தேவையில்லாதிருந்தது. ஏனென்றால் காரணம் ஓசைப்படாமல் ஆஸ்தான அறையின் வேலைப்பாடு மிக்க வாயிற்படியில் நின்று கொண்டிருந்தது. அதற்குப் பின்னால் மற்றும் இரண்டு காரணங்களும் நின்றிருந்தன.

(தொடரும்)

இண்டியன் எக்ஸ்பிரஸ் ரேடியோ பகுதியைப் பார்த்துவிட்டு என் பெண், "அம்மா! இன்று இரவு மதுரை முத்து கச்சேரி," என்று கூவினாள்.

ஆச்சரியத்துடன் பேப்பரை வாங்கிப் பார்த்தேன். இரவு 11 மணிக்கு Madhurai Mutto—Vocal என்று போட்டிருந்தது. எனக்குக் குழப்பம். மதுரை முத்து கச்சேரி செய்யும் அளவுக்கு அத்தனை பெரிய பாடகரா!

பிறகு ரேடியோவில் நிகழ்ச்சிக் குறிப்புகள் கேட்டபோதுதான் மதுராய் மட்டு என்னும் பெண்மணியின் வட இந்திய இசை என்று தெரியவந்தது.

—விசாலாட்சி நடராசன்



குப்பு: மாட்டிட்டீங்களா — ஹாண்ட்ஸ் அப்? யாரும் நகரக்கூடாது. நகர்ந்தீங்க. சுட்டுடுவேன்.

ராம: அடசீ. . . .. அதுல புல்லட்டே இல்லே. (பிடுங்கிக்கொண்டு புல்லட் போடுகிறான்)

குப்பு: அடப் பாவி! போலித் துப்பாக்கி கொடுத்தா என்னை ஏமாத் திட்டே!

ராம: ஆமாம். உனக்குப் புல்லட் போட்டுத்தராங்க—பெரிய ஜாங்கோ. . . .இதைத் திருப்பி மண்டைல ஓங்கி ஒரு அடி. . . .எல்லாம் சரியாயிடும்.

முத்து: மைதிலியம்மா எங்கே? (வாசலிலிருந்து வருகிறாள்)

மைதிலி: வாசல்ல கோலம் போடப் போனேன். கிளம்பிட்டீங் களா?

ராம: இப்ப என்ன கோலத் துலே எழுதியிருக்கீங்க?

மைதிலி: வெல்கம் எகெய்ன். போறச்சே பாத்திட்டுப் போங்க!

முத்து: வரேங்க.

மருது: ஓ. கே. தென் ஸீ யு.

(எல்லோரும் கிளம்புகிறார்கள். போகும்போது புதிதாக இருவர் கையில் துப்பாக்கியுடன் வருகிறார்கள்.)

ஒருவன்: ஹாண்ட்ஸ் அப். (எல்லோருமே கையைத்தூக்குகிறார்கள்) யாராவது நகந்தீங்க—சுட்டுத் தள்ளிடுவோம்—

முத்து: அது. . . .வந்து ..

ஒருவன்: ம். .தள்ளி நில்லுங்க. . இந்த வீட்டுக்குச் சொந்தக் காரர் யாரு?

சுதர்: நான்தான்.

ஒருவன்: சார்— ஒண்ணும் பயப்படாதீங்க. நாங்க உங்களை ஒண்ணும் பண்ண மாட்டோம். எங்களுக்குத் தேவை உங்க பணம் இல்லே—இந்த வீட்டிலே தங்கப்போகிறோம். அதுவும் இரண்டு நாளைக்கு.

சுதர்: மறுபடியும் இந்த வீட்டிலே கிட்னாப்பிங்கா?

முத்து: சார் . . . நாங்க 12 மணி பிளேனில் சிங்கப்பூர் போய் வரோம்—எங்களை மட்டும். . .

ஒருவன்: நோ. . நோ. ஐயம் நாட் கோயிங் டு அலௌ எனி ஒன். ரெண்டு நாள் பொறுத்துட்டுதான் தீரணும்.

குப்பு: ஏம்பா . . . .கிட்னாப் பண்ணப் போறே, சரி. அதுக்கெல்லாம் ஐந்து நாள் வேணுமே. அதெப்படி ரெண்டு நாள் போறும்கறே?

ஒருவன்: நாங்க சில பணக்காரங்களின் பேரைக் குலுக்கிப்போட்டு ஒரு பணக்காரன் பேரை எடுத்தோம். அவரோட பையனைத்தான் கடத்திட்டு வந்திட்டிருக்கோம். பணம் பறிக்க வேண்டியதுதான் பாக்கி—இதுல எங்க அதிர்ஷ்டம் பாருங்க—பையன் சுலபமா கிடைச்சுட்டான். . . . பக்கிரி! போய்ப் பையனை அழைச்சிட்டு வாடா. . . .!

(பக்கிரி போய் முரளியுடன் வருகிறான்)

எல்லோரும்: அதே முரளி!!

முரளி (உள்ளே வந்து): அதே வீடு!

திரை



எழுதியவர் : மோகன்

| | | | | |
|---|---|---|---|---|
| சுதர்சனம் | — சுந்தரராமன் | | பஞ்சாபகேசன் | — தியாகு |
| உப்பிலி | — எஸ். வி. சேகர் | | ராகவாச்சாரி | — ராமன் |
| குப்புசாமி | — எம். ஆர். ராஜாமணி | | முரளி | — மாஸ்டர் ஸ்ரீதர் |
| முத்து | — கோபிநாத் | | திருடர்கள் | — ரகு குண்டு |
| மருது | — குருமூர்த்தி | | கடிகலிங்கம் | — பாலன் |
| ராமபத்ரன் | — மானேஜர் சீனு | | மைதிலி | — நவகுமாரி |
| மிலிடரி மாதவன் | — சங்கர் | | உஷா | — விஜயா |
| ஏகலைவன் | — சாம்ராஜ் | | | |

தயாரிப்பு : நாடகப்ரியா குழுவினர்

புகைப்படங்கள்: உத்ரா, எஸ்.வி. சேகர்

தமது கண்களில் படரவிட்டுக்கொண்டு, ''அரசகுமாரியவர்கள் தரிக்க வேண்டிய வேஷமல்ல இது,'' என்று கடுப்புடன் சொற்களை உதிர்த்தார்.

''ஆம் ஆம். கேவலம் பணிப்பெண் வேஷம் அரசகுமாரியின் அந்தஸ்துக்குத் தக்கதல்ல,'' என்று பட்டாடையாரும் மெல்லக் கலந்து கொண்டார் பண்டிதருடன்.

ஆனால் அந்த இருவர் சொற்களையும் காதில் வாங்கிக் கொள்ளாமல் அறைக்குள் நுழைந்துவிட்ட அரசகுமாரி தனக்குப் பின்னால் நின்றிருந்த இருவரையும் ''உள்ளே வாருங்கள்,'' என்று அழைக்கவே செய்தாள்.



## 13. மந்திரக் கடிதம்

அரசன் ஆஸ்தான அறையின் அலங்கார வாசற்படிக்கு அதிக அலங்காரத்தை அளிக்க உன்னதப் பதுமையொன்று நிறுத்தப்பட்டிருக்கின்றதோ என்று பார்ப்பவர் பிரமிக்கும் வகையில் நின்றிருந்த அரசகுமாரியைப் பார்த்த பிரதாபசிங்கின் கண்கள் மகளுடைய ஆடை அணிகளில் ஏற்பட்டிருந்த மாறுதலைக் கவனித்தாலும், அதற்காகப் பெரும் வியப்பைக் காட்டவில்லை. ஆனால் டபீர் பண்டிதர் மட்டும் சிறிது கோபத்தைத்

உள்ளே நுழைந்த இருவரில் ஒருவன் அரசனுக்குத் தலை வணங்கினான். இன்னொருவன் கால்களைக் குவிய வைத்து வலது கையால் தனது தலையிலிருந்த ஹாட்டை எடுத்து இடது பக்கத்தில் அடக்கிக் கொண்டு வலது கையை உயரத் தூக்கிக் கம்பீரமாக சலாம் அடித்தான். அந்த இருவர் வருகையும் அறையிலிருந்த ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒவ்வொருவித உணர்ச்சி

யைத் தூண்டியிருந்தது. மன்னன் தனது மகளுடன் வந்த தமிழக வாலிபனையும் வெள்ளைக்கார வாலிபனையும் பார்த்து அவர்கள் எதற்கும் அஞ்சாத வீரர்களென்பதைக் கணமாத்திரத்தில் புரிந்து கொண்டார். பட்டாடை யாரும் மற்றொரு சந்நிதி கைங்கர்ய பரரும் விஜயகுமாரனை அடையாளம் கண்டுகொண்டதால் அரசகுமாரியைக் களவாடியவன் அவளுடன் அரச சந்நிதானத்துக்கே வந்து விட்டாலும், அந்த இன்னொரு வெள்ளைக்காரன் யார், எதற்காக வந்திருக்கிறான் என்பதை அறியாமல் குழம்பவும் செய்தனர்.

டபீர் பண்டிதர் உள்ளம் மட்டும் தமிழக வாலிபனைக் கண்டதும் எரிமலையாகிவிட்டது. தான் அரசரிடம் பட்ட அபக்கியாதிக்கெல்லாம் அவன் தான் காரணமென்பதை எண்ணியதால் என்ன செய்வதென்று தெரியாமல் பல விநாடிகள் கலங்கிய பண்டிதர் அந்தக் கலக்கத்தை விலக்கிக் கொண்டு "இவன்தான் அவன்," என்று அறிவித்தார் மன்னனை நோக்கி.

அதுவரை பேசாமலிருந்த வெள்ளைக்கார வாலிபன், "பெயர் விஜயகுமாரன். என் பெயர் ராபர்ட் கிளைவ்," என்று விஜயகுமாரனையும் அறிமுகப் படுத்தித் தன்னையும் அறிமுகப்படுத்திக் கொண்டான்.

தோன்றி மறைந்தது. "மதுரை நாயக்க மன்னர் வம்சத்தவனா?" என்று வினவினார் அந்த யோசனையைத் தொடர்ந்து.

"ஆம்." ஒற்றைச் சொல் மட்டும் பதிலாகவந்தது.

"முராரிராவை உனக்கு முன்பே தெரியுமா?" என்று வினவினார் மகாராஜா.

"தெரியாது."

"அரசகுமாரியை?"

"தெரியாது"

"இந்த...."

"கிளைவையும் தெரியாது. இந்த அமைச்சரைக்கூடத் தெரியாது," என்று பேச்சோடு பேச்சாக டபீர் பண்டிதரையும் விஜயகுமாரன் கையால் சுட்டிக் காட்டினான்.

பிரதாப் சிங்கின் உதடுகளில் லேசாகப் புன்முறுவல் தவழ்ந்தாலும் அது முற்றும் வெளியில் தெரியக்கூடிய வகையில் தோன்றவில்லை. சர்வ சாதாரண குரலிலேயே கேட்டார் மகாராஜா, "யாரையும் தெரியாது. ஆனால் எல்லோருடனும் சம்பந்தப்பட்டிருக்கிறாய்," என்று.

விஜயகுமாரன் கண்கள் மன்னனை நன்றாக ஏறெடுத்து நோக்கின. "மகாராஜா! இன்னொருவரைக்கூட

# ராஜ பேரிகை

சாண்டில்யன்

கிளைவின் பெயர் அப்பொழுது எந்தவிதத்திலும் பிரசித்தப்படாத காரணத்தால் மகாராஜா பிரதாப் சர்வசாதாரணமாகத் தலையை அசைத்து அவன் சொன்னதை ஆமோதித்து விட்டு விஜயகுமாரனை நோக்கினார். முராரிராவின் கடிதத்தில் குறிப்பிட்டிருந்த சிறந்த தமிழக வீரன் இவனாகத் தானிருக்க வேண்டும் என்று தீர்மானித்த பிரதாப் சிங், "நீ எந்த ஊர்?" என்று அவனை மட்டும் வினவினார்.

"தற்சமயம் சிவகங்கை," என்று கூறினான் விஜயகுமாரன்.

பிரதாப் சிங் மகாராஜாவின் கண்களில் திடீரென ஏதோ யோசனை

எனக்குத் தெரியாது," என்று கூறினான் விஷமம் சொட்டும் குரலில்.

புரிந்ததற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார் பிரதாபஸிம்ஹர். "என்னைச் சொல்கிறாய்?" என்றும் கூறினார் லேசாக நகைத்து.

அரசரின் நுண்ணறிவு விஜயகுமாரனைத் திகைக்க வைக்கவே அவன் பேசும் திறனிழந்து நின்றான் ஒரு

விஞடி. மறுவிஞடி கூறினன். "ஆம் மகாராஜா! வாழ்க்கையின் சந்தர்ப்பங்கள் ஏன் வருகின்றன, எப்படி வருகின்றன, யாருடன் நம்மைச் சேர்க்கின்றன, யாரிடமிருந்து பிரிக்கின்றன என்பதைச் சொல்ல முடிவதில்லை. ஒரே நாளில் தான் தஞ்சை அரசகுமாரியை, மன்னரை, அமைச்சரை, யாரும் அஞ்சும் முராரிராவை, சந்தாசாகேபின் உபதளபதியை, இதோ இந்தக் கிளேவை எத்தனை பேரைச் சந்தித்துவிட்டேன்! எத்தனை பெயருடன் எனக்கு உறவு ஏற்பட்டிருக்கிறது! எத்தனை விதமான உறவு ஏற்பட்டிருக்கிறது!" என்று கூறினன் உணர்ச்சியுடன்.

அவன் உணர்ச்சிவசப்பட்டதைக் கண்ட மகாராஜா மேலும் அவனைக் கூர்ந்து நோக்கினர் பல விநாடிகள் மௌனமாக. பிறகு டபீர் பண்டிதரை நோக்கி வினவினர், "இந்த வாலிபன் எப்படி நமது படைவீரரின் காவலை மீறி அரங்கன் சந்நிதி மண்டபத்துக்குள் வந்தான்?" என்று.

"அதுதான் புரியவில்லை," என்றார் டபீர் பண்டிதர்.

மகாராஜா அதற்குமேல் அதைப்பற்றிக் கேள்வி எதுவும் கேட்காவிட்டாலும் விஜயகுமாரனே பதில் சொல்லத் துவங்கி, "மகாராஜா! திருச்சி இப்பொழுது ஆற்காடு நவாப் அன்வருதீனின் இரண்டாவது இளவரசர் முகம்மது அலியின் வசத்திலிருக்கிறது. அவர் தங்களது நண்பராதலால் தங்கள் படைப்பிரிவு ஒன்று அந்தப் பகுதிக்கு வருவதும் ஸ்ரீரங்கத்தில் அரசகுமாரி நுழையும்போது காவல் புரிவதும் சாத்தியமாயிற்று. அரங்கன் சந்நிதியில் நுழைய விரும்பி சிவகங்கையிலிருந்து வந்த நான் ஸ்ரீரங்கம் பலத்த காவலில் இருப்பதைப் பார்த்து என் புரவியைத் திருப்பி ஆற்காட்டுப் பொதுச்சாலைக்கு வந்து கொள்ளிடத்தின் ஓரமாக ஸ்ரீரங்கம் வந்தேன். அன்று கோவில் காவலனெருவனிடம் வடக்குத் திட்டி வாசலை மட்டும் திறந்து வைக்க ஏற்பாடு செய்தேன். நன்ருக இருள் மூண்டு ஊரடங்கும் சமயம் வந்ததும் வடக்கு வாயிலில் புரவியை நிறுத்திவிட்டு திட்டி வாசல் வழியாக உள்ளே நுழைந்தேன். கோவிலின் உட்பகுதியில் யாருமில்லை" என்று சொல்லிக் கொண்டு போனவனை டபீர் பண்டிதர் இடைமறித்து, "அது என் உத்தரவு," என்ருர்.

விஜயகுமாரன் டபீர் பண்டிதரை நோக்கி, "நன்றி" என்ருன்.

"எதற்கு நன்றி?". டபீர் பண்டிதரின் குரலில் சினம் அபரிதமாக இருந்தது. (தொடரும்)

## முன் கதை

பிரிட்டிஷாரும் பிரெஞ்சுக்காரரும் தமிழகத்தில் வணிகராக நுழைந்து உள்நாட்டு அரசுகளின் சண்டையில் தலையிடத் துவங்கிய காலம். அந்தக் காலத்தில் ஒரு நாள் ஸ்ரீரங்க மகாக்ஷேத்திரத்தில் வீரர்கள் காவல் பலமாயிருக்க, தஞ்சை மன்னன் மகள் நந்தினியும், அமைச்சர் டபீர் பண்டிதரும் அரங்கன் கோவிலுக்குள் வந்தபோது அவர்களுக்கு முன்பாகவே சன்னதிக்கு எதிரில் இருந்த ஒரு வாலிபனைக் கண்டு திகைக்கிருர்கள்.

அரங்கன் சன்னதி திறக்கப்பட்டதும் அங்கு பெருமாளின் கண் வைரம் ஒன்று காணுதிருப்பதைக் கண்டு அந்த வாலிபனைத் திருடனென்று தீர்மானித்து அவனைக் கைது செய்யத் தம்முடன் வந்த வீரர்களுக்கு உத்தரவிடுகிருர் அமைச்சர். ஆனல் அந்த வாலிபன் வீரர்களை அச்சுறுத்தி அரசகுமாரியை அபகரித்துச் சென்று சமயபுரத்தில் முராரிராவ் என்ற மகாராஷ்டிரத் தளபதியைச் சந்திக்கிருன். அவர் உதவியால் அரசகுமாரியுடன் தப்பி தஞ்சை சாலையில் உள்ள சத்திரத்தில் ஜாபர்ட் லேன் என்ற பிரிட்டிஷ் ஸோல்ஜருடன் ஒட்டிக் கொண்டு அவன் உதவியால் அங்கிருந்த சந்தாசாகிபின் வீரர்களை வெற்றிகொண்டு தஞ்சை நோக்கி வருகிருன்.

தஞ்சையில் மன்னர் பிரதாப் சிங் தமது பெண்ணை அழைத்து வராது சன்னிதி அடியார்களைக் கொணர்ந்ததுபற்றி அமைச்சர் டபீரைக் கடிந்து பேசுகிருன். அப்போது ராஜபேரிகை சப்திக்க ஒரு அம்பு சாளரத்தின் மூலம் அரசகுமாரியின் நகை முடிப்புடனும் முராரிராவின் கடிதத்துடனும் வந்து விழுகிறது. அந்தக் கடிதத்திலிருந்து பெண் பத்திரமாயிருக்கிருள் என்பதைப் புரிந்துகொண்ட சமயத்தில் மன்னரை இருவர் பார்க்க வந்திருப்பதாகவும் அரசகுமாரியின் சிபாரிசுடன் வந்திருப்பதாகவும் காவலன் ஒருவன் அறிவிக்கிருன். "அரசகுமாரி வந்தால் ராஜபேரிகை ஏன் சப்திக்கவில்லை?" என்று மன்னன் வினவுகிருன். "காரணம் புரியவில்லை" என்று காவலன் கூறிய சமயத்தில், காரணம் மன்னர் அறை வாயிற்படியில் நின்றிருந்தது. அதற்குப் பின்னல் மற்றும் இரண்டு காரணங்களும் நின்றிருந்தன.




(13'ம் அத்தியாயம் தொடர்ச்சி)

"எதற்கு நன்றி கூறுகிருய்?" என்று டபீர் பண்டிதர் சினத்துடன் கேட்டார் விஜய குமாரனை.

"கோவிலுக்குள் காவல் வீரரை நிறுத்தாததற்கு. நிறுத்தி யிருந்தால் அத்தனை சுலபமாக நான் அரங்கன் சந்நிதிக்கு வந்திருக்கவும் முடியாது...." என்ருன் அவன்.

"அங்கு கூவியிருக்கவும் முடி யாது," என்ருர் டபீர்.

"என்ன கூவினுன்?" என்று மகாராஜா வினவினுர்.

"யாரோ நவாபின் தலையை வெட்டுவதாகக் கூவிக்கொண்டிருந் தான்.." என்ருர் டபீர்.

மகாராஜாவின் கண்களில் சட்டென்று ஒரு புத்தொளி தோன்றி மறைந்தது. பேச்சை மேற்கொண்டு வளர்த்தாமல், "நீ முராரிராவை எங்கு சந்தித்தாய்?" என்று வினவினுர்.

இதற்கு விஜயகுமாரன் பதில் சொல்லு முன்பு அரசகுமாரி முந்திக் கொண்டு, "சமயபுரத்தில் சந்தித் தோம்," என்று கூறியதன்றி பிறகுநடந்த விஷயங்களையும் சுருக்கமாகத் தெரிவித் தாள். "எதிரி வீரர் யாரும் அந்தப் பகுதியில் இல்லையென்று முதலில் நினைத் தேன். ஆனுல் சமயபுரத்து விவகாரத் துக்குப் பிறகு நிலைமை அப்படியில்லை என்று தெளிவாகிவிட்டதால் நான் ஆப ரணங்களுடன் அரசகுமாரியாக உலாவு வது சரியல்லவென்று முராரிராவ் நினைத் தார். ஆகையால் அவரிடம் ஆபரணங் களைக் கழற்றிக் கொடுத்தேன். பிறகு அவர் சொன்னபடி தஞ்சைச்சாலை சத் திரத்தில் இந்த உடையையும் அணிந்து கொண்டேன்." என்று கூறினுள் அரச குமாரி. பிறகு நடந்த சண்டை விவரங் களையும் எடுத்துரைத்து, "இந்த இரு வரின் துணையில்லாவிட்டால் நான் இந்த வேஷமும் போட்டிருக்க முடி யாது, இங்கு வந்திருக்கவும் முடியாது."

என்று கூறி மூழ்கினாள்.

அந்தச் சமயத்தில் டபீர் பண்டிதர் ஏதோ சொல்ல முயன்றதைக் கையசைப்பினால் தடுத்தார் மகாராஜா. பிறகு கிளைவ்மீது தமது பார்வையை நீண்ட நேரம் நிலைக்கவிட்டார். கடைசியாக "கிளைவ்! யூ வாண்ட் டு கோ அட் ஒன்ஸ்?" என்று ஆங்கிலத்தில் ஒரு கேள்வியையும் தொடுத்தார்.

பிரதாப்சிங்கின் ஆங்கில அறிவைக் கண்டு பிரமித்தான் கிளைவ். "உங்களுக்கு இங்கிலீஷ் தெரியுமா?" என்று தமிழில் அவனும் கேட்டான்.

"ஆம். உங்களுக்குத் தமிழ் தெரிந்த மாதிரி" என்றார் மகாராஜா தமிழில்.

கிளைவ் சிறிது யோசித்து விட்டுத் தலையை அசைத்தான். "யுவர் மெஜஸ்டி! *செய்ண்ட் டேவிட் கோட்டைக்குத் தானியப் பொருள்கள் அவசரம் தேவை. ஐ காண்ட் ஸ்டே," என்றான் கிளைவ் தமிழும் ஆங்கிலமும் கலந்த மணிப்பிரவாளத்தில்.

"இன்னும் இரண்டு மணி நேரம் கழித்து புறப்படலாம்," என்ற மகாராஜா, "டபீர்! இவர்களிருவருக்கும் இருக்க வசதி செய்யுங்கள். மீண்டும் கிளைவை இங்கு அழைத்து வாருங்கள்," என்று உத்தரவிட்டு நாலடி பின் நகர்ந்து தமது அரியாசனத்தில் அமர்ந்தார்.

கிளைவ் தலைதாழ்த்திப் பணிந்து வெளியே செல்ல மற்றவர்களும் பின் தொடர்ந்தனர். அரசகுமாரி மட்டும் தந்தையின் பக்கத்தில் நின்றிருந்தாள். பிரதாப் சிங் தமது மகளை நோக்கிப் புன்முறுவல் செய்தார். "மகளே! இனி நீ பணிப்பெண்ணாயிருக்க வேண்டியதில்லை அரசகுமாரியாக மாறலாம்," என்றார்.

நந்தினி புன்முறுவல் கொட்டினாள். "அப்பா! இந்த வாலிபன் யார்?" என்று வினவினாள்.

பிரதாப் சிங்கின் புன்முறுவல் சற்று அதிகமாக விரிந்தது அவர் உதடுகளில். "ஏன் கேட்கிறாய்?" என்று விசாரித்தார் விஷமமாக.

---

*பிரதாப் சிங்கை பிரிட்டிஷார் 'யுவர் மெஜஸ்டி' என்று மிக மரியாதையாக அழைத்து வந்தார்கள்-Refer British Militar Corres idence (Appendix No. V- Connemara Public Library—Reference Section)

நாடு முழுக்க மது விலக்கை அமல்படுத்த வேண்டும் என்று சொல்வது இதற்குத்தான்.

படம்: மௌசம். சஞ்சீவ் குமார், ஷர்மிளா டாகூர்.

'அசோக்'

"சிறந்த வீரராயிருக்கிறார்."

"உம்."

"பண்பும் அதிகம்."

"அரசகுமாரியை அபகரித்துச் சென்றது பண்பா?"

"அபகரித்துச் சென்றும் முறைகெடாமல் நடந்து கொண்டது, என்னைக் காத்து அழைத்து வந்தது, இவை பண்பாடுகள் அல்லவா?"

"திருடன் திருட்டுச் சொத்தைக் காப்பாற்றித் திருப்பிக் கொடுப்பது ஒரு விந்தைதான்," என்ற மகாராஜா தமது பெண்ணின் முதுகைச் செல்லமாகத் தட்டிக் கொடுத்து, "போய் வா," என்றார்.

ஆனால் அரசகுமாரி நகரவில்லை. "அப்பா," என்று அழைத்தாள் மெதுவாக.

"என்னம்மா?" மன்னர் குரலில் அன்பு குழைந்து கிடந்தது.

"இந்த விஜயகுமாரன் யார்?"

"நாயக்க அரச வம்சத்தவன்."

"அதைத்தான் அவரே சொல்லிவிட்டாரே?"



''வேறு எதைக் கேட்கிறாய்?''

''உங்களுக்குத் தெரிந்ததை.''

''எனக்குத் தெரிந்ததா?''

''ஆம். அவர் சொல்லாமல் மறைத்த எதையோ நீங்கள் ஊகித்திருக்கிறீர்கள்.''

இதைக் கேட்ட பிரதாப் சிங் மகளின் தோளைத் தனது கையால் சிறிது அழுத்தினார். ''மகளே! உன் அறிவு மிகக் கூரியது. என் முகபாவத்திலிருந்தே அந்தரங்கத்தை ஊகிக்கிறாய். ஆம். வேறொன்றும் எனக்குத் தோன்றியது இவனைப்பற்றி. ஆனால் அதைச் சொல்ல முடியாத நிலையில் இருக்கிறேன். வற்புறுத்திக் கேட்காதே,'' என்றார் திட்டமாக.

''அப்படியானால் இந்த..'' என்று துவங்கிய அரசகுமாரியின் சொற்களை இடையில் வெட்டிய மகாராஜா, ''விஜயகுமாரன் பெரும் பணியில் ஈடுபட்டிருக்கிறான். அதற்காக உயிரையும் விடுவான். அரசாங்க சம்பந்தமான பெரிய மர்மம் இவன் வாழ்வில் பிணைந்து கிடக்கிறது. அதைக் காலம் விளக்கும். ஆனால் பயல் சாமான்யனல்ல. பிடித்தாலும் புளியங்கிளையைத்தான் பிடித்திருக்கிறாய்!''

தந்தையின் வேடிக்கைப் பேச்சு பிடிக்கவில்லை நந்தினிக்கு. சட்டென்று எழுந்து மகாராஜாவை ஒரு முறை முறைத்துவிட்டு அறையை விட்டு நடக்கத் தொடங்கினாள். அவள் சென்றதும் மகாராஜா துரிதத்தைக் காட்டினார். காவலன் ஒருவனை அழைத்து, சில உத்தரவுகளை மடமடவெனப் பிறப்பித்தார். ''இப்பொழுது வந்தானே அந்த வெள்ளைக்கார வாலிபன், கிளைவ், இளைப்பாறி சிற்றுண்டியருந்தியதும் அவனை மட்டும் இங்கு அழைத்து வா. நானும் அவனும் பேசும்போது வேறு யாரும் இங்கு வர வேண்டாம்,'' என்றார். வேறொரு காவலனை அழைத்து, ''விளக்கு வைத்ததும் மானாஜியையும் டபீரையும் இங்கு வரச்சொல்'' என்றார். வேறொருவனை அழைத்து ''புதிதாக வந்தானே அரசகுமாரியுடன் ஒரு வாலிபன், அவனை அரண்மனையிலேயே இருக்கச் சொல்.'' என்று கூறினார்.

இப்படி உத்தரவுகளைப் பிறப்பித்துவிட்டு மீண்டும் அறையில் உலாவலானார். மறுபடியும் மஞ்சத்தில் உட்கார்ந்து கண்களை மூடினார். சிறிது நேரத்திற்குப் பிறகு இன்னொரு அறைக்குச் சென்று ஒரு கடிதத்துடன் திரும்பி வந்து மஞ்சத்தில் உட்கார்ந்தபடியே அதை வரிவரியாகப் படித்தார்.

பல முறைகள் அதைப் படித்துச் சிந்தனையில் ஆழ்ந்தும் விட்டதால் இரண்டு மணி நேரம் ஓடியது அவருக்குத் தெரியவில்லை. கிளைவ் வந்திருப்பதாகக் காவலன் அறிவித்த பின்புதான் மகாராஜா சிந்தனையிலிருந்து விழித்துக் கொண்டார். அடுத்த நிமிடம் பயணத்துக்குத் தயாராய் தமது எதிரில் நின்ற கிளைவை எதிரிலிருந்த மஞ்சத்தில் அமரும்படி சைகை செய்தார்.

மிக அலட்சியமாகக் கிளைவ் மஞ்சத்தில் அமர்ந்தான். அமர்ந்ததோடு நில்லாமல், "மகாராஜா, எனக்கு ஏதோ முக்கிய செய்தி வைத்திருப்பதாகத் தெரிகிறது." என்றும் கூறினான்.

"உனக்கல்ல. உன் கவர்னருக்கு," என்றார் மகாராஜா.

"என்ன செய்தி?" என்று வினவினான் கிளைவ்.

"காட்டுராஜாவை நம்பிப் போரில் இறங்க வேண்டாமென்று உங்கள் கவர்னரிடம் சொல்" என்றார் மகாராஜா.

"யாரது காட்டுராஜா?" என்று வினவினான் கிளைவ்.

"ஷாஹுஜி என்றும் அவருக்குப் பெயர் உண்டு" என்ற மகாராஜா "இந்தச் சமயத்தில் தஞ்சையுடன் போரில் இறங்குவது இங்கிலீஷ்காரர்களுக்குப் பெரிய அனர்த்தத்தை விளைவிக்கும்" என்றும் சுட்டிக் காட்டினார்.

"ஏன்?"

"சந்தா சாகேப் ஆற்காட்டை நோக்கி வந்து கொண்டிருக்கிறார். அவருக்கு உதவ டூப்ளேயின் பிரெஞ்சுப் படைகள் விரைந்திருக்கின்றன."

"அதனால்?"

"சந்தாசாகேப் பிரெஞ்சு உதவியுடன் வெற்றியடைந்தால் பிரிட்டிஷ்காரர் இங்கிருந்து ஊருக்கு மூட்டை கட்டலாம். ஆகவே நீங்கள் யார் பக்கம் என்பதை இப்பொழுதே முடிவு செய்ய வேண்டும். யூ பிரிட்டிஷ் ஆர் இன் எ டேஞ்ஜரஸ் பொஸிஷன்," என்று விளக்கினார் மகாராஜா.

கிளைவ் சிறிது சிந்தித்தான். பிறகு கேட்டான், "உங்களுக்கு இதெல்லாம் எப்படித் தெரியும்?" என்று.

பதிலுக்குக் கையிலிருந்த கடிதத்தை எடுத்து கிளைவிடம் நீட்டினார் மகாராஜா. அதைப் பிரித்துப் பார்த்தான் கிளைவ். அவன் முகத்தில் மிதமிஞ்சிய பிரமிப்பு விரிந்தது. அந்தக் கடிதத்தின் மூலம் மகாராஜா ஏதோ மந்திரம் போட்டிருக்க வேண்டும். ஏதும் பேசாமல் கடிதத்தில் நிலைத்த கண் நிலைத்தபடி உட்கார்ந்துவிட்டான் கிளைவ் நீண்ட நேரம்.

## 11 * பழைய கதை, புதிய பூதம்

தஞ்சை மன்னர் நீட்டிய கடிதத்தைப் படித்ததும் சிலையென கிளைவ் உட்கார்ந்துவிட்டானென்றால், அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. ஸெய்ண்ட் டேவிட் கோட்டையில் கவர்னர் மந்திராலோசனை சபை நிகழ்ச்சியின் விவரங்கள் அப்படியே அடங்கிய கடிதம் அது. அந்தக் கடிதத்தை இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பப் படித்தான் கிளைவ். அது எழுதப்பட்டிருந்த காகிதத்தைக் கூட ஒருமுறைக்கு இருமுறை தடவியும் திருப்பியும் பார்த்தான். கவர்னர் சபை நிகழ்ச்சிக் குறிப்

இந்த மினி தெரு சென்னை கோடம்பாக்கத்தில் பாகீரதி அம்மாள் தெருவிற்கும் சினிமா டைரக்டர்கள் காலனிக்கும் இடையில் ஜெயபாரதம் இல்லத்திற்கு அருகில் உள்ளது.




'மினி'யாக இருப்பதால்தான் அம்புக் குறி போட்டுக் காட்டியிருக்கிறார்கள் போலிருக்கிறது.

—ஏ. வி. ஆர். மோகன்

பின் சாட்சாத் நகல் அது என்பதையும், கவர்னர் உபயோகிக்கும் காகிதத்திலேயே அந்த நகல் எடுக்கப்பட்டிருக்கிறதென்பதையும் உணர்ந்ததால், ஆங்கிலேயர் கோட்டைக்குள் அதுவும கவர்னருக்கு வெகு அருகில் தஞ்சை ஒற்றன் ஒருவன் இருக்கிறான் என்ற நினைப்பும் கிளைவின் பிரமிப்பைப் பலமடங்கு அதிகப்படுத்தியது. ஆகவே கடைசியாக ஒரு முறை கிளைவ் அந்த நகலை ஊன்றிக் கவனித்தான். அதன் ஆங்கிலத்தை தமிழில் மொழிபெயர்த்தால் பின்வருமாறு இருக்கும்:

"....செயின்ட் டேவிட் கோட்டை, ஏப்ரல் 10 1749 ஆலோசனைக் கூட்டத்தில் இருந்தவர்கள் சார்ல்ஸ் ஃப்ளாயர்எஸ்கொயர் பிரெஸிடெண்ட் கவர்னர். எட்வர்ட் க்ருக். ரிச்சர்ட் பிரின்ஸ். அலெக்ஸாண்டர் விர்ச். ஸ்ட்ரின்ஜர் லாரன்ஸ், வில்லியம் ஹோல்ட். ஃபாஸ் வெய்காட்

தஞ்சையின் நியாயமான மகாராஜா ஷாஹூஜி சில மாதங்களாகத் தம்மிடம் உதவி நாடுவதாக பிரெஸிடெண்ட் இந்த போர்டுக்கு (சபைக்கு) அறிவித்தார். மேற்படி மகாராஜா தாம் அநியாயமாகப் பதவியிலிருந்து நீக்கப்பட்டதாகவும் தம்மை மீண்டும் அரசில் இருத்த வேண்டுமென்றும் அட்மிரல் போஸ்வானுக்கும், ரிச்சர்ட் பிரின்ஸுக்கும் எழுதியிருக்கிறார். இந்த விபரங்களை அறிவிக்க மகாராஜாவே தமது மாமனுடன் பிரெஸிடெண்டை அவரது கார்டன் ஹவுஸில் (கோட்டை வீட்டில்) சந்தித்தார். தம்மை அரசில் இருத்த தஞ்சை மக்கள் துடிப்பதாகவும், பல பிரமுகர்களும் தமக்கு உதவி செய்வதாகக் கடிதங்கள் எழுதியிருப்பதாகவும் மகாராஜா கூறினார். தமக்கு ஆங்கிலேயர் உதவி புரிந்தால் கொள்ளிடத்தின் முகத்துவாரத்திலுள்ள தேவிக் கோட்டையையும் சுற்றுப் புறங்களையும் கொடுத்து விடுவதாக மகாராஜா தெரிவித்தார். . இந்த ஏற்பாட்டுக்கு அட்மிரல் போஸ்வான் ஒப்புக்கொள்வதை பிரெஸிடெண்ட் சபைக்குத் தெரியப்படுத்தினர். இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொள்ளாதவர்கள் மிஸ்டர் க்ருக்கும் மிஸ்டர் வெஸ்காட்டும்...."

இந்த நகலைக் கடைசி முறையாகப் படித்துவிட்டு பிரதாப் சிங்கிடம் திரும்பக் கொடுத்த கிளைவ், "மகாராஜா! உங்களை ஏமாற்றுவது மிகக் கஷ்டம்" என்று கூறினான்.

கிரிக்கெட்டுக்குப் போயிருந்தா
மளமளன்னு விக்கட்
சரிச்சிருக்கலாமோன்னு
தோணுது.

வலிம சேர்லயிருந்து
விட்டெறிஞ்ச
சொத்தைப் பட்டாணிக்கடலைல
அஞ்சுல நாலு
ஜன்னல்லே கம்பி மோதி
உள்ள விழுந்து
உருள்றப்ப.



—ஏ. ஏ. ஹெச். கே. கோரி

□ □

சமீபத்தில் ஒரு கம்பெனிக்கு நேர்முகத் தேர்விற்காகச் சென்றிருந்தேன். தேர்வு நடந்த அறையில், 'T an you for not smoking etc' என்று நாசூக்காக ஒரு போர்டு வைத்திருந்தார்கள் சுவரில்.

—'பாதுஷா'

□ □

இங்கிலாந்து நாட்டுத் தபால் முத்திரைகளில் அந்த நாட்டின் பெயர் இருக்காது ஏன் தெரியுமா? காரணம்: தபால் சேவையை முதன் முதலாகத் தொடங்கிய நாடு இங்கிலாந்து என்பதால்.

—'எக்ஸ்'

□ □

சென்ற 19-12-76 ஞாயிறு அன்று நானும் மூன்று நண்பர்களும் க்வின் மேரீஸ் ஹாஸ்டல் வழியாக வரும்போது, ஹாஸ்டலின் ரூமிலிருந்து ஒரு பெண் கிறிஸ்துமஸ் தாத்தாவின் உடைகளை அணிந்து கொண்டு சாலையில் வருவோர் போவோர்களை வா வா என்று கேலி செய்வதைக் கண்டேன். அங்கிருந்த 10, 15 பெண்கள் ஓஹோ என உரக்கச் சிரித்துக் கும்மாளம் இட்டார்கள்.

அருகிலிருந்த கடையில் ஒருவர் கூறியதாவது: "நேற்று இவர்கள் இதேபோல் செய்தபோது நான்கு வாலிபர்கள் பதிலுக்குக் கையசைத்தார்கள். அந்த சமயம் அங்கு வந்த போலீஸார் அந்த நால்வரையும் பெண்களை கேலி செய்ததாகக் கூறி அழைத்துச் சென்று விட்டார்கள். செய்வது இவர்கள், தண்டனை அடைவது மற்றவர்கள்!"

—பட்டாபிராமன்



'உங்க ஆபீஸில் பணிபுரியும் என் கணவரை, யாரோ பெண்டாட்டிக்கு பயப்படுறவன் என்று கிண்டல் செய்தார்களாம்! யார் அது?

"நானில்லே! நானில்லே.!..."

மகாராஜா மெள்ளப் புன்முறுவல் கொண்டார் ஒரு வினடி. பிறகு அந்தப் புன்முறுவல் மறைந்து உதடுகள் கடினப்பட்டன. அந்தக் கடினப் போர்வையைக் கூட கிளேவிடம் மறைத்துக் கொண்ட மகாராஜா, "கிளேவ்! நான் ஏமாறுகிறேனா அல்லவா என்பது ஒருபுறமிருக்கட்டும். உங்கள் கவர்னர் சபையும் கடற்படைத் தலைவர் போஸ்வானும் ஏமாறுதிருப்பது நல்லது," என்று சர்வசாதாரணமாகச் சொன்னார்.

கிளேவ் தீர்க்க சிந்தனையுடன் தனது ஆசனத்திலிருந்து எழுந்து கக்கத்தில் இடுக்கிய ஹாட்டுடன் மன்னன் எதிரில் நின்றான் மௌனமாக சிறிது நேரம். கடைசியாகக் கேட்டான், "நான் ஒரு சாதாரண லெப்டினண்ட். என்னிடம் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?" என்று.

மகாராஜா ஆசனத்தில் அமர்ந்தபடியே பேசினார்: "கிளேவ்! நீ பிரிட்டிஷ் ராணுவத்தின் லெப்டினண்டாக மட்டும் இருந்தால் உன்னை உணவுப் பொருள் வாங்கும் கண்டிராக்டராக கவர்னர் திருச்சிக்கு அனுப்பமாட்டார். ஏனென்றால் உணவுப் பொருள் சப்ளை உங்கள் மொழிப்படி ஸிவில் விவகாரம், மிலிடரியைச் சேர்ந்ததல்ல. ஆனால் ஸிவில், ராணுவம் ஆகிய இரு விதப் பொறுப்புகளும் நீ வகிப்பதால் கவர்னருக்கு உன்னிடம் பெருமதிப்பு இருக்க வேண்டும். அபாயமான இந்தக் காலத்தில் உன்னைத் திருச்சிக்கு அனுப்ப வேண்டுமானால் உன் திறமையில் அளவுக்கு மீறிய நம்பிக்கை கவர்னருக்கும் அவரை அடுத்த அதிகாரிகளுக்கும் இருக்க வேண்டும். ஆகையால்...."

"ஆகையால்?" சந்தேகத்துடன் வினவினான் கிளேவ். ஆனால் அந்தச் சந்தேகம் அடுத்த நிமிடம் திகைப்புக்கும் வியப்புக்கும் இடங் கொடுத்தது. மகாராஜாவின் பதில் அத்தனை திட்டமாகவும் உறுதியாகவும் இருந்தது.

"நீ என் தூதுவனாக கவர்னரிடம் செல்," என்றார் பிரதாப் சிங் மகாராஜா.

கிளேவின் கூரிய விழிகளிலும் சஞ்சலம் தெரிந்தது. "யுவர் மெஜஸ்டி!" என்ற அவன் அழைப்பிலும் அந்தச் சஞ்சலம் தெளிவாக ஒலித்தது.

"சொல் கிளேவ்."

"நான் ஒரு சாதாரண லெப்டினண்ட்."

"அதை முன்பே சொல்லி விட்டாய்."

"எதிர்பாராத நிகழ்ச்சிகள் என்னை உங்கள் முன்பு கொண்டு வந்து நிறுத்தியிருக்கின்றன."

"ஆம்."

"நான் உங்கள் மெஸஞ்சராக, தூதனாக, கவர்னரிடம் சென்றால் என்மீது சந்தேகம் ஏற்படலாம்."

"ஏற்படாது."

"ஏன்?"

"நடந்த விஷயங்களை நீ தெளிவாகச் சொல்லிவிடலாம். நான் உன்னிடம் காட்டிய கவர்னர் போர்டின் நிகழ்ச்சி விவரங்களின் நகலைப்பற்றிக் கூடச் சொல்லலாம். என் வலுக்கட்டாயத்தின் மேல் நீ செய்தியைக் கொண்டு வந்ததாகச் சொல்லாம்," என்ற மன்னர் வேறொரு வெடியையும் எடுத்து வீசினார். "இப்பொழுது பிரிட்டிஷார் நிலைமை எனது நிலைமையைவிட திடமானதல்ல" என்று.

கிளேவ் பிரமிப்பு நிரம்பிய விழிகளை மன்னர்மீது நாட்டினான்.

(தொடரும்)

# ராஜ பேரிகை

சாண்டில்யன்

(சென்ற அத்தியாயத் தொடர்ச்சி)

மகாராஜா மேலும் சொன்னார் நிதானமாக: "கிளைவ்! உன்மீது எனக்கும் நம்பிக்கை விழுகிறது. காரணம் எனக்குப் புரியவில்லை. ஆனால் நீ புத்திசாலி என்பதிலோ, கவர்னரிடமோ அவரது ஆலோசனை போர்டு மெம்பர்களிடமோ உனக்கு சலுகை உண்டென்பதிலோ எனக்குச் சந்தேகமில்லை. ஆகவே கவனமாகக் கேள் நான் சொல்வதை. தவறு இருந்தால் மட்டும் மறுத்துச் சொல். இங்கு பிரெஞ்சுக்காரர் கை ஓங்குவதை ஒடுக்க பிரிட்டன் தனது சிறந்த கடற்படைத் தலைவரான போஸ்கவானை இங்கு பலமான கடற்படைப் பிரிவுடன் அனுப்பியது. அது மட்டுமல்ல, பிரிட்டிஷ் நிலப்படை, கடற்படை இரண்டுக்கும் அவரையே தலைவராகவும் நியமித்தது. ஆனால் டூப்ளேயின் முன்பு அவர் ஜபம் பலிக்கவில்லை. பாண்டிச்சேரியை அவர் பிடிக்க முயன்று தோல்வியடைந்தார். ஐரோப்பாவில் உங்கள் நாட்டுக்கும் பிரான்சுக்கும் போர் முடிந்து சமாதானம் ஏற்பட்டதாலேயே டூப்ளே சென்னையை உங்களுக்குத் திருப்பிக் கொடுக்கும்படியாயிற்று. இல்லையேல் உங்கள் கைக்கு மதராஸும் திரும்பியிருக்காது. உண்மையில் இன்று நீங்கள் மிகவும் பலவீனமான ஸ்திதியில் இருக்கிறீர்கள். அப்படியிருக்க உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுகிறீர்கள். நீங்கள் உதவப் போகும் ஷாஹூஜி என்ற காட்டு ராஜா சரியான அரச பரம்பரையைச் சேர்ந்தவரல்ல. இந்த அரண்மனையிலிருந்த ரூபி அல்லது குப்பி என்று அழைக்கப்பட்ட சலவைத் தொழிலாளி மகன். உங்கள் மொழியில் அவர் இந்த அரசுக்கு ஒரு 'பிரிடெண்டர்.' அவருக்கு உதவக் கூடியவர்கள் இங்கு யாருமில்லை. ஆகவே அவரைக் கருவியாகக் கொண்டு தஞ்சை ராஜ்யத்தைப் பிடிக்க முடியாது. இந்த வீண் கனவை விட்டு விடும்படி நான் கவர்னருக்குச் சொன்னதாகச் சொல்." இப்படிப் பேசிய மகாராஜாவின் குரலில் பதட்டமில்லை. விரோத உணர்ச்சிகூடத் தொனிக்கவில்லை. ஏதோ சிறு குழந்தைக்குப் புத்தி சொல்லும் தொனியில் சொற்களை உதிரவிட்டார்.

"உங்கள் யோசனையைக் கவர்னர் கேட்க இஷ்டப்படாவிட்டால்?" என்று வினவினான் கிளைவ்.



1. ஒரு திரையுலக டைரக்டரும் ஒரு வானசாத்திர விஞ்ஞானியும் சமம் எப்போது?

2. உலகிலேயே மிகவும் தாழ்ந்த நாடு எது?

3. ஆறு அடி விட்டமுள்ள 'கார்க்'கால் ஆன பந்தின் நிறை 26 பவுண்டு....1300 பவுண்டு....12 பவுண்டு....217 பவுண்டு. எது சரி?

4. பாரத ரத்ன விருதைப் பெற்ற பெண்மணிகள் யார் யார்?

5. பேசுவதற்கு இனிய, எளிய மொழி எது?

—'எம்மாரெஸ்'

"கவர்னர் புத்திசாலியாயிருந்தால் கேட்பார். மகாராஷ்டிரர்களிடம் ஸதாராவில் சிறையிருந்த சந்தாசாகேப்பை ஏழு லட்ச ரூபாய் கொடுத்து டூப்ளே சிறை மீட்டிருக்கிறார். சந்தாசாகேப் இப்பொழுது ஆற்காட்டைப் பிடிக்க வந்து கொண்டிருக்கிறார். அவருடன் மொகலாய அரசின் தட்சிண சுபேதாராக அதாவது நிஜாமாக விரும்பும் முஸபர் ஜங்கும் சேர்ந்து கொண்டிருக்கிறார். போதாக் குறைக்கு டூப்ளே தமது சிறந்த படைத் தலைவர்களில் ஒருவரான டி ஆதுனில் என்பவரைச் சிறு பிரெஞ்சுப்படையுடன் அவர்கள் உதவிக்கு அனுப்பியிருக்கிறார். சந்தாசாகேப் சாதாரண வீரனல்ல. வெகு சீக்கிரம் ஆற்காடு சந்தாசாகேபின் வசமாகிவிடும். அப்பொழுது இங்கு பிரெஞ்சு ஆதிக்கம் ஓங்கிவிடும். பிறகு உங்கள் நிலை....என்னைப் போன்றவர்களின் ஒத்துழைப்பைப் பொறுத்தது," என்று அரசியல் நிலையை விவரித்தார் மகாராஜா.

மகாராஜா எவ்வளவு திட்டவட்டமாக உள்ள நிலையைப் புரிந்து கொண்டிருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்ட கிளைவ் முடிவாகப் பதில் சொன்னான். "மகாராஜா, உங்கள் தூதனாக நான் செல்கிறேன். ஆனால் நான் சொல்வதைக் கவர்னர் கேட்பாரா இல்லையா என்பதை நான் திட்டமாகக் கூறமுடியாது. ஆனால் ஒன்று உங்களைப் போன்ற வீரரை, ராஜதந்திரியை எதிராளியாகப் பெற்றாலும் அதையும் நான் விரும்புவேன். ஆனால் பிரிட்டிஷ்காரர்களைச் சாதாரணமாக எடை போடாதீர்கள். இதைவிட இக்கட்டான நிலைமையிலிருந்து பிரிட்டிஷ்காரர்கள் மீண்டிருக்கிறார்கள்," என்று சொல்லித் தலை வணங்கி வெளியே சென்று விட்டான்.

மகாராஜா அவன் வெளியே செல்வதைப் பார்த்துக் கொண்டே நின்றபடியாலும், அவன் சென்றதும் மீண்டும் சிந்தனையிலிறங்கிவிட்டபடியாலும், கிளைவ் போனதும், பெரும் பட்டாக் கத்தி இடையில் துலங்க உள்ளே நுழைந்து எதிரில் நின்ற ஒரு பெரிய மனிதரைப் பல விநாடிகள் கவனிக்கவில்லை. அந்த மனிதரும் அரசரின் சிந்தனையை இடையே புகுந்து கலைக்க இஷ்டப்படாமல் அந்த அறையின் சாளரத்தண்டை சென்று எட்டிப் பார்த்தார். மன்னர், "யார்? நீங்களா?" என்று வினவியதுமே அவர் திரும்பி அறையின் நடுவுக்கு வந்து மன்னர் முன்பு நின்றார்.

அந்த மனிதர் அதிக உயரமில்லையென்றாலும் சற்றுப் பருமனாக இருந்தார். பருமனாக இருந்தும், அவர் சாளரத்தை விட்டுத் திரும்பிய தோரணையிலும், அறை நடுவுக்கு வந்த நடையிலும் ஒரு வேகமும் உறுதியும் இருந்தது. லவலேசமும் அச்சமற்ற பெருங் கண்களின்மீது இருந்த அடர்த்தியான புருவம் அவர் முகத்துக்குக் கம்பீரத்தை மட்டுமின்றிச் சிறிது பயங்கரத்தையும் அளித்திருந்தது. கைகள் நீண்டு திரண்டு திரணையாக இருந்தன. தலையிலிருந்து சரிகை வட்டாவில் தொங்கிய குஞ்சலம் ஒன்று வெள்ளி நரம்புகளால் செய்யப்பட்டிருந்தபடியால் அதிகமாகப் ப

விடைகள்: 1) ஒரு புதிய நட்சத்திரத்தைக் கண்டுபிடிக்கும்போது. 2) ஹாலந்து. இந்நாட்டின் பெரும் பகுதி கடல் மட்டத்துக்குக் கீழேயே உள்ளது. 3) சுமார் 1300 பவுண்டுகள். 4) திருமதி இந்திரா காந்தி ஒருவரே. அவர் 15'வது ரத்னவாக 1972'ல் விருது பெற்றார். 5) அவரவர் தாய்மொழி.

பள்ந்தது. அவரது கச்சையில் தொங்கிய பட்டாக்கத்தியின் அகலமும் வளைவும் அவசியத்துக்கு அதிகமாக அமைந்திருந்தாலும் அவர் உடலுக்குப் பொருத்தமாகவே இருந்தது. அவர் அங்கியும், அதை அடுத்துச் சிறு பாவாடை போல் தொங்கிய சல்லடமும் சல்லடத்துக்குக் கீழே தெரிந்த கால் சராயும் அவருடைய அவயவங்களை இறுகப் பிடித்திருந்ததால் தேகத்தின் திண்மை மிக நன்றாகப் புலனாயிற்று. இத்தகைய தோற்றத்துடன் மிக அலட்சியமாகப் பிரதாப் சிங்கின் எதிரே நின்ற தஞ்சை தளபதி மானாஜி அப்பா மௌனத்தின் சிகரமாகக் காட்சியளித்தாலும், அவர் கண்கள் மட்டும் ஏதோ கேள்விகளை உதிர்ப்பதைப் போலிருந்தது.

அவரை ஏற இறங்கப் பார்த்த மகாராஜா ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காக இரண்டாம் முறையாக, "நீங்கள் வந்ததை நான் கவனிக்கவில்லை," என்றார்.

மானாஜி அப்பாவின் கர கரத்த தொண்டையிலிருந்து இரும்புத் துண்டுகள் உராய்வதைப் போன்ற தொனியுடன் வந்தது பதில், "மகாராஜா! தாங்கள் தீவிர சிந்தனையில் இருந்தீர்கள்," என்று.

"ஆம். சிந்தனைக்குக் காரணமிருக்கிறது," என்றார் மகாராஜா.

"காரணத்தையும் கவனித்தேன்," என்றார் மானாஜி.

"கவனித்தீர்களா!" மன்னன் சொற்களில் வியப்பு ஒலித்தது.

"ஆம்."

"எங்கே?"

"இப்பொழுதுதான். உங்கள் அறைக்கு வெளியே."

"யார்? கிளைவையா?"

"ஆம்."

"அவனை உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியாது. ஆனால் மகாராஜாவுடன் அந்தரங்கத்தில் நீண்ட நேரம் பேச வேண்டுமானால் அவன் பெரு வீரனாயிருக்க வேண்டும்," என்று விளக்கினார் தளபதி.



"ஆம், வீரன்தான். அது மட்டுமல்ல, நல்ல சூடிகையான புத்தியும் உடையவன்," என்றார் மகாராஜா.

"அப்படியா!"

"ஆம். அவன் நமக்கு விரோதியாயிருப்பதைவிட நண்பனாயிருப்பது நல்லது."

"பார்ப்பதற்குச் சாதாரண சோல்ஜராயிருக்கிறான்...."

"சாம்ராஜ்யங்களை நிறுவிய பலரும் சாதாரண நிலையிலிருந்துதான் உயர்ந்தவர்கள்," என்று கூறிய மகாராஜா, தளபதியின் கருத்தை அறிய அவரைக் கூர்ந்து நோக்கினார்.

தளபதி உடனடியாகப் பதிலேதும் சொல்லவில்லை. "அவன் வீரன் என்பது எனக்குப் புரிகிறது. ஆனால் நாம் அதிகப்படி உயர்த்திப் பார்க்க அவசியமிருக்கிறதா என்பது சந்தேகம்," என்று தமது கருத்தை மெள்ள வெளியிட்டார்.

மகாராஜா அதை மறுக்கவில்லை. "காலம் பதில் சொல்லும்," என்று மட்டும் கூறிவிட்டு மறுபடியும் சில விநாடிகள் மௌனம் சாதித்தார். பிறகு சொன்னார், "மானாஜி! தஞ்சை மீது பிரிட்டிஷார் படையெடுக்க இருக்கிறார்கள்." என்று.

"நான் தயாராயிருக்கிறேன்," என்றார் மானாஜி.

"எதற்கு?" என்று கேட்டார் மகாராஜா.

"தஞ்சையைக் காப்பதற்கு," என்றார் மானாஜி.

"இப்பொழுது அபாயம் தஞ்சைக்கல்ல."

"வேறெதற்கு?"

"தேவிக் கோட்டைக்கு."

"அப்படியா!"

"ஆம். நீங்கள் தேவிக் கோட்டைக்குப் புறப்படுங்கள்."

"எப்பொழுது?"

"நாளை காலையில்."

"உத்தரவு."

"உங்களுக்கு ஒரு துணையையும் அனுப்புகிறேன்."

"எனக்குத் துணையா?"

"ஆம்."

"எதற்கு எனக்குத் துணை?"

"அவசியமிருந்தால் எனக்குத் தூது அனுப்ப. எதிரிகளை அலட்சியமாக ஊடுருவி, உயிரைப் பணயம் வைத்து வரக் கூடிய ஒருவன் உமக்குத் தேவையில்லையா?"

"அதற்குப் பலர் இருக்கிறார்கள்," என்ற மானாஜி, மகாராஜாவின் மனத்தில் வேறு ஏதோ யோசனை இருப்பதை உணர்ந்ததால், "மகாராஜாவுக்கு வேண்டிய அவன் யார்?" என்று வினவினார்.

"புதிதாக வந்திருக்கிறான். வாலிபன். வீரன்," என்றார் மகாராஜா.

"யார், விஜயகுமாரனா?" என்று கேட்டார் தளபதி.

மகாராஜாவின் முகத்தில் மிதமிஞ்சிய பிரமிப்பு விரிந்தது. "அவனைப் பற்றி அதற்குள் கேள்விப்பட்டு விட்டீர்களா?" என்றும் கேட்டார் வியப்பு குரலிலும் ஒலிக்க.

"கேள்விப்பட்டது மட்டுமல்ல, பார்த்தும் விட்டேன். அவனுக்குத் தேவை எது என்பதும் எனக்குத் தெரியும்," என்றார் மானாஜி.

"எது?"

மானாஜி மகாராஜாவை நெருங்கி ரகசியமாகச் சில வார்த்தைகளைச் சொன்னார்.

மகாராஜாவின் முகத்தில் பெரும் பிரமை தட்டியது. "அது பழைய கதையல்லவா?" என்று வினவினார் பிரமிப்பு மிக்க குரலில்.

"ஆம். புதிய பூதமாக வளர்ந்திருக்கிறது இந்த வாலிபன் உருவத்தில்," என்ற மானாஜி, "மகாராஜா! இவன் சபதம், இவன் துவேஷம், தஞ்சையைக் காக்கலாம். ஆகவே இவனை அழைத்துச் செல்கிறேன். அவன் இதுவரை அடையாத போர் பயிற்சியையும் அளிக்கிறேன்," என்றும் உறுதி கூறினார். அவர் சொற்களில் மிதமிஞ்சிய திருப்தி இருந்தது.

திருப்தி அதே சமயத்தில் அரண்மனையின் வேறொரு பகுதியிலிருந்த விஜய குமாரனுக்கும் இருந்தது. அது வேறு வித திருப்தி. இரண்டு வித திருப்தியும் தஞ்சை மண்டலத்துக்குப் பெரும் கவசமாக அமைந்ததை வரலாறு நிரூபித்தது.

(தொடரும்)

# இளையராஜா

## கேட்கிறார், நீங்கள் பதில் சொல்கிறீர்கள்

4

**எந்தச் சூழ்நிலை இருந்தால் தமிழ்ப்பட உலகிற்குப் புதிது புதிதாக இசையமைப்பாளர்களும் பின்னணி பாடுபவர்களும் வரமுடியும்?**

இசையமைப்பாளர்கள், பின்னணி பாடுவோர்கள் விஷயத்தில் மட்டுமல்லாமல் பொதுவாகவே, தமிழ் சினிமா உலகில் Hero worship என்பது வேரூன்றிவிட்டது. இந்நிலை ஒழிந்தாலொழிய முன்னேற்றத்திற்கு வழியே இல்லை. இசையமைப்பாளர் ராமமூர்த்தி திறமைமிகுந்தவர்தான். ஆனால் இன்று அவர் இருக்குமிடமே தெரியவில்லையே. அதேபோல் பின்னணி பாடுவோர், கோவை சௌந்தரராஜன், தாராபுரம் சுந்தரராஜன் ஆகியோருக்கு நல்ல ஆதரவு இருந்துதான் வந்தது. இன்று ஒருசில படங்களில் கூட அவர்களுக்குப் பாடும் வாய்ப்புக் கொடுக்கப்படவில்லையே! மேலும், இசையமைப்பாளரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை படத்தின் டைரக்டருக்கும், பின்னணிப் பாடகர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமை இசையமைப்பாளருக்கும் படத்தின் டைரக்டருக்கும் கொடுக்கப்பட வேண்டும். எனக்கு இவர்தான் பாட வேண்டுமென்று நடிக நடிகையர் கட்டாயப்படுத்துவதும், பணம் போட்ட காரணத்திற்காகத் தேவையில்லாத விதத்தில் தயாரிப்பாளரின் குறுக்கீடும் அகற்றப்பட்டால்தான் நல்லதொரு சூழ்நிலை ஏற்பட்டு, தமிழ்ப் படஉலகிற்குப் புதிது புதிதாக இசையமைப்பாளர்களும், பின்னணி பாடுபவர்களும் வரமுடியும்.

—எம். எல், ராகவன், மன்னார்குடி

இந்தச் சூழ்நிலையில்தான் புதியவர்கள் வரவேண்டும் என்ற நியதி இல்லை. திறமையுள்ளவர்கள் எப்போது வேண்டுமானாலும் அறிமுகமாகலாம், துணிந்து நம்பிக்கையோடு தேவராஜ்—மோகன் அறிமுகம் செய்து வைத்ததால்தானே இளையராஜாவை நாம் வரவேற்றோம்?

—சி. பிரேம்சொரூப், சென்னை-2

வரம்பு மீறாமல் Bold Innovations செய்யத் தைரியமளிக்கும் சூழ்நிலை தேவை. தவிர, தேவையற்ற உச்ச ஸ்தாயியைக் குறைத்து, சற்றுக் கீழே வந்து ஆறுதலாகப் பாடும் மனோபாவமும் வரவேண்டும். இந்தி இசை இன்றும் சீராக இயங்குவதற்கும், எளிதாகப் புதுமுகங்கள் பிரவேசிப்பதற்கும் இது ஒரு முக்கிய காரணம்.

—எம். ஐ. துராப்புதீன், பல்லாவரம்

'சினிமாத் துறை ஒரு பெரிய கடல். அதனை எந்த ஒரு பூனையும் தானே குடித்து வற்றச் செய்துவிடமுடியாது' என்கிற தெளிவுடன் ஏற்கனவே கீர்த்தியாய் உள்ள இசையமைப்பாளர்கள் தங்கள் துணையாளர்களை—திறமை இருந்தும் வாய்ப்புக் கிட்டாமல் ஒதுங்கியிருப்பவர்களை—பட அதிபர்களுக்குச் சிபாரிசு செய்வதன் மூலம் புதிய இசை அமைப்பாளர்களை வெளிக் கொணரலாம்.

—டி.எல்.ஜி. பெருமாள், திருப்பத்தூர்.

# ராஜ பேரிகை

## 15. யார் அவள்?

மகாராஜா பிரதாப்சிம்மன் உத்தரவுப்படி தஞ்சை அரண்மனையில் பாதுகாப்புவீரர் மனைஅறையொன்றில் தங்க வைக்கப்பட்ட விஜயகுமாரன் அன்றைய பொழுது முழுவதையும் அரண்மனையைச் சுற்றிப் பார்ப்பதிலும் மீதி வேளைகளில் அறை மஞ்சத்தில் மல்லாந்து படுத்துத் தனது வாழ்வைப் பற்றிய யோசனைகளிலும் கழித்தான். முந்திய நாளிரவில் ஸ்ரீரங்கம் கோயிலில் தான் சபதம் செய்தது முதல் அந்த இரவில் தஞ்சை அரண்மனையில் தங்கியது வரையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைத் தனது ஆரம்ப கால வாழ்க்கையுடன் இணைத்துப் பார்த்து, ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் திருப்பங்கள் எத்தனை துரிதமாகவும் எதிர்பாராத வகையிலும் ஏற்படுகின்றன என்பதை எண்ணி எண்ணி வியக்கவும் செய்தான்.



சிறு வயதுச் சம்பவங்கள் அவனுக்குச் சரியாக நினைப்பில்லையானாலும், நினைவு வந்த பிறகு தான் அனாதையாக ஒரு வணிகனில்லத்தில் வளர்ந்ததையும், திடீரென ஒரு நாள் சிவகங்கை வீரர்கள் வணிகன் இல்லம் வந்து தன்னை அழைத்துச் சென்றதையும், பிறகு சிவகங்கை மகாராஜா தன்னை அரண்மனையிலேயே அரச ரீதியில் வளர்த்ததையும், போர்ப் பயிற்சி தனக்கு அளிக்கப்பட்டதையும் எண்ணிப் பார்த்தான். கடைசியில் சில தினங்களுக்கு முன்பு

தன்னை அழைத்த சிவ கங்கை மகாராஜா தன் பணி ஒரு நவாபை ஒழிப்ப தென்று கூறியதையும், அந்த நவாபால் தன் வம்சம் அழிந்த வரலாற்றை எடுத்துச் சொன்னதையும் 'அந்தப் பாதகனை அழிப்பதாக அரங்கன்மீது ஆணையிட்டு அந்தப் பணியை நோக்கிப் போ,' என்று கூறியதையும் எண்ணிப் பார்த்து, 'புறப்பட்டதோ சபதமொன்றை நிறைவேற்ற. இடையில் கிடைத்ததோ திருட்டுப் பட்டம், இப்பொழுதிருப்பதோ அரண்மனை ராஜபோகம்' என்று தனக்குள் கூறிச் ...ற்று வெளிப்படையாக ...கைத்தும் கொண்டான்.



...உண்மையில் அர...னுக்கு நடப்பது போன்ற ...பசாரம் அவனுக்கு அவன் ...ருப்பிடத்தில் நடந்தது. ...பீர் பண்டிதரே அவனை ...ழைத்து வந்து அந்த ...டத்தில் விட்டுப் பணி...க்களுக்குத் திட்டமான உத்தரவுகளைப் பிறப்...த்திருந்ததால், விளக்கு ...வக்கத் துவங்கிய அந்த ...ாலை நேரத்தில் அவனுக்கு ...ராட்ட வசதிகளும் மற்ற ...பசரணைகளும் மிகத் திறம் ...ட்ச் செய்யப்பட்டன. ...டைவீரர் மனையின் அறை...யான்றில் அவன் தங்க ...வக்கப்பட்டாலும் அந்த ...றை பொது மனையுடன் ...ட்டாமல் தனித்திருந்த...டியாலும், அரண்மனை ...ந்தவனத்தை அடுத்...ருந்தபடியாலும், அவன் ...ன்னந்தனியே இருப்பதும் ...ஷ்டப்படி உலாவுவதும் ...த்தியமாயிற்று. அவன் ...ந்த அறைக்கு வந்த சம...ம் மாலை முற்றிவிட்ட...ால் அரண்மனைப் பிராந்தி...ம் முழுவதும் விளக்கு...ள் பிரகாசிக்கத் தொடங்...ன. காவல் வீரர்கள் புரவிகளில் அரண்மனையைச் சுற்றியிருந்த பெரும் சுவர்களை அடுத்து உலாவலானார்கள். அந்திக்காலம் சென்று விளக்கு வைக்கப்பட்டதும் அரண்மனையில் ஏதோ ஓரிடத்தில் வீணை வாத்யங்களின் சாதக ஒலி மிக இன்பமாகக் கேட்டது. ஒருபுறம் அந்தணர் வேத கோஷமும் இன்னொரு புறம் காவல் வீரர் வீர கோஷமுமாகச் சேர்ந்து, தஞ்சை மன்னன் மாளிகையில் வீரமும் வித்தையும் சமமாகக் கலந்து இணைந்த பெருமையை விளக்கலாயின. இவற்றை அனுசரித்து நந்தவனத்திலிருந்து கூவிய குயிலினங்கள் சில மாலை நேரத்தின் மங்கல இசையையும் அளித்தன.

பயணக் களைப்பை நீராட்டத்தாலும் அரச மாளிகை உணவினாலும் தீர்த்துக் கொண்ட விஜயகுமாரனுக்குப் புது உடைகள் அரண்மனையிலிருந்து அளிக்கப்பட்டதால், அவற்றை அணிந்து அவன் மாலை நேரத்தில் அரண்மனை எப்படியிருக்கிறது என்பதைப் பார்க்கச் சிறிது நேரம் உலாவ முற்பட்டான். அரண்மனையின் பலமான பாதுகாப்பையும் எட்ட இருந்த பெரும் கோட்டைச் சுவர்களில் இருந்த சில பீரங்கிகளையும் பார்த்த விஜயகுமாரன், கோட்டைத் தளபதி யாராயிருந்தாலும் அவர் திறமையுடனேயே தமது பணியைச் செய்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டான். இருப்பினும் வடக்குக் கோட்டை வாசல் மட்டும் அத்தனை வலுவுள்ளதாகத் தெரியவில்லை விஜயகுமாரன் கண்களுக்கு. அது இருமுறை எதிரித் தாக்குதல்களுக்கு

சாண்டில்யன்

உள்ளாயிருப்பதையும், பிறகு சரியாகப் பழுது பார்க்கப்படாததையும் கண்டு, 'இதை ஏன் இத்தனை பலவீனமாக வைத்திருக்கிறார்கள்?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டு அதன் எதிரே பல நிமிடங்கள் நின்றான். அப்படி யோசனையில் ஆழ்ந்து நின்ற சமயத்தில் தான் அவன் தோள்மீது பலமான கையொன்று அசுரப்பிடியாக விழுந்தது.

அதனால் யோசனையிலிருந்து விடுபட்டுச் சிறிது திரும்பிய விஜயகுமாரன் தன்னை அடுத்து அதிக உயரமில்லாத பருமனான ஒரு மனிதர் நிற்பதைப் பார்த்து, ''தாங்கள் யார்?'' என்று வினவினான்.

அந்த மனிதரின் கண்கள் ஈட்டிகளென அவன்மீது நிலைத்தன. ''மானாஜி என்று சொல்வார்கள்,'' என்ற அவர் சொற்களும் கரகரவென்று கடுமையுடன் உதிர்ந்தன தொண்டையிலிருந்து.

''மானாஜி அப்பாவா! தஞ்சை தளபதியா!'' என்று வியப்புடன் வினவினான் விஜயகுமாரன்.

அவன் வியப்பைக் கவனித்த மானாஜி மெல்லச் சிரித்த சிரிப்பிலும் அசுரச் சாயை லேசாக இருந்தது. ''ஏன், என்னைப் பார்த்தால் தளபதியாகத் தெரியவில்லையா?'' என்று வினவினார் அவர்.

''உடை சாதாரணமாயிருப்பதால்....'' என விஜயகுமாரன் மென்று விழுங்கினான்.



''ஊருக்குப் போனதும் மறக்காமல் கடிதம் போடு.''

''மறக்கறதுக்குத்தானே ஊருக்கே போறேன்!''

''தளபதியாயிருக்க முடியாதென்று நினைத்தாய். உடையினால் யாராவது வீரனாக முடியுமானால் தையற்காரர்களே வீரர்களைச் சிருஷ்டித்துவிட முடியும்,'' என்று கூறி நகைத்த தளபதி, ''நீதானே விஜயகுமாரன்?'' என்றும் வினவினார்.

''என்னைப்பற்றி....''

''அரண்மனை முழுதும் தெரியும். அரசகுமாரியைக் காப்பாற்றியவனாயிற்றே!''

''நான் எங்கு காப்பாற்றினேன்? காப்பாற்றியது முராரிராவ், கிளைவ்.''

''சரி. காக்கவில்லை. கவர்ந்தாய்,'' என்றார் தளபதி.

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் திகைத்த விஜயகுமாரனை நோக்கிய தளபதி, ''என்ன இந்த வடக்கு வாசலைப் பார்த்துக்கொண்டு நிற்கிறாய்?'' என்று கேட்டார்.

''இந்த இடத்தில் கோட்டை பலவீனமாயிருக்கிறது,'' என்று சுட்டிக்காட்டினான் விஜயகுமாரன்.

''ஆம்.''

''ஏன்?''

''பலமுறை இது தாக்குதலுக்கு உட்பட்டிருக்கிறது. மீண்டும் உட்படலாம்.''

''அதனால்?''

''வேண்டுமென்றே பலவீனமாக வைத்திருக்கிறோம்.''

''காரணத்தை நான் அறியலாமா?'' என்று வினவிய விஜயகுமாரனை நோக்கி, ''பிறகு சொல்கிறேன் சாவகாசமாக,'' என்று கூறிச் சட்டென்று அந்த இடத்தை விட்டு அகன்றார் தளபதி.

அவர் சென்ற திக்கைப் பல நிமிடங்கள் பார்த்துக் கொண்டிருந்து விட்டுக் கோட்டையைச் சுற்றி விட்டு மீண்டும் தனது அறைக்கு வந்தபோது அறையில் பணி மக்கள் யாருமில்லை. கதவு திறந்திருந்தது. பணி மகள் மட்டும் ஒருத்தி நின்றிருந்தாள் கதவுக்கருகே. படை வீரர் மனையருகே பெண்ணொருத்தி எப்படி வர முடியும் என்று நினைத்த விஜயகுமாரன், ''யாரம்மா நீ?'' என்று கேட்டான் வியப்புடன்.

அவள் அவனுக்கு லேசாகத் தலை வணங்கினாள். ''அந்தப்புரத்துப்

வந்தது முதலை! ஒழிந்தன கொசுக்கள்!
கிடைத்தது சுகநித்திரை! ஆ ஹா!!

**வேறெந்த கொசுவர்த்திச் சுருளையும் விட அதிக சக்தி படைத்தது. என்னும் விலை குறைந்தது**

புதிய

# முதலை மார்க்

## கொசுவர்த்திச் சுருள்

கொசுக்களை விரட்டியடிக்கிறது
....உள்ளே வரவிடுவதில்லை...
இரவு முழுதுமே.
எல்லா முக்கிய கடைகளிலும்
கிடைக்கும்

CROCODILE
MOSQUITO COIL

வியாபாரிகள் தொடர்பு கொள்ள, தமிழ்நாடு மார்கெட்டிங் ஏஜண்டுகள்

**ஜெனரல் ஸ்டோர்ஸ் & ஏஜன்ஸீஸ்**

12. N. S. B. ரோடு, திருச்சி - 620002 · போன்: 26827.

---

தரத்தில் உயர்தரம்!
உழைப்பில்
நிரந்தரம்!!

# நீட்டா

# ரத்னா

## பிரஸ் பட்டன்கள்




தயாரிப்பாளர்கள்:

**N நீடில் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்,**

கேத்தி - 643 215, நீலகிரி.

ரிஜிஸ்ட்ரட் ஆபீஸ்: 3, பிஷப் வாலர்ஸ் அவென்யூ சவுத், மைலாப்பூர், சென்னை - 600 004.

பணிமகள்,'' என்றும் கூறினுள் பணிவு நிரம்பிய குரலில்.

''படை வீரர் மனைக்கருகில் நீங்கள் அனுமதிக்கப்படுவதுண்டா?'' என்று வினவினுன் விஜயகுமாரன்.

''இல்லை,''

''பின் ஏன் வந்தாய்?''

''சில சமயங்களில் சம்பிரதாயம் மாற்றப்படுகிறது. உதாரணமாக....''

''உதாரணமாக?''

''நீங்கள் என்னுடன் அந்தப்புரத்துக்கு இப்பொழுது வருகிறீர்கள்.''

இதைச் சொன்ன பணிமகளை மிக விசித்திரமாக நோக்கினுன் விஜயகுமாரன். ''அந்தப்புரத்துக்குள் செல்பவர்கள் தலை போய் விடுமென்பது அரசர் ஆணையல்லவா?'' என்றும் கேட்டான் வியப்பு நிரம்பிய குரலில்.

''சாதாரணமாக அப்படித்தான்,'' என்ருள் பணிப்பெண்.

''இப்பொழுது?''

''உங்களை நான் அழைத்துப் போவதால் காவலர் தடுக்கமாட்டார்கள்.''

''ஏனே?''

''மேலிடத்து உத்தரவு.'' இதை பணிப்பெண் சொன்னபோது அவள் இதழ்களில் புன்னகை அரும்பியது.

புரிந்து கொண்டான் விஜயகுமாரன், அழைப்பு அரசகுமாரியிடமிருந்து வந்திருக்கிறதென்று. இருப்பினும் கேட்டான், ''இரவு ஏறி விட்டதே,'' என்று.

''மேலிடத்துக் கட்டளைக்கு இரவு பகல் தெரியாது,'' என்ருள் பணிப்பெண்.

அவளுடன் பேசுவதில் பயனில்லை என்பதை அறிந்து கொண்ட விஜயகுமாரன் அவளைத் தொடர்ந்தான், அறைக் கதவைச் சாத்திக் கொண்டும், கச்சையிலிருந்த வாளை அவிழ்க்காமலும். பணிப்பெண் இருந்த இடத்தை விட்டு நகராமலே, ''வாளை அணிந்திருக்கிறீர்கள்,'' என்று சுட்டிக் காட்டினுள்.



பெயருக்குத் தகுந்தாற்போலவே உன்னிப்பாகப் பார்க்கிறுர்—உன்னி மேரி. (தீபா.)

உமேஷ்—உன்னி மேரி—சுவர்ண மெடல் (மலையாளம்.)

''ஆம்.''

''வாள், துப்பாக்கி முதலிய ஆயுதங்களை தரித்து அந்தப்புரத்துக்குள் வரமுடியாது.''

''என்ருல் வர முடியும்.''

''தவறு.''

''அல்ல. சம்பிரதாயங்கள் உடையும் சமயங்களில் இதுவும் ஒன்று. நட, வழிகாட்டு,'' என்ற விஜயகுமாரன் அவள் முன் செல்ல பின் சென்ருன்.

அந்தப்புரம் அவனிருந்த இடத்திலிருந்து சற்று எட்டவே இருந்தது. அதை மெள்ள அடைந்ததும் அதைக் காத்து நின்ற காவலர் அவனுக்குத் தலை வணங்கி வழி விடவே அவன் உள்ளே சென்ருன். பணிப்பெண் அவனை முகப்பு அறையொன்றில் இருத்தி விட்டு உள்ளே சென்ருள்.



# 1976'ம் வருடத்து இந்தியர்

இந்த வருடம் நாட்டை உலுக்கிய இந்தியர் யார்?

இப்படி ஒரு கேள்வியை இலஸ்டிரேடட் வீக்லி 4 ஆண்டுகளாக வருடா வருடம் வாசகர்களை கேட்டு வருகிறது. ('The person who made the greatest impact on the nation')

முதலாம் ஆண்டு (1973'ல்) வாசகர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் இந்திரா காந்தி.

1974'ல் ஜெயபிரகாஷ். 1975'ல் மீண்டும் இந்திரா. 76'ல்?

சஞ்சய் காந்தியைத் தாம் தேர்ந்தெடுப்பதற்கு வாசகர்கள் பல காரணங்களைக் கூறியுள்ளனர்.

'இவ்வளவு இளம் வயதில் இத்தனை குறுகிய காலத்தில் யாரும் இவ்வளவு காரியங்களைச் சாதித்ததில்லை.' 'தாய், நாட்டைத் தூக்கத்திலிருந்து தட்டியெழுப்பினார். பிள்ளை, அவர்களைச் செயலில் ஈடுபடுத்தினார்.'

ஒரு பெண் 'அடடா, சஞ்சய் ரொம்ப அழகாக இருக்கிறார் இல்லை?' என்று குறிப்பிட்டிருக்கிறார். அந்தப் பெண்ணின் தங்கை, 'என் ஓட்டு சஞ்சய்க்கு. ஏனெனில் இந்தியாவின் அழகிய மனைவி அவருக்கு வாய்த்திருக்கிறார்.' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

சஞ்சய்க்கு அடுத்த இடத்தைப் பெற்றிருப்பவர் இந்திரா காந்தி.

அடுத்தபடி ஜெயப்பிரகாஷ். குறைந்த ஓட்டுகளுடன் இடம் பெறுகிறவர்களில் ஒருவர் சத்திய சாயிபாபா.



கடைசி இடம் ஆசிரியர் குஷ்வந் சிங்குக்கு. தேர்ந்தெடுத்த வாசகர் கூறிய காரணம்: 'இந்த 1976'ம் ஆண்டின் சிறந்த கூஜா.'

முகப்பு அறையில் காத்து நின்ற விஜயகுமாரன் அளவுக்கு மீறிய எந்தச் செயலிலும் அரசகுமாரி ஈடுபடவில்லையென்பதை அறையின் அமைப்பிலிருந்தும் அது இருந்த இடத்திலிருந்தும் புரிந்து கொண்டான். அந்த அறைக்குப் பத்தடி தூரத்தில் அந்தப்புர பெருவாயில் இருந்தது. அங்கு காவலும் இருந்தது. ஆகவே மிக முக்கியமான விருந்தாளிகளை அரச மகளிர் சந்திக்கக்கூடிய அறையிலே தான் இருந்ததால் கட்டுப்பாட்டுக்கு அதிகப் புறம்பான எதிலும் அரசகுமாரி சம்பந்தப்படவில்லையென்பதை அறிந்து கொண்ட விஜயகுமாரன், எதற்காகத் தன்னை நந்தினி அழைத்திருக்கிறாள் என்று சிந்தித்துக் காத்திருந்த சமயத்தில் அறைக்குள் அரசகுமாரி நுழைந்தாள்.

அரசகுமாரியும் சற்று முன்பு நீராடியிருப்பதற்கான அறிகுறிகள் அவள் அந்த அறைக்கு வருமுன்பாக அவனை நாடி வந்தன. சாம்பிராணிப் பொடியின் நறுமணத்தையும் மல்லிகை செண்பகம் இரண்டும் கலந்த கதம்பத்தின் சுகந்தத்தையும் தொடர்ந்து வந்த நந்தினியை ஏற இறங்கப் பார்த்தான் விஜயகுமாரன். அன்று அவள் முக்காடு அணியவில்லை. சேலையின் முக்காட்டுப் பகுதி அவள் கழுத்தில் வளைந்து கிடந்தது. தலையிலணிந்திருந்த கதம்பச் சரம் கறுத்த கூந்தலிலாட, அறை விளக்கில் செண்பக மஞ்சளையும் மல்லிகை வெண்மையையும் மட்டுமின்றி வேறு சில வர்ண ஜாலங்களையும் வெளியிட்டுக் கொண்டிருந்தது அவள் அழகிய திருமேனி. வாசனை கலந்த மஞ்சள் பொடியைத் தேய்த்திருந்த காரணத்தால் அவள் வழவழத்த உடலிலிருந்து கிளம்பிய தசாங்க வாசனையுடன் கன்னக் கதுப்புகளை அழகு செய்த மஞ்சள் நிறம் முந்திய வர்ண ஜாலங்களுடன் போட்டி போட்டுக் கொண்டிருந்தது. அவள் கழுத்தில் அணிந்திருந்த ஒரே ஒரு முத்து மாலை, கழுத்தைச் சுற்றிக் கிடந்த வெண்மை மஸ்லினுக்குள் காட்சியளித்தது மிக ரம்மியமாயிருந்தது பார்ப்பதற்கு. அவள் நின்ற தோரணையில் சித்திரமிருந்தது. நடனமிருந்தது, விம்மிய மார்பிலும் நுண்ணிய இமையிலும் சிற்பத் திறன் இருந்தது. இத்தனை கலைகளை உள்ளடக்கிய நந்தினி இன்னும் எத்தனை இன்ப ஜாலங்களை உள்ளடக்கி வைத்திருக்கிறாளோ, இன்னும் எத்தனை கலைகளை சாத்திரங்கள் அவளிடம் புதைந்த

கிடைக்கச் செய்திருக்கின்றனவோ என்று எண்ணிய விஜயகுமாரன் பேச முடியாமல் வாயடைத்து நின்றான். அவள் இணையற்ற அழகைக் கண்டு நிலத்தில் கண்களை ஒட்டவும் செய்தான் சில விநாடிகளுக்கு பின்பு. 'ஆர்க்கும் நூபுரங்கள் பேரி அல்குலாம் தடந்தேரொத்த வேற்கண் வெம்புருவம் போர் வில்' இவற்றுடன் 'மெல்லியர் வளைந்தபோது பார்க்கவும் அஞ்சினான் அப்பனையனும் உயர்ந்த தோளான்' என்று கம்பர் பிரான் குறித்த இளைய பெருமாளின் நிலையை விஜயகுமாரனும் அத்தருணத்தில் அடைந்தான்.

அந்தப் பிரமிக்கத்தக்க அழகு கைகால்களுக்கு விலங்கு போட்டு ஸ்தம்பிக்க வைத்துவிட்டது அந்த வீரனை. இதனால்தான் கம்பன் அழகிகளை 'விலங்கு மெல்லியல்' என்று வர்ணித்தானோ என்று இலக்கியத்திலும் திளைத்த வாலிபன் மீண்டும் கண்களை உயர்த்தினான் அக்காரிகையை நோக்கி.

அவள் கண்கள் அவன் கண்களுடன் இணைந்தன. அந்தக் காந்தக் கண்கள் தனது உள்ளத்தையே ஊடுருவுவதாகத் தோன்றியதால் நிலைகுலைந்த விஜயகுமாரனை அரசகுமாரியே சுய நிலைக்குக் கொண்டு வந்தாள், "கொஞ்சம் மாறி விட்டீர்கள்," என்ற சொல்லால்.

"என்ன மாறிவிட்டேன்?" என்று வினவினான் விஜயகுமாரன் சற்றே நடுங்கிய குரலில்.

அரசகுமாரியின் பெருவிழிகள் நகைப்பது போன்ற பிரமையை ஊட்டின ஒரு விநாடி. அவள் செவ்விதழ்கள் அகன்று, "துராக்ருதம் குறைந்திருக்கிறது," என்று உதிர்த்த சொற்களில் அந்த நகைப்பு விரிந்து கிடந்தது.

விஜயகுமாரன் கண்கள் வியப்புடன் உயர்ந்து அவள் கண்களை நன்றாகவே சந்தித்தன. "துராக்ருதமா?" என்ற அவன் கேள்வியில் குழப்பம் தெரிந்தது.

"ஆம். ஸ்ரீரங்கத்தில்...." என்று இழுத்தாள் அரசகுமாரி.

"ஓ! அதைச் சொல்கிறீர்களா?" என்ற விஜயகுமாரன் சொற்களில் சிறிது கூச்சம் தெரிந்தது. "அப்பொழுது ஆபத்திலிருந்தேன்," என்று கூறினான் அவன்.

"என்ன ஆபத்து—?"

'குழந்தை அழுகிறது என்றால் தூக்கி வைத்துக் கொள்' என்பார்கள். தூக்கி வைத்துக்கொண்டு அணைத்துக் கொண்டால் இந்த பொம்மைக் குழந்தை அழும்!

அட்டையில் பொம்மையை அணைத்துக் கொண்டிருப்பவர் குமாரி பத்மா.

வண்ணப்படம்: உத்ரா —எஸ். ரஜத்



"திருடனென்றீர்கள் என்னை."

"அதில் தவறென்ன?"

"தவறென்னவா!"

"ஆம்."

"எதைத் திருடினேன்? அரங்கன் கண்ணையா?"

"இல்லை. அரசன் பெண்ணை." இதைச் சொன்ன அரசகுமாரி நகைத்தாள், விஜயகுமாரனை நோக்கி ஒரு அடி எடுத்து வைக்கவும் செய்தாள். அவள் பார்வையிலிருந்தது பரிதாபமா, காதலா? தெளிவாகத் தெரியவில்லை அவனுக்கு. ஆனால் அவள் சொற்களில் பரிதாபமே உதிர்ந்தது. "நான் ஒரு கேள்வி கேட்கிறேன் சொல்வீர்களா?" என்று வினவினாள் அரசகுமாரி மெல்ல.

"கேளுங்கள்," என்றான் விஜயகுமாரன்.

அவள் அவனை நெருங்கினாள். சுற்று முற்றும் பார்த்துவிட்டு, அவன் காதுக்கருகில் உதடுகளைக் கொணர்ந்தாள். அவள் சூடியிருந்த கதம்ப வாசனை, தலைக்குழலுக்குப் போட்டிருந்த சாம்பிராணி வாசனை, உடலின் தசாங்க சுகந்தம், இவையனைத்தும் அந்த வாலிபனை ஏதோ ஓர் இந்திர லோகத்துக்கு அழைத்துச் சென்றன. அவள் சேலை காற்றில் அசைந்து அவன் மீது மெல்ல உராய்ந்து அவன் உணர்ச்சிகளைக் கொந்தளிக்க வைத்தது. ஆனால் அவள் காதுக்கருகில் உதிர்த்த சொற்கள், கேட்ட கேள்வி, அவன் உடலில் மின்சாரமெனப் பாய்ந்தது. "அவள் யார்?" என்று கேட்டாள் அரசகுமாரி.

"யார்?" முணு முணுத்தன விஜயகுமாரன் உதடுகள்.

"உங்களுக்கு வெறி ஊட்டியவள்," என்று ரகசியமாகக் கேட்டாள் தஞ்சை மன்னன் மகள்.

(தொடரும்)

# ல்யாணி இருக்கிறாள

சைக்கிளின் வேகத்தைக் குறைக்காமலே செய்தித்தாளை மட்டும் வீசியெறிந்து விட்டுப் போனான் பேப்பர் பையன். வாரப் பத்திரிகையை மறந்துவிட்டானா?

கையைத் தட்டிக் கூப்பிட்டு விசாரித்தான் முரளி.

''அம்மாதான் பேப்பர் தவிர மற்ற எல்லா வாரப் பத்திரிகைகளையும் நிறுத்திட்டாங்களே,'' என்றான் பேப்பர் பையன்.

முரளிக்குக் கோபமாக வந்தது. நேராகச் சமையல் கட்டுக்குப் போய், தாளித்துக் கொண்டிருந்த அம்மாவிடம், ''என்னம்மா இது, பத்திரிகையெதுவும் போட வேண்டாம்னு சொல்லிட்டீங்களாமே?'' என்று கேட்டான்.

''ஆமாண்டா கண்ணு. அப்பா சம்பளம் நின்று போயிட்டுத்தில்லையா? செலவுகளைக் குறைக்க வேண்டாமா?'' என்று அவனைச் சமாதானப் படுத்தினாள் பார்வதி.

சென்ற மாதம் மகாதேவன் 'கட்டாய ஓய்வு' பெற்றுவிட்டார். இனி கோபியின் சம்பளத்தை மட்டும் வைத்துத்தான் சமாளிக்க வேண்டும். அதனால்தான் இந்தச் சிக்கன நடவடிக்கைகள்..

சாயங்காலம் பால்கார ஆறுமுகம் வந்தான். அவன் கணக்கைத் தீர்த்துவிட்டு, ''நாளையிலிருந்து ஒரு படி பால் குறைச்சுடுப்பா,'' என்றாள் பார்வதி.

''சரிம்மா'' என்றான் அவன். காரணத்தை ஊகித்துக் கொண்டான்.

''இன்னிக்கு டான்ஸ் கிளாஸுக்குப் பணம் கட்டணும்மா.'' ஸ்கூலுக்குப் புறப்படும்போது நினைவுபடுத்தினாள் அமுதா.

''டான்ஸ் கத்துகிட்டது போதும். நின்று கொள். அப்பா சம்பளம் 'கட்' ஆயிட்டுதில்லையா? இனிமேல் டான்ஸ் 'பீஸெ'ல்லாம் கொடுக்க முடியாது.''

ஜெனமேஜெயன்

இன்னும் என்னென்ன செலவுகளைக் குறைக்கலாம் என்று மூளையைக் கசக்கிக் கொண்டு யோசனை செய்தாள் பார்வதி.

''சார்!'' வெளியே குரல் கேட்டது. வீட்டுச் சொந்தக்காரர்..

வாடகையைக் கொடுத்தனுப்பிவிட்டு வந்தாள் பார்வதி. ஈஸிசேரில் அமர்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்த மகாதேவனிடம், ''என்னங்க, இவ்வளவு பெரிய வீடு நமக்கு என்னத்துக்குன்னு பார்க்கறேன். ஒரு நூற்றைம்பது ரூபாயில் வேறு வீடு பார்த்தால் என்ன? நூறு ரூபாய் மிச்சப்படுமே?'' என்றாள்.

அவருக்கும் அது சரியாகப் பட்டது. ''ஆமாம். சாமிக்கண்ணுவிடம் சொல்லி....''

மகாதேவன் முடிக்கவில்லை. ''எனக்கு ஆயுசு நூறு,'' என்றபடி வெற்றிலையைக் குதப்பிக் கொண்டே உள்ளே நுழைந்தார் சாமிக்கண்ணு. அவர் ஒரு சகல தரகு வல்லுநர்.

''நம்ம கோபிக்குப் பொருத்தமான பெண் பார்த்திருக்கிறேன். கல்யாணின்னு பேர்.'' போட்டோவைப் பார்வதியிடம் கொடுத்தார் சாமிக்கண்ணு.

பெண் குத்துவிளக்குபோல் அழகாக இருந்தாள். சிரித்த முகம். பெரிய கண்கள்.

''தங்கமான குணம். மாம்பலத்தில்தான் வீடு. ஏ. ஜி. ஆபீஸில் வேலை. ஐநூறு ரூபாய் சம்பளம்.''

சாமிக்கண்ணு சொன்ன கடைசி வாக்கியத்துக்கு மந்திர சக்தி இருந்தது.

''பொண்ணு நம்ம ஜானுவின் மகள் மாலதி ஜாடை இல்லே? ஆனால் அவளைவிட லட்சணம்.'' பார்வதியின் குரலும், முகமும் அவளுடைய சம்மதத்தைப் பறைசாற்றின.

வீடு மாற்றும் பிரசினையை மறந்துவிட்டார்கள்.


PAISE
SALOFEN
ANALGESIC TABLET
SALOFEN

சாண்டில்யன்

## 16. இரண்டாவது சபதம்

அரண்மனை அந்தப்புரத்து முகப்பு அறையில், ஆங்கிலேயரின் மண்ணெண்ணெய் பவர் விளக்கின் வட்டத் திரி வீசிய மென்மையான ஒளியில், அரசகுமாரியை நன்றாகவும் நிதானமாகவும் பார்க்க நேரிட்ட சந்தர்ப்பத்தில், அவள் அழகை அள்ளிப் பருகிய கண்களும், சுகந்தத்தை வீசிய சுகந்தப் பொடிகளும் கதம்ப மலர்களும் அளித்த நறுமணத்தை முகர்ந்த நாசியும், தங்கள் அனுபவங்களைச் சித்தத்துக்கு அனுப்பியதால் மதிமயங்கி விஜயகுமாரன் நின்ற நேரத்தில், அவனை அளவுக்கதிகமாகவே நெருங்கிய நந்தினி, ''யார் அவள்? உங்களுக்கு வெறி ஊட்டியவள்?'' என்ற கேள்விகளைக் காதுக்கருகில் உதிர்த்த போதே அந்த வாலிப வீரனின் உணர்ச்சிகள் ஊசி முனையில் நின்றன வென்றால், கேள்விகளைக் கேட்டுக் காதிலிருந்து அவள் உதடுகள் பின் வாங்கிய சமயத்தில் அவள் கேள்வி விளைவித்த அதிர்ச்சியால் அவன் கன்னத்தைச் சரேலென்று திருப்பவே, அவள் அழகிய அதரங்கள் அவன் கன்னத்தைத் தடவி விட்ட காரணத்தால், அவன் மட்டுமென்ன, அவளும் அதிர்ச்சியுற்றே நின்றுவிட்டாள் பலவிநாடிகள். அந்த நெருங்கிய நிலையிலிருந்து அரசகுமாரி மீண்டபோது இருவருக்கும் இடையில் பரம சங்கடமான நிலைமை நீடித்து நின்றதால் மௌனமும் நீடித்தது.

நீடித்தது உண்மையில் மௌனந்தானா என்ற சந்தேகம் இருவரையும் பிடிப்பதற்கு இதயங்கள் காரணமாயிருந்தன. அவள் இடையில் கையைச் செலுத்தி அணைத்துப் பலவந்தமாகப் பூவுடல் முழுதும் தன்மீது படத் தூக்கிப் புரவிமீது ஸ்ரீரங்கத்தில் போட்டபோது ஏற்படாத உணர்ச்சி வேகம், மனத் திண்டாட்டம், இடையே ஊடுருவாத இன்ப ஜுரம், இவை விளைவிக்காத இதய ஓட்டம், அந்த ஓட்டத்தினால் ஏற்படாத மன இரைச்சல், இவை இந்தச் சாதாரண சம்பவத்தில், எதிர்பாராதவிதமாக அவள் இதழ்கள் கன்னத்தில் தடவி விட்ட காரணத்தால், ஏன் ஏற்பட வேண்டும் என்று எண்ணிப் பார்த்தான் விஜயகுமாரன். அரசகுமாரியின் நிலையோ சொல்லத் தரமல்லாமல் உயிர்ப் பெண்ணை உயிரற்ற சிலையாக அடித்திருந்தது. ''இவர் தொட்

# ராஜ பேரிகை



டுத் தூக்கிய சமயத்திலில்லாத நாணம் இப்பொழுது எங்கிருந்து திடீரென வந்துவிட்டது எனக்கு?'' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள் அவள். ''கொள்ளிட நீர்க்காலின் கரையில் உட்கார்ந்திருந்தபோது கைத்துப்பாக்கியை நீட்டி அச்சுறுத்தினேனே இவரை, அந்தத் துணிவு இப்பொழுது எங்கு ஓடிவிட்டது?'' என்றும் வினவிக் கொண்டாள். ''இவரை அப்பொழுதே நான் ஏன் சுடவில்லை? சுட்டுவிட்டுப் புரவியில் ஏறித் திரும்பவும் ஸ்ரீரங்கம் வந்து டபீர் பண்டிதருடன் சேர்ந்து சொந்த நகரம் ஏன் திரும்பவில்லை?'' என்றும் சுய சோதனை செய்து கொண்டாள்.

மெள்ள மெள்ள உண்மை உதயமாகவே கண்களை நிலத்திலேயே ஓட்டினாள். இந்த வாலிபனைக் கண்டது முதல் தன் மனத்தில் எழுந்த பரிதாபமும் (பரிதாபம்தான் அது என்று தன்னை ஏமாற்றிக்கொண்டாள் அரசகுமாரி) பரிவும் (இதுவும் ஒரு ஏமாற்றம்) தன் இதயத்தை அவன்பால் இழுத்துவிட்டதை உணர்ந்த அரசகுமாரி, ''ஆம். இந்த வாலிபனிடம் பரிதாபமும் பரிவையும் தவிர வேறு என்ன ஏற்பட்டிருக்க முடியும் எனக்கு?'' என்றும் கேட்டுக் கொண்டாள். ஆனால் அந்தக் காரணங்கள்



'மேற்கு மாம்பலத்துக் குக் குடி வந்ததும் எல்லாருக்கும் மாக்ஸி டிரஸ்தான்!''

அர்த்தமற்றவை, கேள்விகளும் அர்த்த மற்றவை என்பதை அவள் மனம் இடித்துக் காட்டியது. ''இவனிடம் ஏற் பட்டது பரிதாபமென்ருல்,பரிவென்ருல், முராரி ராவின் உதவி கிடைத்ததும் அவருடன் பயணம் செய்து இங்கு வந்திருக்கலாமே. அவர் சொன்ஞர் என்பதற்காக இவனுடன் ஏன் வந்தாய்? இவனிடம் உனக்குப் பைத் தியம், அதை ஏன் மறைக்கிருய்?'' என்று இதயம் இரைந்து கேட்டது, நகைக்கவும் செய்தது. ''அதெல்லாம் கிடக்கட்டும், இவனை அந்தப்புரத்துக்கு எதற்காக வரவழைத்தாய்? அரசாங்க விஷயம் பேசவா? வரவழைத்ததுதான் வரவழைத்தாய், காதுக்கருகில் போய்த் தான் கேள்வி கேட்க வேண்டுமா? அடி கள்ளி!'' என்று மனம் தூற்றவும் செய் தது.

சங்கடத்தை உதறிக் கொண்டு விஜயகுமாரன் ஏறெடுத்துப் பார்த்தான். அவள் நின்ற விதத்தி லேயே சிருங்காரமிருந்தது, கலையும் இருந்தது. சற்றே ஒடிந்து ஒருபுறம் ஒதுங்கிய இடை, அவள் உடலை நர்த் தனப் பாவையாக அடித்திருந்தது. நிலத்தில் கண்கள் நோக்கியதால் கவிழ்ந்த தலை, ஜதி ஸ்வரங்களைக் கற்ற கால்கள் நர்த்தனத்துக் குத் தயாராயிருக்கின்றனவா என்பதை ஆராய்வதைப் போன்ற பிரமையை ஏற்படுத்தியிருந்தது. தலையின் கறுத்த குழலைப் பவர் லைட்டின் வெண்மை வெளிச்சம் அதிகக் கருமையாக்கவே கதம்பச் சரத்தின் செண்பகமும் மல்லி கையும் அதிகப்படி காந்தியை வீசின. தன்னைத் திடப்படுத்திக் கொள்வதற் குப் பக்கத்தில் வாயிற்படியில்லாததால் இடையில் ஒரு கையைக் கொடுத்து அவள் நிதானப்படுத்திக் கொண்டதன் விளைவாக, பக்கவாட்டில் முக்கோணம் அமைத்த முழங்கை சேலையை லேசாகத் தூக்கவே ஒரு பக்கத்து மார்பின் ஏதோ ஒரு சிறு பகுதி கண்களுக்குப் படவே செய்தது.

ஆனல் எது மறைத்தாலும் மறைக்கமுடியாத அவள் இடைக்கடுத்த திரண்ட எழில்களும், நடன பாவத்தில் வளைந்து இயற்கை கடைந்திருந்த உருண்ட மணிக் கால்களும், மருதாணி யால் சிவந்த பாத விரல்களும், புறப் பாத சித்திரமும், தஞ்சை மண்டலத் தில் சோழர்களுக்குப் பிறகு சிற்பமோ சித்திரமோ அழிந்து விடவில்லையென்ற நினைப்பையே ஊட்டின.

இத்தகைய தோற்றத்தைத் திரும்பத் திரும்ப அவன் பருகுவதை நந்தினியும் உணர்ந்தே இருந்தாள். உணர்ந்தென்ன? செய்யும் வகையேதும் அறியாமல் திண்டாடினுள். அவள் திண் டாட்டத்தை உணர்ந்ததாலோ அல்லது அரச மகளை அப்படிப் பார்ப்பது பண் பாட்டுக்கு உகந்ததாகாது என்ற நினைப் பாலோ விஜயகுமாரன் மெள்ள பேச் சைத் துவங்கி, ''என்ன கேட்டீர்கள் அரசகுமாரி?'' என்று வினவினன்.

அரசகுமாரியும் ஒரு நிதா னத்துக்கு வந்திருக்க வேண்டும், அல்லது வந்து விட்டதாக நினைத்திருக்க வேண் டும். அதன் விளைவாகத் தன் கண்களை நிலத்திலிருந்து மீட்டு அவனை அரை குறையாகப் பார்த்தாள். ''யாரவள் என்று கேட்டேன்,'' என்று பழைய கேள் வியைக் கிள்ளையைப்போல் திருப்பினுள்.

சொன்னதைச் சொல்வது கிள்ளைதான். ஆனல் அவள் மொழியும் கிள்ளை மொழிபோல் அவன் செவிக்கு மிக ஆனந்தமாகவே இருந்தது. ஆகவே அவனும் சொன்னுன், ''ஆமாம், கேட் டீர்கள்,'' என்று சற்றுத் திணறி.

''உங்களுக்கு அவள் பெரி தும் வெறியூட்டியிருக்க வேண்டும்,'' என்ருள் நந்தினி மெள்ள ஏதோ விஷ யத்தை விசாரிப்பவள்போல்.



ஜெயசித்ராவுக்கேற்ற ஜன்னல்;
ஜன்னலுக்கேற்ற ஜெயசித்ரா.

படம்: 'ஆளுக்கொரு ஆசை'

இந்தக் கேள்வி விஜய குமாரன் கண்களில் ஏதோ ஒரு விபரீத ஒளியைப் படரவிட்டது. "ஒருவிதத்தில் வெறி தான் எனக்கு. ஆனால் அதை ஊட்ட யாருமில்லை. ஊட்ட வேண்டியவள் இந்த உலகில் இல்லை," என்று கூறிய சொற்களில் துன்பம் மித மிஞ்சிக் கிடந்தது.

"உங்கள் அன்னை என்று ஏதோ கூவிச் சபதம் செய்தீர்களே அரங்கன் சந்நிதியில்?" என்று வினவினாள் அரசகுமாரி மெதுவாக.

"ஆம், என் அன்னை தான். அன்னையாகத் தானிருக்க வேண்டும். இல்லாவிட்டால் என் ரத்தம் இத்தனை தூரம் கொதித்திருக்காது. அதை ஏன் கேட்கிறாய் இப்பொழுது? அது பெருங் கதை...." என்று கூறிய விஜயகுமாரன் துன்பப் பெருமூச்சு விட்டான்.

எல்லையில்லாத் துன்பம் அவனை ஆட்கொண்டு விட்டதையும் அவன் சரீரம் லேசாக நடுங்குவதையும் கண்ட அரசகுமாரி, அவன் தன்னை அழைத்த போது மரியாதையைக் கைவிட்டதைக் கூடக் கவனித்தாள். 'ஆம் ஆம். உணர்ச்சிகள் மேவிடும்போது மரியாதை பறந்துவிடுகிறது,' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

அவள் உள்ள உணர்ச்சிகளை அவன் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. தவிர அவன் துணிவும் சற்று மித மிஞ்சியது. அரசகுமாரியை அணுகி அவள் தோள்மேல் கையை வைத்தான் பலமாக. "நந்தினி! அந்தக் கதை உனக்குத் தெரிய வேண்டுமா? காலம் எப்படியும் அவிழ்க்கும் அந்தச் சதியை. ஆனால் இப்பொழுதே தெரிந்துகொள்கிறாயா? பாரதம் யாரால் இன்னும் பிழைத்திருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள விரும்புகிறாயா?" என்று வெறிபிடித்தவன்போல் வினவினான். அவன் சொற்களிலும் வெறியிருந்தது. அவளைப் பார்த்த கண்களிலும் வெறி

யிருந்தது. அவள் பூவினும் மென்மையான தோளில் அழுந்திய கை லேசாக நடுங்கியது. அவன் உன்மத்த நிலையிலிருக்கிறான் என்பதைப் புரிந்துகொண்ட அரசகுமாரி சற்று பயம் அடைந்தாள்.

அவள் விழிகளில் படர்ந்த அச்சத்தை அவன் வெறிபிடித்த கண்கள் கவனித்திருக்க வேண்டும். ஆகவே அவன் கூறினான், "அஞ்சாதே அரசகுமாரி. பாரதப் பெண்கள் அச்சத்தை உதற வேண்டிய காலம் இது. ஏற்கனவே பல கற்புக்கரசிகள் உதறியிருக்கிறார்கள். அவர்கள் தியாகத்தால் பாரதம் இன்னும் ஜீவிக்கிறது. இந்து மதமும் சமுதாயமும் அதனால்தான் இன்னும் உயிருடன் இருக்கிறது," என்று.

விஜயகுமாரன் கை அவள் தோளிலிருந்து அகன்றது. பிறகு இரு கைகளும் அவள் கன்னத்தை அழுத்திப் பிடித்தன, கண்கள் அவள் கண்களை ஊடுருவின.

அச்சமுற்றாள் அரசகுமாரி. காவலரைக் கூப்பிடலாமா என்று ஒரு கணம் யோசிக்கவும் செய்தாள். என்ன காரணத்தாலோ அவள் தன்னை விடுவித்துக் கொள்ளவுமில்லை, காவலரை அழைக்கவுமில்லை. சற்றே நடுங்கிய வண்ணம் அந்த வெறியனைப் பார்த்துக் கொண்டு நின்றாள். அப்பொழுது அவன் வாயிலிருந்து மெல்ல உதிர்ந்தன சொற்கள். "உன் கன்னங்களை இப்பொழுது என் கைகள் பிடித்திருக்கின்றன பலமாக. நீ தப்ப முடியாது என்னிடமிருந்து. உன் கண்களை வெறித்துப் பார்க்கிறேன். நீ அகற்ற முடியாது உன் கண்களை. இப்பொழுது நீ அஞ்சுகிறாய். ஆனால் இப்படி எத்தனை இந்துப் பெண்களை எதிரிகள் பார்த்திருக்கிறார்கள்! தங்கள் வெறிக்கு அடிமையாக்கியிருக்கிறார்கள்! ஆனால் அதிலிருந்து தப்பிய பெண்களும் உண்டு. அவர்களில்...."

"அவர்களில்?"

"என் அன்னை ஒருத்தி" என்ற விஜயகுமாரன், "கேள் கதையை அரசகுமாரி. பிற்காலத்துக்கு ஓடு," என்று கூறி நந்தினியை நோக்கினான்.

"எத்தனை தூரம் ஓட வேண்டும்?"

"இப்பொழுது என்ன ஆண்டு இது?" என்று கேள்வியை வீசினான் விஜயகுமாரன்.

"ஆங்கிலேயர் கணக்குப்படி 1749," என்றாள் மெல்ல அரசகுமாரி.

"பதிமூன்று ஆண்டுகளுக்கு முன்பு சென்று விடு."

"1736?"

"ஆம். அதே ஆண்டுதான். அந்த ஆண்டில்தான் நாயக்கர் க்ஷத்திரிய வம்சம் ஆதிக்கம் அழிந்தது. வீரத்தின் குறைவாலல்ல, வஞ்சகத்தால், நம்பிக்கைத் துரோகத்தால்."

"சொல்லுங்கள்."

---



பெரும்பாலும் கேரளத்துப் பெண்களின் கூந்தல் நீளமாகவும் அடர்த்தியாகவும் காணப்படுவதற்கு, அவர்கள் ஸ்நானம் செய்யும் முறையும் ஒரு காரணமாக இருக்கலாம். தலைமைக் கவிழ்த்துக் குப்புற விட்டுக்கொண்டு நன்றாக இரு கைகளாலும் தேய்த்து நீரில் முக்கிக் கழுவுகிறார்கள். இம்முறையில் உள்ள விசேஷம் என்னவென்றால், தலையைக் குப்புறக் கவிழ்த்துப் பிடிப்பதால் தலைக்கு அதிகமான ரத்தம் செல்கிறது. அத்தோடு கைகளால் அழுத்தித் தேய்ப்பதால் மயிர்க்கால் நாளங்களுக்கு மஸாஜ் எனப்படுகிற ஒருவகைப் பயிற்சியும் கிடைக்கிறது.

—விசாலம் ஹமீட்

உடனே சொல்லவில்லை விஜயகுமாரன். "இந்துக்களின் அரசுகளை, அதாவது தென்னாட்டு அரசுகளை, அழித்து முடித்துவிட முஸ்லீம் ஆட்சிப் பீடங்கள் முயன்ற காலம்," என்ற வார்த்தைகளைச் சொல்லிவிட்டு மீண்டும் அறையில் உலாவினான் மௌனமாக. பிறகு மெள்ள மெள்ள உதடுகள் சொற்களை உதிர்த்தன மெதுவாக, உறுதியாக, ரோஷமாக. "மதுரை நாயக்கர்கள்* ஸ்தாபித்த சாம்ராஜ்யம் மெள்ள சதியாலும் அரச குடும்பக் கலகங்களாலும், இந்துக்களுக்கு இயற்கையாகவுள்ள சிறு பூசல்களாலும் மெள்ளக் குறுக முற்பட்ட காலம். விஜயரங்க சொக்கநாத நாயக்கர் குழந்தையின்றி இறந்துவிட்டார். ஆகவே அவர் மனைவி ராணி மீனாட்சி அரசு கட்டில் ஏறினாள். நாடு இருந்த நிலையை முன்னிட்டு அரசபீடத்தை மதுரையிலிருந்து திருச்சிக்கு மாற்றிக்கொண்டாள். அரசுப் போட்டி குடும்பத்தில் வலுத்தது. ஆதரவற்ற ராணி மீனாட்சி பங்காரு திருமலா என்பவரின் குழந்தையைச் சுவீகாரம் செய்து கொண்டாள். இருப்பினும் வலுத்தது குலச்சண்டை. விரைவில் பங்காரு திருமலா, வெங்கடாச்சாரியார் என்ற தளபதியின் உறவு கொண்டு மீனாட்சியின் அரசைப் பறிக்கத் திருச்சிமீது படையெடுத்தார். நிர்க்கதியான ராணி மீனாட்சியின் உதவிக்கு ஒரு நவாப் வந்தார், ஆற்காடுப் படைகளுடன். 'நான் உனக்கு சகோதரன். உன்னைக் காப்பாற்றுகிறேன். உன் அரசையும் காப்பாற்றுகிறேன்' என்று குர்ஆன்மீது கைவைத்து சத்தியம் செய்தார். அந்தச் சத்தியத்தை நம்பிய ராணி மீனாட்சி நவாபைத் திருச்சிக்குள் அனுமதித்தாள். அவளைக் காப்பாற்ற நவாப் ஒருகோடி ரூபாய் கேட்டார். அதற்கும் ராணி சம்மதித்தாள். ஆனால் நவாப் சத்தியத்தை மீறினார். திருச்சியை விழுங்கினார். சகோதரராக நடந்து கொள்ளவில்லை. ராணியைச் சிறையில் தள்ளினார். அதிக்கிரமும் செய்திருப்பார். ஆனால் ராணி தன்னைக் காப்பாற்றிக்கொண்டாள்...." இங்கு சற்று நின்ற விஜயகுமாரன் "எப்படி யென்று கேட்கவில்லையே நீ?" என்று வினவினான் கோபத்துடன்.

"எப்படி?" அரசகுமாரியின் குரலில் துன்பச் சுமை ஏறியிருந்தது.

"ராஜபுத்திரிகள் வழியில். ஜோஹரில். தன்மீது தீயிட்டுக்கொண்டாள். அவள் புனித உடலை அக்கினி பகவான் காப்பாற்றினான் நவாபின் கைகளிலிருந்து," என்ற விஜயகுமாரன், "இப்பொழுது புரிகிறதல்லவா கதை?" என்றான்.

"புரிகிறது. ஆனால்....?"

"ஆனாலென்ன?"

"ராணி மீனாட்சி ஒரு சிறுவனை சுவீகாரம் செய்து கொண்டாளென்றீர்களே?"

"ஆம்".

"அவர் பெயர்?" இங்கு மரியாதை திரும்பியது அரசகுமாரியின் குரலில். கனிவும் காணப்பட்டது.

"விஜயகுமாரன்," என்று முடித்த விஜயகுமாரன நகைத்தான்.

"ஏன் நகைக்கிறீர்கள்?"

"அந்த விஜயகுமாரன் மறைந்துவிட்டான். அவன் நான்தானா என்பது எனக்குத் தெரியவில்லை. அந்த மர்மம் பின்னால் அவிழ்க்கப்படலாம். ஆனால் அவன் பெயர் எனக்கிருக்கிறது. அவன் ஆற்ற வேண்டிய பணியும் என் மீது சுமத்தப்பட்டிருக்கிறது. அதை மகிழ்ச்சியுடன் நிறைவேற்றுவேன்," என்ற விஜயகுமாரன் ஏதோ சிந்தித்து விட்டு, "அரசகுமாரி! இப்பொழுது இன்னொரு சபதமும் செய்திருக்கிறேன்," என்றான்.

"என்ன அது?" என்று வினவினாள் அரசகுமாரி.

"நாளை சொல்கிறேன். என் உணர்ச்சிகள் என் வசத்திலில்லை," என்று சொல்லிவிட்டு வெகுவேகமாக அந்த அறையை விட்டு நடந்தான் விஜயகுமாரன்.

அரசகுமாரி அவன் சென்ற பின்பு நீண்ட நேரம் அங்கேயே நின்றிருந்தாள். 'அந்த இரண்டாவது சபதம் எதுவாயிருக்கும்? இன்னும் யார் தலையைக் கொய்யப் போகிறார்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். பிறகு அந்தப்புரத்துக்குள் சென்று தன் அறையை அடைந்து பஞ்சணையில் படுத்தாள். யோசித்தாள். ஆனால் விடை கிடைக்கவில்லை. மறுநாள் விடை கிடைத்தது. விடை கிடைத்தபோது விஜயகுமாரன் கிடைக்கவில்லை.

(தொடரும்)

---

* *For details of these incidents refer "History of the Nayaks of Madura" by R. Sathyanath Iyer and Dr. S. Krishnaswamy Iyengar.*

# யாருடைய எவர்சில்வர் கிண்ணம்?

## ஹம்சா தனகோபால்

தெருவோரத்தில் இருந்த அந்தச் சிறிய வில்லை வீட்டின் முன்புறமுள்ள திண்ணையில் அமர்ந்திருந்தாள் பாவாயி. தன் சேலைத் தலைப்பில் உடலைச் சுற்றி போர்த்திக் கொண்டிருந்தாள். வாய் வெற்றிலையை மென்றிருந்தாலும் மனம் என்னமோ எப்படி இன்றைய சமையலை முடிப்பது என கவலைப்பட்டுக் கொண்டிருந்தது.

நடுத்தர வயதுள்ள அவள் இளம் வயதிலேயே கணவனை இழந்தவள். உழைத்து உழைத்தே வயதானவள் போலாகிவிட்டாள். முதல் பெண் பெருமாயியை அடுத்த தெருவில் சொந்தத்திலேயே மணமுடித்து கொடுத்திருந்தாள். அடுத்த பையன் ஆறுமுகம் இருபது வயது வாலிபனாக நெசவு நெய்யப் போய்க்கொண்டிருந்தான். பாவாயியும் நெசவு நெய்யத்தான் போய்கொண்டிருந்தாள். இன்று அவளால் சுத்தமாக முடியவில்லை. வேலைக்குப் போகவில்லை. அவள் நெய்ய வேண்டிய சேலை அப்படியே நின்றுவிட்டது என்று முதலியார் திட்டுவார்தான். என்ன செய்ய. . . .

உட்கார்ந்த வாக்கிலேயே வலது சுட்டு விரலையும் நடு விரலையும் உதட்டின் மீது சிகரெட் பிடிப்பது போன்று வைத்து, சர்ரென எச்சிலைத் துப்பினாள். அந்த வெற்றிலை எச்சில், விரல்களில் துளியும் கறை படியாமல் சரியாகத் திண்ணையை அடுத்த சாக்கடைக்குள் பாய்ந்தது. தெருவில் சென்று கொண்டிருந்த ஒரு பெண்ணைப் பார்த்து அவள் சுருங்கிய முகம் மகிழ்ச்சியால் விரிந்தது.

''எல்லம்மா, இங்கே செத்த வாயேன்,'' என்றாள் பாவாயி.

''என்ன அயித்தே, சமைக்கலையா, குந்திக்கிட்டு இருக்கியே?'' என்றபடி எல்லம்மா என்ற அந்தப் பெண் அவளருகில் வந்தாள். சொந்தமே இல்லாவிட்டாலும் ஒருவருக்கொருவர் வயதுக்கு ஏற்றபடி உறவு சொல்லி அழைப்பது வழக்கம். மட்ட நைலக்ஸ் புடவையைப் பின் கொசுவம் வைத்து கட்டியிருந்தாள். நைலான் சோளி, பிரா, ஆக கருப்பாக இருந்த போதும் அவள் கவர்ச்சியாகவும் சற்று அழகாகவும் தோன்றினாள்.

''இல்லேடிமா. காய்ச்ச அடிக்குது. எப்படி சமைக்கிறதுன்னு தான் தெரியலே,'' எனச் சலித்துக் கொண்டாள் பாவாயி.

''நானு வேனுன்னா சமைச்சுடட்டுமா. இரு. இந்த பொவையிலையை மாமங்கிட்டே கொடுத்துட்டு வந்துடறேன்,'' என்ற எல்லம்மா புகையிலையுடன் அடுத்த வீட்டிற்குள் நுழைந்தாள்.

கணவனை மாமா என்றழைப்பது அவர்கள் வழக்கம். எப்போதும் தண்ணீரிலேயே நீந்திக் கொண்டிருப்பான் அவள் மாமன். சென்னை வார்னிஷ் வாங்கிக் கொடுப்பாள் எல்லம்மா. இந்த விஷயத்தில் மட்டும் அவள் ஒரு நளாயினி.

சில விநாடிகளில் பாவாயியிடமே திரும்பினாள் எல்லம்மா.

''என்ன சமைக்கட்டும் அயித்தே?''

''உ . . . .ஆரியன் களிகிண்டனும். ருவாடு வாங்கி வெச்சிருக்கேன். கொழம்பு வெக்கணும். ஆறுமுவம் வர்ற நேரம்கூட ஆயிட்டுது. நீ சமைச்சுட்டியா எல்லம்மா?''

''எப்பவோ செஞ்சுட்டேன்.''

எல்லம்மா அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்த பானை நீரில் ஆரிய

# வைக்கவில்லையே! - புட்டண்ணா



'தங்க மயில்' விருது பெற்ற ஜப்பானியப் படத்தில்...

தெரிய வேண்டும் என்ற கருத்து. படத்தின் படிப்பினையாகக் கொடுக்கப்படுகிறது. ஒரு சிறிய கதையைக்கூட மனத்தில் பதியும்படி படமாக்கியிருக்கிறார்கள்.

இந்த பிலிம் விழாவைப் பார்த்த பிறகு எனக்கு ஏற்பட்ட சில பொதுவான அபிப்பிராயங்கள்:

1. இந்தப் போட்டியில், கன்டென்ட் அஃப் த பிலிம், தீம்—இவற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள். கிராண்டியர், பிக்னெஸ், ஸ்ப்ளெண்டர் ஆகியவை காணப்படவில்லை. ஒரு 'டென் கமாண்ட்மென்ட்ஸ்' மாதிரியோ, ஒரு 'பென்ஹர்' மாதிரியோ பிரமிக்கவைக்கும் காட்சிகளோ வியப்பளிக்கும் காமெரா வேலைகளோ உள்ள ஒரு படமும் வரவில்லை.

2. ஓரிரு படங்கள் தவிர, எல்லாமே டயலாக் படங்கள். பாத்திரங்கள் பேசிக்கொண்டே இருக்கிறார்கள். ஸப் டைட்டில் மட்டும் இல்லாமலிருந்திருந்தால் கதையோ காட்சியோ கூடப் புரிந்திருக்காது.

3. ஒரு படத்தைத் தவிர, எல்லாப் படங்களிலும், மிகவும் பழமையான பிளாஷ்–பேக் டெக்னிக்கை அடிக்கடி உபயோகப்படுத்தியிருக்கிறார்கள்.

சிறந்த கதையம்சமும் நமது கலாச்சாரத்தைப் பிரதிபலிக்கும் நேடிவிடியும் நிறைந்த நல்ல படங்கள் இங்கு தென்னிந்தியாவில் தயாரிக்கப்படுகிறது. கே. பாலசந்தர், கே. எஸ். கோபாலகிருஷ்ணன் எழுதி டைரக்ட் செய்யும் சிறந்த அர்த்தமுள்ள வசனங்கள் நிரம்பிய படங்களுக்கு நல்ல வரவேற்பு இருக்கும். தேவையற்ற பாடல்கள், ஒருசில காட்சிகளை நீக்கிவிட்டு, நன்றாக 'ட்ரிம்' செய்து, நல்ல வசனங்களைச் சரியாக மொழிபெயர்த்து, ஸப்–டைட்டில்கள் செய்து வெளிநாடுகளில், சர்வதேசப் படவிழாக்களில் காண்பிக்க வேண்டும்.

தென்னிந்திய மொழிகளில், ரசிகர்களாலும், விமரிசகர்களாலும் பாராட்டப்படும் சிறந்த படங்கள், சர்வ தேச பிலிம் ஸ்டாண்டர்டுக்குச் சிறிதும் குறைந்தவை அல்ல, ஒப்பிட்டுப் பார்க்கையில் நல்ல தரமாக இருக்கின்றனவே! எனவே தாழ்வெணர்ச்சியை விடுத்து, இந்தியப் படங்கள் என்றால், தென்னிந்திய மொழிப்படங்களும் முக்கியமானவை என்று நிரூபித்து, சர்வதேச அரங்கில் நமது கலைஞர்களுக்கும், அவர்கள் கிரியேஷன்களுக்கும் பெயர் வாங்கித் தர நாம் அனைவரும் ஒன்று சேர்ந்து செயல்பட வேண்டும்.

பேட்டி : எஸ். ரஜத்



## 17. பாதுகா ஸகஸ்ரம்-826

இரண்டாவது சபதமொன்றையும் செய்துவிட்டதாகப் புதிர் போட்டுவிட்டு அந்தப்புரத்து முகப்பு அறையிலிருந்து விஜயகுமாரன் வெளியேறிவிட்ட பிறகும் கூடப் பல விநாடிகள் அரசகுமாரி அந்த அறையிலிருந்து அகலாமல் சிலையென நின்றிருந்தாள். பலமான உணர்ச்சிகள் உள்ளத்தே ஊடுருவி ஓடியதன் விளைவாக பிறகு மெல்லச் சுய உணர்வை வரவழைத்துக் கொண்டு முகப்பு அறையிலிருந்து புறப்பட்டு வந்த பின்பும்கூட விஜயகுமாரனின் வெறி பிடித்த கண்கள் தன் கண்களை ஊடுருவி நிற்கும் பிரமை அவள் உள்ளத்தை வளையமிட்டுக் கொண்டிருந்தபடியால், அவள் தனது பஞ்சணை முகப்பிலேயே நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தாள். அப்படி உட்கார்ந்திருந்த நிலையில், தான் எழுந்து நின்று கொண்டிருப்பதாகவும் தன் கன்னங்களை விஜயகுமாரன் அழுத்திப் பிடித்துக் கொண்டு அந்த பயங்கரக் கதையைச் சொல்வதாகவும் தோன்றியது அந்தப் பாவைக்கு. 'அப்பா! அந்த ராணி மீனாட்சியைப் பற்றிப் பேசியபோது என்ன வெறி அவருக்கு! எத்தனை துணிவுடன் என் கன்னங்களைப் பிடித்தார்! எவ்வளவு பலமாக அழுத்தினார்!' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டவள் விஜயகுமாரன் எதிரே நிற்பதாகவே நினைத்துக்கொண்டு, "உம்...விடுங்கள் என்னை. அந்தப்புரத்தில் வந்து என்னைத் தொட உங்களுக்கு என்ன துணிச்சல்?" என்று இதழ்களைக் குவித்து விரித்துச் சொற்களை முணுமுணுக்கவும் செய்தாள். பிறகு அவன் எதிரேயில்லையென்பதைப் புரிந்து கொண்டு தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள். 'வெறி அவருக்கல்ல, எனக்குத்தான். வெறி மட்டுமென்ன, பைத்தியமும் பிடித்திருக்கிறது எனக்கு,' என்று நினைத்தாள்.

அந்த நினைப்பின் காரணமாகவோ என்னவோ எழுந்திருந்து சற்று அப்பாலிருந்த கண்ணாடிக்கெதிரில் நின்று கொண்டு தனது முகத்தைக் கவனிக்கவும் செய்தாள். முகம் தனது பழைய முகமாகத் தெரியவில்லை பிரதாபசிம்மனின் மகளுக்கு. அது பெரிதும் மாறிவிட்டதையும், அதிலிருந்த பழைய கம்பீரமும் துடுக்குத்தனமும், குழைவுக்கும் விவரிக்க முடியாத அடக்கத்துக்கும் வெட்கத்துக்கும் இடம் கொடுத்துவிட்டதையும் கவனித்தாள். விஜயகுமாரன் பிடித்த பிடியில் தனது இரு கன்னங்களும் செவ்வல்லியைவிடச் சிவந்துவிட்டதைப் பார்த்த நந்தினி, 'அவருக்கு எத்றகாக இத்தனை தூரம் இடம் கொடுத்தேன்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள். 'இத்துடன் நின்றதே..' என்று எதையோ நினைக்கத் துவங்கியவள், 'மனமே! நீ பொல்லாதவள்' என்று மனத்துக்கும் பாலைக் கற்பித்துப் பட்டென்று கண்ணாடியிலிருந்து திரும்பி மீண்டும் பஞ்சணைக்கு வந்தவள் முகப்பில் உட்காரவில்லை. திடீரென விழுந்தாள் பஞ்சணையில். புலன்கள் எங்கோ லயித்திருந்ததால் பஞ்சணையின் மிருதுத் தன்மையையோ அதில் தூவப்பட்டிருந்த மலர்களின் நறுமணத்தையோ ரசிக்க முடியவில்லை அவளால். தலை

யணையில் தலையை அசைத்து, பஞ்சணைக்கு எதிரேயிருந்து சுவரில் தன் முழு உருவமும் தெரிந்த பெரிய நிலைக்கண்ணாடியில் தன் நிலையைப் பார்த்தாள்.

யாரோ ஒரு தேவலோக மோகினி கிடப்பதுபோல அந்த நிலைக் கண்ணாடியில் அவள் உருவம் தெரிந்தது. திடீரெனப் பஞ்சணையில் விழுந்ததால் ஒரு காலில் சற்று ஏறிக் கலைந்து கிடந்த சேலைப் பகுதி, அந்தக் காலின் சிவப்பையும் வழவழப்பையும் இயற்கை கடைந்திருந்த சிறப்பையும் பளீரென விளக்கு வெளிச்சத்தில் எடுத்துக் காட்டியிருந்தது. கழுத்தில் அதுவரை சுற்றிக் கிடந்த மஸ்லின் முகத் திரை மட்டுமின்றி மேலாடையின் ஒரு பகுதியும் லேசாகச் சுருண்டு விட்டதால் அவள் மார்பகங்களின் முழுப்பரிமாணமும் ஓரளவு புலனாகத் தொடங்கினாலும் *''பிறை நுதலவள் பெண்மையென்படும்' என்ற அச்சத்தினால் முழுமையும் வெளிப்படாமல் அரையுங்குறையுமாகத் தெரிந்துகொண்டிருந்தது. ஆனால் அரைகுறையின் தூண்டுதல் எத்தனையிருக்க முடியும் என்பது மட்டும் தெளிவாகத் தெரிந்தது கண்ணாடியில். அந்தச் சமயத்தில் அவள் தன்னிலையைத் தானே ரசித்துக் கொண்டாள். 'இந்த நிலையில் அவர் பார்த்தால்....?' என்றும் எண்ணினாள் வெட்கத்தை விட்டு. அதனால் சிரித்தாள் கலுக்கென்று. பிறகு சற்றுப் புரண்டு ஒருகணித்துப் படுத்துத் தலையை லேசாக நிமிர்த்தி எட்ட சுவரிலிருந்த ரதி—மன்மத விலாசப் படத்தைப் பார்த்தாள். தஞ்சைக்கென்றே பெயர் போன பாணியில் வண்ணங்கள் தீட்டியும் கற்களைப் புதைத்தும் தயாரிக்கப்பட்டிருந்த அந்தச் சித்திரம் உயிருடன் துடிப்பதைப் பார்த்த அரசகுமாரி, 'இந்தப் படத்தை இங்கு மாட்டியது தவறு,' என்று அர்த்தமில்லாமல் யாரையோ கடிந்துகொண்டாள். ஆனால் அந்தத் தஞ்சைப் படம் அவள் நெஞ்சை என்ன ஆட்டு ஆட்டி வைத்தது! விஜயகுமார மன்மதனை மீண்டும் மீண்டும் அவள் நெஞ்சுக்குள் எத்தனை முறைகள் புகுத்தி வைத்தது! என்னென்ன கனவுகளைக் காண வைத்தது! படத்துக்குத் தன் மனத்தைப் படபடக்க வைக்கும் திறன் இருந்ததைப் பார்த்த அரசகுமாரி, ஏதேதோ எண்ணியபடியே உறங்கிவிட்டாள் அவளுக்கு உணவுத் தட்டை ஏந்தி வந்த பணிப் பெண் அவளை எழுப்ப முயன்றாள் இருமுறை. ஒரு முறை அரைவாசிக் கண் விழித்த அரசகுமாரி தனக்கு உணவு ஏதும் தேவையில்லையென்று கூறிவிட்டாள். புறத்தேயிருந்த பங்கயக் கண்கள் மீண்டும் மூடின. உள்ளக் கண்கள் விரிந்தன. விஜயகுமாரனின் இரண்டாவது சபதத்தை இதயம் ஆராயத் தொடங்கியது.

இத்தகைய ஏதோ ஓர் ஆராய்ச்சியில்தான் இருந்தான் விஜயகுமாரனும் தனது அறையில். அந்தப்புரத்து முகப்பு அறையிலிருந்து தான் தங்கியிருந்த அறைக்கு வந்தவன் அங்கியைக் களையவுமில்லை, கச்சையில் தொங்கிய வாளை அவிழ்க்கவுமில்லை. மனத்

* கம்பராமாயணம்— மிதிலைக் காட்சிப் படலம்—பாட்டு 40.



திலிருந்த வேகத்தைக்கூடக் களைய முடியாமல் நீண்ட நேரம் அறையில் உலாவிக் கொண்டிருந்தான். அவன் கண்களின் முன்பு அந்தப்புரத்திலிருந்த அழகுச் சிலை தோன்றினாள், பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் தீக்குளித்த அக்கினிச் சிலையும் தோன்றினாள். அழிந்த அந்தப் பழைய சிலை அழியாத இந்தச் சிலையிடம் தன்னைக் கொண்டு விட்டதை எண்ணிப் பார்த்து விதியின் விசித்திரத்தை நினைத்து வியந்தான் விஜயகுமாரன். அதைவிட அரசகுமாரியின் தோளைப் பிடித்ததையும் கன்னங்களை நெறித்ததையும் எண்ணித் தன் உள்ளங் கைகளையும் பார்த்துக் கொண்டான். அந்தச் சமயத்தில் அந்த இரண்டாவது சபதமும் நினைவுக்கு வரவே கையை இருமுறை தட்டிக் காவலனொருவனை வரவழைத்து, ''காகிதமும் எழுதுகருவிகளும் எடுத்து வா,'' என்று பணித்தான்.

அவற்றைக் காவலன் கொண்டு வந்ததும் அறையின் கோடியிலிருந்த ஒரு மேஜைமீது கோழியிறகுப் பேனாவை மையில் தோய்த்துச் சில வரிகளைக் காகிதத்தில் விறுவிறுவெனத் தீட்டினான். பிறகு காகிதத்தை மடித்து விலாசமும் எழுதிக் கச்சையில் செருகிக் கொண்டு, மிக நிம்மதியாகப் படுக்கைக்கு வந்து உட்கார்ந்து கைவிரல்களைப் பின்னியவண்ணம் யோசனையில் ஆழ்ந்துவிட்டதால் நேரம் ஓடியது தெரியவில்லை அவனுக்கு, உள்ளம் உவகையால் துடித்துக் கொண்டிருந்தது.



''வருமான வரி பாக்கி நோட்டீஸ் அனுப்பினீர்களே! அதில் சில வரி புரியலே.''

''எந்த வரி?''

''முதல் வரியிலிருந்து கடைசி வரி வரை.''

''முதல் சபதம் ஊட்டியது உக்ரத்தை. இந்த இரண்டாவது சபதம் ஊட்டுவது உவகையை. உக்ரத்துக்கும் உவகைக்கும் சம்பந்தமில்லைதான். இருந்தாலும் என் உள்ளத்தில் இரண்டுக்கும் உறவு ஏற்பட்டிருக்கிறது,'' என்று சற்று இரைந்தே சொல்லிக் கொண்டான். அப்படி அவன் உட்கார்ந்திருந்த சமயத்தில்தான் தளபதி மானுஜி அறைக்குள் நுழைந்தார்.

அவர் நுழைந்த நேரத்தில் அவன் உட்கார்ந்த நிலையை விட்டு எழுந்திருக்கவில்லை, அவர் பூனை போல் சத்தம் போடாமல் அறையில் நுழைந்த காரணத்தால். ''எந்தக் கோட்டையைப் பிடிக்க மனக் கோட்டை கட்டுகிறாய் விஜயகுமாரா?'' என்று அவர் வினவிய பின்பே தலையை நிமிர்ந்த விஜயகுமாரன், ''தாங்களா! வாருங்கள்,'' என்று எழுந்திருந்து தலைவணங்கினான்.

மானுஜி தமது ராட்சத விழிகளை அவன் முகத்தில் நாட்டினார். அடர்த்தியான அவரது பயங்கரப் புருவமும், மகாராஷ்டிரர் வாள்களைப் போலவே நீண்டு நுனிகளில் வளைந்து நிமிர்ந்த பெரிய மீசையும் ஒரு முறை அசைந்தன. அவரது பருத்த உதடுகள் லேசாகப் புன்சிரிப்பைக் காட்டின. ''நான் கேள்வி கேட்டேனே?'' என்றும் கூறினார் அந்தப் புன்முறுவலைத் தொடர்ந்து.

விஜயகுமாரன் இதழ்களிலும் இளநகை விரிந்தது. ''இப்பொழுது தஞ்சைக் கோட்டையைப் பிடித்திருக்கிறேன். அதற்குள் இருக்கிறேன்,'' என்றான் அவன் உள்ளேயிருந்த உவகை சொற்களிலும் ஒலிக்க.

தளபதியும் நகைச்சுவையில் சளைப்பவராகத் தெரியவில்லை. ''இன்னொரு கோட்டையும் உனக்குக் கிடைக்கப் போகிறது,'' என்றார் லேசாகச் சிரித்து.

''எந்தக் கோட்டை?'' விஜயகுமாரன் கேள்வியில் வியப்பிருந்தது.

''மகாராஜாவே சொல்லுவார் உன்னிடம்,'' என்றார் மானுஜி.

''எப்பொழுது?''

''இப்பொழுதே.''

''அப்படியானால்?''

''இப்பொழுது மகாராஜாவிடம் நாம் போகிறோம்.''



எங்கே, கண்ணைக் கொட்டாமல் யார் அதிக நேரம் இருக்க முடிகிறது என்று பார்க்கலாம்!

கமலும் ஜெயசுதாவும் புதிய விளையாட்டுக் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

—சிவதாண்டவம் மலையாளப் படத்தில்.

சிவதாண்டவம்

''நள்ளிரவு தாண்டிவிட்டதென்று நினைக்கிறேன்.''

''ஆம்.''

''இப்பொழுது மகாராஜா...''

''உறங்கவில்லை. உனக்காகக் காத்திருக்கிறார்.''

மானுஜியின் இந்தச் சொற்களைக் கேட்ட விஜயகுமாரன் பிரமித்துப் போனான். ''மகாராஜா உறங்குவதில்லையா!'' என்று விசாரித்தான்.

''முடி தரித்தவர்கள் யாருக்குமே உறக்கம் அபூர்வம்,'' என்று விளக்கிய மானுஜி, அறையை விட்டு வெளியேற முற்பட்டார்.

விஜயகுமாரன் கட்டிலில் கிடந்த தன் கைத்துப்பாக்கியையும் எடுத்து இடையில் செருகிக் கொண்டு அவரைத் தொடர்ந்தான். சிறிது தூரம் நடந்து பழையபடி அரண்மனைப் பிரதான கட்டிடத்திலிருந்த மகாராஜாவின் ஆஸ்தான அறையை இருவரும் அடைந்ததும் பிரதாப சிம்மன் அவர்கள் இருவரையும் முக மலர்ச்சியுடன் வரவேற்றார்.

இருவரும் தலைதாழ்த்தி வணங்கியதும் மானுஜியைக் கேட்டார் மகாராஜா, ''விஜயகுமாரனிடம் விஷயத்தைச் சொல்லிவிட்டீர்களா?''என்று.

''இல்லை,'' என்ற மானுஜி புன்முறுவல் செய்தார்.

தமது தளபதியின் ஒவ்வோர் அசைவுக்கும் காரணமிருக்கும் என்பதை நீண்ட நாளாகப் புரிந்து கொண்டிருந்த மகாராஜா சற்றுச் சிந்தித்தார். பிறகு, ''ஏன்?'' என்று வினவினார்.

''இந்த வீரன் தங்களுக்குச் செய்தி வைத்திருக்கிறான்,'' என்றார் மானுஜி.

அவர் கூறியதைக் கேட்ட விஜயகுமாரனும் வியப்புத் ததும்பிய விழிகளைத் தளபதி மீது நாட்டினான். மன்னர் கேட்பதற்கு முன்பாக, ''என்ன செய்தி?'' என்று வினவினான் தானாகவே.

ஒரு பெரிய வெடியை எடுத்து வீசினார் மானுஜி. ''அதோ, அந்தச் செய்தி,'' என்று அவன் கச்சையில் நீட்டிக் கொண்டிருந்த காகிதத்தைக் காட்டினார்.

அதிர்ச்சியுற்று நின்றான் பல விநாடிகள் விஜயகுமாரன். தளபதியின் கண்களிலிருந்து எதுவும் தப்புவதில்லை

என்ற விஷயம் அவனுக்கு மிகத் தெளிவாகப் புரிந்தது "அது மன்னருக்குத் தானென்பது தங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தான்.

"கடிதத்தில் பாதி கச்சையில் நீட்டிக் கொண்டிருக்கிறது. அதில் 'மகாராஜா' என்ற சொல் மட்டும் விலாசப்பகுதியில் தெரிகிறது," என்று கூறி அந்த இடத்தையும் விரலால் சுட்டிக் காட்டினார் தளபதி. "வேறு மகாராஜா யாரும் தஞ்சையில் இல்லை," என்று சூசகமாகவும் கூறி இளநகை கொண்டார்.

அந்த இளநகை அவனுக்கு எரிச்சலை மிக அதிகமாக உண்டாக்கினாலும் அதை வெளிக்குக் காட்டாமல் கச்சையிலிருந்த கடிதத்தை எடுத்து, "என் காணிக்கை," என்று மகாராஜாவிடம் வணக்கத்துடன் நீட்டினான்.

கடிதத்தில் நான்கே வரிகள்தான் இருந்தன. ஆனால் அந்த நான்கு வரிகள் பிரதாப் சிங்கின் மனத்தை இளக்கியிருக்க வேண்டும். "வீரனே! நன்றி. என் வேலையைச் சுலபமாக்கி விட்டாய். ஆனால் இந்த ஒன்று மட்டும் உன் கையிலுமில்லை. என் கையிலுமில்லை," என்றார் மிகவும் உருக்கமாக.

"ஏன் மகாராஜா! என் வாள் அப்படியொன்றும் சப்பையானதல்ல. என் உயிரும் அற்பமானதல்ல," என்றான் விஜயகுமாரன் உணர்ச்சி வேகத்துடன்.

மகாராஜா அறையின் ஓரத்துக்குச் சென்று சாளரத்தின் மூலம் வெளியே நீண்ட நேரம் நோக்கிவிட்டுத் திரும்பி வந்து, "விஜயகுமாரா! என்னை இந்த அரியணையிலிருந்து யாரும் அகற்றாமல் பாதுகாப்பதாகச் சபதம் செய்திருக்கிறாய் இந்தக் கடிதத்தில். அதற்காக உன் உயிரையும் வாளையும் அர்ப்பணிக்கிறாய்," என்று கூறினார்.

"ஆம்," என்றான் விஜயகுமாரன்.

"அரியணையில் யார் உட்காருவது என்பதை நாம் தீர்மானிப்பதில்லை. இந்தத் தஞ்சையை எடுத்துக் கொள். இதில் எத்தனை அரண்மனைப் புரட்சிகள் நடந்திருக்கின்றன! எத்தனை பேர் மாறி மாறி இந்த அரியணையில் உட்கார்ந்திருக்கிறார்கள்! இப்பொழுது கூட இதில் உட்கார ஷாஹுஜி முயலவில்லையா?" என்று வினவினார்.

"ஆம். முயன்றால் நடந்து



இரண்டு வேட்பாளர்கள். ஒரே மேடையில் தேர்தல் பிரசாரம் செய்தார்கள். ஒரு கட்சி வேட்பாளர் வாக்காளர்களை நோக்கி, "பணம் சம்பாதிக்க நூறு வழிகள் இருக்கலாம். ஆனால் நேர்மையான முறையில் சம்பாதிக்க ஒருவழிதான் உண்டு," என்றார்.

உடனே எதிர்க்கட்சி வேட்பாளர் குறுக்கிட்டார்: "அது என்ன வழி?"

உற்சாகத்தோடு முதலாமவர் முழக்கினார். "ஆகா! அந்த வழி எனக்குத் தெரிகிறது. இவருக்குத் தெரியவில்லை பார்த்தீர்களா?"

—பி.ஏ. சிவகுமார்

நன்றி: ரீடர்ஸ் டைஜஸ்ட்

விடுமா?"

"நடக்கலாம், நடக்காதிருக்கலாம். தெய்வ சித்தம் நமக்குத் தெரியாது."

"இதில் தெய்வ சித்தம் என்ன இருக்கிறது?"

விஜயகுமாரனின் இந்தக் கேள்விக்கு மகாராஜா உடனடியாகப் பதில் சொல்லாமல் சிந்தனையிலிறங்கினார். பிறகு, "விஜயகுமாரா, ராமாயணம் படித்திருக்கிறாயா?" என்று.

விஜயகுமாரன், "அந்த இதிகாசத்தைப் படிக்காதவன் இந்துவாயிருக்க முடியாதே!" என்றான்.

"விஜயகுமாரா! அந்தக் கதையில் தந்தையான தசரதன் யாரை அரியணையில்இருத்த இஷ்டப்பட்டார்?"

"ராமனை." பக்தியுடன் பதில் சொன்னான் விஜயகுமாரன்.

"தாயான கைகேயி யாரை அரச பீடமேற்ற எண்ணி வரங் கேட்டாள்?"

"பரதனை."

''மன்னன் வரம் கொடுத்தானல்லவா?''

''கொடுத்தான்.''

''கடைசியில் அந்த இருவரும் அமரவில்லை அரியணையில். ஒரு காலணி போய் உட்கார்ந்து கொண்டது. அதற்கு நடந்தது பட்டாபிஷேகம். இந்த விசித்திரத்தை எங்காவது கேட்டிருக்கிறாயா?''

விஜயகுமாரன் மௌனம் சாதித்தான். மன்னர் அவனை அணுகி அவன் தோள்மேல் கையை வைத்தார். ''விஜயகுமாரா! இது என் யுக்தியல்ல. தூப்புல் பெரியவர் *நிகமாந்த மகாதேசிகன் பாதுகா ஸகஸ்ரம் என்ற நூலில் இப்படியொரு சுலோகம் எழுதி வைத்திருக்கிறார். 'தந்தைக்குப் பிரியம் ராமன் முடிசூட. பிரஜைகளுக்கும் அது சம்மதம். தாய்க்குப் பிரியம் பரதன் முடிசூட. சத்தியவாதியான தசரதனும் வரம் கொடுத்தான். ஆனால் என்ன ஆச்சரியம்! இருவருக்குமில்லாமல் பாதுகைக்கு நடந்தது முதல் ராஜ்யாபிஷேகம். ஆகவே இறைவன் உள்ளத்தை யார் அறிய முடியும்? மனித அறிவை மீறிய விஷயமல்லவா அது?' என்று எழுதியிருக்கிறார் அந்த மகான். அது அன்றும் உண்மை; இன்றும் உண்மை! அந்த உண்மையை இந்தத் தஞ்சை சிம்மாசனமே நிரூபித்திருக்கிறது. உலக வரலாறு நிரூபிக்கிறது.'' இதைச் சொன்ன மகாராஜாவின் கண்கள் கனவுலகத்தில் சஞ்சரித்தன.

விஜயகுமாரன் மகாராஜாவின் சொற்களைக் கேட்டுப் பிரமித்து வாயைப் பிளந்து கொண்டு நின்றான். அவர் சம்ஸ்கிருத அறிவு அவனைப் பெரு வியப்பில் ஆழ்த்தியது. அதை ஊகித்திருக்க வேண்டும் தளபதி. அதுவரை சம்பாஷணையில் குறுக்கிடாத அவர் குறுக்கிட்டு, ''மகாராஜாவின் வடமொழி அறிவுபற்றி வியப்பதற்கு ஏதுமில்லை. இவர்கள் பரம்பரையே சம்ஸ்கிருத பரம்பரை. இவர் தந்தை துகோஜி 'ஸங்கீத ஸாரமைத' என்ற இசைக் கிரந்தம் எழுதியிருக்கிறார். அவர் சபையிலிருந்த கனச்யாம பண்டிதர் பவபூதியின் உத்தரராம சரித்திரத்துக்கு வியாக்கியானம் எழுதியிருக்கிறார்.'' என்றார்.

விஜயகுமாரன் மகாராஜாவின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டான். ''மகாராஜா! எனக்கு சம்ஸ்கிருதம் அதிகமாகத் தெரியாது. தெய்வ சித்தபடி நடப்பது நடக்கட்டும். ஆனால் நாம் நமது கடமையைச் செய்ய வேண்டாமா?'' என்றான்.

''கண்டிப்பாய்ச் செய்யவேண்டும் பலனை எதிர்பார்க்காமல். அதனால்தான்! உன்னை அழைத்தேன் விஜயகுமாரா! நீ இப்போதே செல் தளபதியுடன்,'' என்றும் உத்தரவிட்டார்.

''எதற்கு?''

''அபாய ஸ்தலத்திற்கு.''

''எது அபாய ஸ்தலம்?''

''தற்சமயம் தேவிக்கோட்டை.''

மானுஜி மகாராஜாவுக்குத் தலை வணங்கித் திரும்பினார் வெளியேற. விஜயகுமாரன் தயங்கினான் சற்று. மகாராஜா புன்முறுவல் கொண்டார். பிறகு கையிலிருந்த கடிதத்தைக் காட்டி, ''இதை நந்தினிக்கு அனுப்பிவிடுகிறேன்,'' என்றார்.

மன்னருக்கு மனோதத்துவ சாஸ்திரமும் தெரிந்திருக்க வேண்டுமென்று நினைத்த விஜயகுமாரன் ஸ்தம்பித்து நின்று விட்டான் நின்ற இடத்திலிருந்து நகராமல் மானுஜி திரும்பி ''நீ அந்தப்புரம் சென்றது மன்னருக்குத் தெரியும்,'' என்று இன்னொரு பாணத்தையும் அவன் மீது வீசினார்.

(தொடரும்)

* பாதுகா ஸகஸ்ரம்—சுபாஷித பத்ததி—சுலோகம் 826




சேரன் சோழன் பாண்டியன் பல்லவன் கட்டபொம்மன் அண்ணா ஆகியோர் வரும் ஊருக்குத் தந்தை பெரியார் மட்டும் வரமாட்டார். அது எந்த ஊர்?

விடை: மதுரை.

(மேற்கூறிய பெயர்கள் எல்லாம் பஸ் போக்குவரத்துக் கழகங்கள்.)

—ஜோ. ஜெயந்தி

## 18. "PRO REGE ET PATRIA"
## (For King and Country)

'அமரர்கள் அதிபதி' என்று தேன் தமிழில் நம்மாழ்வாராலும் 'தேவநாதன்' என்று வடமொழியில் ஸ்தல புராணக்காரராலும் சிலாகிக்கப்பட்ட திருவஹீந்திரப் பெருமாளின் திருநாமத்தைத் தரித்து, ஆதியில் தேவநாதன் பட்டினமென்று வழங்கி, காலத்தில் மருவி தேவாநாம்பட்டினமென்று மகாராஷ்டிரர்களால் அழைக்கப்பட்டதும், இன்று புதுக்கடலூரை (கடலூர் நியூ டவுனை) அடுத்து அதன் ஒரு பகுதியாய்க் கடலோரம் நிற்பதுமான புராதன நகரில், பிரிட்டிஷ்காரர்களின் தலையாய பாதுகாப்பு நிலமாகவும் அரணாகவும் இருந்த ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்கு, தஞ்சையிலிருந்து தேவிக் கோட்டைக்கு விஜயகுமாரன் கிளம்பிய அதே இரவின் ஆரம்பத்தில், வாலிபனான ராபர்ட் கிளைவ் உணவுப் பொதி வண்டிகளுடனும் போர்டைஸுடனும் வந்து சேர்ந்தான். சுற்றிலும் சுமார் 18 அடிகளுக்கு மேலிருந்த பெரும் கோட்டைச் சுவர்களால் மூன்று பக்கங்கள் சூழப்பட்டதும், மற்றொரு பக்கம் கடலலைகள் வாரி அணைத்துவிட்ட மணற் பகுதியால் பாதுகாக்கப்பட்டதும், சுவர் ஓடி வளைத்த மூன்று பக்கங்களையும் அணைந்துநின்ற ஆழமான அகழியுடனும், உயர்ந்த கோட்டைச் சுவர்கள் மீது ஏற்றப்பட்டிருந்த பலமான பீரங்கிகளுடனும், புறநகரிலிருந்து பிரவேசிக்க கெடிலம் நதியை அடுத்து புதுச்சேரியை நோக்கிக் கொண்டிருந்த பெருவாயிலுடனும் காட்சியளித்த தேவானாம்பட்டினக் கோட்டையான ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்குள் நுழைந்த லெப்டினன்ட் கிளைவ், பொதி வண்டிகளை மட்டும் சப்ளை ஸ்டோருக்குச் செல்லப் பணித்துவிட்டு, தான் மட்டும் போர்டைஸுடன்* கவர்னர் மாளிகைக்கு நேராகச் 'செய்ஸை'ச் செலுத்தினான். கவர்னர் மாளிகையின் முன்புறத்துக்குச் சற்று எட்டவே வண்டியை நிறுத்த உத்தரவிட்டு போர்டைஸைக் கீழே இறங்கச் சொல்லி அநாயாச நடை நடந்து மாளிகையின் முதல் கட்டு வாயிலில் நின்ற சோல்ஜரிடம் தான் வந்திருப்பதைக் கவர்னருக்கு அறிவிக்கும்படி உத்தரவிட்டான். அந்த பிரிட்டிஷ் சோல்ஜரும் என்ன காரணத்தாலோ இரவென்றும் பார்க்காமல் கிளைவின் உத்தரவைக் கேட்டதும் உள்ளே பறந்தான். சற்று நேரத்திற்கெல்லாம் திரும்பி வந்து உள்ளே செல்லலாமெனக் கூறவே கிளைவும் போர்டைஸும் மாளிகைக்குள் சென்றனர். தாழ்ந்து வளைந்த கமான்களுடன் மிக உறுதியாகக் கோட்டை போலவே கட்டப்பட்டிருந்த ஸெய்ண்ட் டேவிட் கவர்னரின் மாளிகையில் ஒவ்வொரு இடத்திலும் பிரிட்டிஷ் சோல்ஜர்களின் காவலும், இந்திய சிப்பாய்களின் பாதுகாபபும் அன்று மிக அதிகமாயிருந்ததைக் கவனித்த கிளைவ் அதற்குக் காரணத்தை அறியாவிட்டாலும், கவர்னர் ஏதோ முக்கிய மந்திராலோசனையில் அமர்ந்திருக்கிறாரென்பதைப்

---

*இந்த மாளிகையில் கிளைவ் கவர்னரான பின்பு வசித்தார். அதில் இப்பொழுது தென்னாற்காடு ஜில்லா கலெக்டர் வசிக்கிறார். அந்த மாளிகையில் கிளைவ் வசித்ததைக் குறிக்கக் கல்லொன்று புதைக்கப்பட்டிருக்கிறது.



புரிந்து கொண்டு மிகுந்த எச்சரிக்கையுடன் உட்புறம் நடந்து சென்றான். இரண்டு வாயிற்படிகளைத் தாண்டியதும் ஒரு பெரிய அறை முகப்பில் பிரிட்டிஷ் ராணுவ அதிகாரியொருவர் கிளைவை எதிர்கொண்டு உள்ளே அழைத்துச் சென்றார். கிளைவைத் தொடர முற்பட்ட ரெவரன்ட் போர்டைஸை கையசைப்பினாலேயே நிறுத்தவும் முயன்றார். ஆனால் போர்டைஸ் கடுங்கோபத்துக்குள்ளாகி, ''போர்டைஸைத் தடுக்க கவர்னருக்கும் அதிகாரமில்லை. தடுப்பவர் யாவருக்கும் பரமபிதாவின் சாபம் கிடைக்கும்,'' என்று ஆங்கிலத்தில் சீறினார். அது மட்டுமின்றி அந்த ராணுவ அதிகாரியை ஒரு கையால் விலக்கிவிட்டு கிளைவுடன் தாமும் கவர்னர் அறைக்குள் நுழைந்தார்.

கவர்னரின் மிகப்பெரிய ஆலோசனை அறையின் தன்மையே இந்த நாட்டில் பிரிட்டிஷ் ஆதிக்கம் காலூன்றத் தொடங்கியதை நிரூபித்தது. அதன் நட்ட நடுவே இருந்த நீண்ட மேஜையும், அதன் மீதிருந்த வெள்ளைவெளேரென்ற நீண்ட விரிப்பும், அந்த விரிப்பின்மீது ஐந்தாறு இடங்களில் வைக்கப்பட்டிருந்த பீங்கான் பிளேட்டுகளும், அவற்றிலிருந்த உணவு வகையறுக்களைப் பிய்த்தெடுத்து உண்ண வைக்கப்பட்டிருந்த 'ஃபோர்க்'குகளும் ஸ்பூன்களும், உணவுக்கடுத்தபடி விஸ்கி, ஒயின். இவற்றை அருந்த வைக்கப்பட்டிருந்த நீள கண்ணாடி டம்ளர்களும், மேலே பலமுகங்களுடன் கீழே இறங்கியும் மேலே ஏறியும் ஜாஜ்வல்லியமாகப் பளிச்சிட்டுக் கொண்டிருந்த

சாண்டில்யன்



'ஷாண்டிவியர்ஸின்' அமைப்பும், பிரிட்டிஷ் நாகரிகத்தின், ஏகாதிபத்தியத்தின் உறுதியைச் சந்தேகமின்றி விளக்கிக்கொண்டிருந்தன. அந்த மேஜையின் தலைப்பிலிருந்து வேலைப்பாடுகள் நிறைந்த பிரிட்டிஷ் ராஜ்ய சின்னம் அமைந்த பெரிய நாற்காலியில், தூய்மையான வெள்ளை சூட்டணிந்து கவர்னர் ஃப்ளாயர் மிகக் கம்பீரமாக உட்கார்ந்திருந்தார். அவருக்கு எதிரே மேஜையில் பெரிய டம்ளர் ஒன்றில் விஸ்கி முக்கால் பாகம் நிரம்பி சின்னஞ்சிறு பொறிகளை மேலே அனுப்பிக் கொண்டிருந்தது. அத்துடன் சீட்டுக்கட்டு ஒன்றும் பாதி பிரித்து வெட்டப்பட்டு இரண்டு பகுதிகளாகக் காட்சியளித்தது. கவர்னரையடுத்து மேஜையின் இருபக்கங்களிலும் கம்பெனி போர்டு அங்கத்தினர்கள் வீற்றிருந்தார்கள். அவர்களையடுத்த கோடி நாற்காலிகள் இரண்டில் இரண்டு ராணுவ அதிகாரிகளும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். ஒருவர் பருத்த சரீரமுடையவர். அவரது பெரிய தொப்பை மேஜைக்கு அடியிலிருந்ததால் வெளியே தெரியவில்லை. அவருடைய தலை பெரியதாகவும் நுதலிலிருந்த கண்கள் சிறியனவாகவும் இருந்தாலும், தலையும் கண்களும் அவர் மிக மேதாவியென்பதையும் சிறந்த போர் வீரர் என்பதையும் பறையறைவித்தன. இன்னொரு அதிகாரி வாலிபர். இருப்பினும் அனுபவமும் திறமையும் உள்ளவராகத் தோன்றினார். போர்டு அங்கத்தினர் நால்வரே அன்றைய கூட்டத்திற்கு வந்திருந்தாலும் அவர்களைத் தீவிர சிந்தனை கவர்ந்திருந்ததை அவர்கள் முகங்கள் நிரூபித்தன.

ஆனால் மேஜையின் தலைப்பில் அக்கிராசனம் வகித்த ஆஜானு

எலெக்ட்ரான் மைக்ராஸ்கோப்பின் உதவியால் எண்பத்தைந்து தடவைகள் பெரிதாக்கப்பட்ட ஒரு தலைப்பேனின் படம் இது.

பேன்கள் நம் நாட்டில் மட்டும் தானு? நாகரீகம் அதிகமாகத் தவழும் நாடுகளில் தான் அதிகமாகக் காணப்படுகின்றன. அமெரிக்காவில் பிரசுரமாகும் ''தி நேஷன்ஸ் ஹெல்த்'' என்ற பத்திரிகையில் வந்த விளம்பரப் பேன் இது.

இந்தப் பேன்களுக்கு மனிதனின் இரத்தத்தைத் தவிர வேறு உணவு எதுவும் இல்லை.

—பெரு. மருதைவாணன்

பாகுவ... கவர்னர் சார்லஸ் ஃப்ளாயரின் முகத்தில் எந்த விதக் கவலையும் தெரியவில்லை. அவர் நீல நிறக் கண்கள் எதிரேயிருந்த விஸ்கி டம்ளரையும் இரண்டாக வெட்டப்பட்டிருந்த சீட்டுக்கட்டையும் நோக்கிக் கொண்டிருந்தது. சற்று குடித்திருந்தாலும் கவர்னர் சிறிதும் நிதானத்தை இழக்கவில்லையென்பதை அவர் சர்வசகஜமாகச் சீட்டு ஒன்றைக் கையிலெடுத்து நோக்கிய திடமே தெரியப்படுத்தியது. கிளைவுட் போர்டைஸும் அந்த ஆலோசனை அறையில் நுழைந்தபோதுகூட உடனே தமது கண்களைத் தூக்கி அவர்களை நோக்கவில்லை கவர்னர். மீண்டும் நாலைந்து சீட்டுகளை எடுத்து இடது கையில் விசிறிபோல் பிரித்தார். பிறகு வாயிலிருந்து தொங்கியபைப்பின் முகப்புக் குழாயிலிருந்து புகையை இருமுறை வெளியிட்டார். அடுத்தபடி வலது கையில் புகைக்குழாயை எடுத்து இரண்டு விரல்களில் மடக்கிப் பிடித்துக் கொண்டு பிறகு நோக்கினுர் கிளைவையும் போர்டைஸையும். அவர் நோக்கியதும் கிளைவ் தனது இருகால்களையும் சட்டென்று குவித்து இருபூட்ஸ்களிலும் ஒலி எழுப்பி மிலிடரி சல்யூட் அடித்தான். போர்டைஸ் எதற்கும் அசையவில்லை. யாரையும் லட்சியம் செய்யவில்லை. ஹாட்டைக்கூட மரியாதைக்குக் கழற்றவில்லை. ''கிறிஸ்டியானிட்டிக்கு இவனுல் பெருத்த அவமானம் ஏற்பட்டிருக்கிறது,'' என்று போர்டைஸ் சுட்டிக் காட்டினுர்.

கவர்னர் பதில் கூருததால் போர்டைஸ் தொடர்ந்தார் மேலே. ''என்னைத் திருச்சியில் சவுக்கால் அடிக்க வந்தான். கிறிஸ்துவின் விரோதிகளுடன், பாவிகளுடன் சேர்ந்து கொண்டான். இவனை உடனடியாகச் சிறையில் தள்ள வேண்டும்,'' என்று போர்டைஸ் வெறியுடன் கூவினுர்.

கவர்னர் புகைக்குழாயை மீண்டும் வாயில் வைத்து ஒரு முறை இழுத்துப் புகையை விட்டுவிட்டு, கையிலிருந்த சீட்டுகளை நோக்கினுர். பிறகு பாதிரியைஏறெடுத்துப்பார்த்து, ''ரெவரண்ட்! நீங்கள் சர்ச்சுக்குச் செல்லுங்கள்,'' என்று மட்டும் கூறினுர்.

''என் கம்ப்ளெய்ண்ட்?'' என்று கேட்டார் போர்டைஸ் வெறிபிடித்த கண்களுடன்.

''பிறகு கவனிக்கப்படும்.''

''இப்பொழுதே கவனிக்க வேண்டும். கவர்னரோ, இந்த போர்டோ ரெவரண்டை மிஞ்சியதல்ல.''

இதை நிதானமாகக் கேட்ட கவர்னர் பின்புறம் திரும்பினுர். அங்கு நின்ற ஆங்கில ஆர்டர்லி தலைகுனிந்தார் கவர்னர் உத்தரவைக் கேட்க. ''இந்தப் பைத்தியத்தை ஏதாவது ஒரு அறையில் தள்ளிவிடு,'' என்ருர் கவர்னர் மெதுவாக.

பிரிட்டிஷ் ஆர்டர்லி ராணுவ நடை நடந்து போர்டைஸிடம் வந்து, ''ரெவரண்ட்,'' என்று கேலியாகத் தலை வணங்கிவிட்டு அவர் கையைப் பிடித்து, ''கமான்,'' என்று வெளியே இழுத்துக்கொண்டு போனுன். ''விடு என்னை. பரமபிதாவின் சாபம் உங்கள் தலைமேல் விழும்,'' என்று கூவி மீறிய ரெவரண்டை இரும்புப் பிடியாகப் பிடித்து இழுத்துக் கொண்டு ஆர்டர்லி சென்றதும் கவர்னர் கிளைவை நோக்கி மேஜையின் ஓர் ஆசனத்தை சுட்டிக் காட்டி உட்காரும்படி சைகை செய்தார்.

---

போர்ட் ஸெய்ண்ட் டேவிட்டின் கவர்னர் ஃப்ளாயர் குடிப்பதிலும் சீட்டாடுவதிலும் காலத்தைக் கழித்துக்கொண்டிருந்தார்—
'Clive, Proconsul of India', by James P. Lawford.-Page-84.

ராபர்ட் கிளைவ் உடனடியாக உட்காரவில்லை. "யுவர் எக்ஸ்லென்ஸி! முக்கிய செய்தி கொண்டு வந்திருக்கிறேன்," என்றான்.

கவர்னர் ப்ளாயரின் புருவங்கள் சற்று அசைந்தன. நீலநிறக் கண்கள் கிளைவை உற்று நோக்கின. செய்தியைக் கூறலாம் என்பதற்கு அறிகுறியாக "எஸ்?" என்று ஒரு சொல்லை மட்டும் கேள்வி கேட்கும் பாவனையில் கவர்னரின் உதடுகள் உதிர்த்தன, புகைக்குழாயை அசக்கிய வண்ணம்.

கிளைவ் கவர்னரையும் நோக்கினான், இரு ராணுவ அதிகாரிகளையும் நோக்கினான். "இங்கு ராணுவ ஆலோசனை நடக்கிறது. அதைப்பற்றித்தான் என் செய்தியும்," என்று கூறவும் செய்தான்.

"எதைப்பற்றி?" என்று தெளிவாகக் கேட்டார் கவர்னர்.

"தேவிக்கோட்டையைப் பற்றி," என்று வெடியை வீசினான் கிளைவ்.

அதைக் கேட்ட பருத்த உடலைப்படைத்த ராணுவ மேஜரான ஸ்ட்ரின்ஜர் லாரன்ஸ் சற்று ஆசனத்தில் நிமிர்ந்து உட்கார்ந்தார். "அதைப் பற்றித்தான் நாங்கள் பேசுகிறோம் என்பது உனக்கெப்படித் தெரியும் லெப்டினன்ட்?" என்று வினவினார், வியப்பால் சிறு கண்களைச் சிறிது மலரச் செய்து.

"எனக்கு மட்டும் தெரியுமென்று நினைக்க வேண்டாம். தஞ்சை ராஜ்யம் முழுவதுக்கும் தெரியும்," என்றான் கிளைவ்.

"அப்படியா!" என்றார் எட்வர்ட் க்ருக் என்ற போர்ட் அங்கத்தினர்.

"இது ஸீக்ரட் (ரகசியம்) என்று நினைத்தோம்!" என்றார் வில்லியம் ஹோல்ட் என்ற இன்னொரு அங்கத்தினர்.

எதிரேயிருந்த வாலிப அதிகாரியைச் சுட்டிக்காட்டிய வெஸ்காட் என்ற இன்னொரு அங்கத்தினர் "லெப்டினன்ட் கிளைவ்! காப்டன் கோப்பைச் சந்தியுங்கள். இவர் தலைமையில்தான் தேவிக்கோட்டை தாக்கப்படும்," என்று கூற, கிளைவ் அந்த வாலிப அதிகாரியுடன் கைகுலுக்கினான்.

ஹாய்!

செஞ்சி பக்கத்தில் உள்ள கிராமம் ஒன்றில் ஒரு திருமணம். அழைப்பிதழில் நட்சத்திரஹாலில் விருந்து என்றிருந்தது. விருந்தினர்களுக்கு வியப்பு, 'அப்படி ஒரு அழகிய ஹால் இங்கு இருக்கிறதா?' என்று. உணவருந்த உட்கார்ந்த போதுதான்—மேலே பார்த்த பின் தான்—புரிந்தது. கூரை வேயப்படாததால் நட்சத்திரங்கள் மினுமினுத்துக்கொண்டிருந்தன'

—எஸ். எஸ்—

அந்தச் சமயத்தில் மேஜர் லாரன்ஸும் சொன்னார், "லெப்டினன்ட் கிளைவும் அவருடன் செல்லட்டும்," என்று.

இத்தனை சம்பாஷணையிலும் கலந்து கொள்ளாமல் இடித்த புளி மாதிரி கவர்னர் உட்கார்ந்திருந்தார். எல்லோருடைய சம்பாஷணையும் அடங்கியதும், "லெப்டினன்ட்! சொல் உனக்குத் தெரிந்ததை," என்றார் சர்வ சாதாரணமாக.

கிளைவின் கூரிய விழிகள் கவர்னரின் நீல நிற அதிகாரக் கண்களை சந்தித்தன. "யுவர் எக்ஸலென்ஸி! நான் எப்படிப் பேசட்டும்? லெப்டினன்டாகப் பேசட்டுமா அல்லது தஞ்சை அரசரின் தூதனாகப் பேசட்டுமா?" என்று வினவினான் கிளைவ் திடமான குரலில்.

இதைக் கேட்ட கவர்னர் சபை மெம்பர்கள் வியப்பினால் அசைந்தனர். கவர்னர் மட்டும் அசையவில்லையானாலும் அவர் முகத்தில் சிறிது கடுமை தெரிந்தது. முகம் சிவக்கவும் செய்தது. "ஒரு பிரிட்டிஷ் லெப்டினன்ட் சுதேச ராஜாவின் தூதன்!" என்று வெறுப்புடன் சொற்களை உதிர்த்தார் கவர்னர், வாயிலிருந்து குழாயை எடுத்து எதிரிலிருந்த பிளேட்டில் வைத்து அதைப் புகைய விட்டு.

"சுதேச மன்னனாயிருக்கலாம். ஆனால் பலமான எதிரி," என்று சுட்டிக் காட்டினான் கிளைவ்.

கவர்னரின் நீலநிறக் கண்கள் ஈட்டிகளாயின. ஒருமுறை சபையை நோக்

கிறார். பிறகு கிளைவின் மீது நிலைத்தன. அவர் உதடுகள் பொதுவாக வார்த்தைகளை உதிர்த்தன. "ஜென்டில்மென்! 149 வருஷங்களுக்கு முன்பு செல்லுங்கள். 16வது நூற்றாண்டின் கடைசி நாள். அதாவது 1599 வது ஆண்டு டிசம்பர் 31'ம்தேதி. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத் தலைநகரில், லண்டனில் பக்கிங்ஹாம் அரண்மனையில் ஏர்ல் ஆப் கம்பர்லாண்ட் ஜார்ஜ் பிரபு, நைட் பட்டம் பெற்ற வீரர்கள். ஆல்டர்மென், வர்த்தகர்கள் கொண்ட இருநூற்றைம்பது பிரிட்டிஷ் பிரமுகர்களுடன் நிற்கிறார். அப்பொழுது பிரிட்டிஷ் ராணி எலிஸபெத் அவர்களிருந்த கூட்டத்தில் நுழைகிறார். கம்பர்லாண்ட் பிரபு மண்டியிட, மற்றவர்கள் மண்டியிட, பிரபுவிடம் ஒரு சாஸனத்தை ராணி அளிக்கிறார். அந்த சாஸனத்தின் மேல் ஏற்பட்டது ஈஸ்ட் இந்தியா கம்பெனி. அந்தக் கம்பெனி பிறகு வளர்ந்தது, சற்றுத் தளர்ந்தது, மீண்டும் துளிர்த்தது. இப்பொழுது விரிவடைய இருக்கிறது. அத்தகைய கம்பெனியின் பிரதிநிதி நான். இதோ இப்பொழுது நாமிருக்கும் தேவனாம்பட்டினம் சரித்திரப் பிரசித்தி பெற்றது. 1684'வது ஆண்டில் காப்டன் காரிகிராண்ட் இங்கும் கடலூரிலும் நாம் தொழிற்சாலைகளைக் கட்ட மகாராஷ்டிர மன்னர் ஷாஹூவிடம் அனுமதி வாங்கினார். பின்னர் ராஜாராம் ஜின்ஜிகோட்டைக்கு (செஞ்சி) வந்தபோது தேவானம்பட்டணம் கோட்டைன்யயும் கடலூரையும் முதலில் இரண்டு லட்ச சக்கரம் கேட்டு பிறகு 51500 சக்கரத்துக்கு விற்றார். அந்த விற்பனை ஒப்பந்தத்தில் சார்லஸ் பார்வெல்லும் தோமேல் ஏல் என்பவரும் கையெழுத்திட்டு நமக்கு உரிமை வாங்கி வந்தார்கள். இப்படிச் சிரமப்பட்டு வாங்கிய தேவானம்பட்டணக் கோட்டையை அபிவிருத்தி செய்து ஸெய்ண்ட் டேவிட் கோட்டையாக்கினோம். இக்கோட்டை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் வித்து. இதனருகே அட்மிரல் போஸ்கவானின் கடற்படையின் ஒரு பகுதி கடலில் புறப்படத் தயாராயிருக்கிறது. இதோ கேப்டன் கோப்பின் தலைமையில் இயங்க நிலப்படை தயாராயிருக்கிறது," என்று விளக்கிய கவர்னர் மிகுந்த கம்பீரத்துடன் ஆசனத்தில் நிமிர்ந்து உட்காரவும் செய்தார். "இந்தப் படையெடுப்பு நிற்காது," என்று அறிவிக்கவும் செய்தார்.

கிளைவ் பதில் சொல்லவில்லை சில விநாடிகள். "இத்தனையும் ஒரு பிரிடெண்டருக்காக," என்று கடைசியாகச் சொன்ன பதிலில் வெறுப்பிருந்தது.

"ஸவாய் ஷாஹூஜி பிரிடெண்டரல்ல. சரியான வாரிசு. பிரதாப்சிங் தஞ்சையைச் சூதினால் கைப்பற்றியிருக்கிறார்," என்றார் கவர்னர் உஷ்ணத்துடன்.

"யுவர் எக்ஸலன்ஸி! இதில் நாம் தலையிட வேண்டிய அவசியம்?" என்று வினவினான் கிளைவ்.

கவர்னர் உடனடியாகப் பதில் சொல்லாமல் தம் எதிரேயிருந்த விஸ்கி பாட்டிலை எடுத்து, பின்னாலிருந்த பட்லரிடம் கொடுத்தார். பட்லர் எல்லோருக்கும் டம்ளர்களில் விஸ்கியை ஊற்றினான். கவர்னர் ப்ளாயர் பிறகு தமது நாற்காலியைவிட்டு எழுந்திருந்து விஸ்கி டம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டார். மற்றவர்களும் ஆசனங்களிலிருந்து எழுந்து கையில் டம்ளர்களை எடுத்துக் கொண்டனர். அந்த நிலையில் கிளைவை நோக்கிக் கேட்டார், "லெப்டினன்ட்! அவசியத்தைக் கேட்டாயல்லவா?" என்று.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தான் கிளைவ்.

கையிலிருந்த டம்ளரைச் சற்றுத் தூக்கிய கவர்னர், "லெப்டினன்ட்! நாம் இங்கிருப்பது வர்த்தகத்துக்கு மட்டுமல்ல. பிரிட்டிஷ் சக்தியை உயர்த்துவதற்கும் கூட. அதனால்தான் தேவிக்கோட்டைமீது படையெடுக்கிறோம்," என்று கூறிவிட்டு, "ஜென்டில்மென்!* ப்ரோ ரெஜி எட் பாட்ரியா," என்று சொல்லி விஸ்கியை உறிஞ்சினார். மற்றவர்களும் அந்த வாக்கியங்களைச் சொல்லி உறிஞ்சினார்கள். பெரிய அனர்த்தத்துக்கு அடிகோலப்பட்டதை கிளைவ் உணர்ந்தான்.

(தொடரும்)

---

* The History of the East India Company-by Captain Thornton, R. N. Page 1.

*Pro rege et patria For king and country. From: Chats on Military Curios-by Stanley C. Johnson. page 48.



நேற்றுக் காலையில் ஒரு டம்ளர் காப்பி வயிற்றுக்குள் போனது. அவ்வளவு தான்.. அதற்குமேல் இன்னும் எதுவும் வேலைக்காரி தேவானைக்கு உள்ளே போக வில்லை.

பட்டினி.

கொலைப்பட்டினி.

பங்களாவில் பெரியம்மா இருந்திருந்தால் அவர்களிடம் வாய் திறந்தாவது கேட்டு வாங்கிச் சாப்பிட்டிருப்பாள்.

இவ்வளவுக்கும் நேற்று தைப் பூசம் வேறு. பால் பாயசமும் பண்டங்களும் தாராளமாகப் பங்களாவில் புழுங்கின.

பங்களாவின் பின்புறம் குடியிருக்கும் தேவானையைக் கூப்பிட்டு 'இந்தாடி தேவானை, சாப்பிடுடி,' என்று சொல்லவே இல்லை.

பண்ட பலகாரம் பாயசமெல்லாம் கொடுக்காமல் போனாலும், கொஞ்சம் சோறாவது போட்டிருக்கலாமே என்று ஆதங்கப்பட்டாள் தேவானை.

வீட்டிலே சோறாக்குவது என்பது எட்டிலே தப்பிலேதான். எதைப் போட்டு ஆக்குவது? கிடைக்கிற கூலிக்குக் கூடைச் சோற்றை வாங்கித் தின்றுவிட்டு....கடன் சொல்லிக் கள்ளச் சாராயம் குடித்துவிட்டு....இரவிலே வெறும் கையுடன் குடிசைக்கு வருவதும், சோறாக்கவில்லை என்று அவளைப் போட்டு அடிப்பதும் நித்திய கடமையாகக் கொண்டிருந்தான் ரெங்கன் —அவள் கணவன்.

எப்போதும் சிரித்த முகமாக மகாலட்சுமி போன்று பங்களாவை அலங்கரிக்கும் பெரியம்மா இருந்தபோது புருஷனின் கொடுமைகள் ஒன்றும் அவ்வளவாக தேவானையைப் பாதித்து விடவில்லை.

வேலைக்கு வந்ததும் சாப்பிட்டாயா தேவானை என்று கேட்டு வயிறு முட்டச் சோறும் குழம்பும் போடுகிற மகராசி அவள்.

''வா தேவானை'' என்று வரவேற்கிற பெரியம்மா இப்போது பங்களாவில் இல்லை. மகளைப் பார்க்க நாக்பூர் போய் விட்டார்கள். வர நாலைந்து மாதங்கள் ஆகுமாம். அவர்கள் இல்லை என்பது நேற்றே அடிவயிற்றுப் பசியாக அவளுக்குத் தோன்ற ஆரம்பித்துவிட்டது.

சின்ன எசமானி கமலாவும் அப்படி ஒன்றும் மோசமில்லை. ஆனால் தேவானையின் பசியை அறியவில்லையோ அல்லது அறிந்துதான் பேசாமல் இருக்கிறாளோ தெரியவில்லை. தேவானையிடம் வேலையைமட்டும் கறாராக வாங்கிக் கொண்டு ஒரு டம்ளர் வெந்நீர்க் காப்பியையும் நீட்டி அனுப்பிவிடுகிறாள்.

மாதக் கடைசியில் கிடைக்கும் பதினைந்து ரூபாய்க் கூலியைக் கூடக் கணவன் பறித்துக் கொண்டுவிடுவான்.

மூன்றாம் நாள்.

தேவானை ஜீவனை இழுத்துப் பிடித்துக் கொண்டுதான் வேலை செய்து வந்தாள்.

**உமா கல்யாணி**

பணம் செக் மூலம் கொடுக்கப்பட்டது. இப்போது 30 மாதங்கள் சென்றுவிட்டன. இந்தத் தொகையைச் சட்டப்படி வாங்க முடியுமா? ஏற்கெனவே 30 மாதங்கள் ஓடிவிட்டனவே. காலாவதியாவதற்கு இன்னும் எவ்வளவு காலம் உள்ளது?

பதில்: பணம் கொடுத்ததற்குத் தகுந்த ஆதாரம் இருந்தால் போதும். பாண்டு எழுதி வாங்க வேண்டிய அவசியமே இல்லை. நீங்கள் செக் மூலம் பணம் கொடுத்திருப்பதால் பணம் கொடுத்ததை நிரூபிப்பது சுலபம். கொடுத்த பணத்தைத் திரும்ப வாங்க இந்திய காலகெடு சட்டத்தின்கீழ் (*Indian Limitation Act*) பணம் கொடுத்த அல்லது அதை திருப்பிக் கொடுக்க ஒப்புக்கொண்ட தினத்திலிருந்து காலகெடு மூன்று வருடம். அதாவது உங்களுக்கு மேலும் ஆறு மாதங்களே உண்டு.

**சட்டத்தின் முன் யாவரும் ஒன்றே.**
**(Equality Before Law)**

நீதியின் ஆட்சியைப் பற்றி (Rule of Law) நான் சில வரிகள் எழுதி, சட்டத்தின் முன் யாவரும் சமம் என்று விளக்கியிருந்தேன். ஒரு நேயர் கேட்கிறார்: "இது மெய்யாகவே நடைபெறுவதா? இரண்டு நாள் பட்டினியில் வாடிய ஒரு வாலிபன் பசிக் கொடுமையால் இரண்டு ரொட்டிகளை எடுத்துச் சென்றால், போலீசார் பிடித்துக் கோர்ட்டில் நிறுத்தி, தண்டனை தருகிறார்கள். கள்ள மார்க்கெட்டில் ஒருவர் லட்சம் லட்சமாக மோசடி அடித்தால், ஏதோ ஒரு சட்ட நுட்பத்தினால் நீதி மன்றத்தில் தப்பிவிடுகிறார். இதுவா சட்டத்தின் முன் யாவரும் சமம்?"

கேள்வி இயற்கை; ஆனால் ஆழ்ந்த சிந்தனையில் பிறந்தது அல்ல. பட்டினி என்ற காரணம் ஆனாலும் திருட்டுக் குற்றம் குற்றம்தான். தண்டனைகளை மெலிவாக்க நீதிபதிகளுக்கு விசால அதிகாரம் உண்டு. சட்டம் இவ்வாறு இல்லாவிட்டால், தீவட்டிக் கொள்ளையும் (Dacoity) பசிக் கொடுமையில் விளைந்தது என்று குற்றவாளி வாதாடக் கூடும். கள்ள மார்கெட் குற்றவாளி தப்பித்துக் கொள்வது சட்டக் குறைவல்ல. குற்ற விசாரணை (Investigation) ருஜு இவைகளின் கோளாறேயாகும்.

—சென்னை உயர்நீதி மன்ற முன்னாள் பிரதம நீதிபதி மா. அனந்த நாராயணன்








எனது பெங்களூர் நண்பரொருவர் கன்னடத்தில் அடித்திருந்த திருமண அழைப்பு இது. தமிழில் தந்துள்ளேன்.

அன்புடையீர்,

இந்தியா கிரிக்கெட்டில் தோற்றுக்கொண்டு இருக்கிறது. மறுபடியும் தேர்தல் நடைபெற இருக்கிறது. எதிர்க் கட்சிகள் ஒன்று கூடிக் கொண்டு இருக்கின்றன. நாட்டில் இத்தகைய மாபெரும் நிகழ்ச்சிகள் நடந்துகொண்டு இருக்கும் பொழுதே என் திருமணமும் ஆக இருக்கிறது:

இதற்குக் காரணங்கள் பல—

1) என்னுடைய பெற்றோருக்கு நான் ஒரே மகன்.

2) அதிகம் முணுமுணுக்காமல் பெண் ஒருத்தி என்னை மணக்க முன்வந்திருக்கிறாள்.

3) இப்பொழுதெல்லாம் நான் எதுவுமே செய்வதில்லை என்று நண்பர்கள் என்னைக் குற்றம் சாட்டிக் கொண்டு இருக்கிறார்கள்.

4) எனக்குத் திக்குத் திசை தெரியாமல் ஆகி இருப்பது முதலியன.

ஆனால் இவை எல்லாம் இயற்கையல்ல. மொத்தத்தில் திருமணம் செய்து கொள்ள இருக்கிறேன். அன்று தயவு செய்து வாருங்கள்.

தங்கள்,
'கிட்டி'

மறந்த விஷயங்கள்:

பெண்ணின் பெயர்: திரிவேணி

திருமணம் நடைபெறும் இடம்: வாசவி மஹால், 8'வது கிராஸ், மல்லேஸ்வரம், பெங்களூர்—3.

தேதி: 13.2.1977—ஞாயிறு.

தகவல்: ம. சிவராஜன்

'ப்ரோ ரெஜி எட் பாட்ரியா.' அதாவது 'மன்னருக்கும் நாட்டுக்கும்' என்று உணர்ச்சி கோஷம் எழுப்பி, கவர்னர் உறிஞ்சியது போலவே க்ளைவும் விஸ்கியை உறிஞ்சினுலும் அவன் மனத்தில் சந்துஷ்டி சிறிதும் இல்லை. பிரிட்டிஷ் மன்னருக்கும் தாய் நாடான பிரிட்டனுக்கும் சிறப்புண்டாக்கத் தக்க எந்தப் பணியிலும் வாலிபனை க்ளைவ் இறங்கத் தயாராயிருந்தாலும், தேவிக் கோட்டை படையெடுப்பு அத்தனை சுலபமல்லவென்றும், பிரதாப் சிங் போன்ற அறிவாளியான ஒரு மன்னன் பிரிட்டிஷ் பக்கமிருப்பதே பிரிட்டனுக்கு லாபமென்றும் அவன் கருதியதால், அவன் முகத்தில் தீவிர சிந்தனையும் உற்சாகமில்லாத வெறுப்பு கலந்த ஒரு சாயையும் படர்ந்து கிடந்தது. அதை கவர்னரும் கவனித்தார். ராணுவ மேஜரான ஸ்ட்ரின்சர் வாரன்ஸும் கவனித்தார்

தம் நிறைவேறக் கூடியதாகவும் இருக்க வேண்டும்,'' என்று க்ளைவ் சிறிதும் அச்சமின்றிப் பதில் கூறினுன்.

கவர்னர் ஆசனத்திலமர்ந்து மீண்டும் புகைக் குழாயை வாயில் வைத்துக் கொண்டார். அதில் பக்கத்திலிருந்த வெள்ளிக்குப்பியிலிருந்த புகையிலையையும் சிறிது அடைத்துப் பற்ற வைத்துப் புகையை வெளியே ஊதினுர். இதற்குப் பிறகு கேட்டார்,'' ஏன் நமது சபதம் நிறைவேருது?'' என்று.

கவர்னர் ஆசனத்தில் அமர்ந்தவுடன் மற்றவர்களும் ஆசனத்தில் அமர்ந்து விட்டாலும் க்ளைவ் மட்டும் உட்காரவில்லை. அவன் முகத்திலிருந்த வெறுப்பும் மறையவில்லை. கையிலிருந்த டம்ளரை மேஜைமீது வைத்தபோது கூடச் சிறிது சத்தத்துடனேயே வைத்தான். அவன் உதடுகள் மெல்ல அசைந்தன. ''உங்கள் படையெடுப்பு மந்திராலோசனை என்று நடந்தது?'' என்று

## ராஜ பேரிகை

### 19. அதிர்ஷ்டச் சீட்டு!

சாண்டில்யன்

அவ்விருவரில் மேஜர் லாரன்ஸ் கேள்வி எதுவும் கேட்காவிட்டாலும் கவர்னர் மட்டும் விஸ்கி டம்ளரை மேஜை மீது வைத்து விட்டுக் கேட்டார், ''லெப்டினண்ட்! உங்களுக்கு இந்தப் படையெடுப்பில் அவ்வளவு உற்சாகமில்லை போல் தெரிகிறது. காரணம் சொல்ல முடியுமா?'' என்று.

க்ளைவின் கண்கள் கவர்னரின் நீலநிறக் கண்களைத் தைரியத்துடன் சந்தித்தன. ''நமது மன்னரின் சிறப்பையும் நாட்டின் சிறப்பையும் ஓங்கச் செய்ய இப்பொழுது சபதம் செய்தோம். அந்தச் சபதத்திற்கு உயிரைக் கொடுக்க ஒவ்வொரு பிரிட்டிஷ் பிரஜையும் கட்டுப்பட்டவன். ஆனுல் சப

வினவினுன் மெள்ள.

''நேற்று.'' கவர்னர் பதில் அலட்சியமாக உதிர்ந்தது. புகைக் குழாயும் அதனுல் உதடுகளில் அசைந்தது.

''அதாவது ஏப்ரல் 10'ம் தேதி?'' என்று கேட்டான் க்ளைவ்.

''ஆம்,'' என்ருர் கவர்னர்.

''அதன் பிரதியைப் பிரதாப் சிங் மறுநாளே என்னிடம் காட்டுகிருர். இதிலிருந்து நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?''

''நம்மிடை யாரோ ஒற்றனிருக்கிருன்.''

''சந்தேகமில்லை அந்த ஒற்றனும் கவர்னரின் வெகு சமீபத்திலிரு

கிறுன். ஏனென்ருல் கவர்னர் உபயோகிக்கும் காகிதத்திலேயே அந்தப் பிரதி எடுக்கப்பட்டிருக்கிறது. நமது நடவடிக்கைகளை முழுதும் அறிந்த தஞ்சை மன்னன் நமது படையெடுப்பைச் சமாளிக்க முன்னதாக நடவடிக்கை எடுத்திருக்க மாட்டானென்று நினைக்கிறீர்களா?'' என்று கேட்ட க்ளைவ் மேலும் சொன்ஞன்: ''இந்த ஷாஹுஜி போலியென்று பிரதாப்சிங் சொல்லுகிருர். இவரை நம்பிப் போரில் இறங்குவது நமக்கு உசிதமல்லவென்றும் என்னை சொல்லச் சொன்ஞர். மகாராஷ்டிர சாம்ராஜ்யத் தலைநகரான ஸதாராவிலிருந்து விடுதலையடைந்துள்ள சந்தா சாகேப் பிரஞ்சுக்காரர்களுடன் சேர்ந்திருப்பதால் நமது பலம் துர்ப்பலமென்றும், தமது நட்பே நமக்கு நல்லதென்றும் தஞ்சை மன்னர் கூறுகிருர். இதில் அதிகத் தவறில்லையென்று எனக்குத் தோன்றுகிறது.''

கவர்னர் இதற்கு ஏதும் பதில் சொல்லவில்லை. மேஜர் லாரன்ஸே பதில் சொன்ஞர். ''பிரதாப் சிங்கின் பலம் அதிகமில்லையென்பது நமது நம்பிக்கை. ஷாஹுஜி தஞ்சை நோக்கி வருகிருர் என்று தெரிந்தால் உடனடியாகத் தஞ்சை சைன்னியத்தின் ஒரு





'குழந்தையை நேற்று பார்த்த போது கறுப்பாக இருந்தது. இன்று சிவப்பாக இருக்கிறனே! பேஷ், பேஷ்!''

'பாராட்டு கிடக்கட்டும்! முதலில் கொசுவலைக் குடை ஒன்று வாங்கிட்டு வாங்க....''

பகுதியும், தஞ்சை சமஸ்தானப் பிரபுக்கள் பலரும் ஷாஹுஜியுடன் சேர்ந்து கொள்வார்கள். தவிர மந்திராலோசனை நடந்தது நேற்றுனலும் நிலப் படையின் பெரும் பகுதி முன்னதாகவே வெள்ளாற்றங்கரையை நோக்கி அனுப்பப்பட்டிருக்கிறது. இங்குள்ள கடற் படை நாளைக் காலையில் புறப்பட்டு விடும். அப்படையில் நிலப்படைக்கு வேண்டிய உணவுப் பொருள்களும் பீரங்கிகளும் வருகின்றன. காப்டன் கோப் மீதியுள்ள சிறுபடையுடன் இன்றிரவே கிளம்புகிறுர். அதுமட்டுமல்ல. உதவிக்கு வரும் கப்பல்கள் பலமானவை இவற்றில் உணவு சப்ளை கப்பல்கள் இரண்டைத் தவிர *அப்போலோ என்ற சிகிச்சை மருந்துகளும் கருவிகளும் தாங்கிய கப்பலும், பெம்ப்ரோக் என்ற 60 பீரங்கிக் கப்பலும், இங்கிலாந்தின் கடற்படையின் சிறந்த கப்பல்களில் ஒன்றும், 74 பீரங்கிகளை உடையதும், அட்மிரல் போஸ்கவானின் கொடியைத் தாங்கியிருப்பதுமான நாமூர் என்ற பெரும் போர்க் கப்பலும் இருக்கின்றன. ஆகவே வெற்றியைப் பற்றிச் சந்தேகமில்லை,'' என்று விளக்கினுர் மேஜர் லாரன்ஸ்.

க்ளைவ் மேஜர் லாரன்ஸை நோக்கித் திரும்பினுன் கம்பீரமாக. ''இவ்வளவு பலம் இருக்க இந்த ஸவாய் ஷாஹுஜி என்ற காட்டுராஜாவின் £ தயவு நமக்கு எதற்கு?'' என்று வினவினுன்.

இதற்கு கவர்னரே பதில் சொன்னுர். ''உண்மையில் இத்தனை பலம் தேவையில்லை. தஞ்சைப் பகுதிக்குள் நுழையுமுன்பே சிதம்பரத்தில் ஷாஹுஜியுடன் தஞ்சைப் படையின் ஒரு பகுதியும் பிரமுகர்களும் வந்து கலந்து கொள்வார்கள்.''

''அதனுல்?''

''ஷாஹுஜி மன்னராகிவிடுகிறுர். தேவிக் கோட்டையையும் சுற்றுப் புறங்களையும் நமக்களிக்க ஒப்புக் கொண்டிருக்கிறுர் போர் ஏற்பட்டால் அதற்கான செலவையும் தந்துவிடுவதாக ஒப்பந்தம் செய்திருக்கிறுர்.''

இதை கவர்னர் திடமாகச் சொல்லவில்லை. அவர் குரலில் வேறு ஏதோ பொருள் புதைந்து கிடப்பதாகத் தோன்றியது க்ளைவுக்கு. ''ஷாஹுஜிக்கு அத்தனை செல்வாக்கு இருக்குமானுல் நாம் இத்தனை படை பலத்துடன் ஏன் செல்ல வேண்டும்?'' என்று மீண்டும் வினவினுன்.

சாதாரண லெப்டினன்டுக்குக் கவர்னர் பதில் சொல்ல அவசியமில்லைதான். ஆனுல் புதுச்சேரி போரில் போஸ்கவானிடம் சேவை செய்த போது க்ளைவ் காட்டிய வீரமும், உணவுப் பொருள் பொதி வண்டிகளை எந்த வித சங்கடமுமில்லாமல் கொண்டு வந்து சேர்க்கும் அவன் திறனும் கவர்னருக்கும் மேஜர் லாரன்ஸுக்கும் அவனிடம் அதிகப்படியான பாசத்தை உண்டாக்கியிருந்தபடியால், கவர்னர் உரையாடலை மேற் கொண்டு நடத்தினுர். ஆனுல் இம்முறை அவர் நேர்முகமாகப் பேசாமல் விஷமமான பாணியில் திரும்பி, ''மேஜர் லாரன்ஸ்! ஷாஹுஜி ஏன் நமக்கு அவசியம்?'' என்றுர்.

மேஜர் லாரன்ஸும் கவர்னர் பாணியைப் பின்பற்றி, ''தேவிக் கோட்டை அவசியம்,'' என்றுர்.

''காரணம்?'' கவர்னர் ஒற்றைச் சொல் கேள்விகை வீசினுர்.

---

* ORME'S History of the Military Transactions of the British Nation in Indostan- Vol. II- Page 113

£"The Expelled Savai Shahuji or Kattu Raja sought the help of the French but Dupleix refused to entertain him. Kattu Raja then sought the help of the English at Fort St David in 1749"—Maratha Rule in Carnatic by C.K. Srinivasan-PP 261-252

''மசூலிப்பட்டணத்திலிருந்து கேப் கொமரின் (குமரிமுனை) வரை தேவிக் கோட்டையைப்போல் வசதியுள்ள கோட்டை கிடையாது. அதன் சுற்றுப் புறங்கள் செழிப்பானவை. நமது வர்த்தகத்துக்கு வேண்டிய லினன் உற்பத்தித் தறிகள் அதைச் சுற்றித்தான் இருக்கின்றன. தேவிக்கோட்டையை அடுத்த துறைமுகம்போல் வேறு துறைமுகம், அதாவது 300 டன் எடையுள்ள கப்பல்களை ஏற்றுக் கொள்ளத்தக்க துறைமுகம் எதுவும் கிழக்குக்கடற்கரையில் கிடையாது,'' என்றார் ஸ்ட்ரின்ஜர் லாரன்ஸ்.

''அக்கோட்டை கொள்ளிடத்தின் முகத்வாரத்தில் இருக்கிறதல்லவா?''

''ஆம்.''

''அதன் முகத்வாரம் அடிக்கடி மணல் தட்டி அடைத்துவிடுகிறதே?''

''உண்மை. ஆனால் அந்த மணலுக்குக் குறுக்கே பெரிய ஆழமான வாய்க்கால் ஓடுகிறது. அதில் பெரும் கப்பல்கள் வரமுடியும். சற்றுச் சிரமப்பட்டு மணற் பகுதியை வெட்டிவிட்டால் இன்னும் வசதி அதிகம். அதற்கு இணையான துறைமுகம் இந்தக் கரையோரத்தில் எதுவுமே இல்லை.''

''இது கிடைத்து விட்டால்?''

''பிரிட்டன் இந்திய கீழைக் கடற்கரையின் அதிபதி.''

இதற்குப் பிறகு கவர்னர் பேசவில்லை. மேஜர் லாரன்ஸின் பேச்சை ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார். அவர் முகத்தில் மகிழ்ச்சிச் சாயை படர்ந்தது. சற்றுப் பொறுத்து, ''மேற்கொண்டு கேள்வி ஏதாவது உண்டா?'' என்று வினவினார் க்ளைவை நோக்கி.

க்ளைவுக்கு விஷயம் திட்ட வட்டமாகத் தெரிந்தது. கவர்னருக்கும் போஸ்கவானுக்கும் காட்டு ராஜாவைவிட தேவிக் கோட்டை மீதுதான் அக்கறையென்றும், கோட்டையைப் பிடிக்க ஷாஹுஜியை ஒரு சாக்காகவே அவர்கள் உபயோகப்படுத்துகிறார்களென்றும் புரிந்து கொண்டான். இருப்பினும், அதே சமயம் அவன் கண் முன்பு வீரனான பிரதாப் சிம்மனின் கம்பீர முகமும் எழுந்தது. தஞ்சை மன்னர் அந்தத் திட்டத்தைக் குறித்து நகைப்பதாகக் கூட க்ளைவுக்குத் தோன்றியது. இருப்பினும் பிரிட்டனுடைய நன்மை, கீர்த்தி, இவை முக்கியமாக அவன் மனத்தில் எழவே அவன் முகத்தில் பெரும் கனவுச் சாயை படர்ந்தது. தேவிச் கோட்டை கிடைத்தால் கர்னாடக ராஜ்யம் பிரிட்டனின் கைக்குள் சிக்குவது சாத்தியம் என்ற நினைப்பு மற்ற நினைப்புகளைச் சிதற அடித்தது. பிரிட்டிஷ் கொடி தேவிக் கோட்டைமீதும் ஆற்காட்டுக் கோட்டை



## பெங்களூரில் பெண்களை கேலிசெய்தால்

பெங்களூரில் தெருக்களிலும், சினிமா மற்றும் பொது இடங்களிலும் பெண்களைக் கேலி செய்பவர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அவர்களுடைய பெயரும் விலாசமும் புகைப்படமும் எல்லாப் போலீஸ் நிலையங்களிலும் பொது இடங்களிலும் வைக்க இருக்கிறார்கள்! இத்தகவலை போலீஸ் கமிஷனர் தெரிவித்தார்.

—எஸ். நடராஜன்



லைட் டீ, ஸ்ட்ராங் டீ, சிங்கிள் டீ, கப் டீ என்று டீயில் பல வகை உண்டு. இது மங்கம்மா டீ, முப்பது வருஷத்துக்கு முன்பு ரொம்பப் பிரபலமாயிருந்த டீ. 'விளக்கு எரிகின்றது' படத்தில் தேங்காய்—மனோரமா.

மீதும் பறப்பதாக மனக்கண்ணில் தோன்றியது அந்த மாவீரனுக்கு. அதனால் முகத்தில் வெறுப்பு மறைந்து மந்தகாசம் மலர்ந்தது. தனது இடையிலுள்ள கத்தியின் மீது கையை வைத்தான் க்ளைவ்.

அவன் முகத்தின் மாறுதலையும், வாளின் மீது அவன் கை அமர்ந்ததையும் கவனிக்கத் தவறாத கவர்னர் ஃப்ளாஸர், "லெப்டினண்டும் இந்தப் படையெடுப்பில் கலந்து கொள்ள இஷ்டப்படுவதாகத் தெரிகிறது," என்றார்.

"சரியான பிரிட்டிஷ் சோல்ஜரின் சகஜமான அபிலாஷைதானே அது," என்றார் மேஜர் லாரன்ஸும் விஷமமாக.

கவர்னர் தமது வாயிலிருந்து புகைக் குழாயை எடுத்து எதிரிலிருந்த தட்டில் வைத்தார். பிறகு சீட்டுக் கட்டை எடுத்துக் கலந்தார். "க்ளைவ்! உன் அதிர்ஷ்டம் எப்படியிருக்கிறதென்று பார்க்கிறேன். சீட்டை நகர்த்துகிறேன். ஒன்றை எடு. அது ஸ்பேட் ஏஸாயிருந்தால் நீ காப்டன் கோப்புடன் செல்லலாம். இல்லையேல் மீண்டும் பொதி வண்டியுடன் சிவிலியனாக (சாதாரணப் பிரஜையாக) அலுவல் புரியலாம்," என்று கூறி சீட்டுகளைப் பரபரவென்று நகர்த்தினர். க்ளைவும் அவர் சொற்படி ஒரு சீட்டைச் சட்டென்று உருவினான். கவர்னர் மீதி சீட்டுகளை மேஜை மீது போட்டு விட்டு அந்தச் சீட்டை வாங்கிப் பார்த்தார். "க்ளைவ்! நீ அதிர்ஷ்டசாலி! ஸ்பேட் ஏஸ் கிடைத்திருக்கிறது உனக்கு. பிரிட்டனின் எதிர்காலம் உன்னால் நிர்ணயிக்கப்படும்," என்று கூறி மற்றவர்களுக்கும் சீட்டைக் காட்டினர்.

க்ளைவின் இதழ்களில் புன்னகை அரும்பியது. கவர்னருக்குச் சீட்டுத் தந்திரங்கள் பல தெரியுமென்பதும் தான் கைவைக்கும் இடத்தில் ஸ்பேட் ஏஸை அவரால் நகர்த்த முடியுமென்பதும் க்ளைவுக்குத் தெரிந்திருந்தபடியால், அந்தப் படையெடுப்பில் தன்னை இணைக்க அவர் முன்னமே தீர்மானித்திருந்தாரென்பதை உணர்ந்து கொண்டான். இருப்பினும் அதை வெளிக்குக் காட்டாமல் மேஜர் லாரன்ஸைப் பார்த்தான். ஸெய்ண்ட் டேவிட் கோட்டையிலிருந்த உதவாக்கரை ரௌடிகளாயிருந்த வெள்ளையரைக் கொண்டு வீரமுள்ள படையொன்றை உருவாக்கிய ஸ்ட்ரின்ஜர் லாரன்ஸும்

விஷயத்தைப் புரிந்து கொண்டு புன்னகை பூத்தார்.*

க்ளைவ் கடைசியாக காப்டன் கோப்பை நோக்கித் தலைதாழ்த்தி, "நான் எப்பொழுது புறப்பட வேண்டும்?" என்று கேட்டான்.

"நௌ (இப்பொழுது)" என்ற காப்டன் கோப் ஆசனத்தை விட்டு எழுந்தான்.

அத்துடன் ஆலோசனை முடிந்ததென்பதைக் குறிப்பிட கவர்னர் கையை அசக்கியதால், க்ளைவும் காப்டன் கோப்பும் சபைக்குத் தலை வணங்கி வெளியே சென்றனர். தனக்குப் பெரிய அதிர்ஷ்டம் அடித்துவிட்டதென்ற எண்ணத்துடனும், தேவிக் கோட்டை அப்பொழுதே பிடிபட்டுவிட்டது என்ற உற்சாகத்துடனும் காப்டனுடன் நடந்தான் க்ளைவ்.

ஆலோசனை அறைக்கு வெளியே வந்ததும் காப்டன் கோப், க்ளைவை நோக்கி "லெப்டினண்ட்! நீ இரண்டு மணி நேரம் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம்," என்றான்.

"தேவையில்லை. இப்பொழுதே புறப்பட நான் தயார்," என்றான் க்ளைவ்.

க்ளைவின் உற்சாகத்தைக் கண்ட காப்டன் கோப், "நீண்ட தூரம் பயணம் செய்திருக்கிறாய்" என்று சுட்டிக் காட்டினான்.

"அதிர்ஷ்டம் அலுப்பைக் களைந்துவிட்டது" என்றான் க்ளைவ்.

அப்பொழுதே இருவரும் புறப்பட்டார்கள். கோட்டையிலிருந்த சிறு படையுடன் துரிதமாகப் புரவிகளில் பயணம் செய்து பெரும் படை தங்கியிருந்த வெள்ளாற்றங்கரைக்கு மறுநாள் மாலை வந்து சேர்ந்தார்கள்.

அதிர்ஷ்டத்தை எண்ணி மகிழ்ந்து கொண்டே பயணம் செய்த க்ளைவ் எதிரேயிருந்த படைகளின் கூடாரங்களைக் கண்டு பெருமிதம் அடைந்தான். ஆனால் அவன் நினைத்தபடி அதிர்ஷ்டம் வேலை செய்யவில்லை. நிகமாந்த மகா தேசிகனின் சுலோகம் வெகு துரிதமாக வேலை செய்தது. க்ளைவையும் கோப்பையும் அந்தப் படையையும் எதிர்பாராத பிரளயம் வளைத்துக் கொண்டது.

(தொடரும்)

---

* Major Stringer Lawrence forged a competant army out of the ruffians of Fort St. David–Lawford's 'Clive'–Page 24.

## உஷ... தேடிய காலணி!



புகழ்பெற்ற பல 'பாப்' பாடகர்களைப் பார்த்திருக்கும் ஹாங்காங் மக்கள், முதன் முறையாகப் புடவையணிந்த ஓர் இந்திய பெண்மணியின் இசைத் திறமையை கண்டு பெரிதும் வியந்தனர். உஷாதான் அவர். 'சைனா மார்னிங் போஸ்ட்' உஷாவை 'ஹாட் சப்பாத்தி' என்று வர்ணித்திருந்தது.

அவருடன் பேசிக்கொண்டிருந்தபோது தனது சொந்த வாழ்க்கையில் நடக்கும் சுவையான நிகழ்ச்சிகளைப் பற்றிச் சொல்லி, எல்லோரையும் சிரிப்பில் மூழ்க வைத்தார். உஷாவின் வீட்டில் சமையல் வேலைகளை கவனிக்கும் ஒரு கேரளக்காரர், அடிக்கடி தனக்கு தெரிந்த அரைகுறை ஆங்கிலத்தில் உஷாவிடம் உரையாடுவாராம். அவரது அகராதிப்படி எல்லாப் பழங்களும் 'பனானா' தான். ஒருசமயம் உஷா அவரிடம் வீட்டில் இருந்த மாங்காய்களை ஊறுகாய் போடும்படிச் சொன்னாராம். சிறிது நேரத்தில் திரும்பிய சமையற்காரர், உஷாவிடம் "சார், (அவர் உஷாவை அப்படித்தான் அழைப்பது வழக்கமாம்) மாங்காய் எல்லாம் பனானாவாக ஆகிவிட்டது. ஊறுகாய் போட முடியாது," என்று கூறினாராம்.

ஹில்டன் ஹோட்டலில் இசை நிகழ்ச்சியை வெற்றிகரமாக நிகழ்த்திய உஷாவிற்கு ஒரு சிறிய பிரசினை ஏற்பட்டது. இசை நிகழ்ச்சியின்பொழுது அவர் உபயோகிக்கும் அவரது காலணி அறுந்து போய்விட்டது. புதிய காலணி வாங்கப் பல கடைகள் ஏறி இறங்கியும் உஷா ஏமாற்றத்துடன் திரும்ப வேண்டி இருந்தது. காரணம், உள்ளூர் மக்களின் சிறிய பாதங்களுக்குத் தகுந்தபடி சிறிய அளவு காலணிகளே ஹாங்காங்கில் கிடைத்தன. உஷாவின் அளவுக்கேற்ற காலணிகள் எங்கு தேடியும் கிடைக்கவில்லை. தவிர 100 டாலர், 150 டாலர் (சுமார் 200-300ரூ) என்று விலைகள்!

—நிர்மலா சந்தானம்

# றுகிறா

பொறுத்தவரையில் என்னுடைய இசையமைப்பில் ஒரே ஒரு பாடல்தான் அவர் பாடியிருந்தாலும் அவர் குரலைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். 'பத்ரகாளி' படத்தில் இடம் பெற்ற 'ஓடுகின்றாள்' என்ற அந்தப் பாடலில் மூன்று கட்டை சுருதியில் 'ஷட்ஜமம்' 'ஸ'க்குக் கீழே (தைவதம்) 'த' வரையிலும் மேல் 'ஸ'வுக்கு மேலே காந்தாரம் 'க' வரையிலும் அவர் சுத்தமாகப் பாடியிருப்பது அனைவரும் அறிந்ததே. இப்படி இருக்க இந்தப் பெண்மணி இப்படி எழுதி இருப்பது வேடிக்கையாக இருக்கிறது. எண்ணற்ற ரசிகர்களால் விரும்பப்படும் ஒரு நல்ல பாடகரையும் அவரைச் சார்ந்த ரசிகர்களையும் என்னையும் வேதனைப்படுத்துவதாக இருக்கிறது. அத்தோடு 'எல்லா நடிகர்களுக்கும் ஏற்ற குரல் வளம் இல்லாதவர்' என்றும் குறிப்பிட்டிருக்கிறார். பாட்டு நன்றாக இருந்தால் யாருக்கு யார் பாடினாலும் நன்றாக இருக்கும். எம். ஜி. ஆர் அவர்களுக்கு பாலசுப்ரமண்யம் பாடிய பாடல் நன்றாக இருந்ததால் ஹிட்' ஆகவில்லையா? (ஆயிரம் நிலவே) ஜேசுதாஸ் பாடிய எத்தனையோ பாடல்கள் ஹிட் ஆகவில்லையா? 'அன்னக்கிளி' படத்தில் சிவகுமாருக்காக டி.எம்.எஸ். பாடினார். அதே சிவகுமாருக்கு 'பத்ரகாளி' படத்தில் ஜேசுதாஸ் பாடிய பாடல் 'ஹிட்' ஆகவில்லையா. ஆக, எந்த நடிகருக்கு யார் பாடுவது என்பது முக்கியமல்ல. எந்தப் பாடலை யார் பாட வேண்டும் என்பது தான் முக்கியம்.

'நாபி ஹிருத் கண்ட ரஸன நா ஸா துவயந்து' என்று தியாகராஜ ஸ்வாமிகள் குறிப்பிட்டிருக்கிறார். இசை என்பது நாபியிலிருந்து உதயமாகி, இருதயம் தொண்டை, மூக்கு ஆகியவை வழியாக ஒலிக்க வேண்டும்.

(மீதி அடுத்த வாரம்)



நேற்று ராத்திரி கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார். 'மேலே கையைப் போட என்ன துணிச்சல்? கைகளை உடைத்து சாமான்களை வெளியே எறி' என்று கத்திக் கொண்டிருந்தார்?''

வித்யா கலகலவென்று சிரிக்க ஆரம்பித்தாள்.

''அடேடே! அதுதான் பூனை போல வந்து படுத்துக் கொண்டீர்களா? அப்பா கத்தியது பக்கத்து ரூம் சிடுமூஞ்சியைப் பற்றி அல்லவா? மூன்று மாதமாக வாடகை பாக்கி. வாடகையைக் கேட்கத் தாமுவை அப்பா அனுப்பினார். அவன் தாமுவைக் கழுத்தில் கை வைத்துத் தள்ளி இருக்கிறான். அவன் கைகளை உடைப்பதாகத்தான் நேற்று இரவு கத்திக் கொண்டிருந்தார்!''

முகத்தில் அசடு வழியக் கேட்டேன்.

''நான் உன் கைகளைத் தொட்டதாக நீ சொல்லவில்லையா!''

''அட! என் காதல் மன்னரே! பயந்த பழைய சோறே! இவ்வளவுதானா உங்கள் தைரியம்? இதையெல்லாம் போய் அப்பாவிடமா சொல்வேன்! சரியான வெங்காய சாம்பார்!''

வித்யா எக்களித்தாள்.

அசடு வழிய நின்றேன் நான் நன்றி பொங்கும் கண்களுடன்.



''தோலில் மாட்டிக்கிற தோள் பை இருக்கிறதா?''

''அதில்லே! தோளில் மாட்டிக்கிற தோல் பைதான் இருக்கு.''

# ஜலதீபம்

சாண்டில்யன்

## 20. காட்டுராஜா சாட்சியளிக்கிறார்

மனித முன்னேற்றத்திற்குத் தேவை அதிர்ஷ்டந்தான். ஆனால் அது ஏன் வருகிறது, எப்படி வருகிறது, எப்படி மாறுகிறது என்பது மட்டும் மனித அறிவுக்கும் புலன்களுக்கும் அப்பாற்பட்டதாயிருக்கின்றது. திருஷ்டிக்குப் புலப்படாத காரணத்தாலேயே அது அதிர்ஷ்டம் என்று அழைக்கப்படுகிறது. அது சம்பந்தப்பட்டவரை 'தைவமத்ர ப்ரமாணம்' என்ற நிகமாந்த மகாதேசிகன் வாக்குப்படி தெய்வ சித்தமே சத்தியமாகிறது. அதற்கு வெள்ளாற்றங்கரையே உதாரணமாயிற்று.

செயிண்ட் டேவிட் கோட்டையிலிருந்து காப்டன் இரவோடு இரவாகக் கிளம்பி மறுநாள் மாலை வெள்ளாற்றங்கரைக்கு வந்தபோது அந்த ஆற்றின் வெள்ளத்தைப் போலவே தனது அதிர்ஷ்டமும் கரை புரண்டு ஓடுகிறது என்று நினைத்தான் வாலிபனான கிளைவ். அவ்விருவரும் வந்தபோது வானம் நிர்மலமாயிருந்தது. கொல்லி மலையில் கிளம்பி, தொழுதூருக்கு மேற்கே வசிஷ்ட நதியும் கலந்து கொண்டதால் விசாலப்பட்டு சுவேத நதியென்று வட மொழியிலும், வெள்ளாறு என்று தமிழிலும் அழைக்கப்பட்ட அந்தப் புண்ணிய நதிகூடக் கிளைவ் தனது கரையை அடைந்தபோது அவன் அதிர்ஷ்டத்தை உயர்த்துவது போலும், அவனுக்கு அடங்கி நடப்பது போலும் மிக நிதானமாகவே பிரவகித்துக் கொண்டிருந்தது. கிளைவ் சில நிமிடங்கள் தனது புரவியை நிறுத்தி எதிரே அந்நதியையும் நதிக் கரையில் விரிந்த காட்சியையும் அனுபவித்தான். ஆற்றுக்கு அக்கரையிலிருந்த சோலைகளைத் தழுவி வந்த தமிழ்நாட்டு இன்பக் காற்றையும் முகர்ந்தான். ஆற்றக்கரையில் அடிக்கப்பட்டிருந்த பல கூடாரங்களும், ஆங்காங்கு உலாவிக் கொண்டிருந்த சோல்ஜர்களும் இந்தியச் சிப்பாய்களும், நடுவேயிருந்த ஒரு கூடாரத்தில் கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்த யூனியன் ஜாக்கும் (பிரிட்டிஷ் கொடியும்) அவனுக்குப் பெருமகிழ்ச்சி அளித்ததென்றால், அவனை நோக்கித் துரிதமாகப் புரவியொன்றில் வந்த இன்னொரு வெள்ளை வீரன் உருவமும் அவன் ஆனந்தத்தை ஆகாசத்துக்குக் கொண்டு போயிற்று. கனவேகமாகப் புரவியில் வந்த அந்த வீரன், காப்டன் கோப்பும் கிளைவும் இருந்த இடத்தை அணுகியதும் சட்டென்று புரவியை நிறுத்தி வியப்பு நிரம்பிய கண்களைக் கிளைவ்மீது நாட்டி, ''நீ இங்கு எங்கு வந்தாய்?'' என்று வினவினான்.

வந்தவன் தனது ஆருயிர்த் தோழனான எட்மண்ட் மாஸ்கலின் என்பதைக் கண்ட கிளைவ் புரவியிலிருந்து குதித்து அவனையும் புரவியிலிருந்து கீழே இழுத்து அவனைத் தழுவிக்கொண்டான். ''எட்மண்ட்! நீ இங்கிருப்பது எனக்குத் தெரியாதே. இத்தனை நாள் நீ ஸெய்ண்ட் ஜார்ஜ் கோட்டையில் இருப்பாயென்றல்லவா நம்பினேன்,'' என்றான்.

அவ்விருவரும் மேலே பேசியிருப்பார்கள் காப்டன் கோப் குறுக்கிட்டிராவிட்டால். ''உறவாட இது நேரமுமல்ல, இடமுமல்ல,'' என்ற காப்டனின் கடும் சொல் இருவரையும் விலகச் செய்தது. அவர்கள் விலகியதும் காப்டன் கோப் கேட்டான், ''மிஸ்டர் மாஸ்கலின்! கூடாரங்கள் சரியாக அமைக்கப்பட்டிருக்கின்றனவா? சோல்ஜர்களுக்கு உணவு போதுமான அளவு இருக்கின்றதா?'' என்று.

''கூடாரங்களை அசைக்க முடியாது. உணவுப் பொருள்கள் இன்னும் நான்கு நாளைக்கு இருக்கும்,'' என்றான் எட்மண்ட்.



''பீரங்கிகள், வெடிமருந்து, குண்டுகள்?'' கோப்பின் குரல் அதிகாரத் தோரணையில் விசாரித்தது.

''நமது படையில் 430 வெள்ளையர்கள், 1000 இந்தியச் சிப்பாய்களும் தானிருக்கிறார்களென்பது தங்களுக்குத் தெரியும். செயின்ட் டேவிட் கோட்டையில் நான்கு மத்திய தர பீரங்கிகளும், நான்கு சிறு பீரங்கிகளும்தான் கொடுத்தார்கள்,'' என்றான் எட்மண்ட். அவன் குரலில் அவை போதாதென்ற பொருள் நன்றாக ஒலித்தது.

''கவலை வேண்டாம். கப்பல்களில் கோட்டையைத் தகர்க்கும் பெரும் பீரங்கி வருகிறது. உணவுப் பொருள்களும் வருகின்றன. அவை வந்

ததும் நமது பலம் அதிகமாகி விடும். அதுமட்டுமல்ல, சிதம்பரத்தில் காட்டு ராஜாவின் (ஷாஹுஜியின்) படைகளும் தஞ்சையிலிருந்து வந்து கலந்து கொள்ளும். தேவிக் கோட்டை நமது கையிலிருப்பது போலத்தான்,'' என்றான் காப்டன் கோப். பிறகு மறு பேச்சுப் பேசாமல் புரவியை முன்னால் நடத்தினான்.

நண்பர் இருவருங்கூடத் தமது புரவிகளில் ஏறி, காப்டனைத் தொடர்ந்தார்கள். கூடாரங்களிலிருந்த சோல்ஜர்கள் புரவிகளின் காலடிச் சத்தம் கேட்டு வெளியே வந்து பார்த்ததும் 'அட்டென்ஷ'னில் நின்று காப்டனுக்கு சலாம் செய்தார்கள். அவர்களுக்குத் தலையை மாத்திரம் லேசாகத் தாழ்த்தி மிகக் கம்பீரமாகக் காப்டன் கோப் புரவியை நடத்திச் சென்று, மத்தியில் யூனியன் ஜாக் பறந்து கொண்டிருந்த கூடாரத்தின் வாயிலில் இறங்கிக் கிளைவையும் இறங்கும்படி சைகை செய்தான். பிறகு எட்மண்ட்டை நோக்கி, ''மிஸ்டர் மாஸ்கலீன்! காட்டு ராஜாவை என் கூடாரத்துக்கு வரச் சொல்லுங்கள்,'' என்று உத்தரவிட்டுக் கூடாரத்துக்குள் நுழைந்தான்.

காப்டன் கோப் கூடாரத்துக்குள் நுழைந்த பின்பும் கிளைவ் சூழ்நிலையைப் பார்த்துக் கொண்டு நின்றான். அவனது நண்பன், ''லெப்டினென்ட்! தாங்களும் உடன் செல்லுங்கள். இரவு சந்திக்கிறேன்,'' என்று கூறி விஷமப் புன்முறுவல் செய்தான்.

''எட்மண்ட்! நாம் பேச வேண்டியது நிரம்ப இருக்கிறது. நானும் உன்னுடன் தங்குகிறேனே,'' என்றான் கிளைவ்.

எட்மண்ட் மாஸ்கலீன் சிறிது தயங்கினான். முடிவில் கூறினான், ''முடியாது,'' என்று.

''ஏன்? நாமிருவரும் சென்னைக் கோட்டையில் ஒரே அறையில் தானே இருந்தோம்? பிரெஞ்சுக்காரர் அதைப் பிடித்தபோது இந்தியர்கள் போல் மாறுவேடமணிந்தபோது ஒன்றாகத்தானே ஓடி வந்தோம்?'' என்று வினவினான் கிளைவ்.

''அப்பொழுது நீ சாதாரண ரைட்டர் குமாஸ்தா, என்னைப் போல். இப்பொழுது லெப்டினன்ட். தவிர, கமிஸ்ஸரியேட்டாக (உணவுப் பொருள் சப்ளை அதிகாரியாக) உயர்ந்து பணமும் சேர்த்துவிட்டாய்.''

''பணம் நட்பைப் பிரிக்க முடியுமா?''

''முடியாது. அந்தஸ்து பிரிக்க முடியும்.''

''என்ன அந்தஸ்து?''

''நீ லெப்டினன்ட். நான் சாதாரண சோல்ஜர். நீ இருக்க வேண்டியது காப்டன் கூடாரத்தில். தவிர..'' இந்த இடத்தில் சிறிது தயங்கினான் எட்மண்ட்.

கிளைவின் புருவங்கள் சந்தேகத்தால் உயர்ந்தன. ''தவிர?'' என்று கேள்வியும் உதிர்ந்தது அவன் உதடுகளிலிருந்து துரிதமாக.

''நான் தனிமையிலில்லை,'' என்றான் எட்மண்ட்.

''வேறு யாரிருக்கிறார்கள்?'' என்று கேட்டான் கிளைவ் சந்தேகத்துடன்.

''சிறிது நேரத்தில் உனக்கே புரியும்,'' என்று கூறிய எட்மண்ட், தனது புரவியைத் துரிதமாக நகர்த்திச் சென்று விட்டான்.

கிளைவ் மிகுந்த யோசனையுடன் புரவியிலிருந்து இறங்கி, காப்டன் கூடாரத்திற்குள் நுழைந்தான். அங்கு இரு 'காம்ப் காட்ஸ்' (முகாம் கட்டில்கள்) போடப்பட்டிருப்பதையும் மற்ற வசதிகளுமிருந்ததையும் கவனித்தான். நடுவிலிருந்த கட்டிலில் காப்டன் உட்கார்ந்திருந்தான். கோட்டையும் ஹாட்டையும் கழற்றிவிட்டு ஷர்ட்டுடன் உள்ளே நுழைந்த கிளைவ் உடையைக் கழற்றாமலே உட்கார்ந்தான் மற்றொரு கட்டிலில். அவன் முகத்தில் தீவிர யோசனை படர்ந்து கிடந்தது. ''இந்தக் காட்டு ராஜா எப்பேர்ப்பட்டவர்?'' என்று வினவினான் கடைசியாக.

காப்டன் கோப் நகைத்தான். ''மற்ற இந்திய ராஜாக்களைப் போலத்தான்,'' என்று நகைப்பினூடே கூறவும் செய்தான்.

''அப்படியென்றால்?'' கிளைவின் குரலில் கடுமையிருந்தது.

''தஞ்சையின் உண்மை மன்னனை நம்மிடம் காட்டிக் கொடுக்கிறான். நாம் கொடுக்கும் விஸ்கி, வொயின் மற்றும் பல வசதிகளை அனுபவிக்கிறான்..''

''இந்த வசதிகள்....?''

# கல்லூரி மேடை

(அண்மையில் நடைபெற்ற அனைத்துக் கல்லூரி நாடகப் போட்டியில் இடம்பெற்ற 'சீரோசிர்!' எனும் நாடகத்தில் சில வெடிகள்:)

ராமசாமி: ஒரே புழுக்கமா யில்லே?

கிருஷ்ணமூர்த்தி: இல்லையே!



ராம: என்னது இப்படி சொல்லிட்டீர்? எனக்கு எப்படி வேர்க்கிறது பாருங்கோ! இத்தனைக் கும் எனக்கு வேர்க்காதுன்னு பேரு!

கிருஷ்ண: என்னது, உங்க பேர் ராமசாமின்னுதானே சொன் னுங்க?

□□

பாலு: சார், நான் ஒன்னு கேக்கறேன், பதில் சொல் லுங்கோ பார்க்கலாம். இப்ப மெட்ராஸ்லே மழை பெய்து ரோடெல்லாம் பாழாப் போச் சில்லே! அப்போ கார்ப்பரேஷன் காரங்க ரோடெல்லாம் வாழை



மரம் நடணும்னு பார்த்தாங்களாம் ஏன் தெரியுமா?

கிருஷ்ண: ஏன்?

பாலு: வாழைமரம் தானே தார் போடும்?

—ஆர். கணேஷ்

"உன் நண்பரின் கூடாரத் தில் இருக்கின்றன."

"இதுதான் என் நண்ப னுக்கு வேலையா?"

"இதுவும் ஒரு வேலை. ஆனால் உன் நண்பன் இதை ரசிப்பதா கத் தெரியவில்லை."

கிளைவ் சிறிது நேரம் சிந் தித்து விட்டு, "கேப்டன், எனது நண் பனைப் பார்க்க, அவனுடன் தங்க, தங் கள் அனுமதி வேண்டும்," என்றான்

"பார்த்துவிட்டு வரலாம். ஆனால் லெப்டினன்ட் தங்க வேண்டிய இடம் காப்டனுடன்," என்று கூறிய கோப், "கிளைவ்! சற்றுப் பொறு. நமது மன்னரைப் பார்த்துவிட்டுப் போக லாம்," என்றான்.

அதற்குப் பிறகு கிளைவ் மௌனம் சாதித்தான். தனக்குத் தேவிக் கோட்டையைப் பிடிக்கும் பணியில் இடம் கிடைத்தது அதிர்ஷ்டமாகவும் மகிழ்ச்சியாகவும் தோன்றியதென்ற லும், பிரதாப சிம்மனை நினைத்தபோது தான் செய்யும் காரியம் நியாயம் என்ற யோசனையும் பிறந்தது. எதற் கும் காட்டு ராஜாவையும் பார்த்த பின்பு தீர்மானத்துக்கு வரலாம் என்று நினைத்தான்.

நிமிடங்கள் பறந்தன. அரை மணிகூட அவன் யோசனையில் திளைத் துக் கிடந்தான். காட்டு ராஜா வர வில்லை. அவருக்குப் பதில் எட்மண்ட் வந்து சேர்ந்தான். "எங்கே காட்டு ராஜா?" என்று சீறினான் காப்டன்.

"வர மறுக்கிறார்," என்றான் எட்மண்ட் பதிலுக்கு.

"ஏன்?" கேப்டன் கோப் பின் சினம் அதிகமாகி முகம் சிவந்தது.

"அவர் மன்னராம். தாங் கள் கேவலம் காப்டனும்," என்று எட் மண்ட் மேலும் குத்தினான் சொற் களால்.

காப்டன் கோப்பின் முகத் திலிருந்து சினம் மறைந்து வியப்பு விரிந்தது. கட்டிலிலிருந்து எழுந்திருந்து கூடாரத்தில் இருமுறை உலாவினான். பிறகு திடீரென்று நின்று, "கிளைவ்!" என்று கூவினான்.

கிளைவ் கட்டிலிலிருந்து சரே லென்று எழுந்திருந்து, கால்களைக் குவித்து, "எஸ் காப்டன்," என்று ஆஜ ராக நின்றான்.

''நீ காட்டு ராஜாவின் கூடாரத்துக்குச் சென்று அவரை மரியாதையுடன் அழைத்து வா. அவர் வராவிட்டால் எப்படியாவது அழைத்து வா. திஸ் ஈஸ் ஆன் ஆர்டர். இது உத்தரவு,'' என்றான் கோப் சினத்துடன். பிரிட்டிஷ் சாம்ராஜ்யக் களை பூராவும் காப்டன் கோப்பின் வதனத்தில் பிரகாசித்தது.

கிளைவ் தலை தாழ்த்தி எட்மண்டுடன் வெளியே சென்றான். வெளியே வந்ததும் கிளைவை நோக்கி, எட்மண்ட் ''ராபர்ட்! நிதானத்தைத் தவற விடாதே. என் கூடாரத்திலிருந்த சரக்குகள் இப்பொழுது ராஜாவின் கூடாரத்திலிருக்கின்றன. எதையும் கண்டு கொள்ளாதே! எப்படியும் அவர் நமது பிற்காலத் தஞ்சை மன்னர் என்பதை மறவாதே,'' என்று நல்ல ஆங்கிலத்தில் போதித்தான். லேசாக நகைக்கவும் செய்தான்.

கிளைவ் ஏதும் பேசாமல் நண்பனுடன் நடந்தான். பத்துக் கூடாரங்களைத் தாண்டியதும் இருந்த ஒரு பெருங் கூடாரத்தின் முன்பாக நின்ற எட்மண்ட், ''ரா பர்ட்! உள்ளே போ. ஆனால் நான் சொன்னது நினைவிலிருக்கட்டும்,'' என்று எச்சரித்தான்.

அவன் எதற்காக இத்தனை தூரம் எச்சரிக்கிறான் என்பதைப்பற்றிக் குழம்பிய கிளைவ் திடீரென விழித்துக் கொண்டான். கூடாரத்திற்குள்ளிருந்து பெரும் சிரிப்பு அந்த நதிக்கரையின் அமைதியைப் பிளந்தது. அதைக் கேட்டதும் நிலைமையை ஓரளவு புரிந்து கொண்ட கிளைவ் ஒரு முறை நண்பனை நோக்கினான். பிறகு சரேலென்று கூடாரத்துக்குள் நுழைந்தான்.

கூடாரத்தின் உட்புற நிலை அவனைத் திகைக்க வைத்தது. ஒரு மடக்கும் ஈஸிசேரில் காட்டுராஜா தலையணையொன்றில் மல்லாந்து கிடந்தார். அவர் கையொன்றில் பெரும் விஸ்கி குப்பியொன்று காட்சியளித்தது. இரு புறமும் இரு வெள்ளைக்காரப் பெண்கள் நின்றிருந்தார்கள். அவ்விருவர் உடைகளிலிருந்தும் அவர்கள் ராணுவ நர்ஸ்களென்பதைப் புரிந்து கொண்டான் கிளைவ். அவர்களில் ஒருத்தியின் இடையை ராஜாவின் இன்னொரு கை சுற்றிக்கொண்டிருந்தது. ''நர்ஸ்கள் எனக்குச் சிகிச்சை செய்ய வேண்டும். உம், செய்யுங்கள்,'' என்று உத்தரவிட்ட ராஜா அவர்கள் வாளாவிருக்கவே கண்களைத் திறந்து கூடார வாயிலில் நின்ற கிளைவைப் பார்த்தார். ''யார் நீ உத்தரவில்லாமல் உள்ளே வர?'' என்றும் கேட்டார்.

கிளைவைக் கண்டதும் நர்ஸ்கள் விலக முற்பட்டனர். மன்னரிடமிருந்து ஒருத்திதான் விலக முடிந்தது. இன்னொருத்தியின் இடையில் பதிந்திருந்த காட்டுராஜாவின் முரட்டுக் கை அவளை விடாததால், அவள் நெளிந்தாள் வேதனையுடன்.

கிளைவ் முதன் முதலாக நிதானத்தை இழந்தான். அந்தக் காட்டு ராஜாவைப் பார்த்தபோது தஞ்சை அரண்மனையின் நினைவு அவன்



பாலில் விழுந்துவிட்ட ஓர் ஈயையோ, அல்லது காப்பியில் விழுந்துவிட்ட ஒரு காகிதத் துண்டையோ எடுத்து வெளியே எறிய முயலுகிறவர், அது ஒரு பெரிய தொல்லை என்பதுபோல் தானே கற்பனை செய்து கொள்கிறார். அப்படிப்பட்டவர்கள், குட்டையின் நிழலிலே மீன் பிடிக்க உட்கார்ந்திருப்பவரின் பொறுமையைப்பற்றி ஒரு நிமிடம் நினைத்துப் பார்க்கட்டும். உடனேயே அவர் உள்ளத்தில் திருப்தியும் அமைதியும் வெள்ளமெனச் சுரக்கும்.

என் நண்பரொருவரின் மேஜை இழுப்பறை எப்போதும் ஒரே அடைசலாக இருக்கும். இழுத்தால் சிக்கிக்கொள்ளும். ஒவ்வொரு நாளும் 'சனியனே!' என்று அவர் சலித்துக்கொள்வார்.

இழுத்த இழுப்புக்கு டிராயர் சுலபமாக வர வேண்டுமென்று நாமாக அனுமானித்துக் கொள்வதால்தான் இப்படி நேருகிறது.

'சக்தி வாய்ந்த, கொடுங்கோலனை, ஒரு பகைவனுக்கு எதிராக இழுக்கிறேமென்று கற்பனை செய்துகொள் அந்தப் போராட்டம் உள்ளத்துக்குச் சுறுசுறுவென்றிருக்கும். களைப்பு ஏற்படுத்தாது.' என்று நான் சொன்னேன்.

—ஜி. கே. செஸ்டர்ட்டன்

## தேர்தல் சின்னங்கள்




காங்கிரஸ்




ஜனதா




அ.இ.அ.தி.மு.க.
(காங்கிரஸ் அணி)




தி. மு. க.
(ஜனதா அணி)

மனக்கண் முன்பு எழுந்து பிரதாபசிம்மனின் கம்பீரமான அறிவு முதிர்ந்த முகமும் அவனைப் பார்த்து நகைத்தது. 'இவனையா மன்னனுக்கப் பார்க்கிறீர்கள்?' என்று பிரதாபசிம்மன் கேட்பது போலிருந்தது வீரனுன கிளைவுக்கு. ஆகவே, "எடு கையை. விடு அவளை!" என்ற சொற்கள் கடுமையுடன் உதிர்ந்தன கிளைவிடமிருந்து.

காட்டு ராஜாவின் கை நர்ஸின் இடையை இரும்புப் பிடியாகப் பிடித்தது. ராஜா மற்ற விஷயங்களில் பலவீனமானவராஞலும்பெண்கள் இடுப்பைப் பிடிப்பதில் எமகாதகர் என்பதை உணர்ந்த நர்ஸ் செயலிழந்து நின்ருள்.

அந்தச் சமயம் இரவு மூண்டு விட்டதால் மாலையில் ஏற்றப்பட்டிருந்த கூடார விளக்கில் ராஜாவின் குடிகார முகம் மிக விரசமாகக் காட்சியளித்தது. "விடு அவளை," என்று இரண்டாம் முறை கூறிய கிளைவ், தன் இடுப்பிலிருந்த கைத்துப்பாககியை எடுத்து நீட்டினுன் தஞ்சையின் எதிர்கால மன்னனுக ஆசைப்பட்ட காட்டு ராஜாவை நோக்கி.

ஆனுல் காட்டு ராஜா அதற்கெல்லாம் மசியவில்லை. இடிஇடியெனப் பெரிதாக நகைத்தார். நகைத்தது அவர் மட்டுமல்ல. இயற்கையும் நகைத்தது. வெளியே திடீரென ஆகாயத்தில் பேரிடியொன்று தலையில் விழுவதுபோல் முழங்கிற்று. பெரும் புயற்காற்று கூடாரத்தின் துணிகளைத் தூக்க முயன்றது. இரண்டாம் முறையும் பாட்டிலைத் தூக்கினுர். அம்முறை அவர் கண்களுக்கு மட்டுமின்றிக் கிளைவுக்கும் ஆகாயம் தெரிந்தது. புயல் பலமாக உட்புகுந்து கூடாரத் துணியைக் கந்தல் கந்தலாகப் பிய்த்துவிட்ட காரணத்தாலே மேலே கருமேகம். பார்க்கப் பயங்கரமான மின்னல் அதன் ஊடே ஒளிவிட்டது. சில விநாடிகளில் அதிர்ஷ்டம் தன்னைவிட்டுப் பறந்துவிட்டதைக் கிளைவ் உணர்ந்தான்.

அத்தனையிலும் காட்டு ராஜாவின் அதிர்ஷ்டமும் பறந்துவிட்டதை எண்ணி மகிழ்ச்சியுடன் அந்தக் கூடாரத்தை விட்டு வெளியேறினுன். அந்தச் சமயத்தில் பிரதாப சிம்மன் முகம் அவனைப் பார்த்து நகைத்தது. மீண்டும் சுலோகத்தை உதிர்த்தது. 'இதுதான் விதி,' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் கிளைவ். விதி அத்துடன் விடவில்லை அந்தப் படையை. மறுநாளும் அதற்கு மறுநாளும் விடாமல் தொடர்ந்தது. சிதைந்த படை தன்னை உருவாக்கிக் கொள்ளப் பறங்கிப்பேட்டைக்கு நகர்ந்தபோது அங்கும் காத்திருந்தது பயங்கரச் செய்தி!

(தொடரும்)

## 21 தோணியில் வந்த தூது

குருட்டு நம்பிக்கைகள் கறுப்பர்களுக்குத் தான் அதிகம் என்று வெள்ளைக்காரர்கள் அன்றும் இன்றும் எள்ளி நகையாடினாலும், அதை வெள்ளைத் தாசர்கள்கூட ஒப்புக்கொண்டு பகுத்தறிவைப் பலபடி நமக்குப் பகிர்ந்து தந்தாலும், எண் 13 என்பது துரதிருஷ்ட எண் என்று வெள்ளைக்காரர்கள் இன்றும் நம்புவதை நமது தற்கால அரசியல்வாதிகளில் முக்கால்வாசிப்பேர் அறியாததால், வெள்ளைத் தோலுடையோருக்கும் அத்தகைய குருட்டு நம்பிக்கைகளுக்கும் சம்பந்தமில்லையென எண்ணி அவர்கள் பெருமையை நினைத்து உடலும் உள்ளமும் பூரித்தாலும், 1749 ஏப்ரல் 13'ந்தேதி வெள்ளாற்றங்கரையில் விளைந்த விபரீதத்தை எண்ணிப் பார்த்த காப்டன் கோப்பும் இதர வெள்ளைக்காரர்களும் அந்தத் தேதியின் மீதே பழியைப் போட்டார்கள். அந்தப் பதின்மூன்றும் தேதி சாயந்தரம் வரையில் நிர்மலமாயிருந்த ஆகாயம் திடீரென இரவில் கறுத்து, மெல்லென்ற தென்றலும் திடீரெனச் சூறாவளியாக மாறி, தங்கள் கூடாரங்களைத் தார் தாராகக் கிழித்துவிட்டதையும், உணவுப் பொருள் வண்டிகளை இழுத்து வந்த பொதிகாளைகள் எல்லாமே அந்தச் சூறாவளியிலும் அதைத் தொடர்ந்த கடுமழையிலும் செத்துவிட்டதையும், பீரங்கிகளில் திணிக்கவேண்டிய வெடி மருந்துகளும் கரைந்தோடிவிட்டதையும் கண்ட காப்டன் கோப், 13வது எண்ணை மறுநாள் காலை பெரிதும் கடிந்து கொண்டான். "இந்தச் சனியன் வந்திராவிட்டால் இந்தத் தொல்லை ஏற்பட்டிருக்காது," என்று காட்டுராஜாவைக்கூட வெளிப்படையாகத் தூற்றலானான் காப்டன் கோப்.

ஏப்ரல் 13'ம் தேதி இரவில் காட்டுராஜாவின் கூடாரக் கூரை திடீரெனக் கிழிக்கப்பட்டு ஆகாயக்கூரை கண்களுக்குப் புலப்பட்டவுடனேயே கிளைவ் திடீரென ராஜாவின் அருகிலிருந்த இரண்டு நர்ஸ்களையும் வெளியே





அழைத்து வந்து சற்று எட்ட இருந்த பெரிய ஆலமரத்தடியில் தங்க வைத்து விட்டுக் காப்டன் கோப்பின் கூடாரத்தை நோக்கி ஓடினுன். சர்சர்ரென்று விடாமலடித்த பெருமழைக்கிடையே. அங்கு காப்டனின் கூடாரமும் கிழிந்து போய், காப்டனும் வெளியில் நிற்பதைப் பார்த்ததும் அவனையும் கையைப் பிடித்து இழுத்து வந்து அதே மரத்தடியில் விட்டான். பிறகு காப்டனின் கடமைகளைத் தானே மேற்கொண்டு மற்றக் கூடாரங்களிலிருந்தவர்களையும், உணவுப் பொதி வண்டிகளையும் காப்பாற்ற சோல்ஜர்களுக்கும் இந்தியச் சிப்பாய்களுக்கும் உத்தரவிட்டுத் தானும் அங்குமிங்கும் ஓடினுன்.

ஆனுல் புயலின் வேகம் வர வர --லுத்ததால் ஏதும் செய்ய முடியாத நிலையில் எட்மண்டையும் அழைத்துக் கொண்டு வேருெரு மரத்தின் அடிக்கு ஓடினுன். கடுங்காற்றடித்தது, கடுமழை பொழிந்தது, அவ்வப்பொழுது ஆகாயத்தை ஊடுருவிக் கண்களைப் பார்வையிழக்கச் செய்த மின்னலும் காதுகளைச் செவிடாக்கிய இடித் தொடரும் விவரிக்க இயலாத பயங்கரத்தை விளைவித்தன. ஆபத்துக்கும் இரவுக்கும் நெருங்கிய சம்பந்தமிருந்ததால் நேரமும் மிக மெதுவாகவே நகர்ந்தது. ஆனுல் புயல் மட்டும் தனது வேலையைத் திறம்படச் செய்து பல மரக்கிளைகளையும் ஓரிரண்டு பெருமரங்களையும் சாய்த்துவிட்டதால், இரவு கழிந்த பின்பு ருெந்ச நிலை ரெவை

# ரிகை

சாண்டில்யன்

விடப் பன்மடங்கு பயங்கரத்தைத் தந்ததால் காப்டன் கோப்பின் சினம் தாங்க வொண்ணுததாயிருந்தது.

படை வீரருக்குச் சேதம் அதிகமில்லையென்ருலும், குடை சாய்ந்து கிடந்த பொதி வண்டிகளையும் அவற்றின்கீழும் சில பெருமரக் கிளைகளின் கீழும் அகப்பட்டுக்கொண்டு மாண்டு கிடந்த காளைகளையும், வெள்ளாறு திடீரென நிரம்பி அதில் அடித்துக் கொண்டு போய்க் கொண்டிருந்த சில மாட்டுச் சடலங்களையும், மாமிசத்துக்காகக் கொண்டு வரப்பட்ட ஆடுகளையும் கோழிகளையும் கசாப்புக் கத்தியிலிருந்து தப்புவிக்க ஆறு இழுத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்த பயங்கரத்தையும், பார்த்துக் கொண்டு காலையில் கிழக்கில் கிளம்பிவிட்ட கதிரவன் முகத்தைப் போலவே சிவந்து கிடந்த முகத்துடனிருந்த காப்டன் கோப்பின் உள்ளம் வெள்ளச் சேதத்தால் குமுறிக் கொண்டிருந்த சமயத்தில், காட்டுராஜா அவனிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார். அப்பொழுது தான் சொன்னுன் காப்டன் கோப் கிளைவை நோக்கி எரிச்சலுடன், "இந்த ஸாடன் (சனியன்)தான் இத்தனைக்கும் காரணம்," என்று.

சுமார் ஆறுமாத காலமாக ஸெய்ண்ட் டேவிட் கோட்டையில் வெள்ளைக்காரரிடம் காவடி எடுத்துக் கொண்டிருந்த காட்டு ராஜாவுக்குச் சிறிது ஆங்கிலமும் தெரிந்திருந்ததால், "யாரைப் பார்த்து ஸாடன் என்கிருய்?" என்ருர் பிகுவுடனும் கோபத்துடனும்.

காப்டன் கோப் இருந்த மன நிலையில் மரியாதை என்ற சொல்லுக்கு இடமில்லாததால், "உன்னைத்தான்," என்று வெகு அலட்சியமாகவும் வெறுப்புடனும் இகழ்ச்சியுடனும் பதில் சொன்னுன்.

ஸவாய் ஷாஹூஜி என்ற காட்டு ராஜா தமது கம்பீரத்தை விடவில்லை. அவரது உடை நனைந்தும், சில இடங்களில் மரக்கிளை மாட்டிக் கிழிந்து இருந்தும்கூட, "நீ ஒரு காப்டன்," என்ருர் கோபம் குரலிலும் ஒலிக்க.

"யூ ஆர் ரைட்," என்ருன் காப்டன்.

"நான் தஞ்சை மன்னன்," என்று சுட்டிக்காட்டினுர் காட்டுராஜா.

"யூ ஆர் ராங்," என்ருன் காப்டன் கோப்.

தாம் மன்னனென்று சொன்னதை காப்டன் கோப் மறுத்ததாலும், அவன் சொன்னதைக் கேட்ட இரு நர்சுகளும் நகைத்ததாலும் கோபத்தின் உச்ச கட்டத்தை எய்திய காட்டு



விவேகானந்தா கல்லூரி நடத்திய ஒரு புகைப்படப் போட்டியில் பரிசு பெற்றது இந்தப் படம்.

குழந்தை — வியட்னும் சுந்தரத்தின் இரண்டாவதுபெண் சுவேதா.

எடுத்தவர்: நடிகை சுகுமாரியின் மகன் சுரேஷ்; (விவேகானந்தா மாணவர்)

ராஜா, ''காப்டன்! ஸெய்ண்ட் டேவிட்கோட்டைக்குத் திரும்பியதும் நான் யாரென்பதை உணர்ந்து கொள்வாய்,'' என்று சீறினார்.

காப்டன் அத்தனை சேதத்திலும் இளநகை கொண்டான். ''இப்பொழுது புத்திசாலித்தனமாகப் பேசுகிறீர்,'' என்றான் ஆங்கிலத்தில்.

''என்ன புத்திசாலித்தனம்?'' காட்டுராஜாவின் குரலில் குழப்பமிருந்தது.

''ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்குத் திரும்ப வேண்டிய அவசியத்தைப் புரிந்து கொண்டது புத்திசாலித்தனம்.''

## மாமி யார்?



எங்கள் கல்லூரிக்கு வருகை தந்திருந்த கி. வா. ஜ. அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தேன். அங்கு வந்திருந்த நண்பரின் மனைவியைப் பார்த்துவிட்டு நண்பரிடம், ''மாமி யார் பெண்ணோ?'' என வினவினார். 'யார் பெண்' என அவர் கேட்பதாக நினைத்து நண்பர், ''என் மனைவி,'' என்று கூறினார். கி. வா. ஜ. வும் விடாமல், ''தங்களுடைய மாமியார் பெண்ணோ? என்றுதான் கேட்டேன்,'' என்றார் நயமாக.

-மயிலை இரவி

''அதில் என்ன புத்திசாலித்தனமிருக்கிறது?''

''தேவிக்கோட்டையில் உமக்கு வேலையில்லையென்பதைப் புரிந்து கொண்டிருக்கிறீர்?''

''ஏன் தேவிக்கோட்டைக்குப் போகக்கூடாது? நான்தான் உங்களுக்கு அதைத் தானம் செய்துவிட்டேனே.''

இதைக் கேட்ட காப்டன் பெரிதாக நகைத்தான். அந்த நகைப்பைச் சகிக்க முடியாத காட்டுராஜா, ''ஏன் நகைக்கிறாய்?'' என்று வினவினார்

''நீங்கள் தேவிக்கோட்டையை எங்களுக்குத் தானம் செய்ததை நினைத்து,'' என்றான் கோப்.

''அதிலென்ன தவறு?''

''ஒரே ஒரு தவறுதான்.''

''என்ன?''

''அது இன்னும் உங்களுக்குச் சொந்தமில்லை. அது கிடக்கட்டும். நானும் உங்களுக்கு ஒரு தானம் செய்கிறேன்.''

''என்ன தானம்?''

''உங்களை டில்லி நவாப் ஆக்கிவிட்டேன்.''

''அதை எப்படி நீ தானம் செய்ய முடியும்?''

'நீங்கள் தேவிக்கோட்டையைத் தானம் செய்ததுபோல்,'' என்று கூறிய காப்டன் கோப் அந்தச் சமயத்தில் அங்கு வந்த கிளைவையும் எட்மண்டையும் நோக்கி, ''லெப்டினண்ட்! நமது படையைச் சரி செய்து கொள்ள நாம் இந்த ஆற்றங்கரை வழியே போர்ட்டோ நோவோ செல்கிறோம் இன்னும் ஒரு மணி நேரத்தில். மிஸ்டர் எட்மண்ட்! இந்த இரு நர்சுகளையும் அழைத்துச் சென்று உடைப் பெட்டியில் ஏதாவது உடைகளிருந்தால் அதைக்கொடுத்து மாற்றிக் கொள்ளச் சொல். சோல்ஜர்களையும் சிப்பாய்களையும் அணிவகுக்க லெப்டினன்ட்டுக்கு உதவுங்கள். ஏதாவது உணவுப்பொருள்களோ, ஆஸ்பத்திரிச் சாமான்களோ பாக்கியிருந்தால் திரட்டுங்கள்,'' என்று மடமடவென உத்தரவுகளைப் பிறப்பித்துவிட்டுச் செல்ல முற்பட்டவன் சட்டென்று எதையோ நினைத்துக் கொண்டு திரும்பி, ''கிளைவ்! இந்தச் சீட்டு ராஜாவை மரியாதையுடன் அழைத்துப் போ,'' என்றான் வெறுப்புடன்.

தஞ்சை மன்னராக விரும்பிய ஷாஹுஜி, ''என் பெயர் காட்டு ராஜா,'' என்று குறிப்பிட்டார்.

''இல்லை, சீட்டு ராஜா,'' என்று மீண்டும் குத்தினான் காப்டன்,

''தவறு.''

''இல்லை. லெப்டினண்டைக்

கேட்டுப் பாரும். சீட்டை நம்பித்தான் அவர் வந்தார்.''

இந்தச் சமயத்தில் இடை புகுந்த கிளைவ், ''காப்டன்! நான் கவர்னரிடமிருந்து பெற்றது இஸ்பேட் ராஜா அல்ல இஸ்பேட் ஏஸ். உங்களுக்கும் தெரியும்,'' என்ருன் இருவரையும் சமாதானப்படுத்த.

ஆனல் காட்டுராஜா விடவில்லை. தமது சாமர்த்தியத்தை மேலும் காட்டி ''உங்களை யார் 13'ம் தேதி வரச்சொன்னது? அது உங்களுக்குத் துரதிர்ஷ்ட எண் அல்லவா?'' என்று வினவினர்.

காப்டன் இதழ்களில் அத்தனை கொடூரத்திலும் புன்னகை விரிந்தது. ''உமக்கு எங்கள் நம்பிக்கையும் தெரியுமா?'' என்று கேட்டான்.

''தெரியும்.''

''அப்படியானல் இன்று 14'ம் தேதி. இது பிரமாதமாக இருக்கும்?''

''இருக்கும். பறங்கிப் பேட்டை (போர்ட்டோ நோவோ) சென்றதும் தெரியும்.'' இதைச்சொல்லி விட்டுக் காட்டு ராஜா விடுவிடுவென்று நடந்தார்.

ஒருமணி நேரத்திற்கெல்லாம் படையும் நடந்தது ஆற்றங்கரையோரம். அன்று மாலை பறங்கிப்பேட்டைக்கு வந்து சேர்ந்த படை அந்தத் துறைமுக நகரில் முகாம் செய்தது. காப்டன் கோப், மன்னருடனும், கிளைவ், எட்மண்ட் நர்ஸுகள் இவர்களுடன் துறைமுக அதிகாரியின் இல்லத்துக்குச் சென்ருன்

அவர்களை வரவேற்ற துறைமுக அதிகாரியின் முகம் விளக்கெண்ணெயாயிருந்தது.

அவருக்கு காப்டன் கோப், மன்னரையும், கிளைவ், எட்மண்ட் ஆகிய இருவரையும் அறிமுகப்படுத்தி வைத்தான். துறைமுக அதிகாரியின் நீலவிழிகள் அவர்களை ஒருமுறை விசனத்துடன் பார்த்தன. பிறகு நர்சுகளேயும் பார்த்தன. ''இவர்கள் எதற்கு?'' என்று வினவினர்.

''இவர்கள் நர்சுகள். வெள்ளை நர்சுகள் இந்தியாவில் அதிகம் கிடையாதென்பது உங்களுக்குத் தெரியும். ஆகையால் இவர்களை ஆஸ்பத்திரிக் கப்பலில் அனுப்பாமல், நிலப்படையுடன் அழைத்து வந்தோம்.''

''அப்படியா,'' என்ற துறைமுக அதிகாரியின் பதிலில் வெறுப்பு மண்டிக் கிடந்தது.

''ஏன், இவர்கள் தேவையில்லையா?'' என்று வினவினுன் கிளைவ்.

''ஆஸ்பத்திரியிலிருந்தால் தான் நர்ஸுகள் தேவை.''

''ஆஸ்பத்திரிக் கப்பல் 'அப்போலோ' வருகிறது.''

''வராது.''

''ஏன்?''

துறைமுக அதிகாரி உடனடியாகப் பதில் சொல்லவில்லை. சிறிது சிந்தித்து விட்டு அவர் பதில் கூறிய போது அது இடியென உதிர்ந்தது மற்றவர் மனங்களில்.

(தொடரும்)



அடர்ந்த இலைகளுடன் இருந்த அதே மரம்தான் இது. (இம் மரம் வேலூர், (வ.ஆ) கத்தோலிக்கர் ஆலயமான விண்ணரசி ஆலயத்தின் மைதானத்தில் உள்ளது. இரண்டு விதமாகவும் எடுப்பது என்று தீர்மானித்து, இலைகள் முழுவதும் உதிரும்வரை பொறுமையாக இருந்து எடுத்து விட்டேன்.

—எஸ். ஹாரிசன்

# ராஜ பேரிகை

**சாண்டில்யன்**



(21-ம் அத்தியாயத் தொடர்ச்சி)

"நேற்று புயலில் 'அப்போலோ' கடலூருக்கும் ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்குமிடையில் மூழ்கிவிட்டது," என்று மெள்ளக் கூறினார் துறைமுக அதிகாரி.

யாரும் பல விநாடிகள் பேசவில்லை. துறைமுக அதிகாரி வீட்டின் அந்த முகப்பு ஹாலில் பெரும் மௌனம் குடிகொண்டது. அந்த மௌனத்தை மீண்டும் உடைத்தார் அதிகாரி. "அது மட்டுமல்ல," என்றார்.

"வாட் எல்ஸ் (வேறென்ன)?" காட்டுராஜா தமது ஆங்கில அறிவை அந்தக் கேள்வியின் மூலம் காட்டினார்.

"அறுபது பீரங்கிகள் கொண்ட பெம்ப்ரோக் மூழ்கிவிட்டது. பிரிட்டிஷ் கடற்படையின் மிகச் சிறந்த போர்க் கப்பல். 74 பெரும் பீரங்கிகள் கொண்டது, அதுவும் மூழ்கிவிட்டது. அதிலிருந்த 750 மாலுமிகளும் மூழ்கி இறந்துவிட்டார்கள். தப்பியது இருவர். இதோ இந்த நர்சுகள்," என்று அறிவித்த துறைமுக அதிகாரியைப் பிரமிப்பும், அதிர்ச்சியும் கலந்த விழிகளால் நோக்கினார் காட்டுராஜா.

காப்டன் கோப் பேசச் சக்தியற்று உட்கார்ந்தது உட்கார்ந்தபடி இருந்தான். கிளைவ் மட்டும் சற்றுச் சமாளித்துக் கொண்டு காட்டுராஜாவை உஷ்ணத்துடன் நோக்கினான். "மகாராஜா! உமது அதிர்ஷ்டம் இங்கும் எங்களை விடவில்லை," என்றான்.

காப்டன் கோப் தனது தீ விழிகளைத் திருப்பினான் ஷாஹுஜிமீது. ஷாஹுஜி அவன் கண்களைச் சந்திக்க [illegible]கார். அந்தச் சங்கட நிலைமையைக் கடைசியாக கிளைவே சீர்ப்படுத்தினான். "இன்னும் இரண்டு நாட்களுக்குள் படையைச் சீர்ப்படுத்திக் கொண்டு கிளம்புகிறோம், தேவிக்கோட்டையை நோக்கி. அதற்கு வேண்டிய உதவியைச் செய்யுங்கள்," என்றான் துறைமுக அதிகாரியை நோக்கி.

"நீங்கள் ஏன் ஸெய்ண்ட் டேவிட்டுக்குத் திரும்பக் கூடாது?" என்று வினவினார் துறைமுக அதிகாரி.

"அட்மிரல் போஸ்கவான் உத்தரவு தேவிக்கோட்டையைத் தாக்க. அது மாற்றப்படவில்லை. ஆகையால் நாங்கள் போய்த்தான் ஆக வேண்டும். சோல்ஜரின் கடமை அது," என்று விளக்கினான் கிளைவ்.

துறைமுக அதிகாரியும் அதை ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தார். இரண்டு நாட்களில் தேவையான சகல வசதிகளையும் செய்துக் கொடுத்தார். தவிர ஸெய்ண்ட் டேவிட் கோட்டையிலிருந்து மீண்டும் ஒரு கப்பலில் சப்ளை வருவதாகவும் செய்தி வந்தது. மூன்று நாட்கள் கழித்து மீண்டும் அந்தப் படை காப்டன் கோப்பின் தலைமையில் கிளம்பியது தேவிக்கோட்டையை நோக்கி. கிளம்பும் சமயத்தில் காட்டு ராஜா கூறினார், "பயப்படாதீர்கள். சிதம்பரத்தை அடைந்ததும் தஞ்சைப் படைகள் நம்முடன் இணையும். தேவிக்கோட்டை நமது கையில் இன்னும் பத்து நாட்களுக்குள் விழுந்து விடும்," என்றார்.

படை நகர்ந்தது. இரண்டு நாட்களில் சிதம்பரம் வந்தது. தில்லை நடராஜன் கீழ்க்கோபுர வாயிலில் தங்கியது. நாட்கள் மூன்று ஓடின. தஞ்சையிலிருந்து ஈ காக்கை வரவில்லை. "எங்கே உமது படை?" என்று கேட்டான் காப்டன்.



"வரும்," என்றார் காட்டு ராஜா.

"எப்பொழுது? எங்கே?"

"இங்கேயே வர வேண்டும். எதற்கும் நாம் புறப்படுவோம். தேவிக் கோட்டையை அடையுமுன்பு வந்து விடும்," என்றார் மன்னர்.

காப்டன் தனது படையுடன் மீண்டும் புறப்பட்டு அடுத்த இரண்டு நாளில் மெதுவாகக் கொள்ளிடத்தின் வடக்குக் கிளையை அடைந்து பாசறை அமைத்தான். எதிர்க்கரையில் படைகள் தென்படத்தான் செய்தன. ஆனால் அவை தங்கள் ஆணைக்கு வரத் துடித்ததாகத் தெரியவில்லை காப்டன் கோப்புக்கும் கிளைவுக்கும். அவர்கள் பாசறை அமைத்த மறுநாள் இரவு கொள்ளிட நீரில் மிதந்து வந்தது ஒரு தோணி. அந்தத் தோணி இரவின் இருளில் பேயென வந்து கரையை அடைய, அதிலிருந்து இறங்கிய ஒரு வீரன் காப்டன் கோப்பின் கூடாரத் துக்குத் துரிதமாகச் சென்றான். அவன் கூடாரத்துக்குள் நுழைந்தபோது அங்கு கிளைவும் இருந்தான். வந்தவனைக் கண்ட தும் மிகுந்த மகிழ்ச்சி எய்திய கிளைவ், "விஜயகுமாரனா! நீயே எங்கள் பக்கம் வந்து விட்டாயா?" என்று குதூகலத் துடன் வினவி எழுந்திருந்து அவனுடன் கைகுலுக்கத் தனது வலது கையையும் நீட்டினான்.

விஜயகுமாரனின் கை எழா மல் பக்கவாட்டிலேயே இருந்தது. கிளைவ் புரிந்து கொண்டான், காப்ட னும் புரிந்து கொண்டான், ஏன், அப் பொழுது அங்கிருந்த காட்டு ராஜாகூடப் புரிந்து கொண்டார். விஜயகுமாரன் மெள்ள மெள்ளச் சொற்களை உதிர்க்க லானான். அவை சொற்களா? காட்டு ராஜாவைச் சுடவந்த நெருப்புத் துண் டங்களா? விவரம் ராஜாவுக்கே புரிந் தது. தோணியில் வந்த தூது உண்மை யில் தனக்கு யமபாசம் என்பதை மன் னர் உணர்ந்து கொண்டார்.

## 22. புரியாத கதை

**கா**ப்டன் கோப்பின் கூடாரத்துக் குள் விஜயகுமாரன் நுழைந்ததும், பழைய சம்பவங்கள் எழுப்பிவிட்ட தோழமையின் காரணமாகவும், காட்டு ராஜா கிளப்பிவிட்டுப் பலிக்காமற் போன எண்ணத்தின் விளைவாகவும், தஞ்சைப் பிரமுகர்கள் வேறு யாரும் துணைக்கு வராவிட்டாலும், விஜயகுமா ரனாவது வந்தானே என்ற நினைப்பினா லும், நண்பனுடன் கைகுலுக்க ராபர்ட் கிளைவ் தனது வலது கரத்தை நீட்டி யதும், விஜயகுமாரன் அதைக் கவனிக் காதது போலவே இருந்துவிட்டதால் பெரும் சங்கடத்துக்குள்ளானான் பிரிட் டிஷ் லெப்டினண்ட். விஜயகுமாரனின் மன நிலையும் கிளைவின் மனநிலைக்கு எந்தவிதத்திலும் குறையாமல் குழம்பி னாலும், தஞ்சை நெடுஞ்சாலைச் சத்தி

ரத்து நினைப்புகள் அந்தச் சமயத்தில் கூட அவன் புத்தியில் வலம் வந்து நெஞ்சைத் தொட்டாலும் அத்தனையும் உள்ளடக்கிச் கொண்ட நாயக்கர் வம்ச வாலிபன் ளைவின் முகத்தைச் சந்திக்கவும் கூச்சம் கொண்டு தனது சங்கடத்தை நீக்கிக்கொள்ளத் தலையை ஒரு முறை ஆட்டிக்கொண்டான். அப்பொழுது அவன; அழகிய குழல்களும் சிலிர்த்து ஆடி ஓரிரண்டு மயிர்மைகள் அவன் சந்தணத் திலகத்தைத் தொட்டு அவன் முகக் கம்பீரத்தைப் பலமடங்கு உயர்த்திக் காட்டியதன்றி அவன் கண்களும் சில விநாடிகளிலேயே குழப்பத் திரையை உதறி விலக்கிக்கொண்டதால் அவன் அந்தக கூடாரத்திலிருந்த காப்டன் கோப்பையும் காட்டு ராஜாவையும் மாறிமாறி இருமுறை நோக்கிவிட்டுக் கிளைவை நோக்கிக் கேட்டான், ''இவர்தான் காப்டனா?'' என்று.

அதுவரை குழப்பமும் சங்கடமும் அடைந்திருந்த கிளைவும் தலையை நிமிர்த்தி, ''ஆம், இவர்தான் காப்டன் கோப். இந்த பிரிட்டிஷ் படையின் தலைவர்,'' என்று கூறினான்.

இந்தச் சமயத்தில் காட்டு ராஜாவும் சும்மாயிருக்காமல், ''தஞ்சை மன்னன் சன்னிதானத்தில் நீ நிற்கிறாய். தலை வணங்கு,'' என்று உத்தரவிட்டார்.

விஜயகுமாரன் விழிகள் காட்டுராஜாவை ஏறிட்டுப் பார்த்தன ஒருமுறை. ''நீதான் அந்தப் போலியா?'' என்று அவன் உதடுகள் விசாரித்தன.

''இது ராஜதுரோகம், ராஜ நிந்தை. இதற்கு மரண தண்டனைதான்!'' என்று சீறிய காட்டுராஜா காப்டன் கோப்பை நோக்கி, ''இந்த அதிகப் பிரசங்கியை முதலில் கைது செய்யுங்கள்!'' என்று கூவினார் ஆத்திரத்துடன்

ஆனால் காப்டன் கோப் உட்கார்ந்த இடத்திலிருந்து அசையவுமில்லை, அவர் கேட்ட உத்தரவைப் பிறப்பிக்கவுமில்லை. வியப்புடன் விஜயகுமாரனைச் சில விநாடிகள் நோக்கினான். சற்று முன்பு விஜயகுமாரன் பெயரைச் சொல்லிக் கிளைவ் அழைத்திருந்ததால் அவன் பெயர் மட்டும் காப்டனுக்குத் தெரிந்திருந்ததேயொழிய அவன் யாரென்பது தெரியாததால், ''நீங்கள் யாரென்பதை நான் அறியலாமா?'' என்று வினவினான்.

''தஞ்சைப் படையின் உப தலைவர்களில் ஒருவன். தற்சமயம் தேவிக்கோட்டையைக் காக்கவும் இந்த போலி ராஜாவைப் பிடித்துச் செல்லவும் சேனாதிபதி மானாஜியுடன் வந்திருக்கிறேன்,'' என்றான் விஜயகுமாரன் குரலில் எந்தவித உணர்ச்சியுப் காட்டாமல்.

காப்டன் கோப் ஏதோ சொல்ல வாயெடுக்கு முன்பு காட்டு ராஜாவே முந்திக் கொண்டு, ''மானாஜியா வந்திருக்கிறான் தேவிக்கோட்டைக்கு?'' என்று வினவினார்.

எங்கள் கல்லூரியிலே நிகழ்ந்த ஒரு முத்தமி கலை விழாவின் முதல் நாள் வழக்காடு மன்றம் நடந்தது. ஒரு பக்கத்து வழக்குரைஞரின் மனைவிதான் நீதிபதியாக இருந்தார்.

அவர் பேசும்போது கூறினார்: வீட்டில் பத்து பாத்திரம் தேய்க்க வேண்டிய நான், நேரம் போதாமையால் இங்கு வந்து இரண்டு பாத்திரங்களை (கர்ணன், துரியன்) விளக்குகிறேன் இரு வழக்கறிஞருக்கும் இந்நிலைமை இல்லை!

கணவர் எழுந்து, ''நான் பலமுறை விளக்கியுள்ளேன் வீட்டில்'' என்றார். உடனே நீதிபதி மற்ற வழக்குரைஞரிடம் அவர் நிலைமையைக் கேட்டதும், ''எனக்கும் திருமணம் ஆகிவிட்டது,'' என்றார் அவர்!

—சீனுவாசன்

சில படங்களில் ஒல்லியாகவும் சில படங்களில் பருமனுகவும் காட்சிதரும் நடிகைகள் உண்டு. சில படங்களில்வெகு இளமையுடனும் சில படங்களில் சற்று வயதான மாதிரியும் தோன்றுபவர் ஸ்ரீவித்யா. ஒய். வி. யுடன் அவர் இளமையாக நடிப்பது—'ஆறு புஷ்பங்க'ளில்.



''ஆம்.''

''சரி, அவனை நான் வரச் சொன்னதாகச் சொல். வந்து அடி பணியட்டும். மன்னித்து விடுகிறேன்.''

''மன்னிப்பை மகாராஜா அளிப்பது கஷ்டம்.''

''ஏன்?''

''முடியுமானுல் தங்களை உயிருடன் பிடித்துவரப் பிரதாபசிம்ம மகாராஜாவின் உத்தரவு.''

''என்ன பொருள் இதற்கு?''

''முடியாவிட்டால் உங்கள் பூத உடல் தேவையில்லை. தலையை மட்டும் கொண்டு போனுல் போதும்.'' இதைச் சொன்ன விஜயகுமாரன் வெறுப்புடன் திரும்பி, ''காப்டன்! நான் தூதனுக வந்திருக்கிறேன். இந்த வெட்டி ராஜாவுடன் பேச அவகாசமில்லை. தங்களிடம் விஷயத்தைச் சொல்லிவிடுகிறேன்,'' என்று துவங்கி, ''காப்டன் கோப்! தஞ்சைப் படைகளின் தலைவர் பிரபு மானுஜி தங்களைத் திரும்பிச் சென்று விடும்படி கூறுகிறுர். தேவிக்கோட்டையை உங்களால் பிடிக்க முடியாதென்று சொல்லச் சொன்னுர். பிரிட்டிஷார் ஒரு போலி ராஜாவுக்காக வீண் படைச் சேதத்தையும், மானக்குறைவையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டாமென்று அபிப்பிராயப்படுகிறுர். பிரிட்டிஷாரிடம் அவருக்குள்ள மரியாதையாலும் நல்லெண்ணத்தாலும் என்னையே தூது செல்லும்படி பணித்தார்,'' என்று கூறினுன்.

காப்டன் கோப்பின் கண்கள் விஜயகுமாரனை நன்ருக ஏறெடுத்து நோக்கின. பிறகு அவன் உதடுகள் சொற்களை மிகக் கம்பீரமாக உதிர்த்தன. ''ஆருயிரம் மைல்கள் கடல் தாண்டி இங்கு வந்திருக்கும் பிரிட்டிஷார் அச்சத்தையும் தாண்டியவர்கள். இங்கு புது வரலாறு படைக்கவும், இங்குள்ள அநீதத்தைத் தவிர்க்கவும் எண்ணுகிருர்கள். இந்தக் காட்டு ராஜாதான் தஞ்சையின் உண்மையான மன்னர் என்று நாங்கள் நினைக்கிறேம்,'' என்று சொல்லிக் கொண்டு போன காப்டனை இடைமறித்து ஷாஹூஜி, ''பலே பலே! இப்பொழுதுதான் நீங்கள் சரியான காப்டன்!'' என்று கூவிச் சிலாகித்தார்.

காப்டனின் கண்கள் சரேலென்று அவரை நோக்கித் திரும்பி

எரித்துவிடுவது போல் பார்த்தன. ''லெப்டினன்ட்! இந்தப் பைத்தியத்தை அவர் கூடாரத்துக்கு அனுப்பிவிடு,'' என்றும் அவன் வாயிலிருந்து சொற்கள் கடுமையுடன் உதிர்ந்தன.

விஜயகுமாரன் இதழ்களில் புன்முறுவல் விரிந்தது. கிளைவை நோக்கிய அவன் விழிகளிலும் அந்தப் புன்முறுவலின் சாயை இருந்தது. ''காட்டு ராஜா எப்படியென்று உங்களுக்கும் தெரியும் போலிருக்கிறது?'' என்றான்.

''எங்களுக்குத் தெரியாவிட்டாலும் அவர் அடிக்கடி தெரியப்படுத்துவார்,'' என்றான் கிளைவ் எரிச்சலுடன்.

காட்டுராஜா ஆசனத்திலிருந்து எழுந்திருக்க முயன்றார் ஆத்திரத்துடன்.

காப்டன் கோப்பின் ஒரு பார்வை அவரை மீண்டும் உட்கார வைத்துவிட்டது. அதற்குப் பிறகு காப்டன், ''தூதுவரே! கேளுங்கள்.'' என்று மரியாதையுடன் பேச்சைத் துவங்கி, ''தேவிக்கோட்டையைப் பிடிக்க எங்களுக்குக் கவர்னர் உத்தரவிட்டிருக்கிறார். ஆகையால் அதைப் பிடித்தே தீருவோம். அதற்கான பீரங்கிகளுடன் வந்திருக்கிறேன். வெள்ளை சோல்ஜர்களின் தரம் உங்களுக்குத் தெரியாது. ஒவ்வொரு பிரிட்டிஷ் சோல்ஜரும் பத்து இந்தியச் சிப்பாய்களுக்கு நிகர்,'' என்று கூறினான்.

''அப்படியும் கணக்குச் சரியாக வரவில்லையே?'' என்றான் விஜயகுமாரன்.

கிளைவ் புரிந்து கொண்டதால் கண்களை மட்டும் ஓட்டினான் விஜயகுமாரன்மீது. காப்டனுக்கும் விஷயம் புரிந்துதானிருந்தது. இருப்பினும் கேட்டான், ''என்ன கணக்கு?'' என்று.

விஜயகுமாரன் ஒருவினாடி யோசனையில் இறங்கினான். பிறகு, ''உங்களிடம் வெள்ளை சோல்ஜர்கள் நானூறு பேர்கள்தானிருக்கிறார்கள்,'' என்று குறிப்பிட்டான்.

விஜயகுமாரன் சொன்னது காப்டன் கோப்பிற்குப் பெருவியப்பை அளித்தது. ''அதனால்?'' என்றான்.

''தேவிக்கோட்டையை ஐயாயிரம் வீரர்கள் காத்து நிற்கிறார்கள். ஆகவே பத்துக்கு ஒன்று என்ற உங்கள் கணக்குச் சரியாக வரவில்லை. தவிர..''

''தவிர?''

''மகாராஷ்டிரர்களின் காற்று வேகக் குதிரைப் படை, நீங்கள் 'மராத்தா லைட் ஹார்ஸ்' என்று குறிப்பிடுகிறீர்களே அது, அதன் ஒரு முழுப் பிரிவும் தேவிக் கோட்டையில் இருக்கிறது.''

இந்தச் செய்தி பேரதிர்ச்சியை அளித்தது காப்டனுக்கு. இந்த 'லைட் ஹார்ஸ்' படையைப்பற்றி அவன் பல முறை கேட்டிருக்கிறான். மின்னல் வேகத்தில் வரும் மகாராஷ்டிரக் குதிரைப் படை கண்ணிமைக்கும் நேரத்தில் எதிரிகளை நிர்மூலம் செய்துவிடும் என்பது பிரிட்டிஷ் வட்டாரங்களில் சாதாரணமாகப் பேசப்பட்டு வந்த விஷயம். அதுவே காப்டனுக்கு அதிர்ச்சியை அளித்ததென்றால், தங்கள் படை பலத்தை எதிரிக்கு அறிவிக்க எத்தனை துணிவிருக்க விஜயகுமாரனுக்கு வேண்டுமென்றும் என்று எண்ணியதால் வியப்பும்நிரம்பியது அவன் இதயத்தில்.

(தொடரும்)

## சம்பளம் வாங்காதவர்



மத்திய அமைச்சர் டாக்டர் கரண்சிங் கடந்த 6 வருடங்களாக அமைச்சருக்குரிய சம்பளம் பெறுவதில்லை. அதுமட்டுமல்ல, டில்லியில் இவர் அரசாங்கம் தரும் வீட்டில்கூட இல்லை. தன் சொந்த வீட்டிலேயே தங்கி இருக்கிறார். இவரால் இந்த 6 ஆண்டுகளில் அரசுக்கு 20 லட்ச ரூபாய் மிச்சம்.

—சம்பத்குமாரி

''அசடே. இன்னும் ஒரு வருஷம்தான் இப்படிப்பட்ட வேலை. அப்புறம் ஊரை விட்டே நகர வேண்டாம். ஏன் சந்திரா, இந்த வேலையையும் ஒருவர் செய்யவேண்டியதுதானே?'' என்றான் பரந்தாமன்.

கேட்டுக்கொண்டிருந்த ரேகாவுக்கு அழுகையே வந்துவிட்டது. பாவம் அம்மா....எத்தனை வருத்தமாயிருக்கார்? நாம் ஸ்கூலுக்குப் போறோம்.. விளையாடப் போறோம்..அம்மாவுக்கு அந்த மாதிரி எதுவுமே இல்லை..பாவம், அம்மா..பாவம்....

ரேகா அன்று ஒரு கனவு கண்டாள். ஒரு பெரிய பறவைக் கூண்டில் அம்மா நிற்கிறாள். அதற்குள்ளேயே சமைக்கிறாள், வீட்டு வேலைகளைச் செய்கிறாள், தூங்குகிறாள். கூண்டு வழியாக வெளி உலகைப் பார்க்கும் போதெல்லாம் அவளுக்குக் கூண்டை உடைத்துக் கொண்டு வெளியே ஓட வேண்டும் போல இருக்கிறது.

காலையில் ரேகா பல் தேய்த்து, பால் குடிக்கும்போது சந்திரா, கணவனிடம் கூறினாள். ''வெள்ளிக்கிழமை ரேகாவுக்கு 'பர்த்டே' வருகிறது. நல்லவேளை, அதற்குள் டூர் முடிஞ்சு நீங்க வந்துவிட்டீர்கள்.''

''அட. ரேகாவுக்குப் பிறந்த நாளா? ரேகா. உனக்கு பர்த்டே பிரஸண்டேஷன் என்ன வேணும் சொல்லு. வாங்கித் தருகிறேன்,'' என்றான் காப்பியை ஆற்றிக் கொண்டே.

ரேகா அப்பாவின் கையைப் பற்றிக் கொண்டு, ''டாடி எனக்கு... நான் கேட்கிறதைத்தான் நீங்க பண்ணணும்,'' என்றாள்.

''என்ன. பண்ணணும்?''

''டாடி! இந்தக் கூண்டைத் திறந்து இந்தப் பறவையை வெளியே விடணும். அதுதான் எனக்கு நீங்க கொடுக்கிற பர்த்டே பிரஸெண்ட்.''

பரந்தாமன் கூண்டைத் திறந்து பறவையை வெளியே பறக்க விடுவதை ரேகா ஆனந்தத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''டாடி அப்புறம் ..''

''அப்புறம்?''

''அம்மாவையும் இனிமேல் கூண்டிலே அடைச்சு வைக்கக் கூடாது..''

பரந்தாமன் திகைத்து நின்றான்.




சமீபத்தில் சேலம் நகரில் ஒரே நாளில் ஒரே இடத்தில் இரண்டு தேர்தல் கூட்டங்கள் அருகருகில் நடந்தபோது மக்கள் கூட்டம் எக்கச்சக்கமாக இருந்தது.

'பஜ்ஜி' போட்டு விற்றுக்கொண்டிருந்த வியாபாரிகளுக்கு 'பஜ்ஜி'க்குத் தேவையான கறிகாய் கிடைக்கவில்லை. அதனால் காய்க்குப் பதில், காகிதத்தை கடலைமாவில் தோய்த்து பஜ்ஜி போட்டு விற்றனர். வாங்கியவர்கள் பஜ்ஜியின் உள்ளே இருந்த காகிதத்தை எறிந்துவிட்டு, பஜ்ஜியை மட்டும் சாப்பிட்டனர்!

—சம்பத் குமாரி

---

தமிழ் இலக்கணம் பற்றிக் கற்பித்துக் கொண்டிருந்த ஆசிரியை, ஒரு மாணவியைப் பார்த்து, "கல்லூரியில் இடம் தர 'அவர்' மறுத்துவிட்டார்; இதில் 'அவர்' ஆண் பாலா? பெண் பாலா?" என்று வினா எழுப்பினார்.

ஒரு மாணவி பட்டென்று சொன்னாள். "இரண்டும் இல்லை டீச்சர். 'அவர்' பிரின்சி பால்."

—கே. லலிதா

---

சமீபத்தில் அல்லி தர்பார்' நாடகம் பார்க்கச் சென்றிருந்தேன். அதில் நான் ரசித்த நகைச்சுவைக் காட்சி இதோ:

ஒருவர்: லால்குடி ஜயராமனுக்கும் மகாத்மா காந்திஜிக்கும் என்ன வித்தியாசம், தெரியுமா?

மற்றொருவர்: தெரியாது சார்..

கேள்வி கேட்டவர்: லால்குடி Violinist. மகாத்மா Non-Violinist.'

—எஸ். பாஸ்கரன்

(22'ம் அத்தியாயத் தொடர்ச்சி)

காப்டன் மனத்திலோடிய எண்ணங்களை விஜயகுமாரனும் உணர்ந்திருக்க வேண்டும். ஆகவே அவன் கூறினன் ''படை பலத்தை உங்களுக்கு விளக்கும்படி மாஞஜியே சொன்னர்,'' என்று.

இந்தச் சமயத்தில் கிளைவ் உட்புகுந்தான் சம்பாஷணையில். ''உங்கள் படை பலத்தைக் கூறுவது உங்கள் நம்பிக்கையைக் குறிக்கிறது. ஆனல் படை பலம் மட்டும் போர்களை வெல்வதில்லை இதை உன் தளபதியிடம் சொல் விஜயகுமாரா! அதுமட்டுமல்ல, பிரிட்டிஷ்காரர்கள் முன்வைத்த காலைப் பின் வைப்பதில்லை என்றும் சொல்,'' என்று கூறினன் கிளைவ் மிகத்திடமான குரலில்.

விஜயகுமாரன் கிளைவை நோக்கித் தலை தாழ்த்தினன். ''லெப்டினண்ட்! அனாவசியமான அழிவைத் தவிர்க்கவே என்னைத் தூது அனுப்பினர் தளபதி. பிறகு உங்களிஷ்டம். நீங்கள் எப்பொழுதும் கொள்ளிடத்தைக் கடக்கலாம். மகாராஷ்டிரர் உங்களை நட்டாற்றில் கொல்ல மாட்டார்கள். ஒருமுறை தரையை அடைந்துவிட்ட பிறகு நாங்கள் எதற்கும் பொறுப்பாளிகளல்ல,'' என்று கூறினன். பிறகு காப்டனையும் நோக்கி வணங்கிவிட்டு, ''வருகிறேன்,'' என்று கூறிவிட்டு வெளியேறினன்.

காட்டு ராஜா கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்திருந்தார். காப்டன் கோப் அவரை மிகுந்த வெறுப்புடன் நோக்கினன். அவரை நோக்கிச் சற்றே நகைத்த கிளைவ், ''காட்டு ராஜாவின் வீரம் பறந்துவிட்டது போல் தெரிகிறது,'' என்று கூறிவிட்டு, கூடாரத்திலிருந்து வெளியேறி, சற்று எட்டச் சென்றுகொண்டிருந்த விஜயகுமாரனைப் பின் தொடர்ந்தான்.

பின்னல் காலடிச் சத்தம் கேட்பதை அறிந்த விஜயகுமாரன் சட்டென்று நின்று திரும்பினன், தொடர்ந்தவன் கிளைவ் என்று தெரிந்ததும் அவன் முகம் மந்தகாசத்தால் விரிந்தது. கிளைவ் அருகில் வந்ததும், ''கிளைவ்! இப்பொழுது உன் கையை நான் குலுக்க முடியுமா?'' என்று கூறி, பலவந்தமாகக் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டு அவன் கையுடன் தன் கையைக் கோத்துக் கொண்டு கொள்ளிடக் கரையை நோக்கி நடந்தான். ''கிளைவ்! தூதனயிருந்தபோது நான் உன் எதிரி. உன்னுடன் கைகுலுக்குவது தவறு. இப்பொழுது தூது முடிந்துவிட்டது. இனி நாம் பழைய நண்பர்கள்,'' என்றுன் அன்பு சொட்டிய குரலில்.

''ஆம். ஆம். நாம் இருவரும் எதிர்க் கட்சிகளில் இருப்பது துர்ப்பாக்கியம்,'' என்றுன் கிளைவ் வருத்தத்துடன்.

''தவறு கிளைவ். பெரும் பாக்கியம் என்று சொல்,'' என்றுன் விஜயகுமாரன் கிளைவின் கையைச் சிறிது அழுத்திக் கொடுத்து.

''பாக்கியமா?''

''ஆம்.''

''நாமிருவரும் ஒருவரையொருவர் கொல்வது பாக்கியமா?''

''வேறு கையால் இறப்பதைக் காட்டிலும் வீரனும் நண்பனுமான உன் கையால் இறப்பதை நான் பாக்கியமாகக் கருதுகிறேன். ஆனல் கிளைவ், ஒன்று நிச்சயம்.''

''என்ன அது?''

சாண்டில்யன்



"நான் உயிருடனிருக்கும் வரை உன்னை யாரும் தொட விட மாட்டேன்."

"ஏன்?"

"நீ என் உயிரையும் அரச குமாரியின் உயிரையும் காப்பாற்றிய வன். எல்லாவற்றுக்கும் மேலாக மகா வீரன்!" இதைச் சொன்ன விஜயகுமா ரன் குரல் குழைந்து கிடந்தது.

கிளைவ் பதில் பேசாமலே நடந்தான். நண்பன் கையுடன் தன் கை இணைந்து கிடந்தது பெரும் இன்ப மாயிருந்தது அவனுக்கு. இப்படி நடந்து கொண்டே கொள்ளிடக்கரை யில் இறங்கி, தோணியிருந்த இடத் துக்கு வந்ததும், "கிளைவ்! நாம் மீண் டும் சந்திப்போம்," என்று கிளை வைத் தழுவிக் கொண்டான் விஜய குமாரன்.

கிளைவின் கைகளும் விஜய குமாரன் உடலைத் தழுவி நின்றன. அவர்களை விலக்க ஒலித்தது தோணிக் காரன் குரல், "நேரமாகிறது. இப்பொ ழுதே கொள்ளிடத்தில் நீர் ஏறுகிறது கடல் அலைகளால். நேரம் போனால் இந்த இருட்டில் ஆற்றைக் கடப்பது சிரமப்படும்," என்று.

அந்தக் குரல் கணீரென்று அதிகாரத்துடன் ஒலித்ததைக் கேட்ட கிளைவ் அர்த்தம் பொதிந்த பார்வையை விஜயகுமாரன்மீது செலுத்தினன். கிளைவை விட்டு லேசாகச் சிரித்துக் கொண்ட விஜயகுமாரனும், "கிளைவ்! இந்தத் தோணிக்காரரைச் சந்தி. இவ ரும் என் நண்பர். உன்னைப்போல் இவ ரும் என்னைக் காப்பாற்றியவர்," என்று கூறவே கிளைவின் மனம் வியப்பைத் தழுவியது.

"யார் இவர்?" என்று கேட் டுக் கொண்டே தோணியை அணுகினன்.

கண் தெரிந்த தூரம் வரை யில் கொள்ளிடம் இருளில் பயங்கர மாகக் காட்சியளித்தது. எதிர்க்கரை யில் சற்றுத் தூரத்தே கிழக்கில் தெரிந் தது தேவிக்கோட்டை சின்னஞ்சிறு விளக்குகளுடன். தோணியிலும் ஒரு விளக்கிருந்ததால் தோணிக்காரனையும்

கிளைவ் நன்றாகப் பார்க்க முடிந்தது. தோணியை ஆற்றில் நகர்த்த நீண்ட பெரும் கழியைத் தாங்கி நின்றவன் தோணிக்காரனல்லவென்பதையும் அவனும் ஒரு வீரனென்பதையும் பார்த்த மாத்திரத்தில் புரிந்து கொண்டான் கிளைவ். அவ்விருவரையும் அறிமுகப் படுத்திய விஜயகுமாரன், ''இவர்தான் என் நண்பர் கிளைவ். கிளைவ்! இவர் மகாராஷ்டிரத்தின் பெரும் வீரர்களில் ஒருவர். பெயர்....'' என்று சிறிது தயங்கினான்.

''பெயர்?'' சந்தேகத்துடன் எழுந்தது கிளைவின் கேள்வி.

''முராரி ராவ் கோர்படே,'' என்று விஜயகுமாரன் அறிவித்ததும் எதற்கும் அஞ்சாத கிளைவும் அஞ்சினான். ''முராரி ராவ்! முராரி ராவ்!'' என்று இருமுறை சற்று உரக்கவே சொல்லவும் செய்தான்.

தோணியிலிருந்த முராரிராவ் லேசாக நகைத்தார். ''எதிர் எதிரான படைகள் இருக்கும் இருவர் நேசமும் எனது நெஞ்சத்தை உருக்குகிறது,'' என்று கூறினார் நகைப்பின் ஊடே. அத்துடன் கை நீட்டி கிளைவின் கையைக் குலுக்கவும் செய்தார்.

''மகாராஷ்டிரர்களின் மகா வீரனுக்குத் தலை வணங்குகிறேன்,'' என்று கூறிய கிளைவ் கையையும் குலுக்கித் தலையையும் வணங்கினான். அத்துடன், ''இங்கு எதற்கு நீங்கள் வந்தீர்கள்? உங்களுக்கும் தஞ்சை மன்னருக்கும் விரோதம் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்,'' என்றும் சொன்னான்.

''நான் ஒரு நாடோடி. இப்பொழுது இங்கிருக்கிறேன்,'' என்று கூறினார் முராரி ராவ். சர்வசாதாரணமாக. அத்துடன் விஜயகுமாரனைத் தோணியில் ஏறச் சொல்லித் தோணியை நகர்த்தவும் செய்தார்.

தோணி புறப்படுவதைப் பார்த்துக் கொண்டே நின்ற கிளைவின் மனத்தில் எண்ண அலைகள் புரண்டன. முராரி ராவ் எதிர்க்கரையில் இருப்பதிலிருந்த அபாயத்தை அவன் முழுதும் உணர்ந்து கொண்டான். ''வீ மஸ்ட் பி கேர்ஃபுல் அபௌட் மராத்தா ஹோர்ஸ்,'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். அதனால் மிகுந்த சிந்தனையுடனும் கோபத்துடனும் திரும்பக் கூடாரத்தை நோக்கி நடந்து சென்றான்.

எதிர்க்கரையை அடைந்த விஜயகுமாரன் நிலையும் அப்படித்தானிருந்தது. தோணி கரையை அடைந்ததும், ''பிறகு சந்திக்கிறேன் பழைய இடத்தில்,'' என்று கூறிய முராரி ராவ், எதிரேயிருந்த அடர்ந்த தோப்பொன்றை நாடிச் சென்றார். தனியே விடப்பட்ட விஜயகுமாரன் கிளைவை எண்ணியபடியே நடந்து சென்றான் கோட்டையை நோக்கி. பல புதர்களைக் கடந்தே கோட்டையை அணுக வேண்டியிருந்ததால் சிறிது எச்சரிக்கையுடன் செல்ல வேண்டியிருந்தாலும் சிந்தனை சித்தத்தில் மண்டிக்கிடந்ததால் குருடன் போலவே ஒரு புதருக்கருகில் வந்ததும் யார் மீதோ மோதிக் கொண்டான். ''மன்னிக்க வேண்டும்,'' என்று கூறித் தலையை நிமிர்ந்தவன் இதயம் திடீரென எரிமலையாகித் தணலைக் கொட்டியது. ''யார் வரச் சொன்னது, உன்னை இங்கே?'' என்று சீறினான் அந்த வாலிப வீரன்.

பதிலுக்கு நகைப்புத்தான் கிடைத்தது மோதிய நபரிடமிருந்து. அந்த நகைப்பு குளிர் நீராக விஜயகுமாரன் இதயத்தில் விழுந்ததால் தணல் அணையவே செய்தது. நந்தினியின் அழகிய பெருவிழிகள் அந்த இருட்டில்கூட ஒளி பெற்று அவனைப் பார்த்தன. ''உபதளபதியானதும் அதட்டல் சிறிது அதிகமாயிருக்கிறது,'' என்று அவள் உதடுகளிலிருந்து உதிர்ந்த சொற்களில் விஷமமிருந்தது, கேலியிருந்தது. இன்னொன்றும் இருந்தது. அதை



''ஒரு ஆசிரியர் மூன்று விதமாகப் பாடம் சொல்லிக் கொடுக்லாம்.''

''எப்படி?''

''நின்றுகொண்டு, நடந்துகொண்டு, உட்கார்ந்து கொண்டு.''

—சினத்துக்கடவு ரவி.

உணர்ந்து கொள்ள முடிய வில்லை விஜயகுமாரன் இதயத் தால். ஆ க வே, ''அரச குமாரி..'' என்று துவங்கினான் அவன்.

''உங்களுக்கல்ல.....'' நந்தினியின் குரல் குழைந்து கிடந்தது.

''சொல்வது புரிய வில்லை,'' என்றான் விஜய குமாரன்.

''புரியாத கதைதான் இது,'' என்ற அரசகுமாரி அவனை நெருங்கவும் செய்தாள்.

## 23. ஊர், பேர், இடம்!

அந்தப்புரத்திலிருக்க வேண்டிய அரச மகள் அந்தப் புதருக்கருகில் தன்மீது திடீரென மோதிவிட்ட தால் அதிர்ச்சியடைந்த விஜய குமாரன், அவள் தன்னைத் துணி வுடன் நெருங்க முற்பட்டதும் செய்வது என்னவென்று தெரி யாமல் விழித்ததைக் கண்டு தூரத்தேயிருந்த தேவிக்கோட் டையின் உயர்ந்த மாடவிளக்கு கள் அவனைப் பார்த்து நகைப் பனபோல் தீச்சுடர்களை ஆட் டவே செய்தனவென்றால், கொள்ளிடத்து அலைகளைக் கொஞ்சிக் கொஞ்சிக் முத்த மிட்டு, நெருங்கி வந்து அந்த வஞ்சியின் தலைக்குழல் வாசமல ரையும் வளைந்த உடலையும் தழுவி மெல்லச் சுழன்று அவன் உடலையும்கூடத் தொட்டுவிட் டுச் சென்ற தென்றலின் இன்ப ஸ்பரிசம் அவனை ஏதோ கண் காணாத சொர்க்கத்துக்கு இழுத் துச் சென்றது. நெருங்கிய நங்கையின் சேலையின் மேற் பகுதி சற்றே நழுவியதையும் அவள் அதைத் திரும்பவும் தோள் மீது தூக்கிவிட்டுக் கொண்டதையும் புதரையடுத்த இருளில் அவன் சரியாகப் பார்க்க முடியவில்லையென்று லும், தன்னைக் கடமையினின் றும் நழுவச் செய்ய அலுவல் ஒன்று நெருங்கிவிட்டதை

உப்பு, பருப்பு, பொடி இதையெல்லாம் எடை போட்டுச் சமையல் செய்வதுண்டு. சமையல் செய்பவரையே எடை போடுவது உண்டா என்ன?

—'இன்கார்' படத்தில் வித்யா சின்ஹா, வினோத் கன்னா.

# உலகின் முதல் டிடர்ஜெண்ட் சலவை பார்

# சூபர் 777



**நிறைந்த வெண்மை, குறைந்த செலவில்**




சூபர் 777 இதுவரை சலவை உலகம் புரியாத
சாதனை! இது புத்தம் புதிய ஃபார்முலா.
சூபர் 777 டிடர்ஜெண்ட் சலவை பார் பளிச்சிடும்
வெண்மையைத் துணிகளுக்குத்
தந்து மிகச் சுத்தமான சிறந்த சலவை செய்யும்—
எளிதில் நுரை தராத நீரில் கூட!
இதன் விலையோ? சாதாரண
பார் சோப்புக்கு ஆகும் விலையைவிடக் குறைவு.

**புதுவகை சலவை பார்—**
**சூபர் 777 டிடர்ஜெண்ட் சலவை பாரை**
**இன்றே உபயோகிக்க தொடங்குங்கள்!**

---

Shilpi-HPMA-6A/73 Tam

அந்த வாலிபன் உணர்ந்து கொண் டான். சற்று நெருங்க முற்பட்ட அரச குமாரியும் என்ன காரணத்தாலோ சட் டென்று நின்று விட்டாளானாலும், அவ ளுக்கும் அவனுக்கும் இருந்த மிகக் குறைந்த இடைவெளி காரணமாக அவள் சேலை முந்தானை அவன் கைமீது மெல்ல உராய்ந்து அவன் உயிரையே உறிஞ்சிவிடக் கூடிய வேதனையை அளித் தது வாலிபனான விஜயகுமாரனுக்கு. பருவமளித்த வேதனை, சமயமளித்த சோதனை, புதரளித்த மறைவு, புன மயிலளித்த துணிவு, இத்தனையும் சேர்ந்துவிட்டதன் காரணமாக, விஜய குமாரன் தன் கைகளிலொன்றைத் தூக்கிச் சற்றுத் திடமாகவே நந்தினியின் அழகிய தோளொன்றில் வைத்தான். அந்தச் சைகைக்காகவே காத்திருந்தா லும், சரேலென்று எதிரேயிருந்த வாலிபன் மீது விழுந்துவிட உள்ளம் துள்ளியேயிருந்தாலும் நந்தினி இருந்த இடத்தைவிட்டு நகராமலே நின்றாள், இயற்கையளிக்கும் நாணமெனும் பாது காப்பின் விளைவாக. ஆனால் அந்தப் பாதுகாப்பில்லாத விஜயகுமாரன் மட் டும் சற்று அத்து மீறி அவள் இடை யிலும் தனது மற்றொரு கையைப் பாய்ச்சி அவளைத் தன்னை நோக்கி இழுத்தான்.

அந்த நிலையில் அரசகுமாரி ஏதும் பேசவில்லை. பேச்சுக்கு அவசிய மில்லாத சந்தர்ப்பம், மனம் உந்திய ஆசை, இவற்றால் சற்று அவன் கைகளை அப்புறப்படுத்தவே முயன்றாள் தஞ்சை மன்னன் மகள். ஆனால் அவள் முயற்சி பலிக்கவில்லை. இடையில் தவழ்ந்த கையை அவள் அகற்றத் தனது கையை அதன்மீது வைத்ததும், அந்தப் பொல் லாக் கை அவளது இடையை விட்டுக் கையைப் பற்றிக் கொண்டது கெட்டி யாக. பிறகு அவளை இழுத்துச் சற்று எட்ட இருந்த தரையில் உட்கார்த்த வும் செய்தது.

தரை கடினமாகத்தான் இருந்தது. உட்கார்ந்த இடத்தில் கற் கள் அவள் பூக்குவியல்களை உறுத்தவே செய்ததால், அவள் சிறிது சாய்ந்தே உட்கார்ந்தாள். இடது கையை ஒருபுறம் தரையில் ஊன்றி விஜயகுமாரனும் அவளை அணுகி உட்கார்ந்து கொண் டான் பக்கத்தில். அவள் ஒரு கையைத் தன் கையில் பிடித்துக் கொண்டு அவள் கூந்தலிலிருந்த மலரை முகர்ந்தான் நீண்ட நேரம். அப்படி அளித்த சுகந் தத்தால் மெய்மறந்தோ என்னவோ அவன் முகவாய்க்கட்டை அவள் தலைக் கருங்குழலில் சற்று அதிகமாகவும் அழுத் தமாகவும் புதைந்தது. அதன் விளைவா கக் குழலின் புஷ்பத்துக்கும் குழலுக்கும் அருகில் அணைந்து விட்ட அவன் நாசி புஷ்ப இன்பத்தையும் முகர்ந்தது, குழ லில் தடவியிருந்த தஞ்சை அரைக்கீரை விதைத் தைலத்தின் இணையற்ற நறு மணத்தையும் நுகர்ந்தது. அந்தப் பொல்லாத நாசிக்குப் புத்தியில்லையென் பதை விஜயகுமாரன் இதழ்கள் நிரூபித் தன சிறிது நேரத்தில் தலையிலிருந்த முகவாய்க்கட்டை எழுந்து அவன் இதழ் கள் அவள் கழுத்தில் புதைந்ததும், அங்கிருந்தும் விலகி, கீழே எழுந்திருந் தாலும் கண்ணுக்குப் புலப்படாத எழி லிரண்டிலிருந்தும் எழுந்த சுகந்தத்தை நுகரக் கழுத்துக்குச் சற்று அடியில் வந்து நின்றன. மலரும் தைலமும் இணைந்த நறுமணம் தையலின் உடலிலிருந்த கந் தத்தின் முன்பு எம்மாத்திரம் என்பதை எடுத்துக்காட்டவோ என்னவோ இதழ் களுடன் நாசியும் இணைந்தன.

## ஆங்கிலம்-ஒரு புதிர்



ஆங்கிலம் ஒரு புதிர் நிறைந்த மொழி. அதைச் சாதாரணமாகப் புரிந்து கொள்ளவே முடியமாட்டேன் என்கிறது. உதாரணமாக, Fasten என்றால் கட்டு என்றும், Loosen என்றால் அவிழ்த்துவிடு என்றும் அர்த்தம். ஆனால் Unfasten என் றாலும் Unloosen என்றாலும் அவிழ்த்து விடு என்று ஒரே அர்த்தமாக இருக்கிறது.

மேலும், Look over என்றால் நன்றாகப் பார் என்று அர்த்தம். ஆனால் அதையே திருப்பிப் போட்டு Overlook என் றாலோ பார்க்காமல் விட்டுவிடுவது அர்த்தம் ஆகிறது. அதே சமயம், Look என்றாலும் See என்றாலும் ஒரே அர்த்தமாயிருந்தா லும், Oversee என்றால் மீண்டும் நன்றா கப் பார்ப்பதையே குறிக்கிறது.

ரீடர்ஸ் டைஜஸ்ட்டிலிருந்து

—ப. ஜெயந்திலால்

"இவர் இடது கை, அதுதான் தோளைப் பிடித்த கை, எதற்காக அத்தனை அழுத்திப் பிடிக்க வேண்டும்? எனக்கு வலிக்குமென்று தெரியாதா?" என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள் நந்தினி "உம்.," என்ற எச்சரிக்கைச் சொல் அவள் உதடுகளிலிருந்து உதிர்ந்தது.

"என்ன நந்தினி?" அவள் காதுக்கருகில் தன் உதடுகளைக் கொண்டு சென்று வினவினான் விஜயகுமாரன்.

"நான் .... நான்...."

"என்ன நீ...."

"இதற்காக....இதற்காக...."

"சொல்லேன்."

"வரவில்லை."

"பின் எதற்காக வந்தாய்?"

"போரைப் பார்க்க வந்தேன்." இதைச் சொன்ன நந்தினி சிறிது விலகப் பார்த்தாள்.

ஆனால் அவன் இரும்புக் கைகள் விடவில்லை அவளை. "நந்தினி...."

"உம்..." என்றாள் நந்தினி கடுமையாக.

"அப்பா! 'உம்'மே ரொம்ப கடுமையாக இருக்கிறதே!" என்றான் விஜயகுமாரன்.

"சும்மா இருங்கள்."

"சும்மா இல்லாமல் என்ன செய்கிறேனாம்?"

"அது உங்களுக்குப் புத்தியிருந்தால் தெரியும்."

"அதுதான் போய் விட்டதே!"

"எங்கே?"

"உன்னிடம்."

"எப்பொழுது?"

இதற்கு விஜயகுமாரன் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. பிறகு சொன்னபோதும் மெதுவான குரலிலேயே சொன்னான்," "நந்தினி! ஸ்ரீரங்கம் நினைவிருக்கிறதா உனக்கு?" என்று.

"ஏன் நினைவிருக்காது? அங்குதானே நீங்கள்...." இந்த இடத்தில் அவள் சொல் அறுந்தது, உணர்ச்சி புரண்டது.

"நான்?"

"யாரும் தொடவும் துணியாத அரசமகளைத் தொட்டுத் தூக்கினீர்கள்.."

"தூக்கி?"

"புரவி மீது போட்டீர்கள், முரட்டுத்தனமாக நான் ஏதோ மூட்டை போல்"

"ஏன் நீ மூட்டையல்லவா?"

"மூட்டையா?"

"ஆம், புஷ்ப மூட்டை."

"போதும் போதும் நிறுத்துங்கள். தொட்டுக் காட்ட வேண்டாம், சொன்னால் போதும்." அவள் சொற்களில் கோபம் கரை புரண்டு ஒலித்தது. கொள்ளிட அலைகள் தூரத்தே எழுந்து தரையை உடைத்துக் கொண்டு அவள் உதவிக்கு வந்து விடுவனபோல் கூச்சல் போட்டன.

விஜயகுமாரன் மெல்ல நகைத்தான். "ஏன் நகைக்கிறீர்கள்?" என்று வினவினாள் நந்தினி.

"இந்தப் புஷ்ப மூட்டையை அன்று முரட்டுத்தனமாகத் தூக்கி என் புரவியில் போட்டபோது அது இத்தனை எதிர்ப்பைக் காட்டவில்லை."

நந்தினியும் உடனடியாகப் பதில் சொல்லவில்லை அவனுக்கு. சொன்னபோது அவள் குரலில் கனிவு இருந்தது. "அன்று என் இதயத்திலிருந்த நிலை வேறு," என்றாள் நந்தினி மிக ரகசியமாக.

"என்ன நிலை நந்தினி?"

"விரோத நிலை. உங்களைக் கொன்று விடக்கூட முயற்சித்தேன் இரு முறை."

"இப்பொழுது மாத்திரம் என்ன செய்கிறாயாம்?"

"இப்பொழுது கொல்கிறேனா?"

"ஆம்."

"பொய் பொய்."

"உண்மை உண்மை."

"எப்படி உண்மை"

"அன்று நான் தொட்டபோது சும்மா இருந்தாய். இன்று தொட்டால் சிணுங்குகிறாய்."

நந்தினி மௌனம் சாதித்தாள். பிறகு மெள்ள அவன் கால்

மீதிருந்த அவள் தொடை சற்று அதிக மாகவே அழுந்தியது. உடலும் அவனை நோக்கிச் சாய்ந்தது. அவன் காதுக்கருகில் தனது உதடுகளைக் கொண்டு வந்து சொன்னாள் அவள், "உடலின் நிலை இதயத்தின் நிலையைப் பொறுத்தது." என்று.

"அது என்ன நிலையோ?"

"வேண்டும்போது இடம் தரும். வேண்டாதபோது விலகும்."

"எப்பொழுது வேண்டும், எப்பொழுது வேண்டாமென்பது எப்படி விளங்கும்?"

"விளங்காத நிலைதான் அது."

"எதுவுமே விளங்காது?"

"விளங்காது, புரியாது."

"புதிர் போடுகிறாயே!"

நந்தினி அத்தனை இருட்டிலும் புன்முறுவல் கொண்டாள். "அது புரியாத புதிர்தான். இதுவரை, இத்தகைய இதய நிலை எப்படி ஏற்படுகிறது, ஏன் ஏற்படுகிறது, திடீரென ஏன் மாறுகிறது என்பதைக் கண்டுபிடித்தவர்கள் யாருமில்லை," என்றாள் நந்தினி.

"நாம் கண்டுபிடித்தால் என்ன?" என்று அவளை இழுத்து இறுக்கி காதில் சொற்களை மிக ரகசியமாகச் சொன்னான் விஜயகுமாரன்.

நந்தினி நெகிழ்ந்தாள் உணர்ச்சி மிகுதியால்.

கோட்டையைச் சுற்றிலும் நடமாடிக் கொண்டிருந்த வீரர்கள் கூச்சலோ, எரிந்த தீபங்களோ, பந்தங்களோ, எதுவும் காதிலோ கண்களிலோ படவில்லை அவனுக்கு. கடலலைகள் முட்டிக் கள்ளியகால் எழுந்துவிட்ட கொள்ளிட அலைகளின் இரைச்சலும் அவனைப் பாதிக்கவில்லை. இருவருமே அந்தப் புதருக்கருகில் வேறு ஓர் உலகத்தைத் தங்களுக்காகவே சிருஷ்டித்துக் கொண்டதால் கோட்டை ஒன்று இருப்பதாகக்கூட நினைப்பில்லை அவ்விருவருக்கும். புதரில் இருக்கக் கூடிய விஷ ஜந்துக்களைக் கூட விஷய சுகம் மறைத்துவிட்டது. 'உப புக்தம் விஷம் ஹந்தி விஷயை ஸ்மரணாதபி' (உண்ட பின்பு கொல்லும் விஷம். காமமோ நினைப்பினாலேயே கொன்று விடுகிறது) என்ற வாக்கியம் எத்தனை உண்மை என்பதை நினைத்துப் பார்த்தான் விஜயகுமாரன். வீரனை அவன் விரகத்தால் துடித்தான். இருட்டினும் பண்பாடு அவனை அத்தகைய துடிப்பிலும் தேக்கி வைத்தது. ஆனால் அவள் நிலையே வேறு. கரை உடைந்து கிடந்தது. உணர்ச்சி வெள்ளம் அவள் இதயத்தை மூழ்கடித்துக் கொண்டிருந்தது. பெண்களின் நிலையே இப்படித்தான். தாங்கும் வரையில் திடம், தாங்காத நிலையில் வீழ்ச்சி. அதன் விளைவாக அவள் உடல் நன்றாகச் சாய்ந்தது அவன்மீது. என்ன காரணத்தாலோ, சட்டென்று விஜயகுமாரன் விலகினான். "தவறு ராஜகுமாரி, தவறு," என்று மெல்லிய குரலில் கடிந்தும் கூறினான்.

"கொஞ்சம் எனக்குப் பேச இடம் தருவீர்களா!" என்று ஒரு குரல் ஊடே புகுந்தது சற்று எட்ட இருந்து.

அந்தக் குரலைப்பற்றி இருவருக்கும் சந்தேகமில்லை. ஆகவே இருவரும் எழுந்தார்கள் அச்சத்தினால். குரலுக்குடையவர் அவர்களை நோக்கி மெல்ல வந்தார்.

(தொடரும்)

'காலாயுதக் கொடியோன் கையாயுத விழியால்
மாலாயுதம் ஈன்ற மாமணியைத்தான் உதிர்த்தாள்'

—இந்தத் தொடர் எந்தச் சிற்றிலக்கியத்தில் இடம் பெற்றது என்று தெரியவில்லை, தெரிந்தவர்கள் சொல்லுங்களேன் என்று (10-3-77 குமுதம்) துணுக்கு எழுதியவர் வேண்டுகோள் விடுத்திருந்தார். அந்தப் பாடலின் வரிகள் 'கூளப்ப நாயக்கன் காதல்' என்கிற நூலில் இடம் பெற்றிருக்கிறது. எங்கள் வீட்டில் அந்தப் புத்தகம் உள்ளது. என் அம்மா (சௌந்தரா கைலாசம்) அடிக்கடி அந்த வரிகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள்.

—பத்மினி சிவசுப்பிரமணியன், திருப்பூர்.

# இருக்கவே இருக்கிறது ஹேபியஸ் கார்ப்பஸ் மனு!

கேள்வி: எனக்கு வயது 25. என் மனைவிக்கு வயது 18. இருவரும் பதிவுத் திருமணம் செய்து கொண்டோம். இது அவளுடைய பெற்றோருக்குப் பிடிக்கவில்லை. அவளுடைய தாய்மாமன் எங்கள் இருவரையும் பூட்டிவைத்து, பிறகு அவளைப் பலாத்காரமாக இழுத்துச் சென்று வேறு ஒருவருக்கு அவள் விருப்பத்திற்கு மாறாகத் திருமணம் செய்விக்க இருக்கிறார். என்னுடன் என் மனைவி வர என்ன செய்யவேண்டும்?

—ஏ. டி. முத்தையா அரசு, ஏ. அகரம்.

பதில்: எந்தத் தனி நபரும் வேறு எந்தத் தனிநபரையும் அவரது விருப்பத்திற்கு மாறாக அடைத்து வைப்பது அல்லது ஓர் இடத்தில் பலாத்காரமாக இருக்கச் செய்வது சட்டப்படி குற்றம். தாய்மாமனாக இருந்தாலும் ஏன், பெற்றோராக இருந்தால் கூட ஒரு பெண்ணை அவள் விருப்பத்திற்கு மாறாகக் கொண்டு வந்து ஓர் இடத்தில் இருக்கச் செய்வது பல பெரும் குற்றங்கள் செய்ததாக அமையும் (Abduction, wrongful restraint, wrongful confinement etc) உடனே நீங்கள் உயர்நீதிமன்றத்தில் நடந்ததைக் குறிப்பிட்டு ஹேபியஸ் கார்ப்பஸ் மனு போட்டு மனைவியைச் சுலபமாகத் திரும்பப் பெறலாம்.

□ □

கேள்வி: என்னுடைய தம்பி ஹெல்த் இன்ஸ்பெக்டர் வேலைக்குப் பயிற்சி பெற்றவன். இருமுறை வேலைக்கு அழைக்கப் பட்டபோதும் இண்டர்வியூவில் அவனிடமும் மற்றவர்களிடமும் அவர்களுடைய இருப்பிடம், தகுதி, சொந்த ஊர், ராங்க் போன்ற சாதாரண விஷயங்கள் பற்றியே கேள்விகள் கேட்கப்பட்டன. இருமுறையும் என் தம்பியை வேலைக்கு எடுக்கவில்லை. சிபாரிசின் பேரில் மட்டுமே வேலைக்கு ஆள் எடுத்துள்ளனர். சிபாரிசின் பேரில் வேலைக்கு ஆள் எடுப்பது செல்லுமா?

—எஸ். ஈஸ்வரன், தேவணம்பாளயம்

பதில்: தனியார் துறையில் பகிரங்கமாக சிபாரிசின் பேரில் வேலைக்கு எடுக்கலாம். சட்டப்படி அதைத் தவிர்க்க முடியாது. ஆனால் பொதுத் துறையில் சிபாரிசின் மூலம் வேலைக்கு ஆள் எடுப்பது சட்டப்படி செல்லாது. ஆனால் சிபாரிசின் மூலமாகத்தான் ஒருவருக்கு வேலை கிடைத்தது என்று நிரூபிப்பது இயலாத காரியம். இண்டர்வியூ

அவதூறு என்ற குற்றம் இ.பி. கோ. 499-500 'வது பிரிவுகளில் விளக்கப்பட்டுள்ளது. இதைப்பற்றிப் பொது மக்கள் அறிவது மிக அவசியமென்றே நினைக்கிறேன். சொல், எழுத்து, அடையாளம், உருவ அமைப்பு (Cartoon முதலியன), இந்த எவ்வகைகளிலும், ஒருவர் நற்பெயரைக் கெடுத்தால் (அதாவது அவ்வாறு இழிவு படுத்தும் நினைவுடன், அல்லது இழிவு நேரிடும் என்ற அறிவுடன்) நற்பெயர் கெடுக்கும் நபர், அவதூறு குற்றத்துக்கு உள்ளாகிறார். தண்டனை, 2 ஆண்டுவரை சிறைவாசம், அல்லாது அபராதம், அல்லது இருவகைகளும் கூடி இருக்கலாம்.

இந்தக் குற்றத்துக்கு சில விதிவிலக்குகள் உள்ளன. இவைதான் மிகச் சுவையானவை. இவைகளுள் மிக முக்கியமான வைகளையே இங்கு விளக்குகிறேன்: பொதுநலனைப் பற்றியதாய், நேர்மை எண்ணத்துடன், எவரைக் குறித்து உண்மையான எதை வெளியிட்டாலும் அது அவதூறு அல்ல. அதே எண்ணத்துடன், பொது ஊழியர் பொதுப்பணி ஆற்றுதல், அதைக் குறித்த அவர் நடத்தை, இவ்வபிப்பிராயங்கள் வெளியிடுதல் அவதூறு அல்ல.

குற்ற வழக்கிலும் ஒருவர் சாட்சியத்தைப் பற்றி நேர்மை நினைவுடன் கண்டனமாகக் கூறினாலும் அவதூறு அல்ல. 'ஒருவர் சாட்சியத்தில் முரண்பாடுகள் உள்ளன; நம்ப முடியவில்லை' என்பது அவதூறு அல்ல. ஆனால் 'அவர் கஜப் புளுகர் என்று நான் அறிவேன்; அவரை அதனால் நம்பக் கூடாது' என்பது குற்றம்.

பொதுமக்களின் தீர்ப்புக்காக விடப்பட்ட எந்தப் படைப்பைக் குறித்தும் கண்டனம் செய்வது அவதூறு அல்ல. நூல், சொற்பொழிவு, நடிகர் நடிப்பு, திரை உலகு, இசை, ஓவியக் கலை இதில் அடங்கும்.

—மா. அனந்தநாராயணன்
(சென்னை உயர்நீதிமன்ற முன்னாள் பிரதம நீதிபதி)

# ராஜ பேரிகை

சாண்டில்யன்

## 24. முராரிராவின் ஜோஸ்யம்

புதுக்குரலொன்று இடையே புகுந்துவிட்டதன் காரணமாக, பரஸ்பர பிணைப்பிலிருந்து பிரிந்துவிட்ட விஜயகுமாரனும் தஞ்சை மன்னனின் செல்வியும் சற்றே சங்கடப்பட்டுத் திண்டாடியதைக் கண்ட முராரிராவ் புன்சிரிப்புத் தவழ்ந்த வதனத்துடன் அவர்களிருவரையும் சில விநாடிகள் கவனித்துக் கொண்டிருந்துவிட்டு, ''நந்தினி! இவரைச் சிறிது நேரம் எனக்கு விட்டுக் கொடுக்கிறாயா?'' என்று வினவினான்.

நந்தினி முராரிராவைச் சுட்டுவிடும் சுடர் விழிகளுடன் ஏறெடுத்து நோக்கிவிட்டுக் கேட்டாள், ''தாராளமாக எடுத்துக் கொள்ளுங்கள். இவரை நான் பிடித்துக் கொண்டா இருக்கிறேன்?'' என்று.

''இப்பொழுது இல்லை,'' என்று இழுத்த முராரிராவ், ''நந்தினி! நீ கோட்டைக்குப் போ. வெகு சீக்கிரம் இவரை அனுப்பிவிடுகிறேன்.'' என்று கூறினார் விஷமம் ஒலித்த குரலில்.

நந்தினி உட்கார்ந்த இடத்தை விட்டு வெகு வேகத்துடன் எழுந்து இருவரையும் உற்று நோக்கினாள் சில விநாடிகள். பிறகு தூரத்தே தெரிந்த கோட்டையையும் நோக்கினாள். அடுத்து எதிர்க் கரையில் தெரிந்த வெள்ளையர் பாசறையையும் நோக்கினாள். நின்ற இடத்தில் வலது கால் பெரு விரலால் கோடு ஒன்றைப் பாதி வட்டமாக இழுத்தாள். சரேலென்று ஏதும் பேசாமல், விஜயகுமாரனிடம் கூட விடைபெறாமல் கோட்டையை நோக்கிக் காற்சிலம்புகள் கலீர் கலீரென ஒலிக்க வேகமாக நடந்தாள்.

அவள் போவதை விஜயகுமாரன் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் சரேலென்று திரும்பிய வேகத்திலும் ஒய்யாரமிருந்ததைக் கவனித்தான், கோபத்துடன் நடந்தபோது இலங்கிய நுண்ணிடை அடுத்திருந்த இருபெரும் அழகுகளை அசைத்த விந்தையையும் கவனித்தான். அதன் விளைவாக கோபத்துக்கும் அழகுக்கும் எத்தனை சம்பந்தமிருக்கிறதென்பதை நினைத்துப் பெருமூச்சும் விட்டான். அந்தப் பெருமூச்சைக் கவனித்த முராரிராவ் மெல்ல நகைத்தார்.

முராரிராவின் அநாகரீகமான தலையீட்டினாலேயே வெகுண்டிருந்த விஜயகுமாரன் அவர் நகைத்ததால் சினம்கொண்டு, ''எதற்காக நகைக்கிறீர்கள்?'' என்று கேட்டான் சினம் குரலிலும் பூர்ணமாகத் தொனிக்க.

முராரிராவின் கண்கள், புதரின் அருகாமையிலிருந்த இருட்டில்கூட ஜொலித்தன விஷமத்துடன். ''நீ பெருமூச்சு விட்டதைக் கண்டு நகைத்தேன்,'' என்றார் கேலி நிறைந்த குரலில்.

''பெருமூச்சு நகைப்பதற்கு உரியதா?'' என்று வினவினான் விஜயகுமாரனும் மேலும் சினத்தைக் கூட்டி.

''சாதாரண காலங்களில் அனுதாபத்திற்குரியது,'' என்றார் முராரிராவ்.

''இப்பொழுது நகைப்பதற்குரியதாக்கும்?''

''ஆம். நாடே தனது கதி என்ன ஆகுமோ என்று பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறது. அந்தச் சமயத்



தில் ஏற்படும் காமப் பெருமூச்சு எதற்கு உரியது? நீதான் சொல்லேன்.''

விஜயகுமாரன் நீண்டநேரம் பதில் சொல்லவில்லை. முராரிராவ் சொன்னதில் பெரும் பொருள் புதைந்திருந்ததால் அவன் மனம் அவனையே கண்டித்தது, 'உன் போக்கு சரியல்ல' வென்று. அதனால் மனத்திடமும் வெகுண்டான் விஜயகுமாரன். 'நீதானே அவளிடம் என்னை இழுத்துக் கொண்டு போனாய்? உனக்குப் புத்தியில்லை?' என்று தன் மனத்தைக் கேள்வியும் கேட்டான் உள்ளூர. விஜயகுமாரன் உள் வேதனையை முராரிராவும் உணர்ந்து கொண்டிருக்க வேண்டும். ஆகவே அவனை ஆசுவாசப்படுத்திச் சொன்னார், ''விஜய குமாரா! உன் வயதின் கோளாறு இது. ஆகையால் மன்னிக்கத் தக்கது,'' என்று.

விஜயகுமாரன் பதிலில் வெறுப்பு இருந்தது. ''இல்லை தளபதி! மன்னிக்கத் தகாதது,'' என்றான்.

''காரணம்?'' முராரிராவின் கேள்வியில் ஏதோ சந்தேகம் இருந்தது.

''எதிரி அக்கரையிலிருக்கிறான்.''

''ஆம்.''

''இந்தச் சமயத்தில் மனம் போரில் ஊன்றியிருக்க வேண்டும். மாற்றம் மன்னிக்கத்தகாதது.''

இதைக் கேட்ட முராரிராவ் மெல்லச் சொன்னார், ''அதை நான் காரணமாக ஒப்புக் கொள்ள மாட்டேன்,'' என்று.

''வேறு என்ன காரணம்?'' என்று வினவினான் விஜயகுமாரன்.

"இதயத்தைத் தொட்டுப் பார்," என்றார் முராரி ராவ். இந்தச் சமயத்தில் அவர் குரலில் கூட விஷம மற்ற உணர்ச்சி நிரம்பி நின்றது.

"இதயம் சரியாகத்தானிருக்கிறது தளபதி."

"இல்லை. உன் உயிர்ப் பணியை உதாசீனம் செய்துவிட்டது."

"என்ன பணியைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"அதுவும் மறந்துவிட்டதா விஜயகுமாரா? அன்னையிட்ட தீ அடி வயிற்றிலே என்ற அறிவுரையாவது உன் அறிவிலிருந்து விலகாதிருக்கிறதா?" என்று வினவிய முராரி ராவ் மேலும் சொன்னார்: "விஜயகுமாரா! நீ சிவகங்கையிலிருந்து புறப்பட்டபோது புனிதமான பணியை நிறைவேற்றப் பயங்கரமான சபதத்தைச் செய்திருக்கிறாய். யாருடைய தலையைக் கொய்வதாக நீ சபதம் செய்திருக்கிறாயோ, யாருடைய பொய் சபதத்தினால் ராணி மீனாட்சி தீக்குளித்தாளோ, அந்த மனிதன் பெரும் பலம் பெற்று மீண்டும் தமிழகம் நுழைந்திருக்கிறான். இந்த நிலையில் நீ இந்த இடத்தில் தஞ்சை மன்னனுக்கு உதவ முன்வந்திருக்கிறாய். பழைய சபதத்தை நிறைவேற்றும் ஒரு படியாக இதைக் கொள்ளவில்லை. நந்தினியின் நீள் விழி வீச்சினால் அவள் தந்தைக்கு உதவ இங்கு வந்திருக்கிறாய். ஆனால் பிரதாப சிம்மனை முழுதும் நம்பி அவனுக்கு உதவுவதால் உன் சபதம் நிறைவேறாது. பிரதாபசிம்மன் சமயத்துக்குத் தகுந்தபடி மாறக் கூடியவன். ஹிந்து சாம்ராஜ்யத்தை விஸ்தரிப்பதில் இஷ்டமில்லாதவன்...."

இங்கு சிறிது தமது ஆவேசப் பேச்சை நிறுத்தினார் முராரிராவ். பிறகு ஏதோ கேள்வி கேட்க முற்பட்ட விஜயகுமாரனைத் தமது கையின் சைகையால் அடக்கி, "விஜயகுமாரா! ஹிந்துக்களின் இந்தப் புண்ணிய பூமியைப் பார். ஏதோ ஒரு மகாவீரன், பிறந்து தலை தூக்கும் காலத்தில் ஹிந்துக்கள் தலை தூக்குகிறார்கள். மௌரியர்கள், குப்தர்கள் காலத்துக்குப் பின் சிவாஜி மகாராஜா ஹிந்து சாம்ராஜ்யத்தை அமைத்தார். அவர் தந்தை ஷாஹுஜி மகாராஜா தென்னாடு முழுவதையும் மகாராஷ்டிர ஆதிக்கத்தில் கொண்டு வந்தார். மேற்கே சூரத்திலிருந்து தெற்கே திருச்சிவரை மகாராஷ்டிரர் ஆட்சி இருந்தது — அவருக்குப் பின்பு வியங்காஜி ஸதாராவுடன் தமது ராஜ்யத்தை இணைத்திருந்தால் இன்று கூட ஆற்காடு அரசும், இதர சில்லறை அரசுகளும் இங்கு தலை காட்டியிருக்கா. அவர்தான் முன்னோக்குடன் செய்யவில்லை. பெரிய அறிவாளியென்று




கல்கத்தா அலிபூர் மிருகக்காட்சிசாலை. நண்பரும் நானும் உள்ளே பல இடங்களையும் சுற்றிப் பார்த்த பிறகு, பறவைகள் கூண்டிற்கு வந்தோம். அப்போது மாலை 6 மணி ஆகிவிட்டிருந்ததால், இருவரையும் தவிர அருகில் வேறு எவரும் இல்லை. ஒரு பெரிய கம்பி வலைக் கூண்டிற்குள் அழகிய வெள்ளைக் கிளி ஒன்று இருந்தது. நண்பர் அதன் அழகை வியந்து, 'அதன் கொண்டையைப் பார்' 'நிறத்தைப் பார்,' என்று சொல்லிக்கொண்டிருக்கையில், திடீரென்று, "ஹலோ டார்லிங்," என்ற குரல் கேட்டது. இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தோம். ஒருவரும் இல்லை. மறுபடியும் 'ஹலோ டார்லிங்' என்ற குரல் சுத்தமாகக் கேட்டது. பிறகுதான் கிளி கூப்பிடுகிறது என்று தெரிந்தது. இருவரும் பலமுறை அந்த வார்த்தையைத் திரும்பத் திரும்பச் சொல்ல, அதுவும் சொல்ல, எங்களுக்கு ஒரே சிரிப்பு. என்ன ஆச்சரியம்! கிளியும் உரக்க 'ஹஹஹா' என்று சினிமாக்களில் வரும் வில்லனைப்போல சிரித்தது.

மிருகக் காட்சிசாலையில் நுழைந்தவுடன் வலது பக்கத்தில் இருக்கிறது இந்தக் கிளி.

—வி. கல்யாணராமன்.

பெயர் வாங்கியிருக்கும் இந்தப் பிரதாப சிம்மன் சற்று முன்னேக்கிப் பார்த்து ஸதாராவிடம் இணைந்தால் சந்தா சாகேபும், முஸபர்ஜங்கும் தலைதூக்க முடியாது. அவர்கள் தலைதூக்காவிட்டால் பிரிட்டிஷ்காரரும் பிரெஞ்சுக்காரரும் தலையிட முடியாது தட்சிணப் பிரதேச விவகாரங்களில், அப்படித் தலையிட முடியாதென்ருல் இந்த காப்டன் கோப் அக்கரையில் வர அவசியமிருக்காது,'' என்று உணர்ச்சி ததும்பப் பேசினர். இதை முடித்ததும் அவரும் துன்பப் பெருமூச்சு விட்டார்.

எதற்கும் நெகிழாத முராரிராவின் உள்ளமே நெகிழ்ந்து விட்டதைக் கண்ட விஜயகுமாரன் ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தான். பிறகு மெல்ல வினவினன், ''இத்தனை பேசும் நீங்கள் தஞ்சையின் சுற்றுப்புறங்களைப் பலமுறை சூறையாடியிருக்கிறீர்களே. மகாராஷ்டிர தளபதி மகாராஷ்டிர அரசையே சூறையாடுவது ஹிந்து ஆதிக்கத்திற்கு அடிகோலுவதாகுமா?'' என்று.

முராரிராவ் தமது கண்களை உயரத் தூக்கி விஜயகுமாரனை நன்ருகப் பார்த்தார். அந்தக் கண்களில் அவன் கேள்வியால் வெட்கமோ வேறு வித கலக்கமோ ஏற்படவில்லை. ''பிரதாபசிம்மன் ஸதாராவுடன் இணையாமல் தனிக்காட்டுராஜாவாக இருக்க ஆசைப்படும் வரையில் மகாராஷ்டிர சாம்ராஜ்யத்துக்கு ஆபத்திருக்கிறது. அந்த ஆபத்தைத் தவிர்க்க எதையும் செய்வேன், யாரையும் சூறையாடுவேன். ஆனல் விஜயகுமாரா! அவனும் ஒரு நாள் எனது வாளை நாட்டு நலனுக்காக எதிர்பார்ப்பான். அப்பொழுது முராரிராவ் பிரதாபசிம்மனுக்கு உதவத் தயங்கமாட்டான்,'' என்று கூறினர் முராரிராவ்.

விஜயகுமாரன் மேற்கொண்டு அந்தப் பேச்சை வளர்த்த இஷ்டப்படவில்லை. பிரதாபசிம்மன் பெரிய அறிவாளியென்பதிலோ முராரிராவுக்கிருக்கும் நாட்டுப் பற்று அவருக்கும் இருக்குமென்பதிலோ விஜயகுமாரனுக்கு, சந்தேகம் ஏதுமில்லாததால் மெள்ள விஷயத்தை மாற்றி, ''தளபதியவர்கள் திடீரென இங்கு முளைத்த காரணப் தெரியவில்லை. எனக்குத் தோணி விடுவது அந்தக் காரணங்களில் ஒன்ருயிருக்காது என்று நினைக்கிறேன்,'' என்ருன் மெதுவான குரலில்.

ஒலி பெருக்கி மௌன விரதம் இருந்த மர்மம் என்ன?

## ராமா! மாரா! ராமா! மாரா!

மேற்கு மாம்பலத்தில் உள்ள அயோத்யா மண்டபத்தில் ஸ்ரீராமநவமி விழாவின் ஆரம்ப தினத்தன்று தொடர்ந்து 24 மணி நேரத்திற்கு ராமநாமம் ஜபிக்கப்படும். இதை ஒலிபெருக்கியில் ஒலிபரப்புவது வழக்கம். இவ்வாண்டு 19-3-77 அன்று நடந்த ஜபத்தை ஒலிபெருக்கியில் ஒலிபரப்பவில்லை. இதைத் தடைசெய்ததன் காரணம் அருகிலிருந்த ஓட்டுச்சாவடியாக இருக்கலாம்.

தென் சென்னைத் தொகுதியான எங்கள் பேட்டையில், வேட்பாளர்களாக ஆர். வெங்கட்ராமனும், முரசொலி மாறனும் நின்ருர்கள். ராமநாமத்தை ஜபித்தால் 'ராமா ராமா' என்பது (வெங்கட்)ராமனையும் 'மாரா மாரா' என்பது முரசொலி மாறனையும் குறிப்பதுபோல இருக்கிறது என்பதால் தேர்தல் அதிகாரி தடை விதித்திருப்பாரோ?

—சி. வி. ரேணுகா

சாதாரண சமயமாயிருந்தால் முராரிராவ் நகைத்திருப்பார், உதய குமாரன் குத்தலை ரசித்துமிருப்பார். ஆனால் கனவு நிரம்பிய அவர் முகத்தில் அத்தகைய உணர்ச்சி ஏதும் தோன்ற வில்லை. "விஜயகுமாரா! நான் இங்கு வந்த காரணம் தோணி விட அல்ல என்று நிச்சயமாகக் கூற முடியாது. போர்ப் பிரவாகத்தில் அறிவாகிய தோணியை விட உனக்குக் கற்றுக் கொடுக்கவே வந்திருக்கிறேன்," என்றார் முராரி ராவ் மெதுவாக.

"ஏன், அதை தேவிக் கோட்டையைக் காக்க வந்திருக்கும் மானாஜியிடம் கூறினாலென்ன?" என்று வினவினான் விஜயகுமாரன்.

முராரி ராவ் ஒரு விநாடி சிந்தித்து விட்டுப் பதில் கூற முற்பட்டு, "விஜயகுமாரா! மானாஜி பெரும் படைத் தலைவர், மகாவீரர், பல போர்களைக் கண்டவர், என்னைவிட வயதில் மூத்தவர். ஆகையால் நான் சொல்லும் எதையும் அவர் ஏற்க மாட்டார். ஆகையால்தான் உன்னிடம் சொல்கிறேன்," என்றார்.

"நான் சாதாரண உபதளபதி," என்று தயங்கினான் விஜயகுமாரன்.

"சில சமயங்களில் தளபதிகள் செய்ய முடியாததை உபதளபதிகள் செய்வார்கள். உதாரணமாக நாம் சற்று முன்பு சந்தித்தோமே கிளைவ் என்பவனை, அவன் அந்த காப்டன் கோப்பை விடப் பெரிய காரியங்களைச் சாதிக்க முடியும்," என்றார் முராரிராவ்.

இதைக் கேட்ட விஜய குமாரன் அசந்து போனான். "கிளைவா! அவனைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?" என்றும் வினவினான் வியப்புடன்.

"அவன் பிரிட்டிஷ் படையில் ஒரு லெப்டினண்ட் என்பது தெரியும். வேறெதுவும் தெரியாது."

"அப்படியிருக்க அவனைப் பற்றி மிகப் பெரிதாக எடைபோட்டிருக்கிறீர்களே?"

"பெரிதாகப் போடவில்லை விஜயகுமாரா! சரியாகத்தான் போட்டிருக்கிறேன். அவன் கண்களில் மகா சூட்சுமம் இருக்கிறது, சாம்ராஜ்ய சிந்தனை இருக்கிறது."

"கண்களிலா!"

"ஆம்."

"அவற்றிலிருந்து எதையும் கண்டுபிடிக்க முடியுமா?"

---



இரு எஜமானர்கள் தங்கள் வேலைக்காரர்களின் முட்டாள்தனத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஒருவர் தன் வேலைக்காரன் எவ்வளவு மடையன் என்று மற்றவருக்குக் காட்டும் பொருட்டு அவனைக் கூப்பிடுகிறார். பத்து ரூபாய் பணம் கொடுத்து, 'கடைக்குப் போய் ஒரு டெலிவிஷன் வாங்கி வா,' என்கிறார். அவனும் எதிர்க் கேள்வி கேட்காமல் உடனே பத்து ரூபாயை வாங்கிக்கொண்டு போய்விடுகிறான்.

மற்றவரும் தன் வேலைக்காரனின் மேதாவிலாசத்தை உணர்த்த, தன் வேலையாளைக் கூப்பிடுகிறார். கூப்பிட்டு, "நான் கிளப்பில் இருக்கிறேனா இல்லையா என பார்த்துவிட்டு வா," என உத்தரவிடுகிறார். அவனும் நேராகப் போய்விடுகிறான்.

வழியில் இரண்டு வேலைக்காரர்களும் சந்திக்கிறார்கள். டெலிவிஷன் வாங்கப் போனவன் கூறுகிறான்: "பார்! என் முதலாளிக்கு அறிவே இல்லை. இன்று ஞாயிற்றுக் கிழமை! எல்லாக் கடைகளும் மூடியிருக்கிறது. இன்று போய் டெலிவிஷன் வாங்கி வர அனுப்புகிறார்."

அதற்கு அடுத்தவன், "அதாவது பரவாயில்லை. என் முதலாளி கிளப்பில் அவர் இருக்கிறாரா இல்லையா என்பதைப் பார்த்துவரச் சொல்லி என்னை அனுப்புகிறார். என்னை அனுப்புவதற்குப் பதிலாக, அவரே கிளப்புக்கு ஒரு போன் பண்ணி அங்கு அவர் இருக்கிறாரா இல்லையா என்று தெரிந்து கொள்ளலாம் அல்லவா? மூளையே இல்லாதவர்!" என்று திட்டுகிறான்.

—'மஜேலேயோ' என்ற இந்திப் படத்திலிருந்து.

*தகவல்: ஆர். நாராயணசாமி*

''கண்கள் மூளையின் சாளரம்.''

''அதனால்?''

''அவை காட்டிக் கொடுக்கும் ஒரு மனிதனின் மேதையை. எதற்கும் இந்தக் கிளைவிடம் மிக எச்சரிக்கையாயிரு. தேவிக்கோட்டையை இந்த இங்கிலீஷ் படை பிடிக்க முடியாது. ஆனால் இந்தக் கிளைவ் பிடித்தாலும் பிடிப்பான். ஆகையால் எச்சரிக்கையாக இரு,'' என்று திட்டவட்டமாகச் சொன்னார் முராரிராவ்.

இதைக் கேட்ட விஜயகுமாரன் வியப்பினால் ஏதும் பேசவே இல்லை பலவினாடிகள். ஆனனப்பட்ட முராரிராவே கிளைவை அத்தனை தூரம் எடை போடுவதானால் அவன் புத்தி அசாதாரணமாயிருக்க வேண்டும் என்று எண்ணினான். ஆகையால் மேலும் முராரிராவ் கிளைவைப்பற்றி அதிகம் பேசுவாரென்று நினைத்தான். அந்த நினைப்பை முராரிராவ் உடனடியாக உடைத்தார். ''நான் இப்பொழுது உன்னிடம் பேச வந்தது கிளைவைப் பற்றி அல்ல. தேவிக் கோட்டையைப் பற்றி. அதன் பாதுகாப்பைப்பற்றி,'' என்ற முராரிராவ், ''இந்தக் கோட்டையைப்பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்று வினவினார்.

''பலமான கோட்டை. கொள்ளிடத்தின் முகத்துவாரத்திலிருக்கிறது. நல்ல கப்பல் துறை,'' என்றான் விஜயகுமாரன்.

இதற்கு முராரிராவ் உடனடியாகப் பதில் சொல்லவில்லை. ''இதன் பழங்காலப் பெயர் தெரியுமா உனக்கு? இதன் முதற் பெயர் தீவுக்கோட்டை. பின்னால் சோழமா தேவி ஒருத்திக்கு சாஸனம் செய்யப்பட்டபடியால் தேவிக் கோட்டையாயிற்று.''

''அப்படியா..?''

''ஆம். கொள்ளிடத்தின் முகத்துவாரத்தில் ஆறு இருபுறமும் வளைத்த தீவில் இது அமைந்திருக்கிறது. இந்தத் தீவு முழுவதும் அடர்த்தியான காடும் புதர்களும் நிறைந்திருக்கின்றன. இந்தத் தீவுக்குக் குறுக்கே ஒரு பெரிய வாய்க்காலும் ஓடுகிறது. தேவிக்கோட்டை யென்னும் இத் தீவுக்கோட்டை பிரிட்டிஷ்காரர் கணக்குப்படி ஒரு மைல் சுற்றளவுள்ளது. இதோ பார்..'' என்று சொல்லிக் கொண்டே முராரி எழுந்து நின்றார். விஜயகுமாரனும் எழுந்து நின்றான். முராரிராவ் கோட்டையையும் சுற்றுப் புறங்களையும் ஒருமுறை தமது கையால் சுட்டிக் காட்டிவிட்டு, ''விஜயகுமாரா! ஒரு மைல் சுற்றளவுள்ள இந்தக் கோட்டையை அணுக முதலில் கொள்ளிடத்தைக் கடக்க வேண்டும். அது ஒரு இயற்கைப் பாதுகாப்பு. அப்படியே கடந்தாலும் இப்புறம் இருப்பதும் பெருங்காடு. புதர்கள். அதோ அந்தக் கோட்டையைப் பார். பதினெட்டு அடி உயரமுள்ள சுவர்கள். ஆங்காங்கு இடையிடையே உயரமான கூண்டுகள். பீரங்கி வைத்துச் சுடுவதற்கும் எதிரி வரும் திசையை அறிவதற்கும் பலமான கோட்டை. ஆனால் இன்று அதற்குப் போதிய பலமில்லை,'' என்றார்.

''ஏன்?''

''காரணம் ஆயுதக்குறைவு.''

''என்ன ஆயுதங்கள் தேவை?''

''முக்கியமாக பீரங்கிகள்.''

''அவை இருக்கின்றன.''

''ஆம். கோட்டைக்குள் பத்திரமாக. ஆனால் எதிரி, கோட்டைக்கு எதிரில் வந்து தரிசனம் கொடுக்க மாட்டான் நீங்கள் சுட. அவர்களிடம் கோட்டையை நீண்ட தூரத்திலிருந்து தகர்க்கும் 'பாட்டரிங் கானன்' (கோட்டையை தகர்க்கும் பெரிய பீரங்கி) உண்டு.''

முராரிராவ் விஷயத்தை விளக்க விளக்க விஜயகுமாரன் இதயத்திலும் மெல்ல அச்சம் உதயமாயிற்று. அதனால் கேட்டான், ''அப்படியானால் அவர்களைச் சமாளிக்க முடியாதா?'' என்று.

''முடியும். ஒருவகையில்,'' என்றார் முராரிராவ்.

''எப்படி?''

''எதிரியைக் கோட்டையில் சந்திக்காதே.''

''வேறெங்கு சந்திப்பது?''

''இந்தக் காட்டில் சந்தி. இங்குள்ள புதர்களில் சந்தி.''

''இங்கிருந்தா!''

''ஆம்,'' என்ற முராரிராவ் வெகு ரகசியமாக விஜயகுமாரனுக்குப் போர் முறையை உபதேசித்தார்.

புதிய மேனி

நெடுஞ்செழியனின் சகோதரரான் இரா. செழியனைவிட 35,639 வாக்குகள் அதிகம் பெற்று வென்றார்.

பாலாபழனூர்
அ.இ.அ.தி.மு.க.
பாண்டிச்சேரி

சென்ற முறை பாண்டிச்சேரியில் நடைபெற்ற பொதுத்தேர்தலில் அ.இ. அ.தி.மு.க சார்பில் இதே தொகுதியில் வெற்றி பெற்றவர். பி.ஏ.பி.எல். பட்டம் பெற்ற அட்வகேட். ஜனதா கட்சி வேட்பாளர் அன்சாரி பி. துரைசாமியை 19,201 வாக்குகள் அதிகம் பெற்று வென்றார்.

ஆர். மோகனரங்கம்
அ.இ.அ.தி.மு.க.
செங்கல்பட்டு

சென்னைக்கு அருகில் ஆலந்தூர் சொந்த ஊர். எம். ஏ. பி. எல். பட்டம் பெற்ற அட்வகேட்.

வி. அருணசலம்.
அ. இ. அ. தி. மு. க.
திருநெல்வேலி

---

மெள்ள மெள்ள எதிரியை எப்படி எதிர் கொள்ள வேண்டும், எப்படி இம்சை செய்ய வேண்டும் என்று விவரித்தார், அணு அணுவாகத் தமது திட்டத்தை விளக்கி. "இதைச் சொல்லத் தான் வந்தேன் விஜயகுமாரா, தஞ்சைக்கு வடமேற்கிலிருக்கும் எனது படையை விட்டு. இந்தப் படையெடுப்பைப் பற்றி நீண்டநாளாகப் பிரஸ்தாபமிருந்து வருகிறது. ஆகையால் வந்தேன் மாறு உடையில்," என்றும் கூறினர்.

"ஆம். ஆம். உங்கள் வேடத்தைக் கண்டு நானே முதலில் தோணிக்காரனென்று மலைத்தேன்," என்றான் விஜயகுமாரன்.

முராரிராவ் பழைய நிலைக்கு வந்தார். "இப்பொழுது நீ சொல்லலாம். எதையும் நான் சொன்னதாக மானஜியிடம் சொல்லாதே. நீயாகச் சொல். எல்லாவற்றையும்விட, பீரங்கிகளை விட மகாராஷ்டிரர் புரவிப் புயல் படையை நம்பு. மராத்தா லைட் ஹார்ஸ் என்று சொன்னால் பிரிட்டிஷாரே நடுங்குவார்கள்," என்று சொல்லி நகைத்த முராரிராவ், "விஜயகுமாரா! இனி நீ கோட்டைக்குச் சென்று நந்தினியின் கோபத்தைத் தணி. அதற்கு நான் வழி சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை என்று நினைக்கிறேன்," என்றார்.

"போர் எதிரிலிருக்கும்போது...." என்று இழுத்தான்.

"இன்னும் இரண்டு நாட்களுக்குப் போர் கிடையாது," என்று கடைசியாக ஒரு அஸ்திரத்தை எடுத்து வீசிய முராரிராவ் வேகமாக நடந்து அடுத்திருந்த காட்டுப் பகுதியில் மறைந்தார்.

விஜயகுமாரன் அவர் சென்ற திசையை நோக்கிக் கொண்டு சில விநாடிகள் நின்றான். பிறகு கோட்டையை நோக்கி நடந்தான். அவன் அன்று பல விஷயங்களை, புதுப் போர் முறைகளை, கற்றிருந்தான் முராரிராவிடம். ஆனால் எதிரிகள் தாக்க இரண்டு நாட்கள் ஆகவேண்டுமென்று முராரிராவ் ஜோஸ்யம் சொன்னாரே, அதை எப்படிச் சொன்னார் என்பது அவனுக்கு விளங்கவில்லை. ஆனால் எதிர்க்கரையிலிருந்த கிளைவுக்கு அது விளங்கியது. மறுநாள் காலை, தாக்குதலைத் தொடங்க வேண்டுமென்று காப்டன் கோப் கட்டளையிட்டபோது, "இன்னும் இரண்டு நாள் போகட்டும்," என்றான் கிளைவ்.

(தொடரும்)

---

தேவிக் கோட்டையைத் தாக்க இரண்டுநாள் போகட்டும் என்று கிளைவ் கூறியதைக் கேட்ட காப்டன் கோப் வியப்பும் சினமும் ஒருங்கே இணைந்துவிட்ட உணர்ச்சியால் ஒரு விநாடி திணறினான். பிறகு மெல்லத் தனது கொந்தளிப்பை அடக்கிக் கொண்டு, ''காப்டன் இடும் உத்தரவுக்கு லெப்டினண்ட் பணிய வேண்டியது பிரிட்டிஷ் ராணுவப் பழக்கம்,'' என்றான்.

கிளைவின் முகம் கூடார விளக்கில் இகழ்ச்சிக் குறியை நன்றாகக் காட்டியது. ''பலக்குறைவுடனும் பட்டினியுடனும் எதிரியைத் தாக்குவதும் பிரிட்டிஷ் ராணுவப் பழக்கமா?'' என்று வினவினான் கிளைவ்.

''பட்டினியா!'' கோப்பின் கேள்வியில் உள்ளிருந்த கோபம் அகன்று வியப்புத் தலைதூக்கி நின்றது.

''ஆம்! நாம் கொண்டு வந்துள்ள உணவு சப்ளை இன்னும் மூன்று நாளைக்குத்தான் இருக்கும்,'' என்றான் கிளைவ்.

''மேலும் கப்பல் மூலம் உணவு சப்ளைகள் அனுப்புவதாகக் கவர்னர் கூறியிருக்கிறாரே?''

''அந்தக் கப்பல்கள் அனைத்தும் கடலில் மூழ்கி விட்டதாகப் போர்ட்டோ நோவோ துறைமுக அதிகாரி கூறவில்லையா? அப்படியிருக்க ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்குத் தகவல் போய் உணவு சப்ளை கப்பலும் இதர





துங்கள்,'' என்றான் கிளைவ்.

காப்டன் கோப் சிந்தனை யிலிறங்கினான் சிறிது நேரம். பிறகு, ''அப்படியே செய்வோம்,'' என்று கூறி விட்டுக் காகிதமும் பேனாவும் கொண்டு வரச் செய்து விவரங்களைக் கவர்னருக்கு எழுத முற்பட்டான்.

அவன் எழுத முற்பட்ட துமே கூடாரத்திலிருந்து கிளம்பிய கிளைவ் தீவிர யோசனையுடன் கொள்ளி டக்கரையை நோக்கி நடந்து அதன் கரைமீது நின்றான். எதிரே ஒரு மைலுக்கு அகண்டமாக விரிந்த கொள்ளிடமும், இடையே காடுகளும் புதர்களும் நிரம் பிய தீவுப் பிரதேசமும், கோடியில் முகத் துவாரத்துக்கருகிலிருந்த தேவிக்கோட் டையின் மதிளும் பீரங்கிக் கூண்டு களும் அவன் சிந்தனையைப் பெரிதும் கிளறின. கண்ணுக்கு மிக ரம்மியமான அந்த இயற்கைக் காட்சி போர் ஏற் படும்போது எத்தனை பயங்கரமாக மாறக்கூடும் என்று எண்ணி, போயும் போயும் இந்தக் காட்டுராஜா எதற் காக நம்மிடம் வந்து சேர்ந்தான் என்று தன்னைத்தானே கேட்டும் கொண்டான் கிளைவ். காட்டு ராஜா நினைப்பு வந்ததும் தேவிக்கோட்டையை அடுத்திருந்த காட்டையும் புதர்களையும் ஊன்றிக் கவனித்தான். அந்த இருளில் காடு பெரும் பிசாசுபோல் காட்சியளித்தது. ''இந்தக் காடு எனக்குப் பிடிக்கவில்லை,'' என்று தனது தலையை இருபுறமும் ஆட்டிக் கொண்டான், அதிருப்தியை உணர்த்த. இருப்பினும் ரசிகனானதால் இரவிலும் கொள்ளிடமும் தீவுக்கோட் டையும் அளித்த ரம்மியமான காட்சி யில் மனத்தைப் பறிகொடுத்து நீண்ட நேரம் கொள்ளிடக் கரையிலேயே நின் றிருந்தான்.

உதவிக் கப்பல்களும் வர இன்னும் குறைந்தபட்சம் இரண்டு நாட்களாவது ஆகாதா?''

''ஆகும்.''

''தவிர நமது படைகளும் புயலில் தத்தளித்துக் களைத்திருக்கின் றன. இந்தப் படையை வைத்துக் கொண்டு எதிரேயுள்ள கோட்டையைப் பிடிக்க முடியாது.''

''அதனால்?''

''இன்னும் சில சோல்ஜர் களை அனுப்பும்படி கேட்டு ஸெய்ண்ட் டேவிட் கோட்டைக்குக் கடிதம் எழு

கொள்ளிடத்தை ரசித்தது அவன் மட்டுமல்ல, காட்டை நினைத்த தும் அவன் மட்டுமல்ல, எதிர்க்கரையில் முராரிராவைப் பிரிந்து கோட்டைக்குள் புகுந்த விஜயகுமாரனும் அதே விஷயங் களில் இதயத்தைச் செலுத்திக் கொண் டிருந்தான். கோட்டையின் மேற்கு வாசல் வழியாக உள்ளே நுழைந்தவன் நேராகத் தனது அறைக்குச் செல்லா மல் கோட்டைச் சுவரைச் சுற்றி, வீரர் கள் உலாவவும் எதிரிகள் வருகையை அறியவும் கட்டப்பட்டிருந்த அகலமான தளத்திற்குச் சென்ற படிகள் மீது ஏறிச் சென்றான். அன்று என்ன காரணத் தாலோ வீரர்கள் யாரும் அங்கு அதி

## முன்கதை:

ஸ்ரீரங்கத்தில் பெரிய பெருமாளைத் தனிமையில் தரிசிக்கவந்த தஞ்சை மன்னன் மகள் நந்தினியும் மந்திரி டபீர் பண்டிதரும் அங்கு வேறொரு வாலிபன் இருப்பதையும் அரங்கனின் கண் வைரமொன்று காணமல் போயிருப்பதையும் கண்டு அந்த வாலிபனே திருடன் என்று நினைத்து அவனைக் கைது செய்ய முயல, விஜயகுமாரன் என்ற அந்த வாலிபன் நந்தினியை அபகரித்துச் சென்றுவிடுகிறான்.

அவனும் நந்தினியும் மகாராஷ்டிர தளபதி முராரிராவையும் ராபர்ட் கிளைவ் என்ற வெள்ளைக்கார லெப்டினன்டையும் சந்தித்து, சந்தாசாகேபின் வீரர்களிடமிருந்து தப்பி, தஞ்சைக்கு வருகிறார்கள். அங்கு இருவருக்கும் காதல் ஏற்பட, தேவிக்கோட்டையை வெள்ளையர் பிடிக்க முயல்வதாகக் கேள்விப்பட்ட தஞ்சை மன்னர் பிரதாபசிம்மன் தமது தளபதி மானாஜியையும் விஜயகுமாரனையும் கோட்டைப் பாதுகாப்புக்கு அனுப்புகிறார்.

இதற்கிடையில் காப்டன் கோப்பின் தலைமையில் கிளைவுடன் வந்த பிரிட்டிஷ் படை கொள்ளிடக் கரையில் தேவிக்கோட்டைக்கு எதிரே நிற்கிறது. அங்கு வந்த முராரிராவ் அடுத்த இரண்டு நாட்களுக்குப் படையெடுப்பு இருக்காது என்று கூறி எதிரியைச் சமாளிக்க வேண்டிய முறைகளையும் போதித்து மறைகிறார். எதிர்க்கரையில் உடனே கோட்டையைத் தாக்க வேண்டுமென்ற காப்டன் கோப்பின் யோசனையைக் கிளைவ் ஒப்புக் கொள்ளவில்லை. இரண்டு நாட்கள் போகட்டும் என்கிறான்.

---

கம் இல்லை. கோட்டைச் சுவரின் இடைவெளிகளிலிருந்த பெரும் காவற் கூண்டுகளில் மட்டும் பார்வையாளர்கள் மாட்ச்லாக் துப்பாக்கிகளுடன் காவலிருந்தார்கள். அக்கூண்டுகளிலொன்றைத் தாண்டி, சுவரோரத் தளத்தில் அவன் நடந்து சென்றபோது அங்கிருந்த வீரனொருவன் அவனுக்குத் தலைவணங்கினனும் அதைக் கவனியாமலே அந்தத் தளத்தில் நடந்து சென்ற விஜயகுமாரன் தளத்தின் ஒரு மூலைக்கு வந்ததும் நின்றபடியே சுற்றுமுற்றும் நோக்கினான்.

இரவும் வானக் கூரையின் தாரகைகளும் கொள்ளிடத்துக்கு இணையிலா அழகைக் கொடுத்திருந்தன. தூரத்தே கொள்ளிடத்தை அணைக்கத் துடித்த கடலுங்கூட மிக இன்பமாகக் காட்சியளித்தது. அவனுக்கு இடப்பக்கத்தில் எட்ட இருந்த காட்டில் அவன் கண்கள் நிலைத்தபோது முராரிராவின் எண்ணமே அவன் இதயத்தை ஆட்கொண்டது. அவர் சொல்லிவிட்டுப் போன போர் முறைகளை அவன் மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்த்தான். தேவிக்கோட்டை இருந்த தீவுக்குக் குறுக்கே ஓடிய வாய்க்கால்களையும் கவனித்தான். 'அப்பப்பா! முராரிராவ் சொன்னது எத்தனை சரி! அவர் போர் முறையை விடச் சிறந்த போர் முறையை யார் வகுக்க முடியும்?' என்று தன்னைப் பலமுறைகள் கேட்டுக் கொண்டான். சமயபுரச் சத்திரத்தில் சந்தித்த சம்பவங்கள் அவனை முராரி ராவுடன் பெரிதும் இணைத்து நெருக்கின. அவர் தனது சபதத்தை நினைவுபடுத்தியதுகூட அவன் மனத்திலே பெரும் கிளர்ச்சியை ஏற்படுத்தியிருந்தது. அவன் மனத்திலே எழுந்தது ராணி மீனுட்சியின் உருவம். அவள் கண்கள் அவனைச் சுட்டன. உடலை வளைத்த தீயின் மத்தியில் அவள் காட்சியளித்தாள். 'என்னை மறந்துவிட்டாயா விஜயகுமாரா? உன் வம்சத்தையும் மறந்து விட்டாயா! சபதம் என்னவாயிற்று?' என்று பல கேள்விகள் தீயின் மத்தியிலிருந்தே ராணி தொடுத்தாள்.

விஜயகுமாரன் தனது கண்களை இரு கைகளாலும் மூடிக்கொண்டான். ''இல்லை தாயே, மறக்கவில்லை, மறக்கவில்லை,'' என்று வாய்விட்டு வெறியன்போல் கூவவும் செய்தான்.

அப்பொழுது அவன் தோள் மேல் பதிந்தது ஓர் ஆறுதல் கரம். 'எதை மறக்கவில்லை?'' என்று வினவியது ஒரு கிள்ளைக் குரல் அவன் காதுக்கருகில்.

விஜயகுமாரன் திரும்பவில்லை. அவன் காதுக்கருகில் முணுமுணுத்த உதடுகளுக்குரியவள் நந்தினியென்பதை அவன் அறியவில்லையா என்ன? அவள் உடல் நன் முதுகுப்புறத்தில் மெல்லப் பட்டுக் கொண்டிருந்ததையும் புரிந்து கொள்ளாத அளவுக்கு அவன் உணர்ச்சிகள் மங்கிவிட்டனவா என்ன?

இல்லை, இல்லை, மங்கவில்லை. அதற்குப் பதில் கொந்தளித்து எழுந்து கொண்டிருந்தன. இரவு அளித்த இருட்டின் பாதுகாப்பு, அவள் உடலழகுகள் பின்புறம் பதிந்தளித்த இன்பஜாலம், காதுக்கருகே ஒலித்த சிறுகுரலளித்த மந்திர ஸ்வரம், ஆகிய மூன்றும் அவன் உள்ளத்தின் சோகத்தைக் கிழித்தன. சபதத்தின் வேகத்தைக்கூடச் சிறிது சமனப்படுத்தின. அந்த நிலையில் திரும்பாமலும் அவளை முன்புறம் இழுக்காமலும் சற்றுக் கோபத்துடன் பேசுபவன் போல் கேட்டான் விஜயகுமாரன், ''நீ எதற்கு இங்கு வந்தாய்?'' என்று.

அரசகுமாரி நந்தினி பின்னுல் பதுங்கிய நிலைவிட்டு அவன் பக்கத்தில்

வந்து அவன் கையொன்றுடன் தனது கையைக் கோத்தாள். சற்று இடித்துக் கொண்டும் நின்றாள் வேண்டுமென்றே. அத்துடன் கேட்டாள் மெதுவாக, "நீங்கள் எதற்காக இங்கு வந்தீர்கள்?" என்று.

"கோட்டைக் காவலைப் பார்க்க வந்தேன்," என்றான் விஜயகுமாரன் ஏதோ பதில் சொல்லித் தப்ப வேண்டுமென்பதற்காக.

"எந்தக் கோட்டைக் காவலை?" என்றாள் அரசகுமாரி சிரித்துவிட்டு.

"தேவிக் கோட்டை காவலை," என்றான் விஜயகுமாரன். மெள்ளத் தன் இடது கையை அவள் இடையிலும் செலுத்தினான். செலுத்திய இடை சிறிது சாய்ந்திருந்ததால் அதன் கீழே இருந்த பகுதியின் மேலெழுச்சியிலும் அந்தக் கை பட்டது.

அந்தக் கையின் ஸ்பரிசத்தால், அது தவழ்ந்து திடீரென தங்கிவிட்ட இடத்தின் காரணத்தால், நந்தினி பெரிதும் நிலைகுலைந்தாள். அதன் விளைவாக அவன் காதில் ரகசியமாகச் சொன்னாள், "இல்லை. தேவிக்கோட்டைக் காவலை நீங்கள் சரியாகக் கவனிக்கவில்லை," என்று.

"என்ன! காவலைக் கவனிக்கவில்லையா!" என்றான் விஜயகுமாரன். அவன் சொற்களில் ஒலித்தது வியப்பா விரகமா என்பது நந்தினிக்குப் புரியவில்லை. "இல்லை," என்றாள் நந்தினி.

"என்ன இல்லை?"

"காவலைக் கவனிக்கவில்லை."

"வேறு என்ன செய்கிறேன்?"

"உடைக்கிறீர்கள்."

சட்டென்று அவளை நோக்கித் திரும்பினான் விஜயகுமாரன். "உடைக்கிறேனா?" என்றும் வினவினான் வேகத்துடன்.

அவன் திரும்பிய வேகத்தில் அவன் மார்புடன் தனது மார்பு சரேலென்று உராய்ந்து விட்டதால் திடுக்கிட்டாள் அரசகுமாரி. திடுக்கிட்டாளா அல்லது திருப்திப்பட்டாளா? அவளுக்கே புரியவில்லை.

விஜயகுமாரன் நிலையும் பெரும் சங்கடத்தில் இருந்தது. அப்படி ஒரு கருங்கற்கள் தன் மீது தாக்கும் என்பதை அவன் எதிர்பார்க்காததால் பயத்தால் அவன் மார்பு துடித்துக் கொண்டிருந்தது. பயத்தை உள்ளெழுந்து கொண்டிருந்த வெறி உதறிவிடும் போலிருந்தது. அதனால் என்ன செய்வதென்று அறியாத விஜயகுமாரன், "காவலை உடைக்கிறேனா? யார் காவலை?" என்று ஏதோ உளறினான். அத்துடன் அவள் இடையில் தனது இரு கைகளையும் செலுத்தித் தனது தலையை அவள் தோள்மீது வைத்தான்.

"ஆம் உடைக்கிறீர்கள், காவலை உடைக்கிறீர்கள். கோட்டைக் காவலை உடைக்கிறீர்கள். தேவிக்கோட்டைக் காவலை," என்று முணுமுணுத்தாள் அரசகுமாரி.

விஜயகுமாரன் தன் உணர்ச்சிகளைப் பெரிதும் அடக்கிக் கொண்டாலும், முடியாமல் திணறினான். அந்த நிலையிலிருந்து தப்ப, "தேவிக்கோட்




ஜெயசுதாவின் அம்மாவிடம், "செட்டில் இருக்கிறாரா உங்கள் டாட்டர்?" என்று கேட்டேன்.

"செட்டில்தான் இருக்கிறாள். தெலுங்கு ஃபீல்டில் செட்டில் ஆகிவிட்டாள்," என்று சிரித்தார் ஜெ.சு.வின் அம்மா.

—பா



"என் பெண் கொடி போலிருப்பாள் என்று சொன்னேனே..."

டைக் காவலை நான் உடைக்கவில்லை, தவறு," என்றான் மெல்ல.

நந்தினியின் கரமொன்று தனது தோள் மீது சாய்ந்திருந்த அவன் தலையைத் தடவிக் கொடுத்தது. "நான் தேவியல்லவா?" என்று அவள் உதடுகள் முணுமுணுத்தன.

"ஆம் ஆம்," என்றான் விஜயகுமாரனும் உணர்ச்சிப் பெருக்கால்.

"என் கோட்டையை உடைத்து விட்டீர்களே, என் பாதுகாப்பெல்லாம் பறந்துவிட்டதே...." என்ற அரசகுமாரி அவனை விட்டு மெல்ல அகல முயன்றாள்.

அவன் இரும்புக் கைகள் அவளை விடவில்லை. "இது இன்னும் மோசம்," என்றாள் அவள் மெதுவாக.

"எது?"

"இப்பொழுது உங்கள் கைகள்...."

"என்ன அவற்றுக்கு?"

"கோட்டையை நெரிக்கின்றன."

"சேச்சே, அரசகுமாரி!"

"என்ன சேச்சே. அரசகுமாரியைப் பிடிக்கவில்லை?"

"பிடிக்காமலென்ன?"

"ஆம் ஆம். பிடித்துக் கொண்டிருக்கிறீர்கள் பலமாக. அடடே, விடுங்கள், வலிக்கிறது."

இதைக் கேட்ட அவன் மெள்ளப் பிடியைத் தளர்த்தினான். ஆனால் முழுதும் அவளைச் சுதந்திரமாக விடாமல், "அரசகுமாரி...." என்று அழைத்தான்.

"ஆமாம், இத்தனைக்குப் பிறகு அரசகுமாரி பட்டம் வேறு," என்று இன்பமாக நகைத்தாள் நந்தினி.

"நந்தினி!" என்று அழைத்தான் விஜயகுமாரன்.

"என்னவாம் நந்தினிக்கு?" அவள் குரல் குழைந்து கிடந்தது.

"அதோ பார் கொள்ளிடத்தை," முகத்துவாரத்தைச் சுட்டிக் காட்டினான்.

"அதற்கென்ன?"

"கடலலைகள் கொள்ளிடத்தைத் தழுவத் துடிக்கின்றன."

"உம்."

"ஆனால் இடையே எழுந்திருக்கும் மணல் மேடு அவற்றைத் தடுக்கின்றது."

"உம்..."

"என் நிலையும் அப்படித் தானிருக்கிறது."

"உங்கள் நிலையா?"

"ஆம் நந்தினி. உன்னை அடைய என் இதயக் கடலில் அலைகள் கொந்தளித்து எழுகின்றன. இடையே என் சபதம் என்ற மணல் மேடு அலைகளைத் தடுக்கின்றன," என்ற விஜயகுமாரன் பெருமூச்செறிந்தான்.

நந்தினியும் கடல் பகுதியை நோக்கினாள். பிறகு எதற்காகவோ நகைத்தாள். "ஏன் நகைக்கிறாய் நந்தினி?" என்று வினவினான் விஜயகுமாரன்.

"கடலும் உங்களைப் போலத் தான்," என்றாள் அவள்.

"எப்படி?"

"அதோ பாருங்கள் கடலை."

"பார்த்தேன்."

"தெரியவில்லையா?"

"எது?"

''மணல் மேட்டைப் பிளந்து கொண்டு அலைகள் ஒரு கால்வாயைச் சிருஷ்டித்திருக்கின்றன.''

''ஆம்.''

''அதன் மூலம் கொள்ளிடத்துக்குள் பாய்ந்து வருகின்றன.''

''ஆம்,'' என்ற விஜயகுமாரன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

''என்ன சிந்திக்கிறீர்கள்?'' என்று வினவினுள் நந்தினி.

''அந்தக் கால்வாய்....'' என்று இழுத்தான் விஜயகுமாரன். அவன் குரலில் வேகமிருந்தது.

வேகத்துக்குக் காரணம் புரியாததால் நந்தினி கேட்டாள், ''என்ன அந்தக் கால்வாய்க்கு?'' என்று.

''மிக ஆழம்,'' என்ருன் விஜயகுமாரன்.

''சேச்சே, மிகவும் மோசம்,'' என்ருள் நந்தினி.

''மோசமில்லை. நல்ல ஆழம் நந்தினி. அதில் பெரும் கப்பல்கள் நுழைய முடியும்.''

''நல்ல பேச்சு.''

''அதனுல்தான் பிரிட்டிஷ்காரர்கள் இந்தத் தேவிக்கோட்டையை விரும்புகிறுர்கள்.''

விஜயகுமாரன் பேச்சும் தன் நினைப்பும் வெவ்வேறு திசைகளில் ஓடுவதை உணர்ந்த நந்தினி வெட்கத்தால் குன்றிப்போனுள். 'ஐயையோ வெட்கக்கேடே! என் நினைப்பு என்ன இத்தனை மோசமாகிவிட்டது!' என்று தன்னை நொந்து கொண்டாள்.

அவன் கைகளிலிருந்து பலவந்தமாக விடுவித்துக் கொண்டு தாழ்வாயில் மெல்ல நடந்து சென்ருள். அவளை அவன் பின்பற்றிச் சென்ருன். அவள் ஓரிடத்தில் நின்று கடலையும் கொள்ளிடத்தையும் நோக்கினுள். விஜயகுமாரன் பின்புறமாக அவளை வளைத்து வலுவுடன் அணைத்தான். அவள் ஏதும் பேசவில்லை, அவன் பேசினுன் அவள் காதுக்கருகில், ''கோட்டையை உடைக்கப் போகிறேன்,'' என்று

அதற்கும் பதில் சொல்லவில்லை அவள். ''அதோ பார் கொள்ளிடத்தையும் கடலையும். கடல் வழி வகுத்துக் கொண்டது வீரகாவியம், கொள்ளிடம் இடங்கொடுத்தது காதல் காவியம். இரண்டும் கலப்பதில் விளைந்திருக்கிறது இன்ப வெள்ளம். இயற்கையின் வெள்ளம் அது. கரையை அலட்சியம் செய்வது, விளைவுகளை அறியாதது, ஆனுல் கடவுள் அளித்தது,'' என்று அவன் காதுக்கருகில் காவியம் பேசினுன்.

அவள் இதயமும் அந்தக் கதையைத்தான் சொல்லிக் கொண்டிருந்தது. மெள்ள மெள்ள நிலை அத்துமீறிக் கொண்டு இருந்தது, இருவர் உள்ளத்திலும் எழுந்த எச்சரிக்கைக் கூச்சல்கள் அடங்கத் தொடங்கின. துணிவு தலையெடுத்தது.

(தொடரும்)

**கூ**ப்பிடு தூரம் என்ற சொல் சரி அல்ல; 'கூப்பீடு' என்பதே சரி. அது அரை மைலுக்கும் சற்று அதிகம் என்பது யாப்பருங்கல விருத்தியில் வரும் இந்த வாய்ப்பாட்டைப் படித்தாலல்லவோ தெரிகிறது?

''விரற் பன்னிரண்டு ஒரு சாணும்.
இரு சாண் ஒரு முழம்.
நான்கு முழம் ஒரு கோலாம்.
ஐந்நூறு கோல் ஒரு கூப்பீடாம்.''

அதாவது 4.5 பர்லாங்.

—டி. ஆர். சங்கர்—

# வசப்பக் கனிகள்

**வண்ணதாசன்**

பிரபாவுக்குக் கல்யாணம் என்று கேள்விப்பட்டேன்.

'அப்பாடி' என்றிருந்தது. ரொம்ப ரொம்பச் சந்தோஷமாய் இருந்தது. தொங்கல் இருட்டில் வந்து கொண்டிருக்கையில் தெருவிளக்கு விழித்தால், அறியாமல் தானே கும்பிட்டுக் கொள்கிற கை மாதிரி உள்ளுக்குள் ஒரு அஞ்சலி; மத்தாப்பு ஒளி.

இதைச் சுந்தரத்திடம் சொல்லவேண்டும். அவனுக்கு சம்பந்தமிருக்கிறது இதில்.

மாப்பிள்ளை வடக்கே தூரமாம். பம்பாயாம். தூரமோ தொலைவோ? 'இந்தா பிடி'ண்ணு கையைக் கொடுத்துப் பிரபாவைக் கரையேற்றினால் சரிதான். தெருவா இது? கசம். ஆளைச் சுருட்டி இழுக்கிற கசம். கொஞ்சமா பிரபாவைப் படுத்தியிருக்கிறார்கள். 'அவள் அப்படியாக்கும் இப்படியாக்கும், ஆனை பூனை அறுவத்திரண்டு' — எச்சில் நாக்கால் எத்தனை சூடு இப்படி. அத்தனை தழும்பின் சுவடும் தெரியாமல் பசுப்போல பிரபா நடமாடிக்கொண்டிருந்தாள்.

ஒருநாள் — கிழமை தேதியெல்லாம் ஞாபகம் இல்லை — நான் காலையில் வாசல் நடையில் வெறுமனே நின்று கொண்டிருந்தேன். அது எனக்குப் பிடிக்கும். தெருவடியில் சாய்ந்திருக்கும் ஒரு வீட்டின் போகன் வில்லாச் செடியின் உதிர்ந்த செம்பூக்கள் காற்றில் தரையை மெழுகியபடி தெருவைத் தடவி நகர்ந்து கொண்டிருந்தது. 'இப்படியே தரையிலே எதுவரைக்கும் இந்தப் பூவெல்லாம் நடக்கும்?' நான் யோசனை பண்ணிக்கொண்டே திரும்பு

அவளுடைய பெயர் பிரபா என்பது பிந்திய தகவல். ஒரு புதிய பெண்ணை, பெயர் தெரியாத, அடையாளம் தெரியாத நிலையில், அவள் பெண்ணாயிருக்கிற ஒன்றுக்காகவே பார்க்கிற ஆழத்தோடு பார்த்தேன்.

வாய்க்காலில் குளித்துவிட்டு வருகிற நிலை. ஈரத்தலையின் ஒரு பிசிரில், ஒரு மயிரிழையில் பாசி சேர்ந்தாற்போல், ஒரு நீர்முத்து. கருப்பு ரப்பர் வளையலணிந்த கையால் அணைத்த செப்புக்குடம். நேர்த்திக் கடன் முடிந்த மஞ்சள் துணிபோல் ஒரு இதமான மஞ்சள் மினுமினுக்கிற உடல். ஈரச் சேலை மோதுகிற நேர்த்தியான பாதங்கள் — ஒரு வளைவான கோடு இழுத்து முடிப்பதுபோல் மேலிருந்து கீழாய் என் பார்வை இறங்கி நின்றது. அந்தப் பார்வையின் கனத்தில் மிரண்டு நடை வேகப்படுகையில் குடம் தளும்பியது. கையளவு நீர் குதித்துச் சூரியச் சிதறலாய்த் தரையில் நீர்ப்பூ ஒன்று முகிழ்த்தது.

அவள் போய்விட்டிருந்தாள்.

போனதற்குப் பிறகும் அந்த இடத்தில் ஒரு உருவம் இப்போதும் தெரிகிறது. எப்போதும் தெரியும். எந்த இடத்தில் இருந்து நினைத்தாலும் அந்தப் பூ மெழுகின ரோடு தெரியும். நீர் முத்துத் தெரியும். பாதம் தெரியும். நீர்க் கோலம் தெரியும்.

இந்த நினைவு மங்கலந்தான் காரணமோ என்னவோ, பின்னால் யார் அவளைப்பற்றி எது சொன்னாலும் நம்ப முடியாது போயிற்று.

அன்றைக்குச் சாயந்திரம் சுந்தரம் வந்தான். அவன்தான் வெகு

# சுஜாதாவின் இதயம் பேசுகிறது!



விருப்பமான திரைப்படம்:
நான் நடித்த அனைத்துமே!
சுகமான மாலை நேரம்:
டெலிவிஷன் பார்ப்பது.
அவரைப் பயித்தியமாக அடிப்பது:
கனமான தங்க சங்கிலிகள்
விருப்பமான அழகு சோப்:
நான் நேசிப்பது லக்ஸ்




HLL 1963

"லக்ஸ் என் மேனியை மென்மையாகவும் அழகாகவும் வைத்திருக்கிறது. லக்ஸ் என் நம்பிக்கைக்குரியது—காரணம் அது மிகத் தூய்மையானது, மென்மையானது"
—என்கிறார் சுஜாதா.

பரிசுத்தமான, மென்மையான **லக்ஸ்—சினிமா நட்சத்திரங்களின் அழகு ஸோப்**

**லக்ஸ்**-பல கண்கவர் வண்ணங்களில் வருகிறது

**இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு**

# ராஜபேரிகை

**சாண்டில்யன்**



## 26. காதலி ஓட்டம்

கையில் வளைந்த வஞ்சி, காரிருள் அளித்த காப்பு, கடலலைகளின் கூச்சலளித்த வேகம், கொள்ளிட நீரைத் தொட்டுக் கொஞ்சி வந்த தென்றல், அவள் கூந்தலின் வாசமலரைத் தழுவியளித்த போதை, இயற்கையாகவே அவள் உடலில் கமழ்ந்த சுகந்தம் தந்த மயக்கம், நாணமெனும் கரையுடைந்ததால் எதற்கும் தயாராயிருந்த மனம்—இத்தனையும் அந்த ஆண் மகனுக்குத் துணிவை அளித்தும், இச்சையின் பூர்த்திக்குச் செல்ல, துளிர்த்த துணிவின் பூர்த்தியை எட்ட, அவனுக்கு ஏனோ மனம் வரவில்லை. இத்தனைக்கும் காவற் கூண்டுகளில் மட்டுந்தான் வீரர்கள் இருந்தார்கள்; காவற் கூண்டுகளும் நீளமும் அகலமுமான கோட்டைச் சுவர்களின் இடையே நல்ல தூரத்தில்தானிருந்தன; எதிர்க்கரையில் பிரிட்டிஷ் படையிருந்ததால் பந்தங்கள் கூண்டுகளைத் தவிர வேறு எந்த இடத்திலும் கிடையாது. அப்படியிருந்தும் ஏன் தயங்கினான் விஜயகுமாரன்? கைகள் விலகி அவள் தோள்களில் மட்டும் பதிவானேன்? அவன் உடல் ஏன் திடீரெனக் கெட்டிப்பட்டு விட்டது? இந்தக் கேள்விகளை நந்தினி கேட்கவில்லை, ஆனால் அனுபவித்தாள். தன்னையும் காதற் கடலில் அழுத்தி அவனும் அழுந்த முற்பட்ட நிலையில், யாரும் அணுக முடியாத, அணுகத் துணியாத தங்கள் தனிமையில், ஏன் அப்படி ஓர் இடையூறு வந்தது என்பது விளங்காத நந்தினி ஏக்கப் பெருமூச்சு விட்டாள். விஜயகுமாரன் அவள் ஏக்கத்தை உணர்ந்தான், உணர்ந்த பின்பும் உணர்ச்சிகளைக் கொட்டினானில்லை. மெள்ள மெள்ளச் சுயநிலைக்குத் திரும்பிக்கொண்டிருந்தான். ஆகவே, ஏதும் பேசாமல் தன் கைகளை அகற்றிச் சரிந்து விட்ட அவள் மேலாடையைத் தன் கைகளாலேயே எடுத்து அவள் மீது போர்த்தினான் மிக மெதுவாக. அவள் இதயம் படபடத்தது. அவள் பின்னால் மீண்டும் அவன் உடல் மீண்டும் ஒரு முறை பலமாக அழுந்தியது. அந்த நிலையில் அவள் காதுக்கருகில் சொன்னான் விஜயகுமாரன், ''நேரமாகி விட்டது நந்தினி,'' என்று மிக மெதுவாக.

அவள் உதடுகளிலிருந்து பதிலேதும் உதிரவில்லை பல விநாடிகள்.

பிறகு உதிர்ந்ததும் ஒரு 'உம்' தான். அதுவும் நீண்டிருந்தது.

''நந்தினி!'' இதைக் காதுக் கருகில் சொன்ன விஜயகுமாரன்

அவள் கழுத்தில் இதழ்களை ஆழப் புதைத்தான் ஒரு முறை. மீண்டும் அழைத்தான் ஒரு முறை, ''நந்தினி! உன்னைத்தான்,'' என்று.

அந்த 'உன்னைத்தான்' அவளை எழுப்பியிருக்க வேண்டும். ''என்னஎனக்கு?'' என்று உதிர்ந்த சொற்களில் வேகமிருந்தது. வேகமளித்த சீற்றமும் இருந்தது.

விஜயகுமாரன் கைகள் அவள் தோள்களை நெரித்தன. ''இன்னும் சந்தேகமா?'' என்று சொற்கள் உதடுகளிலிருந்து உதிர்ந்தன ஆசையுடன்.

''எதைப் பற்றி ?'' நந்தினியின் குரலில் சீற்றம் இருந்தது.

''என் ஆசையைப் பற்றி,'' என்று அவன் அவள் காதுக்கருகில் ரகசியம் பேசினான்.

''இல்லை. சந்தேகமில்லை. அதற்காகத் தோளை முறிக்க வேண்டாம். எடுங்கள் கையை.'' நந்தினியின் சொற்கள் கடுமையுடன் உதிர்ந்தன.

''நீ என்னைப் புரிந்துகொள்ளவில்லை நந்தினி,'' என்று கெஞ்சினான் விஜயகுமாரன் தோள்களிலிருந்து கைகளை எடுக்காமலே.

ஆனால் அந்தக் கைகளை அவள் தன் கைகளால் பிடுங்கி எறிந்தாள். ''நன்றாகப் புரிந்து கொண்டேன்,'' என்றும் கூறினாள் சற்று விலகி நின்று, அவனை நோக்கித் திரும்பி.

''என்ன புரிந்துகொண்டாய்?'' என்று வினவினான் விஜயகுமாரன் சோகக் குரலில்.

அந்த வாள்மகளின் கண்கள் நன்றாகச் சாணை பிடிக்கப்பட்ட வாட்களின் நுனிகளைவிடக்

கூர்மையுடன் அந்த இருட்டில் பளபளத் தன. ''சொல்லட்டுமா?'' என்று கேட்ட அவள் குரலில் பழைய இன்ப கீதம் இல்லை. புலியின் உறுமல் இருந்தது. அடி பட்ட பெண் வேங்கை போலிருந் தாள் அவள்.

''சொல்,'' என்றான் விஜய குமாரன்.

''பெண்களைத் தழுவிக் கைவிடும் கயவன் நீ,'' என்றாள் அவள் தயை தாட்சண்யம். காதல், அனைத் தையும் கைவிட்டு.

''இல்லை நந்தினி!''

''வேறென்ன?''

''பெண்ணின் தனிமையைப் பயன்படுத்தாதவன்.''

''இத்தனை நேரம் செய்த தெல்லாம் என்ன?''

''அப்படி ஏதும் தவறு ஏற் படவில்லையே?''

''பெண்ணைத் தொடுவது தவறல்லவா? பின் நின்று தழுவுவது தவறல்லவா?''

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாத விஜயகுமா ரன் திணறினான். ஆனால் அவள் தொடர்ந்து பேசினாள், ''என்னை அடைய நீ இஷ்டப்படாததன் காரணம் தெரி யும் எனக்கு. என்னைக் குழந்தையென்று நினைக்காதே,'' என்று.

விஜயகுமாரன் அவள் பேச் சினால் நிதானத்தை இழந்தான். ''என்ன காரணம் தெரியும் உனக்கு?''




சமீபத்தில் 'இந்தியன் எக்ஸ் பிரஸ்' ஏட்டில் 'Homage to T. V.' (டி. விக்கு அஞ்சலி) என்ற தலைப்பில் ஒரு செய்தி வெளியாகியிருந்தது. டெலி விஷனுக்கு என்ன நேர்ந்தது என்ற ஆவ லோடு செய்தியைப் படித்தேன். விஷயம் வேறு ஒன்றும் இல்லை. கேரள முன்னாள் அமைச்சர் T. V. தாமஸ் அவர்களுக்கு அஞ் சலி செலுத்தப்பட்ட செய்திதான் அது!

—இரா. கந்தையா

போர்த்தியிருப்பதைப் பார்த்தால் குளிர்கிற மாதிரி இருக்கிறது. சிரிப்பதைப் பார்த்தால் குளிர்விட்டுப் போன மாதிரி இருக்கிறது.

ஏ. நாகேஸ்வரராவ்—மஞ்சுளா.

படம்: பங்காரு பொம்மலு.

''நீ என்னை வேண்டாத காரணம்..என் தந்தை,'' என்றாள் நந் தினி.

இந்தப் புதிய அஸ்திரம் அவன் இதயத்தில் வேகமாகப் பாய்ந் தது, புத்தியைக்கூடக் குழப்பியது. ''நீ சொல்வது எனக்குப் புரியவில்லை,'' என்றான் விஜயகுமாரன் குழப்பத்துடன்.

''என் தந்தை அவர் தந் தைக்கு* ஒழுங்காகப் பிறந்தவரல்ல,'' என்ற நந்தினி அவனைக் கூர்ந்து நோக் கினாள்.

''உன் தாய்தான் அவர் வாளுக்கு மாலையிட்டாளே! க்ஷத்திரிய தர்மப்படி அது விவாகம்தானே?''

''அது ராஜபுத்திரர் வழக் கம். மராட்டியர் பழக்கமல்ல.''

''அதனால்?''

''துக்காஜி என் தந்தையின் மனைவியைச் சேர்த்துக்கொண்டதாகச் சொல்கிறார்கள். அவர் ஆசைநாயகியா கக் கருதுகிறார்கள். ஆகவே என் தந்தை அவர் தந்தையின் வைப்பாட்டி மகன்.''

---

* துக்காஜி ராஜாவுக்கு விவாகங் கள் நடந்தன. இதைத் தவிர அபிமானத் தால் சேர்த்துக் கொள்ளப்பட்ட அறுவரில் மராட்டியப் பெண்ணும் ஒருவள். கத்தி வைத்து விவாகம் செய்து கொண்ட அந்த மராட்டியப் பெண்ணான அன்னபூர்ணாபா டம் சகம் 1664-சர்வதாரி வருஷத்தில் பிர தாப சிம்மராஜா பிறந்தார்.

Bhonsle Vamsa Charita—Tanjore Saraswati Mahal Series No-46—Marathi Inscription in Big Temple Tanjore—Tamil Version—Page.46.



இந்தச் செய்தி விஜயகுமாரனுக்குப் புதிதல்லவென்றாலும் நந்தினி தன் போக்குக்கு அதை ஒரு காரணமாகக் காட்டியதும், அவள் தன் பிறப்பைப்பற்றிச் சொன்ன விதமும் அவன் இதயத்தைச் சம்மட்டி கொண்டு தாக்கின. அதனால் அவன் கூறினான், ''அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. இது எனக்குத் தெரியாத விஷயமுமல்ல,'' என்று இறுக்கிப் பிடித்தான்.

அவள் திமிறினாள். ''திமிறினால் நொறுக்கி விடுவேன்,'' என்று இரைந்த அவன் தன் கைகளால் அவளை அளவுக்கு மீறியே நெரித்தான். ''இதோ பார் நந்தினி! உன் தகப்பன் யாரென்பதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. எதிர்க்கரையிலிருக்கும் காட்டு ராஜாவைப்போல் அவன் குப்பியின் மகனாயிருந்தாலும் இருக்கட்டும். சாதி காதலைத் தடுக்காது. என் விஷயத்தில் திருமணத்தையும் தடுக்காது....'' என்று சீறிக்கொண்டு சொற்களை வாரிக் கொட்டிய அவனை நோக்கி நந்தினி கேட்டாள், ''இப்பொழுது தடுப்பது என்ன?'' என்று.

''என் சபதம். எதிரேயுள்ள போர். இதில் எதை நிறைவேற்றுவதில் நான் மடிந்தாலும், சந்தர்ப்பம் கிடைத்தும் உன்னைக் கெடுக்கவில்லையென்ற சந்துஷ்டியுடன் நான் மடிய வேண்டும். ஆனால் இவையனைத்திலும் நான் பிழைத்துவிட்டால் உன்னை நோக்கி வருவேன். உன் தந்தை மறுத்தாலும் உன்னைத் தூக்கிச் சென்று மணம் புரிவேன். இது சத்தியம், சத்தியம்,'' என்று ஆவேசத்துடன் இரைந்த அவன் அவள் கன்னத்தில் இதழ்களை ஆழப் புதைத்தான். பிறகு கழுத்திலும் புதைத்தான். பிறகு அவளை விட்டுவிலகி நின்று, ''நீ செல்லலாம்,'' என்று உத்தரவும் இட்டான்.

அவள் செல்லவில்லை, வேறு எதுவும் சொல்லவும் இல்லை. நகைக்க மட்டும் செய்தாள்.

''ஏன் நகைக்கிறாய்?'' என்றான் கடுமையுடன் விஜயகுமாரன்.

''நீங்கள் என்னைக் கெடுக்கவில்லை?''

''இல்லை.''

''இப்பொழுது நீங்கள்..''

# டிப்பிஸ்

# விருந்து விரைவில் - விருப்பமாக!



சிறுவர் விருந்தெல்லாம் வேடிக்கைச்சுவைக்காகவே. சிரிப்பு, விளையாட்டு வியப்பூட்டும் வேடிக்கை -முழுதுமாக. பசியெழப் பறந்துவரும் அவர்களுக்கு வேண்டும் உடனடி, விறுவிறுப்பான உணவு

நீங்கள் என்ன செய்வீர்?



சமயோசிதமாக, டிப்பிஸ் உபயோகியுங்கள் மாதிரிக்கு, குளிர் மென்பானங்களின் ஆறுபழச்சாறுகளைத் தனித் தரத்துடன் தருகிறது- டிப்பிஸ்-நறுஞ்சுவை ஊட்டக்கனிகள் ஆரஞ்சு, மா, அன்னாசி, எலுமிச்சை போன்றவற்றாலானவை. மற்ற கரி உயிரகியூட்டப்பட்ட பானங்களைவிட டிப்பிஸ் பழச்சாறுகள் விலையிலே சிக்கனமானவை. ஏனெனில், ஒவ்வொரு டிப்பிஸ் பாட்டிலி விருந்தும் உங்களுக்குக் கிட்டும் 25 சிறு கிளாஸ்சாறு. இதுவே உண்மைச் சேமிப்பு!



உருளைகிழங்கு வறுவல், சாண்ட்விச், உப்புப் பண்டங்கள் எல்லாம் பெற டிப்பிஸ் டொமேடோ கெட்சப் அல்லது 8க்கு 8 சுவைச்சத்துக்கள். சிறுவயதினர் சுவைத்து மகிழ, ஊட்டம் கூட்ட அவர்களுக்கு அளிப்பீர் டொமேடோ கெட்சப். அவர்களுக்கு அவை நன்மை தரும். எப்படியெனில், டிப்பிஸ் டொமேடோ கெட்சப் புத்தம்புது, பழுத்த, சிவப்புத் தக்காளியால் உருவானது.



சுவையிலே சிகரமாக தனிச் சிறபபோடு செய்வீர் கேக்! இரு வட்ட ஸ்பான்ச் கேக்குகளை எடுத்துக்கொள்ளுங்கள். டிப்பிஸ் ஜாம்களோடு அவற்றைச் சேர்தது சான்டவிச்சாக்குங்கள். (ஜாமகளில் டிபபிஸ் ரகங்கள்8-தித்திக்க') இப்போது மேல், பக்கவாட்டை ஐஸிங் செய்யவும். பதத்தோடு அழகூட்டி பரிமாறுவீர். பாருங்கள-கேக் தின்ற சிறுவர்கள் தம் விரல்களையும் சப்பும் ஜோரை!




பெரிதும் எல்லோரும் ஐஸ்க்ரீமைக் கப்புகளிலேயே தருகின்றனர். நீங்கள் வேறுபடுங்கள். தித்திப்பு நிறைந்த டிப்பிஸ் ஜெல்லி க்ரிஸ்டலை, ஐஸ்க்ரீம் மேல் மூடப்பரிமாறுங்கள். சிறுவர்கள் நக்கி ருசிப்பார்கள். காரணம், டிப்பிஸ் ஜெல்லி க்ரிஸ்டல்ஸ் அத்தனை, ருசிமிகுந்தவை.

ஆம். சிறுர் விருந்துகள் சிறப்போடு சுவையுணர்வு நிறையட்டும் — டிப்பிஸ் கூட!






1976 கிமோனாடே உலகத் தேர்வியே, டிப்பிஸ் டொமேடோ கெட்சப் தங்கப் பதக்கம் வென்றது — தரத்திற்காக, சுவைக்காக, பேக்கிங்குக்காக.

டிப்பிஸ் சுவைப்பீர் இன்றே.
நினைவில் நிற்கும் என்றும்!




Interpub/HL/3/76 TAM.

"வேகமா, மோகமா?" நந்தினி இதைச் சொல்லி மீண்டும் நகைத்தாள், பிறகு விடுவிடுவென்று கோட்டை மதிள் தாழ்வரையில் நடந்து சென்று கீழே சென்ற படிகளில் தடதடவென ஓடினாள்.

விஜயகுமாரன் அவளைத் தொடராமல் நின்ற இடத்திலேயே நின்றான். அவள் படிகளில் இறங்கியோடிக் கண்ணுக்கு மறைந்ததும் பெருமூச்சொன்றை விட்டான். பிறகு அந்தத் தாழ்வரையில் இரண்டு கூண்டுகளுக்கிருந்த இடைவெளியில் நடந்தான் அங்குமிங்குமாக. கடைசியில் கடலை நோக்கினான். கோட்டையின் வடபுறத்தில் அக்கரையிலிருந்த பிரிட்டிஷ் படையை நோக்கினான். 'எதிரி இன்னும் இரண்டு நாட்களுக்குத் தாக்க மாட்டானென்று முராரி ராவுக்கு எப்படித் தெரியும்?' என்று தன்னைத்தானே வினவிக்கொண்டான். அவன் எண்ணங்களில் பகிர்ந்துகொள்ள இஷ்டப்படுபவர் போல் அந்தச் சமயத்தில் தளபதி மானாஜியும் படிகளில் மெள்ள ஏறி வந்தார்.

படிகளில் ஏறிக் கோட்டைச் சுவரின் அகல பீடத்தை அடைந்ததும் மானாஜி சற்று நின்று விஜயகுமாரனைப் பார்த்தார். பிறகு அவனை மெள்ள அணுகி, "உப தளபதி தீவிர சிந்தனையிலிருப்பதாகத் தெரிகிறது," என்றார்.

அவரது கரகரத்த குரலைக் கேட்டதும் சுயநிலைக்கு வந்த விஜயகுமாரன், "தளபதியவர்கள் சொல்லியனுப்பியிருந்தால் நானே வந்திருப்பேனே," என்றான் பணிவுடன்.

மானாஜியின் வளைந்த மேலெழுந்த முரட்டு மீசை சற்று அசைந்தது, கண்கள் விஷமத்தைக் கொட்டின. "வந்திருக்க மாட்டாய்," என்ற அவர் சொல்லிலும் விஷமம் ஒலித்தது.

"தங்கள் உத்தரவை மீறக்கூடியவனா நான்?" என்று விஜயகுமாரன் வினவினான்.

"உத்தரவை மீற மாட்டாய். ஆனால்..."

"ஆனால்?"

"அதற்குப் பணிய நேரமாகும். அது குற்றமும் இல்லை."

"குற்றமில்லையா?"

"இல்லை."

"ஏனோ?"

"தளபதியைவிட அரசகுமாரியின் பதவி உயர்ந்தது.'

"என்ன சொல்கிறீர்கள்?"

"அரசகுமாரி ஒரு உத்தரவிட்டு நானும் ஒரு உத்தரவை இட்டால், முதலில் நீங்கள் படியக்கூடியது அரசகுமாரியின் உத்தரவுக்கு," என்று கூறினார் மானாஜி சர்வசகஜமாக.

"அரசகுமாரி எனக்கு என்ன உத்தரவிட முடியும்?" என்று வினவினான் விஜயகுமாரன் சந்தேகத்துடன்.

"அது எனக்கெப்படித் தெரியும்?" என்று கேட்ட மானாஜி, "ஆனால் அரசகுமாரியின் உத்தரவுக்கு நீங்கள் படியவில்லையென்பது தெரிகிறது," என்றும் தெரிவித்தார்.

"அது எப்படித் தெரியும் உங்களுக்கு?" என்று வினவினான் விஜயகுமாரன்.

"அரசகுமாரி படிகளில் இறங்கிக் கோபத்துடன் ஓடிக்கொண்டிருக்கிறாள். என் மீது இடித்தும் விட்டாள். அதனால் பாதகமில்லை. எனக்கு வயதாகிவிட்டது," என்ற மானாஜி தமது மேலுதட்டை நன்றாக விலக்கி விகசிக்கச் செய்து வெள்ளை வெளேரென்ற தந்தங்களைக் காட்டிச் சிரித்தார்.

விஜயகுமாரன் பொறுமை இழந்தான். "தளபதி!" என்று ஆத்திரத்துடன் அழைத்தான். "அரசகுமாரிமீது நீங்கள் மோதியது தவறு."

மானாஜி சிரித்தார் பெரிதாக. "நான் மோதவில்லையப்பா அவள் மீது. அவள் மோதினாள் என்மீது.



"சம்பளம் தருகிறபோது எனக்கு மட்டும் அழுக்கு நோட்டாகவே தாருங்க சார்."

"சலவை நோட்டு வேண்டாமா? ஏன்?"

"செலவு செய்யும்போது ரெட்டை ரெட்டை நோட்டாகக் கொடுத்துத் தொலைக்கிறேன்!"

சற்று நான் நிதானப்படாம லிருந்திருந் தால் படிகளில் நான் உருண்டே யிருப்பேன்.''

மானுஜி முகத்தில் ஒரு விநாடி சிந்தனைச் சாயை படர்ந்து மறைந்தது. பிறகு, ''மகிழ்ச்சி,'' என் றார் புன்முறுவல் கொண்டு.

''எதற்கு மகிழ்ச்சி?'' என்று கேட்டான் விஜயகுமாரன்.

''அவள் உடலின் மென் மையை நீ அறிந்து கொண்டதற்கு,'' என்றார் மானுஜி.

''நான் அறிந்து கொள்ள வில்லை,'' உளறினான் விஜயகுமாரன்.

''ஊகித்திருப்பாய்?''

''ஆம்.''

''ஊகத்துக்கு நீண்டநேரம் பிடித்திருக்கிறது. இடமும் மாற வேண்டியிருக்கிறது.''

''என்ன சொல்கிறீர்கள்?''

''முதலில் புதர், பிறகு கோட்டைச் சுவர்....''

''தளபதி!''

''இங்கு பல நாழிகைகள்..''

''தளபதி!''

''பிறகு காதலி ஓட்டம், கதாநாயகன் திண்டாட்டம்.'' இதைச் சொன்ன மானுஜி பிறகு விஜயகுமா ரனைக் கவனிக்காமல் வானத்தைக் கவனித்தார். ''பாதி இரவு ஓடிவிட்டது. எனக்குத் தூக்கம் வருகிறது,'' என்றார்.

''தூங்குங்களேன்.''

''அதற்கு முன்பு உன்னிடம் இதைக் கொடுக்க வேண்டியிருக்கிறது.'' ஓலையை எடுத்துக் கொடுத்தார் விஜய குமாரனிடம்.

''இங்கு இருட்டாயிருக்கி றதே?'' என்றான் விஜயகுமாரன்.

''வா, என் அறைக்குச் செல் லுவோம்,'' என்று கூறி அவனைத் தமது அறைக்கு அழைத்துச் சென்றார் மானுஜி.

மானுஜியின் அறையிலிருந்த விளக்கில் ஓலையைப் படித்த விஜயகுமா ரன், ''முடியாது. இது நடவாது,'' என்றான்.

''ஏன்?'' என்று வினவினார் மானுஜி.

''எதிரியை அழிக்க இது வழியல்ல,'' என்றான் விஜயகுமாரன் திட்டமாக.

''இது மன்னரின் ஆணை,'' என்றார் மானுஜி.

''தேவையானபோது அதை மீறுவது, மன்னர் நன்மையை முன் னிட்டே மீறுவது குற்றமாகாது,'' என் றான் விஜயகுமாரன்.

''வேறு வழி இருக்கிறதா?'' என்று கேட்டார் மானுஜி.

''இருக்கிறது.''

''சொல்.''

சொன்னான் விஜயகுமாரன். பல போர்களைக் கண்ட மானுஜிகூட வியப்பாலும் பிரமிப்பாலும் வாயைப் பிளந்து கொண்டு நின்றார்.

**(தொடரும்)**



முத்துராமன்

சிக்கன் சூப் என் றால் உயிரா?



சுமித்ரா

எப்போதும் தனி யாகவே உட்கார்ந் திருப்பது ஏன்?



பிரமீளா

கறாராகப் பணம் கறந்ததால் தான் மார்க்கெட் போயிற்று?



அசோகன்

டார்ச் லைட் மட் டும் நூற்றுக் கணக் கில் சேர்த்திருக் கிறதாமே?



ராஜ பேரிகை

## 27. போர்த் துவக்கம்

தஞ்சை மன்னர் பிரதாப சிம்மனின் ஆணைக் கடிதத்தை, அதாவது அந்தக் காலத்து மொழி வழக்கப்படி மன்னரின் திருவோலையை, படித்த பின்பு அதன்படி நடப்பது சாத்திய மில்லையென்று விஜயகுமாரன் சொன்னதும் வியப்படைந்த மானாஜி, அவசியமானால் அரசர் உத்தரவை மீறுவதும் தவறாகாதென்று அவன் கூறியதைக் கேட்டதும் திக்பிரமை அடைந்த விழிகளை அவன்மீது திருப்பினாரென்றால், எதிரியை முறியடிக்கும் வழியை அவன் விளக்கியதும் அவர் பிரமிப்புப் பன்மடங்கு அதிகமாகவே அவர் ஏதும் பேசாமல் சில விநாடிகள் நின்றார். நள்ளிரவாகியதால் தனக்குத் தூக்கம் வருகிறதென்று கோட்டை மதிளின் மேல் தாழ்வரையில் அவர் பேசின ஹாஸ்யப் பேச்சுக்கூட அவரிடமிருந்து மறைந்திருக்க வேண்டும் என்பதை, அவர் முகத்திலிருந்த பிரமிப்பும், அவர் சில விநாடிகளுக்கு மேற்கொண்ட மௌன விரதமும் நிருபித்தன. கடைசியாக அவர் கேட்ட. கேள்வியில் விஜயகுமாரன் திட்டத்தை ஒப்புக்கொள்ளக்கூடிய தோரணையும் இருந்தது. ''அப்படியானால் மன்னர் உத்தரவில் சாரமில்லையென்று சொல்கிறாய்?''

''அப்படிச் சொல்லவில்லை தளபதி. இது பழைய போர் முறை. இதிலும் நாம் வெற்றிக் கொள்ளலாம். ஆனால் நமது வீரர்களில் பலரைக் காவு கொடுத்துத் தான் வெற்றி கொள்ள வேண்டும்,'' என்று சுட்டிக் காட்டினான் விஜயகுமாரன்.

''ஏன்?''வினவினார் மானாஜி.

''எதிர்க்கரையில் எதிரிகளிருக்கிறார்கள்....'' விஜயகுமாரன் தொடங்கினான்.

''ஆம்.''

''எதிரியை முன் சென்று தாக்கும்படி மன்னர் இந்த ஓலையில் குறிப்பிட்டிருக்கிறார்.''

''ஆம்.''

''அப்படித் தாக்க வேண்டுமானால் கொள்ளிடத்தை நாம் கடந்து. இந்தத் தீவின் பாதுகாப்பை விட்டுச் செல்ல வேண்டும்.''

''சொல்.''

''அப்படி முக்கால்வாசிக் கொள்ளிடத்தைத் தாண்டியதும் எதிரி

நம்மீது பீரங்கிகளைப் பிரயோகிப்பான். துப்பாக்கிகளால் சுடுவான். நீரிலிருந்து நாம் போராட வேண்டும். கொள்ளிட நீர், மாலை அலைகளில் பெருகினால் அலைவேகம் புரவிகளை முன்னும் பின்னும் தள்ளும். மாட்ச்லாக்குகளை நாம் கையிலெடுப்பதற்குள் நிலத்தில் திடமாக நின்றிருக்கும் எதிரி நம்மைத் தீர்த்துவிடுவான்.''




இப்படி விஜயகுமாரன் விவரித்ததைக் கேட்ட மானாஜி மீண்டும் சிந்தனையிலாழ்ந்தார். ''எதிரியை எதிர்க்கரையில் அதிக நாள் தங்கவிட்டு அவன் பலத்தை விருத்தி செய்து கொள்ள வசதியளிப்பது சரியாகுமா?'' என்றார் முடிவில்.

''தவறாகாது. ஏனென்றால் அதிக நாள் எதிர்க்கரையில் எதிரி தாமதிக்க மாட்டான். மிஞ்சினால் இன்னும் நான்கு நாட்களுக்குள் ஆற்றில் இறங்கிக் கோட்டையை நோக்கி வருவான்,'' என்று விஜயகுமாரன் விளக்கினான்.

''எதிரிக்கு உணவுப் பொருளோ தளவாடங்களோ எல்லாம் ஸெய்ண்ட் டேவிட் கோட்டையிலிருந்து வரவேண்டும். தரை மார்க்கத்தில் வர நாளாகும். ஆகவே கடல் மார்க்கத்தில்தான் வர வேண்டும். அப்படி வந்த கப்பல்கள் ஏற்கனவே அடித்த சூறாவளியில் அமிழ்ந்துவிட்டன. மீண்டும், துரிதமாக அவர்களுக்கு ஆயுத வசதிகள் வேறு கப்பல்களில் வர வேண்டும்,'' என்று சொல்லிக்கொண்டு போன விஜயகுமாரனை இடைமறித்த மானாஜி, ''அதற்குள் அவர்களை நாம் தாக்கிவிடுவது நல்லதல்லவா?'' என்று கேட்டார்.

''அல்ல. பறங்கிப் பேட்டையை விட்டால் கப்பல்களுக்கு அடுத்த துறைமுகம் தேவிக்கோட்டைதான். ஆகவே எதிரி அதிக ஆயுத வசதிகளையும் உணவு வசதிகளையும் பெற துறைமுகத்துக்கு வந்தாக வேண்டும். துறைமுகத்துக்கு வர தேவிக்கோட்டைக்கு வந்தாக வேண்டும். தேவிக்கோட்டைக்கு வரக் கொள்ளிடத்தை ஏதாவது ஒரு இடத்தில் கடக்க வேண்டும்....'' என்று சுட்டிக்காட்டினான் விஜயகுமாரன்.

ஒப்புக்கொண்டதற்கு அறிகுறியாகத் தமது தலையை அசைத்தார் மானாஜி. அந்தச் சமயத்தில் அவர்கள் இருவரும் ஒரு பெரும் பவர் விளக்கின் அடியில் நின்று கொண்டிருந்தார்கள். தங்கள் தலைக்கு மேலிருந்து அந்த விளக்கைச் சுட்டிக்காட்டிய விஜயகுமாரன், ''இந்த விளக்கைப் பாருங்கள்,'' என்றான் தளபதியை நோக்கி.

தளபதி தலையை உயர்த்திப் பார்த்தார். ''நன்றாக இருக்கிறது,'' என்றார் விஷமமாக.

''இது வெள்ளைக்காரர் விளக்கு. உண்மையில் பிரிட்டிஷார் உபயோகப்படுத்தும் விளக்கு. சிம்னி எண்ணெயில் எரிகிறது. அதை நாம்

ஏவி. எம். ஸ்டுடியோவில் 'ஓடி விளையாடு தாத்தா' படத்தின் ஆரம்ப நாள் படப்பிடிப்பு.

டைரக்டர் டி. என். பாலு ஸ்ரீப்ரியாவிடம், "இந்த டேச் ஓ. கே. ஆகிவிட்டது. போய் டிரஸ் சேஞ்ஜ் செய்து கொண்டு வாம்மா," என்றார்.

"என்ன கலர் சாரி சார்?" என்றார் ஸ்ரீப்ரியா.

"சாரியா? சரியாய்ப் போச்சு போ; இந்தப் படத்தில் புடவை கட்டும் வேலையே அவ்வளவாக இருக்காது என்று ஆரம்பத்திலேயே சொல்லியிருக்கிறேனே. அதற்குள் மறந்து விட்டாயா? ஒரு ஈரத்துண்டை மட்டும் கட்டியிருப்பது போல் இப்போ ஷாட் எடுக்க வேண்டும். சீக்கிரம் டிரஸ் சேஞ்ஜ் செய்து கொண்டுவா."

"ஐயய்யோ. வேண்டாம் சார். இன்னும் கொஞ்ச நாளைக்கப்புறம் அந்த மாதிரி சீன்களை எடுத்துக் கொள்ளுங்களேன்," என்ற ஸ்ரீப்ரியா தொடர்ந்து, "அப்பவே நினைச்சேன். இன்றைக்கு காலையில் மேக்—அப் ரூமில் நுழையும்போதே கதவில் முந்தானை மாட்டி புடவை நழுவியது. சரி. ஏதோ ஒன்று இன்னைக்கு நடக்கப்போகிறது. ஒண்ணு ரேப்பிங் ஸீனு இருக்கணும் அல்லது குளிக்கும் காட்சியா இருக்க வேண்டுமென்று. அதற்குத் தகுந்தாற் போல் நீங்கள் இப்போது பாதி உடம்பு தெரியத் துண்டு கட்டிக் கொண்டு வரச் சொல்லி விட்டீர்கள். சார். முதலில் கொஞ்சம் ஸாஃப்டான சீன்களை எடுத்து விடுங்கள். பிறகு செக்ஸி காட்சிகளை எடுத்துக் கொள்ளுங்களேன். சற்று அன்ஈஸியா இருக்கு," என்றார்.

உடனே டி. என். பாலு, "அது சரி. நான் சொன்ன ஐந்தாவது சீனிற்கே இப்படி அலறினால் முப்பதாவது சீனைச் சொல்லியிருந்தால் மயக்கம் போட்டே விழுந்திருப்பாய் போலிருக்கே!" என்றார். —பாரிவள்ளல்.

---

உபயோகிக்கிறோம். பழைய கடலை எண்ணெய் விளக்கை மாற்றி விட்டோம்," என்ற விஜயகுமாரன் சொற்களிலும் விஷமம் இருந்தது.

"ஆம். மாற்றி விட்டோம்."

"மாறுதல் காலத்தின் இயல்பு."

"உண்மை."

"அதை எதிர்ப்பவன் கால வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போகப்படுகிறான்."

"ஆம், ஆம்."

மாஞுஜியின் ஒப்புதலைக் கேட்டதும் பணிவுடன் கூறினான் விஜயகுமாரன். "தளபதியவர்களைவிட நான் வயதில் சிறியவன். தளபதிக்கு யோசனை சொல்வது தவறு. ஆனால் காலத்தின் போக்குப்படி போர் முறைகளை நாம் மாற்றிக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. எதிரியை முன்னேறித் தாக்குவது பழைய போர் முறை. நாமிருக்கும் நிலையில் நாம் கொள்ளிட நீரில் இறங்குவதைவிட அவனை இறங்கச் செய்வது நல்லது. காலத்திற்கேற்றபடி போர் முறையை மாற்றிக்கொள்கிறோம்."

"நல்லது, சொல் மேலே." என்றார் மாஞுஜி.

"எதிரி கொள்ளிடத்திலிறங்கி வரட்டும். இந்தக் கரைக்கே வரட்டும்."

"தேவிக்கோட்டையை அணுகட்டும் என்கிறாய்."

"ஆம். அணுகித் தானுக வேண்டும் கப்பல்களை எதிர்பார்க்க."

"சரி."

"அவன் இந்தத் தீவின் இக்கரைக்கு வந்ததும் நாம் அவனை வளைத்துக் கொள்வோம், கோட்டையின் மேற் புறத்திலிருக்கும் காடுகளிலிருந்து."

"அப்படியா?"

"நமது வில்லாளிகள் விஷ அம்புகளைப் புதரின் மறைவிலிருந்து எய்வார்கள் எதிரிமீது. மாட்ச்லாக் துப்பாக்கிகளும் சீறும்."

"அவர்கள் பீரங்கிகள் சும்மாயிருக்குமா?"

"அவையும் சீறும். அதன் வீச்சிலிருந்து விலகி நிற்போம். அவசியம் வரும்போது நமது குருவளிப் புரவிப்படை வெகு வேகத்துடன் எதிரிமீது பாயும்."

இதற்குப் பிறகு மீண்டும் மோன நிலையை எய்தினார் தஞ்சைத் தளபதி. "தேவிக்கோட்டைக்குக் குறுக்கேயும் ஒரு சிற்றாறு ஓடுகிறது...." என்றார் சிறிது நேரத்திற்குப் பிறகு.

# பாலஅமுல் வளர்ச்சி கண்கூடான வளர்ச்சி





அவன் விரைவில் வளரட்டும்

**பாலஅமுல்—குழந்தை மகிழ்ச்சியுடன் சாப்பிடுகிறது** உங்கள் குழந்தை பாலஅமுலை மகிழ்ச்சியாக மனதார ஏற்றுக் கொள்கிறான். திட உணவை சாப்பிடுவது அவனுக்கு எளிதாகி விடுகிறது.

**பாலஅமுல்—சுலபமாக சீரணிக்க முடிகிறது** பிறந்து 3 மாதங்களுக்கு பிறகு உங்கள் குழந்தைக்கு முதல் தடவையாகத் திட உணவைத் தர ஆரம்பிக்கும்போது, அவனுக்கு எளிதில் சீரணம் செய்யக் கூடிய கனிவான உணவைக் கொடுக்க வேண்டும்—அதாவது பாலஅமுல்.

**பாலஅமுல் மிகவும் சத்துள்ள ஆகாரம்.** உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்குத் தேவையான யாவும் அதில் உள்ளன. மற்ற எந்த விதத் திட உணவையும் விட அதில் அதிகமானப் புரதம் உள்ளது. சரிசம விகித அளவில் கார்போஹைட்ரேட்டுகள், வைட்டமின்கள், கனிஜப் பொருட்கள் மற்றும் கொழுப்புகள் யாவும் போதுமான அளவில் சேர்ந்துள்ளன. இவை பாலில் முன்பே சமைக்கப் பட்டிருப்பதால், அதன் போஷாக்கின் ஒவ்வொரு அணுவையும் உங்கள் குழந்தை கிரகிக்கிறது.

**பாலஅமுலை உபயோகிப்பது எவ்வாறு?** முதலில் பாலுடன் சேர்த்து அருந்தலாம். படிப்படியாக நீங்கள் கொடுக்க விரும்பும் இனிமையானவற்றில் கொடுக்கலாம். பருப்பு, கிச்சடி, கஞ்சி, மசியல் உருளைக் கிழங்கு, மசியல் வாழைப்பழம், வதக்கிய ஆப்பிள், பாயசம், கோதுமை மாவு போன்றவற்றில் பாலஅமுலைச் சேர்த்தால் இனிமை கூடுகிறது, அதிகமான போஷாக்குக் கிடைக்கிறது.




**பாலஅமுல் —**
**அருமைப் பாப்பாவின் அமோக வளர்ச்சிக்கு அடித்தளம்**



விற்பனைக்கு விடுப்போர்,
குஜராத் கோஆப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், ஆனந்த்.

ASP-BA2/76A




ஆப்பிரிக்காவின் வடமேற்கே கானரித்திவில் உள்ள டெனரை.ஃப் விமான நிலையம்.

கிழக்கேயுள்ள விமானம் முதலில் புறப்படவேண்டும். எதிரில் வந்துகொண்டிருந்த விமானம் அதற்காக ரன்வேயைக் காலி செய்து கொடுப்பதற்காக ஒதுங்கி நிற்க வேண்டியிருந்தது. குறுக்குப் பாதையில் அது திரும்புவதற்குள், மற்ற விமானம் கண்டிரோல் டவரின் முழு அனுமதி பெருமல் கிளம்பிவிட்டது. எங்கும் மூடியிருந்தது மூடுபனி.

கிழக்கேயிருந்து வந்த விமானம் கடைசி நிமிட சாமர்த்தியத்துடன் சட்டென்று மேலெழும்பியும்கூட விபத்தைத் தவிர்க்க முடியவில்லை. விபத்துக்கான காரணங்கள் இன்னும் ஆராயப்படுகின்றன. —ஆதாரம்: 'டைம்'

---

''நாம் புதர்களிலிருந்து தாக்கிஞல் எதிரி அதைக் கடந்து கடற்கரைப்பக்கம் போக வேண்டியிருக்கும். அனுமதிப்போம்.''

''அனுமதித்தால்....''

''அங்கு எதிர்ப்புறத்தில் கோட்டையின் பீரங்கிகள் இருக்கின்றன. அவற்றுக்குப் பயந்து திரும்பினுல் மாலை வந்து விடும். சிற்ருறு நீரும் கொள்ளிட நீரும் மாலைக்கடலலைகளில் பெருகிவிடும். நீர்வேகம் அவர்களை அழிக்காவிட்டால் சிற்ருற்றின் எதிர்க்கரையில் நிற்கும் என் புரவிப்படை அவர்களைக் கரை ஏறவொட்டாது.''

''எதிரி வீரர்கள் அடியோடு அழிந்துபோவார்கள். பயங்கர அழிவு,'' என்ருர் மானுஜி.

''போரே அழிவுக்காகத் தானே தளபதி?'' என்ருன் விஜயகுமாரன்.

மானுஜி ஏதோ யோசித்தார். பிறகு, ''இந்தப் போர் முறை,'' என்று கூறித் தலையை இருபுறமும் அசைத்துக்கொண்டார். திடீரென அவர் கண்கள் பளிச்சிட்டன. பளிச்சிட்ட கண்கள் விஜயகுமாரனை நோக்கவும் செய்தன.

விஜயகுமாரன் கண்கள் அந்தக் கண்களை தைரியமாகவே சந்தித்தன. ''நான் வகுத்ததல்ல..'' என்று அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்த சொற்களிலும் வெட்கமுமில்லை, அதைரியமுமில்லை.

சட்டென்று வினவினுர் மானுஜி. ''முராரி ராவ் இங்கு எப்பொழுது வந்தான்?'' என்று.

''இன்று மாலை,'' என்று பணிவுடன் கூறினுன் விஜயகுமாரன்.

''உனக்கு எப்பொழுது இந்தப் போர் போதனையைச் செய்தான்?''

''சில நாழிகைகளுக்கு முன்பு.''

''இது வேறு யாருக்காவது தெரியுமா?''

''தெரியும். அரசகுமாரிக்கு. அவர் வந்தது தெரியும். போர்த் திட்டம் தெரியாது.''

''ஏன்? அரசகுமாரியை அனுப்பிவிட்டு உன்னுடன் பேசினுனு?''

''ஆம்.''

''முராரிராவுக்கு நேரிடைம்

போர் பழக்கமில்லை. தந்திரக்காரன்,'' என்றார் மானாஜி வெறுப்புடன்.

''பிரிட்டிஷ்காரர்களும் தந்திரக்காரர்கள். தந்திரத்தைத் தந்திரத்தால்தான் ஜெயிக்க முடியும்,'' என்றான் விஜயகுமாரன்.

மானாஜி அதற்குமேல் பேசவும் இல்லை, கேள்வி கேட்கவும் இல்லை. ''நாளை பேசுவோம். நீ போய்ப் படுத்துக் கொள்,'' என்று கூறிவிட்டு போராலோசனை முடிந்து விட்டதற்கறிகுறியாகத் தமது கையை அசைத்தார்.

அத்துடன் தளபதியின் அறையை விட்டு வெளியேறிய விஜயகுமாரன் உறங்கச் செல்லவில்லை. கோட்டையின் பல பகுதிகளைச் சுற்றி வந்து காவலைப் பரிசோதித்தான். நீண்ட நேரம் எதிர்க்கரையைப் பார்த்துக் கொண்டிருந்தான். தானே ஏதோ முணுமுணுத்துக் கொண்டான். விடிய சிறிது நேரம் இருக்கும் சமயத்தில் உறங்கச் சென்றவன் மறுநாட்காலை சூரியோதயமாகி நான்கு நாழிகைக்குப் பிறகே எழுந்திருந்தான்.

எழுந்ததும் தனது புரவியை அவிழ்த்து சேணம் போட்டு அதன் மீதேறிக் கோட்டைக்கு மேற்புறமிருந்த அடவிக்குள் நுழைந்தான். அங்கு இருக்கும் நிலையைச் சுற்றிப் பார்த்துவிட்டு கோட்டைக்குத் திரும்பிய போது அவனை வரவேற்கக் கோட்டை வாசலில் மற்றுமிரு தளபதிகளுடன் மானாஜி காத்திருந்தார். விஜயகுமாரனைப் பார்த்தவுடன் தமது புரவியைச் சற்று முன்பு நகர்த்திய மானாஜி, ''விஜயகுமாரா! இந்த இரு உப தளபதிகளும் இனி உன் சொற்படி கேட்பார்கள். இந்தக் கோட்டையைப் பாதுகாக்கும் பொறுப்பு மேலுக்கு என்னுடையது. ஆனால் உண்மையில் உன்னுடையது. இந்தப் போரை உன்னிஷ்டப்படி நடத்தலாம்,'' என்று கூறிவிட்டுத் தமது புரவியை நடத்திக் கொண்டு கடற்புறம் சென்றார்.

அவருடன் புரவிகளில் அமர்ந்திருந்த உபதளபதிகள் விஜயகுமாரனை நோக்கித் தலை வணங்கினார்கள். சிறிதும் தயக்கமின்றியும், அரை விநாடிகூடத் தாமதமின்றியும் தலைமையேற்ற விஜயகுமாரன் உப தளபதிகளை நோக்கி, ''உங்களில் ஒருவர் அக்கரையிலுள்ள எதிரிகளைக் கவனியுங்கள்; இன்னொருவர் நமது புரவிப் படையைக் காட்டுக்குள் நிறுத்துங்கள். புதர்களில் நமது வில்வீரர்கள் மறைந்திருக்கட்டும்,'' என்று உத்தரவுகளை மடமடவெனப் பிறப்பித்தான். பிறகு கோட்டைக்குள் சென்று தனது அறையில் உணவருந்தினான். பிறகு தனது கட்டிலில் உட்கார்ந்து ஒரு பெரிய நாட்டுப்படத்தை விரித்துப் பார்த்துக் கொண்டே பல இடங்களை பக்கத்திலிருந்த கோழி இறகுப் பேனாவினால் மையில் தோய்த்துச் சுழித்தான். பிறகு மன நிம்மதியுடன் படத்தை மடித்து வைத்து விட்டுப் படுக்கையில் மல்லாந்து விழுந்தான். பிற்பகலில் ஏதோ ஒரு கடிதத்தை எழுதி ஒரு வேலைக்காரனிடம் அதை அனுப்பினான். அது சென்ற ஒரு நாழிகைக்கெல்லாம் சூறாவளியொன்று அவன் அறைக்குள் புகுந்தது. ''இந்தக் கடிதத்தை எழுத உங்களுக்கு என்ன துணிச்சல்?'' என்று அந்தச் சூறாவளி சீறவும் செய்தது. அதன் அழகிய காலொன்று தரையில் உதைத்தபோது கலீரென்ற தண்டைகூட ராஜபேரிகை போல் முழங்கியது.

''இன்னும் நான்கு நாட்களில் போரை எதிர்பார்க்கிறேன்,'' என்றான் விஜயகுமாரன் எதிரே கனல்




சென்ற 9-3-77 தேதி காலை 7-15 மணிக்கு ஆகாஷ்வாணி செய்திகள் வாசிக்கும்போது கேட்டது.

''ஆகாஷ்வாணி. செய்திகள். வாசிப்பது சரோஜ் நாராயணஸ்வாமி'' என்று கூறிவிட்டு, ''கையெல்லாம் ஒரே வேர்வையாக இருக்கு,'' என்றாரே பார்க்கலாம்.

—உ. மு. ந. ராசன்

கக்கும் விழிகளுடன் நின்ற அரசகுமாரியை நோக்கி.

"அதனால்....?"

"பெண்கள் இங்கிருப்பதில் ஆபத்திருக்கிறது."

"அது எனக்குத் தெரியும்."

"போர் சமயத்தில் பெண்கள் இங்கிருப்பது உசிதமல்ல."

"அதனால்?"

"உங்களை மீண்டும் தஞ்சைக்கு அனுப்பத் தீர்மானித்தேன்."

"போகாவிட்டால் என்ன செய்வீர்கள்?" அக்னித் துண்டங்களாக உதிர்ந்தன, அரசகுமாரியின் துடித்த உதடுகளிலிருந்து.

"நந்தினி...."

"கொஞ்ச வேண்டாம்.... சொல்லுங்கள், என்ன செய்வீர்கள்? உத்தரவை மீறியதற்குச் சிறை செய்வீர்களா?"

"உன்னை எப்படிச் சிறை செய்ய முடியும் நந்தினி?"

"தாங்கள் இக்கோட்டையின் உப தளபதியாயிற்றே?"

"இருக்கலாம். ஆனால் நீ அரசகுமாரி. யார் உத்தரவையும் மாற்றலாம்."

"மாற்றுகிறேன்," என்று சீறிய அரசகுமாரி மிகுந்த கோபத்துடன் அந்த அறையிலிருந்து வெளியேறினாள்.

அடுத்த இரண்டு மூன்று நாட்கள் அவள் அவன் கண்களில் படவில்லை. கோட்டையை விட்டுப் போகவுமில்லை என்பதையும் புரிந்து கொண்டான் விஜயகுமாரன்.



இரவு ஏழு மணிக்கு மேல், ஏப்ரல் மே மாதங்களில் பெங்களூர் தெருக்களில் "குடியாத்தம், குடியாத்தம்," என்று குரல் கொடுப்பார்கள்.

குடியாத்தம் பகுதியிலிருந்து அதிகமான பனை நுங்குகள் வருவதால், அந்தப் பெயரைச் சொல்லியே விற்கிறார்கள்.

—வி. ஜி. எஸ்.

அடுத்த நான்கு நாட்கள் கழித்து அக்கரையிலிருந்த எதிரிகள் நடமாட்டம் அதிகரித்தது.

எதிரி வீரர்கள் பீரங்கிகளையும் இதர தளவாடங்களையும் சின்னஞ்சிறு தோணிகளில் ஏற்றிக்கொண்டிருந்தார்கள். கொள்ளிடத்தைக் கடக்கப் பலவித ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார்கள். விஜயகுமாரனுக்கு அறிவித்தார்கள். விஜயகுமாரன் கோட்டை மதிள்மீது நின்றபடி எதிர்க்கரையில் நடந்த அனைத்தையும் கவனித்தான். காப்டன் கோப்பும் லெப்டினண்ட் கிளைவும் அக்கரையில் நிற்பதைக்கூட அவனால் பார்க்க முடிந்தது. அவர்கள் சைகைகளிலிருந்து அவர்களுக்குப் புது உதவி வந்து விட்டது என்பதை விஜயகுமாரன் உணர்ந்து கொண்டான்.

உண்மையில் புது உதவி வந்துதானிருந்தது. கிளைவின் விருப்பப்படி அதிகப்படியாகவே நூறு வெள்ளைக்கார சோல்ஜர்களையும் ஐந்நூறு சிப்பாய்களையும் கவர்னர் அனுப்பியிருந்தார். அவர்கள் வந்தவுடன் காப்டன் கோப் சுறுசுறுப்பைக் காட்டினான். கிளைவை நோக்கி, "லெப்டினண்ட்! இரண்டு நாள் பொறுக்கச் சொன்னாய். நான்கு நாட்கள் பொறுத்துவிட்டோம். உதவியும் வந்து விட்டது. இனி போரில் இறங்க என்ன தடை?" என்று விசாரித்தான் காப்டன் கோப்.

"தடை ஒன்றுமில்லை, எடை சரியா என்றுதான் யோசனை," என்றான் க்ளைவ்.

"எந்த எடை?"

"எதிரிகளைப் பற்றி நாம் போட்ட எடை."

"சுதேசிகளைக் கண்டு பயப்படுகிறாயா லெப்டினண்ட்!"

"துப்பாக்கி குண்டு பாயும்போது சுதேசி விதேசி என்று அது பார்ப்பது கிடையாது," என்ற கிளைவ், "சரி! இனி யோசித்துப் பயனில்லை. படைகள் ஆற்றில் இறங்க உத்தரவிடுங்கள்," என்று கூறினான்.

காப்டன் கோப் கத்தியை உயர்த்தி, "மார்ச்!" என்று கூறியவுடன் கொள்ளிடத்தில் தடதடவென்று இறங்கியது வெள்ளையர்படை.

(தொடரும்)

# உங்கள் மேனியை தூய்மையாக்கி இயற்கை எழிலுடன் துலங்கச் செய்வது லாக்டோ-காலமைன் ஒன்றுதான்.

உங்கள் மேனியைப் பராமரிக்க லாக்டோகாலமைன். உங்கள் மேனியைத் தூய்மையாகவும் புதுமையாகவும் வைத்திருக்கக் கூடிய சேர்க்கைப் பொருட்கள் விசேஷ முறையில் இதில் கலக்கப் பட்டுள்ளன. எல்லாம் ஒன்றில் இணைந்த அழகுப் பராமரிப்புலாக்டோ காலமைன். அஸ்ட்ரின் ஜெண்ட், மாயிஸ்சரைஸர், ஃபவுண் டேஷன் க்ரீம். மூன்றும் இணைந்த தன்னிகரற்ற அழகு சாதனம்.

அதனை முறையாக உபயோகித்து வரவும். உங்கள் மேனி இயற்கையாக மெருகேறுவதைக் கண் கூடாகக் காண்பீர்கள்.




3 வசதியான சைஸ்களில் கிடைக்கிறது:
110 மி.லி.
60 மி.லி. 28 மி.லி.

க்ருக்ஸ் லாக்டோ-காலமைன், ஒரு ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க். இதனைத் தவறுகப் பயன்படுத்துபவர்கள் சட்டப்படி தண்டிக்கப் படுவார்கள்.



உண்மையான லாக்டோ-காலமைன் தானு என்று உறுதி செய்து கொள்வதற்கு, எப்போதும் இந்த க்ருக்ஸ் சின்னத்தைப் பார்த்து வாங்குவீர். அதோடு, க்ருக்ஸ் முத்திரையும் உடையாமல் இருக்கிறதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள்.

டூஃபார்-இன்டர்ஃப்ரான் லிமிடெட்
த.பெ. எண் 6582, பம்பாய்-400 018

க்ருக்ஸ்
## லாக்டோ-காலமைன் அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

Sista's-DIL-219-G/76/Tam

சாண்டில்யன்



## 28. தோல்வி

காப்டன் கோப் ''மார்ச்,'' என்று கூவியவுடன் வெகு துரிதமாக வெள்ளையர்படை கொள்ளிடத்தில் இறங்கிவிட்டதென்றாலும் ஸெய்ண்ட் டேவிட் கோட்டையிலிருந்து வந்த உதவியால் அது இன்னும் அதிக பலம் பெற்றதாயிருந்ததாலும். கிளைவுக்குப் பல விஷயங்கள் சந்தேகத்திலிருந்தன. பிரிட்டிஷ் படைகளும் சிறு பீரங்கிகளும் எதிரியின் கண்களுக்கு எதிரிலேயே தோணிகளிலும் படகுகளிலும் நதியில் இறங்கிய பின்புகூட எதிரி படையெடுப்பு விஷயத்தில் எந்தவிதச் சிரத்தையும் காட்டாமல் கப்சிப் என்று சும்மா இருந்ததைக் கண்ட கிளைவ், எதிரியின் இத்தனை மௌனத்துக்கும் அசிரத்தைக்கும் காரணம் என்னவாயிருக்குமென்று நினைத்துப் பார்த்தும் விடை கிடைக்கவில்லை அவனுக்கு. ஆகவே தன்னுடன் நின்றிருந்த காப்டனைப் பார்த்து, ''காப்டன்! எதிர்க் கரையில் எதிரியின் நடமாட்டமே காணுமே. எல்லாமே திடீரென்று நிசப்தமாகிவிட்டதே?'' என்று வினவினன்.

அதற்குக் காப்டன் விடை கூறுமுன்பு சர்வாலங்காரபூஷிதராய் அரச கோலத்தில் நின்றிருந்த காட்டு ராஜா குறுக்கே புகுந்து, ''நம்மைக் கண்டு எதிரி நடுங்குகிருன்,'' என்ருர்.

இதைக் கேட்ட காப்டன் கோப் மிகுந்த வெறுப்புடன் அவரைப் பார்த்தான். ''உங்கள் பிரதாபத்தைக் கேட்க இந்தப் படையெடுப்பை நாங்கள் நடத்தவில்லை,'' என்றும் சொன்னுன் கடுமையாக.

காட்டு ராஜாவுக்கிருந்த உற்சாகத்தில் அவர் அந்தக் கடுமையைக் கவனிக்காமலே தமது சொரூபத்தைக் காட்டினுர். ''இத்தனை நாளாக எதிர்க் கரையில் நடமாடிக் கொண்டிருந்த எதிரிப் படை திடீரென ஏன் மறைந்துவிட்டது?'' என்று கம்பீரமாகக் கேட்டார்.

''உம்மைக் கண்டு பயந்துவிட்டார்கள்,'' என்ருன் கிளைவ் இகழ்ச்சி நிரம்பிய குரலில்.

''யூ ஆர் ரைட்,'' என்று இங்கிலிஷிலும் தமது பரிச்சயத்தைக் காட்டிய காட்டு ராஜா, ''இங்கு நீ ஒருத்தனுவது புத்திசாலியாயிருக்கிருயே?'' என்று சிலாகித்தார்.

''இருக்கிறேன். அதனுல் தான் இத்தனை வெள்ளைக்காரரையும்

# ராஜபேரிகை

பலி கொடுக்க வந்திருக்கிறேன்,'' என்றான் கிளைவ் இகழ்ச்சி மிதமிஞ்சி ஒலித்த குரலில்.

இந்தச் சமயத்தில் காப்டன் கோப் சீற்றத்துடன் திரும்பினான் காட்டு ராஜாவை நோக்கி. ''மகாராஜா! கான் யூ கீப் கொய்ட் ஆர் நாட்?'' என்றும் வினவினான் சீற்றம் ததும்பிய குரலில்.

காட்டுராஜாவுக்கு அத்தனை ஆங்கிலப் பரிச்சயம் இல்லாததால் மிரள மிரள விழித்தார். ''சற்று நேரம் உம்மால் சும்மா இருக்க முடியுமா முடியாதா என்று கேட்கிறார் காப்டன்,'' என்று கிளைவ் விளக்கினான் ஷாஹுஜிக்கு.

இதைக் கேட்ட காட்டு ராஜாவின் கோபம் எல்லை கடந்தது. ''காப்டன்! தஞ்சை மன்னனை மரியாதைக் குறைவாக நடத்துகிறீர்கள்,'' என்று இரைந்தார்.

காப்டன் கோப் அதற்கு மேல் பேச்சை வளர்த்த இஷ்டப்படாமல் இரண்டு வெள்ளைக்கார சோல்ஜர்களை அழைத்து, ''மகாராஜாவைத் தோணியில் ஏற்றுங்கள்,'' என்று உத்தரவிட்டான்.

காட்டுராஜாவை இரண்டு சோல்ஜர்கள் பலவந்தமாகத் தூக்கித் தோணியொன்றில் ஏற்றினார்கள். அவர் கை கால்களை என்ன உதைத்தும் பயனில்லாமல் போகவே, தோணிக்கு சோல்ஜர் வாகனத்தில் சென்றபோது, ''விடுங்கள் என்னை. பின்னால் இதற்குப் பெரும் தண்டனை அனுபவிப்பீர்கள்,'' என்று கூவினார் பெரிதாக. அவரை அதிகமாகக் கூவவிடாமலிருக்க ஒரு வெள்ளை சோல்ஜர் அவர் வாயை இறுகப் பொத்தினான்.

மகாராஜாவும் தோணியில் ஏற்றப்பட்ட பிறகு காப்டனும் கிளைவும் ஒரு தோணியில் ஏறிக்கொள்ள, படை கொள்ளிடத்தைக் கடக்க ஆரம்பித்தது. திடீரென வெள்ளமெடுத்தும், திடீரென வெள்ளம் வடியவும் பழக்கமுடைய கொள்ளிடத்தில் பிரவாகம் அதிகமில்லாததால் படை அக்கரையை நோக்கி அதிக சிரமமில்லாமலே நகர்ந்தது. முதல் தோணிகளில் மூட்டைகளைத் தூக்கிக் கொண்டிருந்த கூலிகள் சென்றார்கள். அடுத்து, சிப்பாய்கள் பகுதியும் கடைசியில் சோல்ஜர் பகுதியும் வந்தது. பாதி கொள்ளிடம் வந்ததும் காப்டன் கோப் கத்தியை உயரத் தூக்கி அசைக்கவே தோணிகள் ஒன்று கூடிச் சென்றன.

காப்டன் கோப் இத்தனைக்கும் எதிர்க்கரையை உற்றுக் கவனித்துக் கொண்டிருந்தான். கொள்ளிடத்தின் இரு கிளைகளுக்குமிடையேயிருந்த தீவு மிக அமைதியாயிருந்தது. அதன் காட்டுப் பகுதிகளிலும் கோட்டைப் பகுதியிலும்கூட அரவமெதுவும் இல்லை. இடையேயிருந்த வெட்டவெளியும் மிக அமைதியாகவே காட்சியளித்தது. அந்த நிலையைக் கண்ட காப்டன் கோப், ''லெப்டினன்ட்! எதிரிப்படை அடியோடு மறைந்துவிட்டதே. இந்தப் பூர்ண அமைதி எனக்குத் திருப்தியாயில்லை,'' என்றான்.

''எனக்கும் திருப்தியில்லை.'' என்றான் கிளைவ்.

''நம்மைத் திடீரெனத் தாக்க எதிரிகள் முயற்சிக்கிறார்கள்,'' என்று குறிப்பிட்டான் கோப்.

''இருக்காது.'' என்றான் கிளைவ்.

''ஏன்?''

''அவர்கள் நம்மைச் சுடுவதானால் இப்பொழுதே சுடலாம்.''

''ஆம்.''

''சுடவில்லை.''

''அதற்குக் காரணம் கூடியவரையில் அவர்களும் படைச்சேதத்தை விரும்பவில்லை, என்று நினைக்கிறேன்.''

கிளைவின் இந்த விளக்கத்தை ஆமோதிப்பதற்கு அறிகுறியாக காப்டன்



தாய்மார்கள்தான் குழந்தை கன்னில் இவ்வளவு ஆர்வமாக ஊதுவதுண்டு.

படம்:
சொர்க்கம்—நரகம். (தமிழ்)
சிவகுமார்—படாபட் ஜெயலட்சுமி.

கோப் தலையை அசைத்தான். அணி வகுத்த படை தோணிகளில் மெல்ல மெல்ல தேவிக்கோட்டைத் தீவில் இறங்கலாயிற்று. இறங்கியபின்புகூட அவர்களை யாரும் எதிர்க்கவில்லை பிரிட்டிஷ் படை இறங்கி முகாம் செய்த இடத்திலிருந்து தேவிக்கோட்டை ஒரு மைல் தூரமிருந்தது. அதைத் தானிருந்த இடத்திலிருந்து கவனித்த காப்டன் கோப், "வெளிச்சமிருக்கும் போதே படையை நடத்திச் செல்வோம் லெப்டினன்ட்," என்றான் கிளைவை நோக்கி.

"செய்யலாம்," என்று கூறிய கிளைவ் இரண்டு சோல்ஜர்களை அழைத்து, "கூலிகள் உணவுப் பொருள்களுடன் படைக்குப் பின்னால் வரட்டும். படையை அணி வகுத்து முன்னால் நடத்து. நம்மிடமுள்ள சிறு பீரங்கிகள் (ஃபீல்ட் பீஸஸ்) வெள்ளையர் படையுடன் செல்லட்டும்," என்றான்.

அவன் உத்தரவுப்படி படை முன்னேறத் தயாராகி நின்றது. அப்பொழுது ஒரு சோல்ஜர் கோட்டைக்குச் செல்ல புதிய ஒரு பாதையும் இருப்பதாகக் கூறினான். அது நல்ல அகலமுள்ள பாதை என்பதை அவனுடன் சென்று கண்டுகொண்டு வந்த கிளைவ், காப்டன் கோப்பிடம் விஷயத்தைக் கூறி, "பின்வாங்க அவசியமிருந்தால் இந்தப் பாதை மிகவும் தேவைப்படும். ஆகவே அது வழியே செல்வோம்," என்று தெரிவித்தான்.

அதை ஆமோதித்த காப்டன் கோப், படையை நகரும்படி ஆணையிடவே அந்தப் பாதையில் படை நகர்ந்தது. சற்று முன்னேயிருந்த அடவியை நாடுமுன்புகூட எந்தவிதத் தொல்லையும் இல்லை பிரிட்டிஷ் படைக்கு. அந்த நிசப்த நிலையில் திடீரென கோட்டையில் ஒரு பேரிகை திமுதிமு வென மெல்ல சப்தித்தது. அதைக் கேட்டதும் கிளைவை நோக்கித் திரும்பிய காப்டன் கோப் தனது லெப்டினன்ட் முகத்தில் பெரும் கவலை மண்டிக் கிடப்பதைக் கண்டு, "என்ன லெப்டினன்ட்! என்ன இது?" என்று வினவினான்.

"ராஜபேரிகை!" கிளைவின் குரலில் மரியாதை, கவலை இரண்டுமே தெரிந்தன.

"யூ மீன் ட்ரம்ஸ்?" என்று கேட்டான் கோப்.

''எஸ். கிங்ஸ் ட்ரம்ஸ்,'' என்றான் கிளைவ்.

''எதற்கு?''

''பிரதாபசிம்மனாவது கோட்டைக்குள் வந்திருக்க வேண்டும். அல்லது அரச பரம்பரையினர் வந்திருக்க வேண்டும். தவிர போர் சன்னத்தத்துக்கும் அந்தப் பேரிகைதான் சப்திக்கும்,'' என்று கூறிய கிளைவ் சற்று நடையை நிறுத்தி நாலாபக்கமும் கண்களைச் செலுத்தினான். அவர்கள் இருந்த இடத்திலிருந்து வெகு தூரத்தில் பின்னாலும் பக்கவாட்டுகளிலும் மகாராஷ்டிரப் புரவிப் படை நிதானமாக வந்து கொண்டிருந்தது.

எதிரிப் புரவிப் படையை காப்டன் கோப்பும் கவனித்தான். ஆகையால் ''லெப்டினன்ட்! நமது ஃபீல்ட் பீஸஸ் (சிறு பீரங்கிகள்) வேலை செய்யட்டும்!'' என்று உத்தரவிட்டான்.

அந்த உத்தரவைக் கிளைவ் கத்தியை ஆட்டி அறிவிக்கவே திடீரென சோல்ஜர்கள் பீரங்கிகளை இயக்கினார்கள். சிறு குண்டுகளையே வீச வல்ல அந்தப் பீரங்கிகள் சீறியதை எதிரி லட்சியமே செய்யவில்லை. அதன் குண்டு வீச்சுக்கு எட்டாமலே மகாராஷ்டிரர் புரவிப்படை ஊர்ந்து கொண்டிருந்தது. மிக நிதானமாகவும் ஒரே சீராகவும் வந்து கொண்டிருந்தது புரவிப்படை, பக்கங்களிலும் முன்னும் பின்னும். படையினர் தங்கள் கைகளிலிருந்த மாட்ச்லாக் துப்பாக்கிகளைக்கூடப் பிரயோகிக்கவில்லை. மிக அமைதியாக ஊர்வலம் போல் வந்து கொண்டிருந்தார்கள். வெள்ளைக்காரர் பீரங்கி குண்டுகள் விழுந்த போது, சற்று விலகிச் சிரித்துக் கொண்டே புரவிகளை நடத்தினார்கள். மெள்ள மெள்ள இந்த ஊர்வலம் புதர்களிருந்த இடத்தை அடைந்ததும் மீண்டும் கோட்டையிலிருந்து திமுதிமுவென ராஜபேரிகை சப்தித்தது. அடுத்த வினாடி புதர்களின் மறைவிலிருந்து சீறி வந்த பல அம்புகள் வெள்ளையர் படை மீது விழுந்தன. உணவுப் பொருட்களைத் தாங்கிச் சென்ற நான்கைந்து கூலிகளும், சில சிப்பாய்களும் பத்துப் பதினைந்து சோல்ஜர்களும், கண்ணிமைக்கும் நேரத்தில் காயமுற்று வீழ்ந்தனர். மீண்டும் புரவி வீரர்கள் தங்கள் மாட்ச்லாக் துப்பாக்கிகளால் சுட்டார்கள். மீண்டும் சில வெள்ளையர் பலியானார்கள்.

காப்டன் கோப் நகர்ந்து கொண்டிருந்த தனது படையைச் சட்டென்று நிறுத்தி அணிவகுத்து, ''ஃபையர்!'' என்று கூச்சலிடவே பிரிட்டிஷ் சோல்ஜர்கள் தங்கள் மஸ்கெட் துப்பாக்கிகளால் ஏககாலத்தில் எதிரிப் புரவிப்படையை நோக்கிச் சுட்டார்கள். ஒரே சமயத்தில் முழங்கிய துப்பாக்கிப் பிரயோக ஒலி காட்டுப் பகுதியில் பெரும் எதிரொலியை விளைவித்ததாலும், எதிரிப் புரவிகள் ஒரே சீராக நகர்ந்து வளைந்து பாய்ந்து விலகி விட்டதால் ஒரு புரவிகூடச் சேதப்படவில்லை. மீண்டும் புதர்களிலிருந்து கிளம்பிய அம்பு வீச்சு அதிக நாசத்தை விளைவிக்காவிட்டாலும், சோல்ஜர்கள் கலக்கம் அதிகமாகவே காப்டன் கோப் படையைக் கடற்பகுதியை நோக்கி விரையுமாறு கட்டளையிட்டான். கடற்பகுதியைக் கடக்க தேவிக்கோட்டைக் காட்டுக்குக் குறுக்கே ஓடிய ஒரு சிற்றாரையும் கடக்க வேண்டியிருந்தாலும் அதில் நீர் அதிகமில்லாததால் பிரிட்டிஷ் படை சிரமமின்றி அதைக் கடந்து கோட்டைக்குக் குறுக்கே தளம் அமைத்




எங்கள் பகுதி போஸ்ட்மேன் மிகவும் சுறுசுறுப்பானவர். தபால்களைக் கச்சிதமாகப் பட்டுவாடா செய்து அனைவரிடமும் நல்ல பெயர் வாங்கியவர். சமீபத்தில் அவருக்குக் கிளார்க் வேலைக்காகப் பயிற்சிபெற உத்தரவு வந்திருந்தது. உடனே அவர் தன் பகுதியில் உள்ள ஒவ்வொருவரின் இல்லத்திற்கும் சென்று தான் கிளார்க் வேலைக்கான பயிற்சியைப் பெறச் செல்லுவதாகக் கூறி, தான் அங்கே செயலாற்றியபோது தனக்கு மக்கள் ஒத்துழைப்பு தந்தமைக்காக நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்.

—பி. நாராயணன், தேவகோட்டை.

தது. "இன்றிரவு இங்கேயே தங்குவோம்," என்று அறிவித்தான் காப்டன் கோப் கிளைவுக்கு.

காட்டு ராஜா குறுக்கிட்டு, "எதற்காக?" என்று வினவினர்.

காப்டன் கோப் அவரைப் பார்க்காமலே கிளைவை நோக்கிச் சொன்னன், "கடல் மார்க்கத்தில் உணவு சப்ளையும் ஆயுத சப்ளையும் அனுப்புவதாக போஸ்கவான் உறுதி கூறியிருக்கிருர்," என்று.

கிளைவ் ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தான். அன்றும் அடுத்த நாளும் கப்பல் ஏதும் கண்ணுக்குப் படாதுபோகவே காப்டன் கோப் தனது படையின் பிரதான தலைவர்களை அழைத்து மந்திராலோசனையில் இறங்கினன். "உணவு சப்ளை கப்பல்கள் வரவில்லை. நம்மிடம் கோட்டையைத் தாக்குவதற்கு வேண்டிய பெரிய பாட்டரிங் பீரங்கி இல்லை. என்ன செய்யலாம்?" என்று வினவினன்.

அவரிடமிருந்த எரிச்சலால் அவருக்கு யாரும் பதில் சொல்லவில்லை.

கிளைவ் ஏதோ சொல்லத் தொடங்கிய சமயத்தில் அவசர அவசரமாக ஒரு சோல்ஜர் படையின் ஊடே ஒரு புரவியில் வந்து, "காப்டன் கோப்! நான் போர்ட்டோ நோவோவிலிருந்து வருகிறேன். அட்மிரல் போஸ்கவான் எப்படியும் தேவிக்கோட்டையைத் தாக்கச் சொல்லி உத்தரவிடுகிருர். அந்த உத்தரவைத் தாங்கி ஒரு தோணியில் ஏறி இங்கே வந்தேன். இதோ உத்தரவு," என்று மடியிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து நீட்டினன்.

மாலை முதிர்ந்த நேரம். எதிரே எரிந்து கொண்டிருந்த காட்டுச் சுள்ளியின் ஒளியில் அந்த நேரத்தில்




'ஷோலே' புகழ் அம்ஜத்கான் அண்மையில் தான் மறக்க முடியாத ஒரு ரிகார்ட் பிரேக்கிங் நிகழ்ச்சியைக் குறிப்பிட்டார்: "நான் பள்ளிச் சிறுவனக இருந்த போது இந்த நிகழ்ச்சி நடந்தது. அப்போது என் தகப்பனருக்கு ஒரு குறிப்பிட்ட சினிமா பாட்டு என்றால் உயிர்: தினமும் இரவில் அதை ரெகார்ட் பிளேயரில் அடிக்கடி போட்டுக் கேட்பார் அவர். ஒரு நாள் காலையில் அந்தக் குறிப்பிட்ட ரெகார்டை என் நண்பன் ஒருவன் இரவல் கேட்டான். அப்பாவுக்குத் தெரியாமல் அதை அவனுக்குக் கொடுத்தேன். மாலை மணி ஏழு ஆயிற்று....ஏழரையும் ஆயிற்று.

எட்டு மணிக்கு அப்பா அதைத் தேட ஆரம்பித்து விட்டார். என்னைக் கூப்பிட்டு, "அதை யாருக்காவது இரவல் கொடுத்தாயா?" என்று கேட்டார். 'இல்லை,' என்றேன் நான் நடுங்கிக் கொண்டே.

என் தகப்பனர் ஒரு ரெகார்டை எடுத்துப் பார்த்துவிட்டு, "இது இல்லை," என்று சொல்லிக் கொண்டே அதை என் தலையிலேயே போட்டு உடைத்தார். இப்படி, 'இது இல்லை, இது இல்லை,' என்று சொல்லிக் கொண்டே 25 ரெகார்டுகளை என் தலையில் போட்டு உடைத்தார்! அப்போது எனக்கு ஏற்பட்ட வலி....நான் அழுது கொண்டே உண்மையை ஒப்புக்கொண்டேன்.

ஆதாரம்: ஸ்டார் அண்ட் ஸ்டைல்.

தகவல்: அனிதா ராமச்சந்திரன்.

அந்த உத்தரவைப் படித்த காப்டன் கோப், கிளைவிடம் அதை நீட்டினன். அதைப் படித்த கிளைவ், ''காப்டன்! கோட்டையைத் தாக்குவதைத் தவிர வேறு வழியில்லை. அட்மிரலின் உத்தரவு திட்டமாயிருக்கிறது,'' என்றன்.

''என்ன செய்ய யோசனை லெப்டினண்ட்?'' என்று வினவினன் காப்டன்.

''நூறு சோல்ஜர்களைக் கொடுங்கள். இன்றிரவு நமது சிறு பீரங்கிகளைக் கொண்டு கோட்டை கிழக்கு வாயில் கதவுகளைத் தூளாக்கி விடுகிறேன். உடனே நாம் உள் நுழைந்து கோட்டையைக் கைப்பற்று வோம்,'' என்று யோசனை கூறினன் கிளைவ்.

அதை ஆமோதித்த காப்டன் இருந்த இடத்திலிருந்தே கோட்டை மீது பீரங்கிக் குண்டுகளை வீசுமாறு உத்தரவிட்டான். பீரங்கிகள் மறு நாட்காலையில் முழங்கின. ஆனல் கோட்டை தூரத்திலிருந்ததால் எல்லாம் வியர்த்தமாயின. போதாதற்கு படையின் உணவு நிலை பயங்கரமாகிவிட்டது. கையிலிருந்த மூன்று நாள் உணவும் தீர்ந்துவிட்டதால் பிரிட்டிஷ் படை திணறியது. ஆகவே மறுநாள் மாலை ஆற்றைக் கடந்து திரும்புமாறு படைக்கு உத்தரவிட்டான் காப்டன். ஆனல் காலையில் தண்ணீர் குறைவாயிருந்த சிற்றாறு மாலை கடல் அலைப் பிரவாகத்தில் தண்ணீர் உயர்ந்து விட்டதால் பல கூலிகள் தண்ணீரில் மூழ்கிவிட்டார்கள். பண்டங்களைத் தாங்கிய பாத்திரங்கள் நீர்வேகத்தில் ஓடின, அவற்றைப் பிடிக்கப் போகிறவர்கள் போல் கூலிகள் மூச்சுத் திணறி மூழ்கியும் எழுந்தும் மிதந்தும் அவற்றுடன் சென்றார்கள். முன்னதாகக் கரை ஏறிவிட்ட சோல்ஜர்களையும் சிப்பாய்களையும் மகாராஷ்டிரர் புரவிப் படை திடீரெனத் தாக்கியது. மின்னல் வேகத்தில் வந்த புரவி வீரர்கள் தங்கள் வளைந்த வாட்களால், பீரங்கியை இயக்க முயன்ற பிரிட்டிஷ் சோல்ஜர்கள் பலரை பீரங்கியில் வெடி மருந்தைத் திணிக்குமுன்பாகவே வெட்டிப் போட்டார்கள்.

காப்டனும் கிளைவும் தங்கள் சோல்ஜர்களையும் சிப்பாய்களையும் அணி வகுத்து நிறுத்திப் போரிட்டார்கள். துப்பாக்கிகள் வெடித்த சமயங்களில் எதிரி பின்வாங்கினன். பிறகு திடீர் திடீரென சாரிசாரியாக வந்து தாக்கினன். இதனல் சிதைக்கப்பட்ட பிரிட்டிஷ் படை காட்டை நோக்கி நகர்ந்தது. அங்கு கோட்டையின் பீரங்கிகள் காத்துக் கொண்டிருந்தன.



''முதுகு வலி தீர்ந்ததா?''

காப்டன் கோப் கொள்ளிட இக்கரையை அடைந்ததும், முகாமைக் கலைத்துக் கடற்கரைக்குப் படையை நடத்தியதுமே, விஜயகுமாரன் கோட்டைப் பீரங்கிகளைக் காட்டுக்குள்கொண்டு வந்து ஒளித்து வைத்திருக்கவே, பிரிட்டிஷ் படையின் சேதம் சொல்ல முடியாததாயிற்று. பிரிட்டிஷ் படை நிலை குலைந்து ஓடியது. புதிதாகக் கண்டு பிடித்த பாதை மூலம், ஆனல் கிளைவ் மட்டும் அந்தக் காட்சியை வெறுப்புடன் பார்த்துக்கொண்டு நின்றன். தன்னை நெருங்கிய இரு மகாராஷ்டிர புரவி வீரர்களைக் கைத்துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தினன். அவன் கண்களில் கோபம் மிதமிஞ்சிக் கிடந்தது. சற்று நேரம் போர்க்களத்தைக் கவனித்துக் கொண்டே நின்றன். ''விஜயகுமாரா! இம்முறை வென்று விட்டாயென்று மனப்பால் குடிக்காதே. மீண்டும் வருகிறேன்,'' என்று எதிரேயிருந்த திறந்த வெளியை வெறுப்புடன் நோக்கிக் கூறிவிட்டு நிதானமாகவே நடந்தான்.. காட்டு முகப்பிலிருந்த இரு மகாராஷ்டிர வீரர்கள் தங்கள் மாட்ச்லாக் துப்பாக்கிகளை அவன்மீது குறிவைத்தார்கள். ஆனல், ''நிறுத்துங்கள்,'' என்ற ஆணை அவர்களைத் தேக்கியது. அவர்களுக்குப் பின்னல் நின்ற விஜயகுமாரன், ''இத்தகைய வீரன் பல தலைமுறைகளில் ஒருவன் பிறக்கிறன். அவனைக் கொல்லக்கூடாது,'' என்று தத்துவம் பேசினன்.

(தொடரும்)



மணியகாரருடன் அவருடைய வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த கண்ணன், ''ஏய் ராமசாமி..!'' என்று பெரிய குரலில் ஒரு பெண் குரல் ஒலிப்பதைக் கேட்டுச் சட்டென்று திரும்பினான். சுமார் இருபது வயது மதிக்கத்தக்க பெண் ஒருத்தி சொட்டச் சொட்ட ஈரப் புடவையுடன் வீதியில் நடந்து வந்து கொண்டிருந்தாள். அவ்வளவு சிறிய பெண் மணியகாரரைப் போன்ற வயதானவரைப் பெயர் சொல்லி அழைத்ததே அவனுக்கு விசித்திரமாக இருந்தது. அதைத் தவிர அந்தப் பெண்ணிடம் கொட்டிக் கிடந்த அழகும் உடலின் வாளிப்பும் அவனை அதிகமாக மலைக்கச் செய்தன.

''ரா ம சா மி..உன்னைத் தான் கூப்பிடறேன். . காதிலே விழல்லியா .... உங்க வீட்டுக்கு வந்திருக்கிற விருந்தாளி இவன்தானா?'' என்று கேட்டுக் கொண்டே கண்ணனை ஏற இறங்கப் பார்த்தாள்.

கண்ணன் சங்கடத்துடன் நெளிந்தான். வயது வந்த பெண் ஒருத்தி முன்பின் அறிமுகமில்லாத ஆடவனை ஏக வசனத்தில் குறிப்பிட்டுப் பேசியது புதுமையாக இருந்தது. ஆனால் அடுத்ததாக அவள் செய்த செயலைக் கண்டதும், அவன் திகைப்பின் உச்ச நிலைக்கே போய்விட்டான்.

ஜாக்கெட், பாடி, மற்றும் துணிகளைக் கையில் துவைத்துப் பிழிந்து வைத்திருந்த அவள் புடவையை வெறும் உடம்பில் சுற்றிக் கொண்டிருந்தாள். கூச்சம் எதுவுமில்லாமல் மார்பின் மேல் போட்டிருந்த புடவைத் தலைப்பை எடுத்து ஒட்டப் பிழிந்தாள். நடு வீதியில் நின்று அவள் செய்ததை என்னவென்று நினைப்பது? கண்ணன் மணியகாரரைக் கவனித்தான். அவர் முகத்தில் எவ்வித சலனமுமில்லை. நிதானமாகக் குழந்தையுடன் பேசுவது போலப் பேசினார்.

''கோமளி..ஈரப் புடவையுடன் ரொம்ப நேரம் நிற்காதே..

# மிக
# நேர்த்தியானவை,
# உஷா
# மின் விசிறிகளே.



## இதோ
## அதற்கு சான்று.

மிக நவீன வடிவமைப்பு, தகுந்த
வடிவிலான தடுப்புக் கம்பிகள்,
பாங்காக அமைந்த விசிறிகள்,
நாகரிகமான பியானோ ரக
ஸ்விட்ச்கள், விளிம்புகளில்
நன்கு சரிசெய்யப்பட்ட,
சமமான வர்ணப் பூச்சு—
இவற்றைக் கொண்டவை
உஷா டேபிள் ஃபேன்
உஷா டேபிள் ஃபேன்
அழகானவை; எவ்வித
அலங்காரத்துக்கும் உகந்தவை;
பல கண்கவர் வண்ணங்களி-
லானவை. உங்களை
வந்தடையுமுன், கடுத்தமான
தரக்கட்டுப்பாட்டுச் சோதனைக்கு
உட்படுகின்றன.
ஆம், மிக நேர்த்தியானவை—
உஷா டேபிள் ஃபேன்களே—
மாதிரியிலும், செயல்பாட்டிலும்
வண்ணத்திலும்.

**உஷா**

**மேசை விசிறிகள்**

JEW-346




## 29. வீரமகள் ஒருத்தி

**செ**ய்ண்ட் டேவிட் கோட்டையின் கவர்னர் மாளிகையின் மந்திராலோசனை அறையில் 1749'வது ஆண்டு மே மாதம் 22'ம் தேதி அளவுக்கு மீறிய மௌனம் நிலவிக் கொண்டிருந்தது. முந்திய மந்திராலோசனை போலவே அப்பொழுதும் இரவு நேரம் தான்; அப்பொழுதும் அந்த அழகிய சான்டலியர்ஸ் விளக்கு தனது ஒளிக் கதிர்களை வீசிக்கொண்டுதானிருந்தது; அப்பொழுதும் கவர்னர் ஸான்டர்ஸ் கையிலிருந்த விஸ்கி டம்ளரிலிருந்து விஸ்கியைக் கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்சிக் கொண்டுதானிருந்தார்; அப்பொழுதும் மேஜர் லாரன்ஸும் மற்றுமுள்ள கௌன்சில் மெம்பர்களும்கூட மேஜையின் பக்கவாட்டுகளில் அமர்ந்து தானிருந்தார்கள். ஒரே ஒரு வித்தியாசம், காப்டன் கோப்பும் லெப்டினண்ட் கினேவும் ஆசனங்களில் அமரவில்லை. விஸ்கி டம்ளர்களைத் தொடவும் இல்லை. கைகளால் இடுக்கிக்கொண்ட ஹாட்டுகளுடன் நின்று கொண்டிருந்தார்கள். நீண்டநேரம் வரை அவர்களைக் கேள்வி ஏதும் கேட்காமல் விஸ்கியை மெள்ள மெள்ள டம்ளர்களிலிருந்து உறிஞ்சிக் கொண்டிருந்த கவர்னர், கடைசியாக டம்ளரை மேஜைமீது வைத்துவிட்டுத் தமது நீலக்கண்களைக் காப்டன் மீது நாட்டி, "யூ மே மேக் யுவர் ரிப்போர்ட்," என்றார் எந்தவிதக் கலக்கத்தையும் குரலில் காட்டாமலே.

காப்டன் கோப் மெள்ளத் தனது தொண்டையைக் கனைத்துக் கொண்டான், பிறகு சொன்னான், "தேவிக்கோட்டையில் தோல்வியடைந்தோம். தப்பி வந்தோம் சிரமப்பட்டு," என்று.

"சேதம்?" என்று வினவினார் கவர்னர் சேதமென்பது சாதாரண விஷயம் போல.

"நூறு பேர் சொச்சம்," என்றான் காப்டன் துன்பம் துலங்கிய குரலில்.

"வெள்ளையர்?"

"நாற்பது பேர்."

"நாற்பது பேர்?"

"ஆம், சிப்பாய்கள்."

"கறுப்பர்களா?"

"ஆம்."

"அது கிடக்கட்டும். ஆயுதங்கள், உணவு சேதங்கள் எவ்வளவு?"

"எதுவும் கப்பல்களில் வராததால் சேதம் மிகக் குறைவுதான்," என்றான் காப்டன் கோப்

லேசாக எரிச்சலைக் குரலில் காட்டி.

கவர்னர் அதற்கும் கோபத்தைக் காட்டவில்லை. ஆனால் நிதானமாகச் சொன்னார், "காப்டன், இதன் விளைவு பயங்கரமானது," என்று.

"எப்ப?" என்று கேட்டான் கோப்.

கவர்னர் மீண்டும் சிந்தனையில் இறங்கினார். அவர் பேச முற்பட்டபோது உணர்ச்சியே தெரியாத அவர் குரலிலும் உணர்ச்சி தெரிந்தது. "முன்பு பிரெஞ்சு என்ஜினியர் பராடிஸ் அடையாற்றுப் போரில் ஆற்காட்டு நவாபின் குமாரன் மாபூஸ் கானின் பெரும்படையை முறியடித்தபோது ஐரோப்பியப் படைகளின் போர் முறையின் உயர்வு இந்தக் கர்நாடகம் முழுவதும், ஏன், வடக்கிலுங்கூடப் பரவியது. இப்பொழுது இந்தத் தேவிக் கோட்டைப் போர் அந்தப் புகழை அழித்து விட்டது. வெள்ளைக்காரர்கள் அப்படியொன்றும் பிரமாத வீரர்களல்ல என்ற உணர்வு சுதேசிகளுக்கு இனி ஏற்படும். நமக்கு

சாண்டில்யன்

இது அவமானம் மட்டுமல்ல, சுதேசிகளின் துணிவையும் சுயநம்பிக்கையையும் உயர்த்தும் ஒரு சம்பவம். இதனால் இனி ஏற்படக்கூடிய விபரீதங்கள் பல. உலகமெங்கிலும் வீரக்கொடி நாட்டிய பிரிட்டனின் போர்த் திறன், புகழ் எல்லாம் தேவிக்கோட்டையில் தவிடு பொடியாகிவிட்டது," என்று உணர்ச்சி ததும்பச் சொன்ன கவர்னர், மீண்டும் விஸ்கி டம்ளரைப் பின்னால் நீட்ட, பின்னால் அசையாமல் சாராயக் குப்பி



யுடன் நின்றிருந்த பட்லர் குனிந்து மீண்டும் டம்ளரை நிரப்பினுன். ஏதோ பெரிய வேலையைச் செய்து அதிர்ச்சி யுற்றவர் போல் கவர்னர் விஸ்கியைச் சற்று அதிகமாகவே உறிஞ்சினுர்.

அதுவரையில் ஏதும் பேசாமல் நின்றிருந்த கிளைவ் தனது தொண்டையை மெதுவாகக் கனைத்தான். அவன் பார்வையும் மேஜர் லாரன் ஸின் பார்வையும் ஒருமுறை இணைந்து மீண்டன. எதையும் கவனிக்கத் தவருத ஸாண்டர்ஸ் கேட்டார், ''வாட் லெப் டினண்ட்! யூ ஹாவ் ஸம்திங் டு ஸே,'' என்று

கிளைவ் எந்தவித யோசனையு மில்லாமல், யாரிடம் பேசுகிருே மென்பதைக்கூடச் சிந்திக்காமல், ''யுவர் எக்ஸலென்ஸி. . .'' என்று துவங்கினுன்.

மேற்கொண்டு பேசும்படி சைகை செய்தார் கவர்னர். ''என்ஜினியர் பாராடிஸையும் பிரெஞ்சுக்காரர் களையும் அடையாற்றுப் போரையும் சுட்டிக் காட்டினீர்கள்,'' என்று கூறினுன் கிளைவும் நிதானமாக.

''ஆம், அதனுலென்ன?'' என்று கேட்டார் கவர்னர்.

''பிரெஞ்சு கவர்னர் அவர் களைப் பட்டினி போடவில்லை. தளவாடங்கள் அனுப்புவதாகச் சொல்லிக் கையை விரிக்கவில்லை,'' என்று சுட்டிக் காட்டினுன் கிளைவ். கவர்னர் வாயைத் திறக்கு முன்பு மேலும் மடமடவென்று பேசினுன். ''கப்பலில் உணவு சப்ளையும் கோட்டையைத் தகர்க்கும் பீரங்கியும் வேறுபல தளவாடங்களும் அனுப்புவதாகச் செய்தியனுப்பினீர்கள். ஏதும் வரவில்லை. சோல்ஜர்கள் பட்டினி. தவிர வெறும் கைகளால் கோட்டை வாயில்களை இடிக்க முடியாது. அதற்காக முயன்ருலும் எதிரி கையைக் கட்டிக் கொண்டு சும்மா இருக்க மாட்டான். இத்தனை தூரம் நாங்கள் கைவிடப்பட்டும் காப்டன் போரைத் திறம்படவே நடத்தினுர். நாங்கள் பூராவாக அழியாமல் தப்பி வந்ததே அவர் வீரத்துக்கு அத்தாட்சி, எதிரியின் வீரத்துக்கும் அத்தாட்சி,'' என்ருன் கிளைவ்.

''எதிரியிடம் அத்தனை மதிப்பா உனக்கு?'' என்று வினவினுர் கவர்னர்.

''ஆம். இஷ்டப்பட்டிருந் தால் மாஞஜியும், விஜயகுமாரனும் எங்களை அழித்திருக்கலாம்,'' என்று கிளைவ் தெரிவித்தான்.

கவர்னர் முகம் சுளித்தார். ''மாஞஜி தெரியும். யார் அவன் விஜயகுமாரன்?'' என்று வினவினுர்.

''இந்தத் தோல்விக்கு உண்மையில் அடிகோலியவன். மகாராஷ்டிர உபதளபதி. லைட்ஹார்ஸ் படையை வெகு நன்ருக நடத்துகிருன். முராரிராவின் சீடன்,'' என்று விளக்கினுன் கிளைவ்.

கவர்னர் சட்டென்று டம்ளரை எடுத்து விஸ்கியை இருமுறை அவசரமாக உறிஞ்சினுர். ''முராரி ராவா!'' என்று கொஞ்சம் திகிலும் குரலில் ஒலிக்கக் கேட்டார்.

கிளைவின் இதழ்களில் குரூரப் புன்முறுவல் ஒன்று படர்ந்தது. ''ஆம். அவர்கூட அங்கு வந்திருந்தார்,'' என்ருன் அந்தப் புன்முறுவலின் ஊடே.

கவர்னர் சிறிது ஆசுவாசம் அடைந்தார். ''தட் எக்ஸ்ப்ளெய்ன்ஸ் இட்,'' என்றும் கூறினுர்.

கிளைவ் அந்த ஆசுவாசத்தைக்கூட அனுமதிக்கவில்லை. ''அவர் போரில் ஈடுபடவில்லை,'' என்று கூறினுன்.

கவர்னர் டம்ளரிலிருந்த விஸ்கி அத்தனையும் உறிஞ்சிவிட்டு

---



என் நண்பன் என்னிடம் ஒரு புதிர் போட்டான்: ''ஒரு கார் மிக வேகமாகப் போய் ஒரு மரத்தில் மோதி நசுங்கியது. ஆனல் அதன் விளக்குகள் மட்டும் ஆ.ஃ.ப்பாகுது அணையுது, ஆ.ஃ.ப்பாகுது அணையுது. அது எப்படி அப்படி எரியும்?''

நான் சிறிது நேரம் யோசித்தேன். குழப்பம். ''தெரியவில்லை,'' அவன் கூறிய பதில்: ''ஆப்.ஃ.ப்பாகுது என்ருல் அணையுது, அணையுது என்ருல் ஆ.ஃ.ப்பாகுது, இரண்டும் ஒன்றுதான். விளக்கே எரியவில்லை.''

—ஜி. சம்பத்



கன்னட ஹேமாவதியில் நடிக்கும் இந்த அனுசூயா புதுமுகமாம். பி.எஸ்ஸி மாணவியாம். பயத்தை மிக நன்றாகக் காட்டியிருக்கிறார்.

எரிக்கும் கண்களால் கிளைவை உற்றுப் பார்த்தார். ''எதிரிகளிடம் உனக்கு அதிக நம்பிக்கை இருப்பதாகத் தெரிகிறது,'' என்றார்.

''வீரன் எதிரியாயிருந்தாலும் என்னால் போற்ற முடியும்—எதிரியைக் குறைத்து எடைபோடுவது தோல்வியின் முதல் படி. அசிரத்தை இரண்டாவது படி. சுயபலம் தெரியாமல், தளவாடமில்லாமல், உபவாசத்தால் எதிரியை வெற்றி கொள்ளலாமென்ற நினைப்பு மூன்றும் படி. . .'' என்று அடுக்கினான் கிளைவ்.

''நான்காவது படி?'' என்று கர்ஜித்தார் கவர்னர்.

''நாங்கள் இங்கு தோல்வியுடன் திரும்பி வந்திருப்பது,'' என்று கூறினான் கிளைவ்.

''யூ ஆர் இம்பர்ட்டினண்ட்,'' என்றார் கவர்னர்.

அதுவரை வாளாவிருந்த ஒரு குரல், ''சம்பவங்களை உள்ளபடி விளக்குவது சோல்ஜரின் கடமை,'' என்று இடையே புகுந்தது.

கவர்னர் சரேலென்று திரும்பினார் குரல் வந்த திசையை நோக்கி. மேஜர் ஸ்ட்ரின்ஜர் லாரன்ஸ் டம்ளரிலிருந்த விஸ்கியைத் தொட்டுக்கூடப் பார்க்கவில்லை. உரையாடலில் இடைபுகுந்த பின்பு மேற்கொண்டு பேசாமலே இருந்தார். கவர்னரே கேட்டார், ''அப்படியானால் இந்தத் தோல்வி விவரங்களைக் கேட்டு மகிழ்ச்சியடைய வேண்டுமா?'' என்று.

''மகிழ்ச்சியடைய வேண்டியதில்லை. நமது குறைகளைத் தெரிந்து கொள்ளலாம்,'' என்றார் லாரன்ஸ்.

''அப்படியானால் தேவிக் கோட்டையைக் கைவிட்டுவிட வேண்டியதா?'' கவர்னர் கேள்வியில் இம்முறை ஆத்திரம் மறைந்து கவலை இருந்தது.

''நோ,'' என்றார் லாரன்ஸ்.

''வாட் டு யூ ப்ரபோஸ் டு டூ?'' என்று சீறினார் கவர்னர்.

மேஜர் லாரன்ஸ் ஆசனத்தை விட்டு எழுந்து சுற்றிலும் உட்கார்ந்திருந்தவர்களையும் கவர்னரையும் நோக்கினார். கடைசியாகக் கவர்னரை நோக்கிச் சொன்னார், ''தேவிக்கோட்டையை நான் பிடித்துத் தருகிறேன்,'' என்று.

''எப்படி எப்பொழுது?'' கவர்னரின் சொற்கள் ஆவலுடன் எழுந்தன.

ஸ்ட்ரின்ஜர் லாரன்ஸ் பதி

லேதும் சொல்லவில்லை சில வினாடிகள். தமது பெரும் தொந்தியை ஒரு முறை தடவி விட்டுக்கொண்டார். இடையில் தொங்கிய வாளின் பிடிமீதும் மெள்ளக் கையை வைத்தார். கடைசியில் வார்த்தைகளைத் தெளிவுடன் உதித்தார். "இன்று மே 22. மே 27'ம் தேதி கிளம்புகிறேன் கடல் மார்க்கமாக. லெப்டினன்ட் கிளைவும், கிரெனேடியர்கள் காப்டன் டால்டனும், சார்ஜண்ட் ப்ரௌனும் என்னுடன் வருகிறார்கள். 800 சோல்ஜர்களையும் 1500 சிப்பாய்களையும் அழைத்துச் செல்கிறேன்," என்று கூறி எதிர் நாற்காலிகளில் உட்கார்ந்திருந்த காப்டன் டால்டனையும் சார்ஜண்ட் ப்ரௌனையும் நோக்கினார். மீண்டும் கவர்னரை நோக்கி, "நான்கு போர்க் கப்பல்களில் நாங்கள் செல்கிறோம்," என்று கூறிவிட்டு, தலைதாழ்த்தி கவர்னருக்கு வணங்கிவிட்டு அந்த அறையைவிட்டு வெளியேறினார். காப்டன் கோப் சிலையென நின்றான்.

கிளைவ் மட்டும் லாரன்ஸைப் பின்தொடர்ந்தான்.

"காப்டன் கோப்பை விட்டு விட்டீர்களே!" என்றான்.

"அவர் களைத்திருக்கிறார். படைக்கு இரு தலைவர்கள் தேவையில்லை. ஒரு மேஜர் போதும்," என்றார் லாரன்ஸ். மேற்கொண்டு பதிலேதும் சொல்லாமல் தமது இருப்பிடம் நோக்கி விரைந்தார்.

மறுநாள் முதல் எந்த ஏற்பாடு நடந்தாலும் யாருக்கும் தெரியவில்லை. ஆனால் 27'ம் தேதி இரவில் திடீர் திடீரெனச் சுறு சுறுப்புக் காணப்பட்டது. மேஜர் லாரன்ஸ் கிளைவின் இருப்பிடம் வந்து, "கடற்கரைக்கு வந்துசேர்." என்று கூறிச் சென்றார்.

அப்பொழுது இரவு மணி பத்து இருக்கும். உத்தரவுக்குப் பணிந்து கிளைவ் ஆயுதம் தரித்து விரைந்தான். கடலில் ஆடி நின்றன நான்கு போர்க் கப்பல்கள். அவற்றை நோக்கி விரைந்து கொண்டிருந்தன தளவாடங்களையும் சோல்ஜர்களையும் தாங்கிய படகுகள். கிளைவ் வந்ததும் மேஜர் லாரன்ஸ் தனது படகிலேயே அவனை ஏற்றிச் சென்றார். முதல் போர்க் கப்பலின் நூலேணியில் தானும் ஏறிக் கிளைவும் ஏறியதும் மேஜர் லாரன்ஸ் காப்டன் டால்டனை நோக்கி, "காப்டன்! நங்கூரங்களை எடுக்கச் சொல். பாய்கள் விரியட்டும். கப்பல்கள் விரையட்டும்," என்றார்.

காப்டன் டால்டன் ஒரு பாய் மரத்தின்மீது ஏறி உயர இருந்த தட்டில் நின்று வாளை ஆட்டி, "ஹாய்! ஹாய்ஸ்ட் ஸெய்ல்ஸ்!" என்று கூவினான். தனது மடியிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்து ஆகாயத்தில் இரு முறை சுடவும் செய்தான். பெரும் பிசாசுகளைப் போல் கப்பல்கள் நகர்ந்தன, பிறகு விரைந்தன. அந்தப் பிரதானக் கப்பலின் நடுவே நின்றிருந்த மேஜர் அதன் தளத்திலிருந்த பெரிய பீரங்கியொன்றை ஆவலுடன் தடவிக்கொடுத்துக் கொண்டிருந்தார். கிளைவ் அவரை மெல்ல அணுகி, "பாட்டரிங் கானன்?" என்று வினவினான்.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தார் மேஜர். "இதை அனுப்பியிருந்தால் தேவிக்கோட்டையை நானே பிடித்திருப்பேன்," என்றான் கிளைவ்.

"இருக்கலாம். ஆனால் லெப்டினெண்ட்! போர்களை ஆயுதங்கள் வெல்வதில்லை. அறிவு வெல்கிறது," என்றார்.

கிளைவ் பதில் சொல்லவில்லை அதற்கு. ஆனால் மேஜரின் அறிவையும் சூட்சுமப் போரையும்




நம் கிரிக்கெட் வீரர் ஒவ்வொருவருக்கும் அவர்கள் பங்கேற்கும் ஒவ்வொரு டெஸ்ட் பந்தயங்களுக்கும் ரூ. 3000 ரொக்கமாகத் தருகின்றனர். இது தவிர ரூ. 2000 அவர்கள் வேலை பார்க்கும் அலுவலகத்தில் உள்ள அவர்கள் கணக்கில் சேர்த்து, அதை அவர் வேலையினின்று ஓய்வு பெறும்போது பெற்றுக் கொள்ளும்படி செய்கின்றனர். ஆனால் பெண்கள் பங்கேற்கும் கிரிகெட் பந்தயங்களில் பெண் வீரர்களுக்கு எந்தவித மான சன்மானமும் அளிக்கப்படுவதில்லை.

—பெமீனாவில் சாந்தா ரங்கசாமி கூறியது. —பி. நாராயணன்

இரண்டு நாட்களில் அவனுல் உணர முடிந்தது. மே 29'ம் தேதி லாரன்ஸ் கொள்ளிட முகத்துவாரத்தை அடைந்தார். 31'ம் தேதியன்று படைகளைத் தரையில் இறக்கினுர். கோட்டையைத் தகர்க்கும் ஆற்றலுடைய 'பாட்டரிங் கானனை' மெதுவாகவும் சீராகவும் இறக்கி ஜூன் 8'ம் தேதியன்று அதைக் கோட்டைக் கதவுகளுக்கு எதிரே உயர்ந்த பீடமொன்று நிறுவி ஏற்றினுர். ஒரு முறை பெரும் குண்டு ஒன்றை அதன்மூலம் கோட்டை மீது பயங்கரமாக வீசினுர். பிறகு கிளைவைத் தூதனுக அனுப்பினுர் கோட்டைக்கு ஒரு செய்தியுடன். கிளைவ் மானுஜியையும் விஜயகுமாரனையும் கோட்டையின் நடுமண்டபத்தில் சந்தித்துத் தனது செய்தியை அறிவித்தார். ''மேஜர் லாரன்ஸ் பூர்ண தளவாடங்களுடன் பெரும்படையுடனும் வந்திருக்கிறுர். ஆகையால் உங்களைச் சரணடையச் சொல்கிறுர்,'' என்ற இரண்டே வரிகளைச் சொன்னுன் தூதனுன கிளைவ்.

மானுஜியும் வார்த்தைகளை வளர்த்தவில்லை. ''இந்த நாற்பது வயதுவரை மானக்கேடு இல்லாமல் வாழ்ந்துவிட்டேன். இப்பொழுதும் சரணடைய உத்தேசமில்லை என்று சொல்லுங்கள்,'' என்றுர்.

கிளைவ் இதைக்கேட்ட பின்பும் திரும்பவில்லை. விஜயகுமாரனை நோக்கினுன். விஜயகுமாரன் முகம் கல்லாயிருந்தது. அந்தச் சமயத்தில் பக்கத்து அறையிலிருந்து அரசகுமாரி தலை நீட்டினுள். ''இங்கு ஒரு பெண்ணும் இருக்கிருளே!'' என்றுன் கிளைவ் வியப்புடன்.

''வீர குமாரிகள் எங்கள் நாட்டில் உண்டு,'' என்றுன் விஜயகுமாரன்.

''போரிடவும் அவர்களுக்குத் தெரியும்,'' என்ற நந்தினி தனது இடையிலிருந்து முன்பு கொள்ளிடத்தில் விஜயகுமாரனுக்குக் காட்டிய கைத் துப்பாக்கியை எடுத்து கிளைவிடம் காட்டினுள்.

எதற்கும் அசையாத கிளைவின் முகம்கூட உணர்ச்சியைக் காட்டியது. ''ஆண்டவன் உங்களைக் காப்பாற்றட்டும்,'' என்று கூறி வெளியே நடந்தான். அவன் முகத்தில் இணையிலா பிரமிப்பு விரிந்து கிடந்தது. உள்ளத்தில் விவரிக்க இயலாத உணர்ச்சிகள் தாண்டவமாடின. உண்மையில் இந்தப் போரை அவன் மனம் விரும்பவே இல்லை.

(தொடரும்)





ஓவியர் தட்சணுமூர்த்தி

# ஷேட்டலைட்

மியூரல்கள், சிற்பங்கள், வண்ண ஓவியங்கள் (வாட்டர் கலர்) ஆகியவற்றில் தனிக் கவனம் செலுத்திவரும் ஓவியர் வி. தட்சணுமூர்த்தி, தன்னுடைய ஓவியங்கள் பார்க்கிறவர்களைச் சிந்திக்க வைக்கும் வகையைச் சேர்ந்தவை என்கிறுர். தன்னுடைய வண்ண ஓவியம் எங்கு மாட்டப்பட்டிருந்தாலும் ஓவிய விமரிசகர்கள் அவற்றை உடனே அடையாளம் கண்டுகொள்ளும் அளவுக்குத் தனித்தன்மை வாய்ந்தவை என்று கூறுகிறுர்.

ஓவியக் கல்லூரியில் பெயிண்டிங் பிரிவில் ஆசிரியராக இருக்கும் இவருடைய வயது 34.

மேலேயுள்ளது அண்மையில் இவர் வரைந்த 'பயணம்' என்ற ஓவியம்.—க்ரேயானில் வரைந்தது.

—என்.பி.

***ஏனென்றால், போர்ன்விடாவில் இப்பொழுது <u>அதிக</u> <u>கோகோ</u> உள்ளது-அதனால்தான் அதிகப்படியான இன்சுவையும் அதிகப்படியான வலிமையும் கிட்டுகின்றன.***

போர்ன்விடாவிலுள்ள கோகோவில், இரத்த அமைப்புக்கு அவசியமான இரும்புச் சத்து நிறைந்துள்ளது மற்றும் வைட்டமின்கள் 'பி' மற்றும் 'டி'யும் கால்ஷியம், பாஸ்பரஸ், சோடியம், பொட்டாஷியம் போன்ற விலை மதிப்பற்ற கனிஜ உப்புகளும் அடங்கியுள்ளன. அவை மட்டுமா? போஷாக்கு தரும் நற்பண்புகள் அடங்கிய, மால்ட், பால் மற்றும் சர்க்கரை போர்ன்விடாவில் மண்டிக் கிடக்கின்றன. ஒரு கப் சூடான பாலில் இரண்டு ஸ்பூன் போர்ன்விடா கலந்து, இன்சுவையுள்ள போஷாக்கைப் பருகுங்கள்.

உங்கள் செல்வங்களுக்கு தினமும இருவேளை போர்ன்விடா வழங்குங்கள். அவர்களுடைய உடல் சீராக வளரத் தேவையான, அசாதாரண போஷாக்கைத் தந்து உதவுகிறது அது. ஏன், அவர்களுடன் ஈடுகொடுக்க, உங்களுக்கும் அது தேவை.

## 75 பைசா மிச்சம்

போர்ன்விடா 450 கிராம்
ரீ∴பில் பேக் வாங்கி,
75 பைசா மிச்சப்படுத்துங்கள்!
இந்தப் பேக்கைத் திறந்த
வுடனே, வழக்கமான
போர்ன்விடா டின்னில்
அதை நிரப்பி. புதுமை
கெடாமல்
பாதுகாருங்கள்.






புதிய காட்பரிஸ்
# போர்ன்விடா
**அதிகப்படியான கோகோ,**
**அதிகப்படியான வலிமை, அதிகப்படியான இன்சுவை**

OBM-6715 TM

## 30. *NEC ASPERA TERRENT (DIFFICULTIES DO NOT TERRIFY US)

விஜயகுமாரனையும் நந்தினியையும் கோட்டைக்குள் கண்ட காரணத்தாலும், மானாஜியின் கண்ணியமும் கம்பீரமும் நிரம்பிய பதிலினாலும், 'இத்தகைய ஒரு வீர சமுதாயத்தை எதிர்க்க வேண்டுமே,' என்ற எண்ணத்துடன் மனக்கலக்கம் அடைந்து

''யுத்த தர்மம்,'' என்றார் லாரன்ஸ்.

''என்ன தர்மம் அது?''

''முடியுமானால் மனித அழிவைத் தடுப்பது சேனாதிபதியின் கடமை,'' என்ற லாரன்ஸ், ''ஆனால் மகாவீரனான மானாஜியிடம் சரணாகதியை நான் எதிர்பார்க்கவில்லை,'' என்றும் தெரிவித்தார்.

இந்தப் பதில் கிளைவுக்கு

# ராஜ பேரிகை

கிளைவ் மேஜர் லாரன்ஸிடம் உணர்ச்சி சிறிதும் இல்லாமல் மானாஜியின் பதிலை அவர் சொன்ன தோரணையிலேயே கூறினான். காப்டன் டால்டனுடனும் ஸார்ஜண்ட் ப்ரௌனுடனும் நின்று கொண்டு அந்தச் செய்தியைக் காதில் வாங்கிக்கொண்ட மேஜர் லாரன்ஸ் முகத்தில் பெரும் திருப்தியைக் காட்டினார். ''இந்தப் பதிலைத் தான் நான் மானாஜியிடமிருந்து எதிர்பார்த்தேன்,'' என்று அவர் கூறிய பதிலிலும் திருப்தி பரிபூர்ணமாக ஒலித்தது.

''எதிர்பார்த்தீர்களா!'' கிளைவின் கேள்வியில் வியப்பு ஒலித்தது.

''ஆம்,'' என்றார் லாரன்ஸ். எதிரே தூரத்தில் கொள்ளிடத்துக்கு அக்கரையில் விரிந்த கோட்டையின் பதினெட்டு அடி உயரச் சுவர்களையும், இடையிடையே இருந்த பீரங்கிக் கூட்டங்களையும் பார்த்துக்கொண்டே.

''அப்படியானால் என்னை எதற்காகத் தூது அனுப்ப வேண்டும்?'' என்று மீண்டும் வினவினான் கிளைவ்.

*Chats on Military Curios—By Stanley C. Johnson, M.A., D.Sc., F.R.E.S-Page 48

மட்டுமின்றி காப்டன் டால்டனுக்கும் புதிதாயிருக்கவே, ''உங்களுக்கு மானாஜியை முன்பே தெரியுமா?'' என்று டால்டன் வினவினான்.

''தெரியாது. ஆனால் கேள்விப்பட்டிருக்கிறேன். தென்னிந்தியாவின் படைத் தலைவர்களில் மிகச் சிறந்தவர் மானாஜி என்று. அது மட்டுமல்ல; ஐரோப்பியர் போர் முறையையும் நன்றாக அறிந்தவர்,'' என்று கூறிய மேஜர் விடுவிடுவென்று கொள்ளிடக் கரையின் முகப்புக்கு விரைந்தார். அப்படிச் செல்லுமுன்பு, ''ஜான்மூர், மூர்,'' என்று இருமுறை இரைந்து கூவவும் செய்தார். போர்க் கப்பலொன்றின் தச்சனான ஜான்மூர், ''ஹியர் ஹியர்,'' என்று தன்னை அறிவித்துக்கொண்டு அவருடன் ஓடினான். மேஜர் லாரன்ஸ் கொள்ளிடக்கரை முகப்பில் நின்று கொண்டு நதியைச் சுட்டிக் காட்டி, ''மூர்! இந்த நதியைத் தாண்டினால் சிறு நிலப்பரப்பு வருகிறது. அதை நாம் தாண்டினால் குறுக்கே சிற்றாறு வருகிறது. அதற்கு எதிரே தேவிக் கோட்டையின் கிழக்கு வாசல் இருக்கிறது. கோட்டையின் வாயிலைத் தகர்க்க பாட்டரிங் கானனை ஏற்றியிருக்கிறேன். அது வாயிலைத் தகர்த்தால் உள்ளே




நுழையப் படைகள் அக்கரை போக வேண்டும்,'' என்று சுட்டிக் காட்டிக் கையால் ஏதேதோ சைகைகள் செய்தார். தச்சனை ஜான்மூர் கொள்ளிடப் பிரவாகத்தையும் எதிர்க்கரையையும் காட்டினான். பிறகு ஏதோ மேஜரிடம் சொன்னான். மேஜர் ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார். இருவரும் திரும்பியதும் கிளைவையும் டால்டனையும் நோக்கிய மேஜர், ''நீங்களிருவரும் இன்று இளைப்பாறலாம். சோல்ஜர்களும் சிப்பாய்களுங்கூட இளைப்பாறட்டும். கூலிகளில் பத்துப் பேரை ஜான்மூருக்கு உதவ அனுப்புங்கள்.'' என்று கூறி வேகமாகத் தமது தொப்பை குலுங்க நடந்து தமது கூடாரத்தை நோக்கிச் சென்றார்.

கிளைவும் டால்டனும் ஏதும் பேசவில்லை. பத்து சுதேசிக் கூலிகளைத் தச்சனிடம் ஒப்படைத்துத் தங்கள் கூடாரத்தை நோக்கிச் சென்றனர். ஜான்மூர் கூலிகளுடன் எதிரே சற்றுத் தூரத்திலிருந்த ஒரு தோப்பை நோக்கிச் சென்றான். அன்று பகல் முழுதும் மேஜர் கூடாரத்தை விட்டுக் கிளம்பவில்லை. கொள்ளிடத்தின் கிழக்குக் கரையில் தங்கியிருந்த ராணுவமும் சாப்பிடுவதிலும் உறங்குவதிலும் காலம் கழித்துக் கொண்டிருந்தது. இந்த நிலையைக் கோட்டைத் தளத்திலிருந்து மானோஜியும் விஜயகுமாரனும் கவனித்துக் கொண்டிருந்தார்கள். விஜயகுமாரனுக்கு எதிரியின் போக்கு அடியோடு புரியாததால் கேட்டான், ''இதென்ன! எதிரி ராணுவத்தில் படையெடுப்பு சன்னத்தம் எதுவும் காணோமே,'' என்று.

**சாண்டில்யன்**

''ஏதோ ரகசியம் நடக்கிறது,'' என்றார் மானுஜி.

''என்ன ரகசியம்?'' என்று வினவினான் விஜயகுமாரன்.

''இன்றிரவு தெரியலாம். எதற்கும் நீ நமது மின்னல் குதிரைப் படையைச் சித்தமாக வைத்திரு,'' என்று உத்தரவிட்டார். ஆனால் அவர் மனத்தில்கூட எதிரியின் அசிரத்தைக்குக் காரணம் புரியவில்லை. ''கரையில் இறங்கிய எதிரி கொள்ளிடத்தைக் கடந்து வர வேண்டும். கொள்ளிடத்திலும் இப்பொழுது நீர் அதிகமில்லை. வர முடியும். இரவில் அலை அதிகப்பட்டு நீர் ஏறிவிடும். அப்பொழுது எப்படி வர முடியும்?'' என்று தம் மைத்தாமே பல முறை கேட்டுக் கொண்டார். அதன் விளைவாகக் கோட்டைத் தளத்திலிருந்து இறங்கி வந்ததும், ''விஜயகுமாரா! எதிரிகள் தாக்குவதானால் கிழக்கில்தான் தாக்குவார்கள். எதற்கும் மேற்கு வாசலையும் திறந்து வை. அரசகுமாரி பிடிவாதம் செய்யவில்லையானால் அவளை மட்டும் தகுந்த பந்தோபஸ்துடன் மேற்குப்புறமாக ஆச்சாள்புரம் அனுப்பிவிடு,'' என்று கூறினார்.

விஜயகுமாரனுக்கும் அது இஷ்டம்தான். ஆனால் அரசகுமாரி சிறிதும் பிடிகொடுக்கவில்லை. ''என்னால் போரிட முடியாதா?'' என்று கைத்துப்பாக்கியை எடுத்துக் காட்டினாள்.

''இப்பொழுது வந்திருக்கும் எதிரி கைத்துப்பாக்கிக்கு அஞ்சுபவன் அல்ல,'' என்றான் விஜயகுமாரன்.

''வேறெதற்கு அஞ்சுவான்?'' என்று வினவினாள் நந்தினி.

''கோட்டைப் பீரங்கிகளுக்கு அஞ்சுவான். நமது மின்னல் படைக்கு அஞ்சுவான்,'' என்று பதில் சொன்னான் நாயக்கர் வம்ச வீரன்.

''அப்படியானால் கோட்டை பீரங்கிகளில் ஒன்றை இயக்குகிறேன். இல்லையேல் மின்னல் படையில் வருகிறேன். எனக்குப் புரவியைப் பாய வைக்கவும் தெரியும், வளைவு வாளால் தலையைச் சீவவும் தெரியும்,'' என்றாள் நந்தினி உற்சாகத்துடன்.

விஜயகுமாரன் முகத்தில் எரிச்சல் மண்டியது. ''இது பெண்கள் வேலையல்ல,'' என்றான் எரிச்சலுடன்.

''வரலாற்றை சரியாகப் படித்துப் பாருங்கள்,'' என்று கூறி விட்டுச் சரேலென்று தனது அறைக்குச் சென்ற நந்தினி கதவையும் சரேலெனத் தாளிட்டாள்.

விஜயகுமாரன் மிகவும் வேதனையடைந்த மனத்துடன் தனது இருப்பிடம் சென்று உணவருந்தினான். பிறகு கோட்டையின் பின்புறம் சென்று குதிரைப் படையைக் கிழக்கு வாசலில் அணிவகுத்து எச்சரிக்கையுடன் நிற்குமாறும், கோட்டை நோக்கிய மேற்கு வாசலைத் திறக்கும் நிலையில் வைக்குமாறும் உத்தரவிட்டு, மற்ற



சினிமா கொட்டகையே...



வைபோகமே!

மங்களூரில் உள்ள செட்டி வகுப்பினர் அநேகமாக சினிமாத் தியேட்டர்களில்தான் கல்யாணம் செய்து கொள்கிறார்கள். காலையில் காட்சி இல்லாத சமயத்தில் தியேட்டரில் ஒரு மணி நேரத்துக்குள் கல்யாணம் முடிந்து விடுகிறது. குளிர் பானத்துடன் குறைந்த செலவில் முடித்துவிடுகிறார்கள். மிகவும் நெருங்கியவர்களுக்கு மட்டும் வீட்டில் கல்யாணச் சாப்பாடு.

—எஸ். நடராஜ்



வெய்யிலின் அளவை பாராமீட்டர் மூலமும் அறியலாம். சட்டையில்லாத மார்பு மூலமும் அறியலாம்.

படம்: ஏக் மௌசம் கோட்டாசா (இந்தி)

நடிகர்கள்:

நீத்துசிங், சுனில்குமார்.

---

ஏற்பாடுகளைப் பார்வையிடக் கோட்டை மதிள் படிகளில் ஏறிச் சென்முன். மானுஜியும் சற்று நேரத்திற்கெல்லாம் அங்கு வந்தார். இருவரும் எதிரிகள் பாசறையைக் கவனித்தார்கள். அங்கு எல்லாம் அமைதியாக இருந்தது. அந்த அமைதியைக் கண்டு முகம் சுளித்தார் மானுஜி. "இந்த அமைதி எனக்குத் திருப்தியளிக்கவில்லை," என்றும் கூறினார். ஆனல் அதே அமைதி அடுத்த மூன்று நாட்களும் நிலவியது.

எதிர்க்கரையில் மேஜர் மிகுந்த உல்லாசத்துடனிருந்தார். சோல்ஜர்களிடம் அடிக்கடி ஜோக் அடித்தார். அக்கரையில் உள்ள கோட்டையைப் பற்றிய நினைப்பு அவருக்கு அடியோடு இல்லைபோல் தெரிந்தது. போதாக்குறைக்கு போர்க் கப்பல் தச்சனை ஜான்மூரைக் காணவே காணேம். மூன்றும் நாளிரவு மேஜர் தன்னந்தனியாக எட்ட இருந்த தோப்புக்குள் நுழைந்தார். அவரைத் தொடர முற்பட்ட கிளைவை, "வேண்டாம். இங்கேயே இரு," என்று கட்டளையும் இட்டார்.

அதன் பிறகு தோப்பை அடைந்த மேஜர் லாரன்ஸ் அங்கு கண்ட காட்சியால் வெகு உற்சாகம் அடைந்தார். நீண்ட நீண்ட காட்டுமரக்கழிகளை வெட்டி ஒரு தெப்பம் தயாரித்திருந்தான் ஜான்மூர். அடியில் சில பீப்பாய்களையும் பிணைத்திருந்தான். "பெரிதாக இருக்கிறது," என்று உற்சாகத்தால் கூவினர் மேஜர்.

"ஆம். ஒரே சமயத்தில் நானூறு சோல்ஜர்கள் இதில் செல்லலாம்," என்முன் ஜான்மூர்.

"படைகள் எதிர்க்கரையில் இறங்க வேண்டுமானல் இது நதியில் அடித்துக்கொண்டு போகாதிருக்க என்ன ஏற்பாடு?" என்று வினவினர் லாரன்ஸ்.

"இன்று நள்ளிரவில் ஆற்றங்கரையோரம் வாருங்கள்," என்முன் மூர்.

"சரி," என்று திரும்பிச் சென்ற லாரன்ஸ் மீண்டும் நள்ளிரவில் திரும்பி வந்தார்.

அந்த 'ப்ளோட்' அதாவது 'மிதக்கும் மேடை'யின் முகப்பில் பெரும் கயிறு ஒன்றைக் கட்டி வைத்திருந்தான் மூர். அந்த மேடையை ஆற்றங்கரைக்குக் கூலிகளை விட்டுக் கொணரச் செய்தான். பிறகு, "நான் அக்கரை செல்ல உத்தரவு வேண்டும்," என்முன் மூர் மேஜரை நோக்கி. மேஜர் தலையை அசைத்தார். கயிற்றின் நுனியை இடுப்பில் கட்டிக் கொண்டு கொள்ளிடத்தில் இறங்கி அந்த நள்ளிரவில் எதிர்க்கரையை நோக்கி நீந்தினன் மூர். பிறகு அரை மணி நேரத்தில் திரும்பிவந்து, "நமக்கு

---

"John Moore the carpenter made a float capable of receiving 400 men. He swam across Colroom and fastened the rope to the root of a Tree"—Refer Lawvord's Clive (Page 81) and also Orme's british Military Transactions (Page 116).

அதிர்ஷ்டம் அதிகம். எதிர்க்கரையில் புளிய மரம் இருந்தது. அதன் வேரில் கயிற்றைப் பிணைத்துவிட்டேன்! கயிறு வெளியே தெரியாதபடி நீரிலும் அமிழ்த்திவிட்டேன். இனி இந்த 'ப்ளோட்'டில் படைகள் போகலாம். எதிர்க்கரையில் போகும் முதல் படை வீரர் கயிற்றை இழுக்கலாம். 'ப்ளோட்' இருபுறமும் கயிறுகளால் இயக்கப் படலாம்,'' என்றான்.

அந்த நள்ளிரவில் அந்த மிதக்கும் மேடையில் நானூறு நானூறு பேராக அக்கரையை அடைந்த பிரிட்டிஷ் படையின் எதிரே அந்தச் சிற்றாறு காட்சியளித்தது. அந்தச் சிற்றாற்றங் கரையில் அணிவகுத்த பிரிட்டிஷ் படையை மூன்று பிரிவுகளாகப் பிரித்தார் லாரன்ஸ். ஒன்றுக்குக் கிளைவையும் இன்னொரு பிரிவுக்குக் காப்டன் டால்டனையும் தலைவர்களாக அமர்த்தி, இன்னொரு பிரிவுக்குத் தானே தலைமை வகித்தார். மறுநாட்காலை, ஜூன் 12'ம் தேதி காலையில், பிரிட்டிஷ் பாட்டரிங் கானன் மீண்டும் மீண்டும் முழங்கியது. கோட்டையின் கிழக்கு வாசல் கதவுகள் தூளாயின. ஒருபுறத்து மதிலும் சிறிது இடிந்தது.

''இந்தக் கோட்டையை முதலில் தாக்கும் உரிமை எனக்கு வேண்டும்,'' என்று கிளைவ் வேண்டினான். லாரன்ஸ் சம்மதிக்கவே சிற்றாற்றைக் கடந்தான் கிளைவ். அவனுடன் 34 வெள்ளையரும் 700 சிப்பாய்களும் சென்றார்கள். அவர்கள் சிற்றாற்றின் அக்கரையை அடைந்ததும் துப்பாக்கிகளைச் சுட்டுக்கொண்டு விசிறிபோல் விரிந்து கிழக்கு வாசலை நோக்கி ஓடினார்கள். திடீரென ராஜபேரிகை பயங்கரமாக முழங்கியது. மின்னல் வேகத்துடன் மகாராஷ்டிரர் குதிரைப்படை விஜயகுமாரன் தலைமையில் வெளியே பாய்ந்து வந்தது. அவர்கள் கைகளில் உயரத் தூக்கிய வளைந்த வாள்கள் பளபளத்தன. வெள்ளையர் மண்டியிட்டு, துப்பாக்கிகளை இரண்டாம் முறை சுட முயலுமுன்பாக 26 வெள்ளையர் தலைகள் நிலத்தில் உருண்டன. கிளைவின் சிப்பாய்கள் பின்னோக்கிப் பறந்தனர். வேகமாகப் பாய்ந்துவந்த குதிரை வீரன் ஒருவன் கிளைவின் தலையை வெட்ட வாளை ஓங்கினான். ஓங்கிய வாள் இறங்கவில்லை. கிளைவ் வாளிலிருந்து தப்ப விலகினான். வெட்டுமுற்பட்டவன், ''கிளைவ்! ஓடிவிடு,'' என்றான். கிளைவ் சிப்பாய்களை நோக்கி ஓடினான். விஜயகுமாரன் வாளை உறையில் போட்டுக்கொண்டு கோட்டையை நோக்கித் திரும்பினான். மகாராஷ்டிரர் படையும் அவனுடன் விரைந்து கோட்டைக்குள் மறைந்தது.

மேஜர் லாரன்ஸ் இந்த முதல் தோல்வியால் மனம் தளரவில்லை. மிகுந்த சிந்தனையுடன் தமது பெரிய தொந்தியைப் பலமுறை தடவிக்கொண்டார். பிறகு தமது படையை ஒன்றாகத் திரட்டி ஒரே கட்டாகச் செய்தார். பக்கவாட்டுகளில் காப்டன் டால்டனையும் உயிர்தப்பிய கிளைவையும் நிறுத்தினார். படையை ஓர் இரும்புச் சுவராக சிற்றாற்றில் இறக்கி எதிர்க்கரையை அடைந்து முன்னேறினார். பாட்டரிங் கானன் மீண்டும் முழங்கியது. கோட்டையின் பல இடங்களில் விரிசல் கண்டது. மேஜரின் படையை ஊடுருவ மீண்டும் மகாராஷ்டிரர் புரவிப் படை வந்தது. ஆனால் பல முறை தாக்கியும் மேஜரின் இரும்புச் சுவரைத் தகர்க்க முடியவில்லை. வெள்ளையரின் தொடர்ச்சியான துப்பாக்கிப் பிரயோகத்தில் பல புரவிகள் மாண்டு விழுந்தன. கோட்டை பீரங்கிகளைக் காப்டன் டால்டனின் பீரங்கிகளின் எதிர் வீச்சு அடக்கியது. அன்று மாலை வெற்றி முழக்கத்துடன் வெள்ளையர் படை தேவிக்கோட்டைக்குள் நுழைந்துவிட்டது.

ஆனால் உள்ளே இருந்த காட்சியைக் கண்டு பிரமித்தார் மேஜர் லாரன்ஸ். உள்ளே மருந்துக்குக்கூடக் கைதாக வீரன் யாருமில்லை. வெளியே வந்த சிறிய குதிரைப் படையில் மிஞ்சியவர்தான் சிறைப்பட்டார்கள். மற்றப்படி தேவிக்கோட்டை காலியாயிருந்தது. மேஜர் கோட்டைக்குள் சுற்றினார். கடைசியாக மானாஜியின் அறைக்குள் நுழைந்தார். அங்கு ஒரு பீடத்தில் விளக்கொன்று எரிந்துகொண்டிருந்தது. அதன் அருகில் கடிதம் ஒன்றிருந்தது. ''இங்கிருந்து மேற்கே ஐந்து மைல் தூரத்தில் ஆச்சாள்புரம் என்ற ஊர் இருக்கிறது. அங்கு சந்திக்கலாம்,'' என்று கடிதத்தில் கண்டிருந்தது.

மேஜர் அந்தக் கடிதத்துடன் வெளிப்போந்து கிளைவிடம் அதைக் கொடுத்தார். ''மானாஜி நம்மை ஏமாற்றிவிட்டார். மேற்குப்புறத்தை நாம் கவனிக்கவில்லை.,'' என்று துக்கத்துடன் கூறினார். அந்த வார்த்தைகளை அவர்



## தம்பி, மைத்துனன் ஆனான்!

விடிந்தால் திருமணம். மணப் பெண்ணின் ஊருக்கு இரவே போய்ச் சேர்ந்தோம். மாப்பிள்ளைக்கு மைத்துனன் முறைக்காரன் நான் ஒருவன்தான். சம்பிரதாயப்படி எல்லாச் சடங்குகளுக்கும் மைத்துனனாகிய நான் மாபபிள்ளையின் கூடவே இருக்க வேண்டும். ராத்திரி தூங்கிக்கொண்டிருந்தேன். மாப்பிள்ளை என்னை எழுப்பினார். "நாளை தாலி கட்டும் நேரம் தன் பக்கத்தில் வரவேண்டாம்," என அழாத குறையாகக் கேட்டுக் கொண்டார். காரணம் நான் 6 அடி உயரம். அவர் 4'10''. கேலியாக மறுத்தேன். இருபது ரூபாய் நோட்டை என் கையில் திணித்தார். ஒரு திட்டத்தோடு சம்மதித்தேன். காலையில் தன்னைவிடக் குட்டையான ஒரு சிறுவனை எனக்குப் பதிலாய்ப் பிடித்தார். சிறுவன் அவருக்குத் தம்பி உறவு. கல்யாணம் முடிந்ததும் வாழ்த்துரைக்கச் சென்ற நான் 'தம்பியை மைத்துனன் ஆக்கிய மாப்பிள்ளை'யின் திறமையைப் பாராட்டி இருபது ரூபாய் பரிசளித்தேன். கல்யாணப் பந்தலே கலகலத்தது.

—பெருநாழி.

உதிர்த்துக் கொண்டிருக்கையில் பிரிட்டிஷ் கொடி தேவிக்கோட்டையின் உயரே ஏற்றப்பட்டது. பிரிட்டிஷ் பாண்ட் வெற்றி கோஷத்தை ஊதியது. மேஜரும் கிளைவும் நின்ற இடத்திலிருந்து ஸல்யூட் அடித்தார்கள்.

பிரிட்டிஷாரின் முதல் காலடி இப்பொழுது இந்தியாவில் ஊன்றிவிட்டது. "அடுத்த வெற்றிகளுக்கு இது ஆரம்பம்," என்றுதிட்டமாகக் கூறிய லாரன்ஸ், "நாளைக் காலையில் நாம் ஆச்சாள்புரம் போகிறோம்," என்றார்.

மூன்று நாள் கழித்து ஆச்சாள்புரத்தைஅடைந்த மேஜர் லாரன்ஸ் அங்கிருந்த பெரும் மதிள்கள் கொண்ட சிவலோக தியாகராஜஸ்வாமி கோவிலைக் கண்டார். மதிள்கள் மேல் எதிரியின் பீரங்கிகள் ஏற்றப்பட்டிருந்தன. "இந்த மதிள்களைத் தகர்ப்பது கஷ்டம்," என்றான் கிளைவ்.

"நெக் ஆஸ்பேரா டெர்ரண்ட்," (கஷ்டங்கள் நம்மை நடுங்க வைப்பதில்லை) என்றார் மேஜர் லாரன்ஸ்.

ஆனால் கஷ்டத்துக்கு இடமில்லை. அந்தப் போர் நடக்கவில்லை. அடுத்த இரண்டாவது நாள் தஞ்சை மன்னர் சமாதானத் தூது அனுப்பியிருந்தார். அதன்படி தேவிக்கோட்டையை பிரிட்டிஷாருக்கு தத்தம் செய்ததோடு காட்டு ராஜாவுக்கு ரூபாய் ஐயாயிரம் பென்ஷனும் கொடுக்க ஒப்புக் கொண்டிருந்தார்.

அந்தச் சமாதானக் கடிதத்தைக் கோவிலுக்கு எதிரேயிருந்த ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து படித்த மேஜர் லாரன்ஸ் குழம்பினார். "கிளைவ்! இதன் காரணம் உனக்குப் புரிகிறதா?" என்று கடிதத்தை கிளைவிடம் நீட்டினார்.

"புரியவில்லை. தேவிக்கோட்டையை அவர்களாக விட்டுக் கொடுத்தார்கள். இந்தக் கோவிலைத் தகர்த்து உள்ளிருக்கும் எதிரிகளைப் பிடிப்பதும் சுலபமல்ல," என்றான் கிளைவ்.

மேஜர் தூதனை நோக்கி, "உண்மையைச் சொல். தஞ்சை மன்னர் ஏன் சமாதானத்தை விரும்புகிறார்?" என்று வினவினான்.

"கோவில் புனிதமானது. மன்னர், கோட்டைகளைவிடக் கோவில்களை மதிக்கிறார். அதை நீங்கள் அழிக்காதிருக்கவும், உள்ளே புகுந்து அதன் புனிதத் தன்மையைக் கெடுக்காதிருக்கவும் தேவிக்கோட்டையை விட்டுக் கொடுக்கிறார். தவிர பிரிட்டிஷார் நட்பையும் மதிக்கிறார்..."

மேஜர் அதை நம்பவில்லை. இதில் உள் மர்மம் இருப்பதாக நம்பி அதை வெளிப்படையாகவும் சொன்னார். ஆனால் சமாதான ஒப்பந்தம் அன்றே கையெழுத்திடப்பட்டது. பிரிட்டிஷ் படை தேவிக்கோட்டையை நோக்கிப் பின்வாங்கியது. ஒப்பந்தத்தில் அரசர் சார்பில் கையெழுத்திட்ட மானாஜி கொதித்துக் கொண்டிருந்தார். "அரசரின் போக்கு எனக்குப் புரியவில்லை," என்றார். தஞ்சைக்குச் சென்றுதான் புரிந்தது. புரிந்தபோது மானாஜி திக்பிரமைக்கு உள்ளானார்.

(முதல் பாகம் முற்றும்)



# ஆசை இல்லாத கல்யாணம்

**தூயவன்**

கோவில் வாசலில் பூ கட்டிக் கொண்டிருந்த அந்தப் பெண்ணைத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதாவது முறையாகத் தூரத்தில் நின்று வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

கறுப்போ கறுப்பு. ஆனால் முகத்தில் அப்படியொரு கவர்ச்சியும் களையும். முக்கால் ரூபாய் கல் பதித்த மூக்குத்தி ஒன்று அவள் கவர்ச்சிக்கு மேலும் மெருகூட்டிக் கொண்டிருந்தது. கொண்டை போட்டுக் கொண்டிருந்தாள். அவிழ்த்துவிட்டால் முழங்காலைத் தொட்டுக் கொண்டிருக்கும். பூ கட்டுவதில் விரல்களில் அப்படியொரு அபூர்வமான லாகவம். ஆனால் கண்களின் கரு விழிகள் மட்டும் மேல் இமையில் செருகியிருந்தன. பாவம், குருடி! ஆயிரமாயிரம் கண்களைத் தன்பால் ஈர்த்துவிடும் அந்த அழகிக்கு. கண்கள் கிடையாது. ஒருநாள், ஒரே ஒருநாளை அவளோடு கழிக்க ஆயிரம் ரூபாய் செலவழிக்கத் தயாராயிருந்தேன். ஆனால் அவளிடம் எப்படிக் கேட்பது?

அவள் அழகு என்னைப் பைத்தியமாக்கிற்று; தைரியமின்மை என்னைக் கோழையாக்கிவிட்டிருந்தது.

''என்னய்யா அங்கேயே வெறிச்சுப் பார்த்துக் கிட்டிருக்கிங்க?''— குரல் கேட்டுத் திரும்பினேன்.

கோவில் வாசலில் குவளையை வைத்துக் கொண்டு பிச்சை கேட்கும் கிழவி அவள். அவ்வப்போது எட்டணா நாலணா போடுவதுண்டு.

''ஒண்ணுமில்லே,'' என்று நழுவப் பார்த்தேன். கிழவி விடவில்லை. ''குருடியாயிருந்தாலும் லட்சுமிகரமாயிருக்கா. இல்லீங்களா?''

''நீ...நீ...'' என்று தடுமாறினேன்.

''நீங்க பல நாளா அவளை நோட்டம் பாக்குறிங்க. உங்களை பல நாளா நான் பார்க்கிறேனே?'' என்றவள், ''மொள்ளப் பேச்சுக் குடுத்தேன். யாருமில்லாத அனாதையாம். 'கை வண்டிக்காரனாயிருந்தாலும் சரி, மூட்டை தூக்குறவனாயிருந்தாலும் சரி. கழுத்திலே மூணு முடிச்சைப் போட்டு கடைசிவரைக்கும் காப்பாத்துறவனாயிருந்தா வர்றேன். 'வச்சுக்கறேன். இல்லே வந்துட்டுப் போ, கேக்கறதைத் தர்றேன்னு எவனாவது வந்தா நான் பொல்லாதவளாயிருப்பேன்'னு மூஞ்சிலே அடிச்ச மாதிரி சொல்லிட்டா!'' என்று நாசூக்காக விவரித்தாள் கிழவி.

கொழுந்துவிட்டுக் கொண்டிருந்த என் ஆசைத் தீ பொசுக்கென்று அணைந்தது.

''ஓகோ!'' என்றவன் [illegible] ரூபாய் நோட்டைக் கிழவியின் கையில் திணித்துவிட்டு நழுவ முயன்றேன்.

''நில்லுங்க..'' என்று அருகில் வந்த கிழவி சுற்று முற்றும் பார்த்துவிட்டுக் காதருகே கிசுகிசுத்தாள். ''உங்களுக்கு அவசியம் அவளை அனுபவிக்கணும்னு அதுக்கு ஒரு வழி இருக்கு.''

அணைந்துகிடந்த தீ பழையபடி புகைய ஆரம்பித்தது. ''என்ன, என்ன வழி?''

கிழவி காதில் கிசுகிசுத்தாள். பொறி கலங்கின மாதிரியிருந்தது எனக்கு. அந்த வழி. ..அந்த வழி...

கொடுமையாகத்தான் பட்டது எனக்கு.

